இல்லாமல் இருந்தால்கூடக் குறையில்லை. நிறைய கல்விச் சாதனங்கள், கற்பிக்கும் கருவிகள் வழங்கப் பெறுதல் வேண்டும். குழந்தைகள் தங்கள் சக்திகள் அனைத்தையும் உபயோகிக்கும் தகுதியுடையவர்களாகச் செய்யும் கல்வி வழங்கப் பெறவேண்டும். ஆரம்பக் கல்வி நிலையில் உச்சரிப்பு கற்கும் பாங்கு, நூல்களைப் படிக்கும் முறை. அறிவைத் தேடும் பழக்கம், நினைவாற்றலை வளர்த்துக் கொள்ளல், சிந்தித்தல், கையெழுத்துப் பழகுதல் முதலிய பயிற்சிகள் முழுமை பெறுதல் வேண்டும். இதற்கேற்ற பருவம் மழலைப் பருவமே!

## எத்தகைய கல்வி வேண்டும்?

நாம் எத்தகைய கல்வியை வழங்கவேண்டும்? கல்வி யென்பது தெரியாததைத் தெரியச் செய்வது மட்டுமன்று; கற்றலுடன் வாழ்ந்திடவும், ஒழுக்கத்தில் நின்று ஒழுகச் செய்திடவுமாகும். கல்வி ஏட்டுக் கல்வியாக மட்டும் அமைந்துவிடக்கூடாது. செய்ம்முறைக் கல்வியும் அவசியம். உழைப்புக் கல்வியும் கூடத் தேவை. ஆதலால் குழந்தைப் பருவத்திலேயே உழைப்புப் பாடங்களில் தன் செயல்களை முன்கூட்டியே திட்டமிடும் திறமையையும் அதற்கான கருவி களைத் தேர்ந்தெடுப்பதையும் கற்றுக் கொள்ளும்படி செய்ய வேண்டும்.

சாதாரணமாகச் சிலர் நம்புகின்றனர். நல்ல காரியங்களைச் செய்வதே பெருமை என்று! அப்படியன்று! நல்ல காரியங்களையும்கூட அச்சத்தின் காரணமாகவும், பரிசு-புகழ் முதலியன பெறக் கருதியும் செய்யலாம். ஆதலால், நல்ல காரியங்கள் செய்வது மட்டும் பெரிதன்று. நல்ல காரியங்களைச் செய்வதில் உண்மையான ஆர்வம் இருக்க வேண்டும். நல்ல காரியங்கள் செய்வதற்கு வேறு எந்தக் காரணமும் இருக்கக்கூடாது. “வீடும் வேண்டா விறல்” இதற்குப் பொருந்தும். நல்லது, நல்லதுக்காகவே! வேறு எதற்கும் அல்ல! -என்ற கடைப்பிடிப்பே தேவை.

## கல்வியின் பயன்

*காப்பியத்துறையில் கம்பன் ஒரு திருப்பு மையத்தைக் காட்டுகிறான்! அது என்ன திருப்பு மையம்? கம்பனுக்கு முன் வாழ்ந்தவர்கள் வெற்றிகளை அரசனுக்கு ஆக்கினார்கள். புராண ஆசிரியர்கள் வெற்றிகளைக் கடவுளுக்கும் தேவர் களுக்கும் ஆக்கினார்கள்! ஆனால், கம்பன், வெற்றியை மானுடத்திற்கு ஆக்கினான்! "மானுடம் வென்றதம்மா!" என்று பாடினான்! ஆம்! மானுடம் வெற்றிக்குரியது! கல்வித் துறைகள் பலப்பலவாக இருக்கலாம். ஆனாலும் கல்வியின் நோக்கம் ஒன்றே! அதாவது கல்வியின் நோக்கம் மனிதனை உருவாக்குவதேயாம்! கல்வியின் விழுமிய பயன் சிந்தையில் தெளிவு; அறிவு; ஆற்றல்; மனிதப் பேராற்றல்; நன்னெறியில் நின்றொழுகுதல் ஆகியன கல்வியின் பயன். நாகரிகத்தைக் கற்றுத் தருவதும் கல்வியாகும். கல்வி என்பது வாழ்க்கை முழுதும் தொடர்ந்து கற்க வேண்டியது. ஏன்? கல்வி நிறுவனங்கள் எப்படிக் கற்பது என்ற கற்கும் முறையைக் கற்றுக் கொடுப்பனவே தவிர, கல்வியைக் கற்றுத் தருவன அல்ல. கல்வியைக் கற்றுத் தரவும் இயலாது. வாழ்நாள் முழுதும் கற்கவேண்டும். தொடர்ந்து கற்கவேண்டும். தொடர்ந்து கற்றாலும் கல்வியில் மட்டும் முற்றுப்புள்ளி இடல் இயலாது. எப்போதும் கவனம் கல்வியின்பால் இருக்கவேண்டும்.*

*கல்வி, இருளகற்றும்-அறியாமையை அகற்றும் - கைவிளக்கு. கற்ற அறிவுடைமை என்றார்கள். அறியாமை என்றால் என்ன? பலர் நினைப்பது போல அறியாமை என்பது "ஒன்றும் தெரியாமை"யன்று. அறியாமை என்பது ஒன்றைப் பிறிதொன்றாக மாறுபட அறிதலும், உணர்தலுமே யாகும். அதாவது, நிலையானவற்றை நிலையல்லாதன என்றும், நிலையல்லாதனவற்றை நிலையாயின என்றும், நன்மையைத் தீமை என்றும், தீமையை நன்மை என்றும் அறமல்லாதனவற்றை அறமென்றும் முறைபிறழ உணர்தலே அறியாமை. திருக்குறள் அறிவைக் கருவியென்று*

பாராட்டுகிறது. தன்னையும் தன்னைச் சார்ந்த சமூகத்தையும் துன்பத்தினின்று பாதுகாக்கும் கருவியே அறிவு என்று திருக்குறள் கூறுகிறது.

> "அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
> உள்ளழிக்க லாகா அரண்"

என்பது திருக்குறள்.

இன்று வாழும் நம்முடைய சூழலில் கல்வி கற்றவர்கள் ஏராளமானோர். ஆனால் பல்லாயிரம் ஆண்டுகளாக நம்மை வருத்தும் வறுமை அகன்றபாடில்லை! சாதிப் புன்மைகள் அகன்றபாடில்லை! ஏன் இந்த அவலம்? அறியாமையை அகற்றவும் அறிவை வளர்த்துக் கொள்ளவும் கல்வி பயன்பட வில்லை. வாழ்தலுக்குக் கல்வி துணை செய்யவில்லை. கற்ற நூற் கருத்தின்வழி மனிதன், குற்றங்களினின்றும் விடுதலை பெறவேண்டும். கற்ற நூற்கருத்தை வாழ்க்கையில் சோதனைப் படுத்தவேண்டும். அவ்வழி அறிவு பெறுதல் வேண்டும். எதிர்மறைச் சிந்தனைப் போக்கில், தீமையைச் சிந்தனை செய்யும் போக்கில் கல்வி அமையக்கூடாது. மானுடத்தில் வெற்றிக்கும் நல்வாழ்க்கைக்கும் எதிர்மறைச் சிந்தனைப் போக்கு, இம்மியும் உதவி செய்யாது. இன்றைய கல்விமுறை எதிர்மறுப்புடையதாக அமைந்துள்ளது. இதனால், இளைஞன் ஊக்கத்தையும் ஆர்வத்தையும் இழக்கிறான். கற்பிக்கும் முறையில்கூட மாணவனை எதிர்மறையில் அணுகக்கூடாது. ஓர் இயந்திரம் ஓடவில்லையென்றால் அந்த இயந்திரத்தை அடித்துப் பயன் என்ன? அந்த இயந்திரத்தில் இருக்கும் பழுதைக் கண்டுபிடிக்கும் வகையில் சிந்தித்து முயற்சிசெய்ய வேண்டியிருக்கிறது. இதுவே சரியான கல்வி போதனையாகும்.

## தாய்மொழிக் கல்வி

இன்றைய கல்வி முறையில் அதுவும் கிராமப்புறத்தில் தாய்மொழிக் கல்வி தரமானதாக இல்லை. நகர்புறத்தில் ஆங்கில மொழிவழிக் கல்வியே பரவலாக நடைமுறையில்

உள்ளது; ஆங்கிலமொழிவழிக் கல்வியே எங்கும் ஆதிக்கம் செலுத்துகிறது. தமிழர் அறிஞராக வளராமல், தமிழ் எப்படி வளரும்? தமிழில் கற்பித்தால்தான் தமிழனின் அறிவு வளரும். நாற்பது ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் தமிழ்வழிக் கல்வி இயக்கம் நடைபெற்று வந்துள்ளது. இன்றும் நடைபெற்று வருகிறது; ஆயினும் மாற்றம் இல்லை. மாற்றம் ஏற்படாதது மட்டுமல்ல. தாய்மொழிவழிக் கல்விச் சிக்கல், இன்று மொழிச் சிக்கல் நிலையிலிருந்து கைமாறி சாதிச் சிக்கலாக, சமூக-பொருளாதாரச் சிக்கலாக உருமாற்றம் பெற்றுள்ளது. துறைதோறும் தமிழ் பயிற்றுமொழியாக இடம்பெற்று விட்டால் ஆங்கிலத்தை ஒருமொழியாகக் கற்பதில் தவறில்லை.

இன்று ஆங்கிலத்திற்கு, அளவுக்கு மீறிய முக்கியத்துவம் தருவதன் காரணமாகச் சிந்தனையும் அறிவும் பாதிக்கப்படு கின்றன. சிந்தனையாற்றலையும் அறிவையும் தராத கல்வி எதற்கு? இத்தகைய பரிதாபகரமான தீமையை விலை கொடுத்து வாங்கவேண்டுமா? ஆங்கிலத்தில் தேர்ச்சி பெறச் செலவழிக்கும் காலமும் மூளை உழைப்பும் அதிகமானவை. அப்படிச் செலவழித்தாலும் "தேர்ச்சி" பெற முடியவில்லை. தாய்மொழியில் - தமிழில் பயின்றால் எளிதில் குறைந்த நேரத்தில், குறைந்த உழைப்பில் தேர்ச்சி பெற முடியும்! ஆதலால், எவ்வளவு விரைவில் தாய்மொழிக் கல்வி இயக்கத் திற்கு மாறுகிறோமோ அவ்வளவுக்கு நமது சந்ததியினருக்கும் நல்லது; நாட்டுக்கும் நல்லது. ஆதலால், தாய்மொழியைப் போற்றுங்கள்! அவ்வழி மடமையைக் கொளுத்துங்கள்! தாய்மொழி வழி உள்ளக் கல்வியையும் உலகக் கல்வியையும் ஒருசேரக் கற்றுக் கொள்ளுங்கள்! உண்மைக் கல்வி நிறை வாகும்.

## எண்ணும் எழுத்தும்

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு"

என்பது திருக்குறள்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்"

என்பது அவ்வையார் வாக்கு. அதாவது கணிதமும், இலக்கியமும் கண்ணெனப் போற்றப்பெறும் என்பதாகும். இவ்விரண்டில் இலக்கியம் கற்கும் முயற்சி பரவலாகக் காணப்படுகிறது.

இந்த நூற்றாண்டுக்கு ஏற்ப அறிவியலும் கற்க வேண்டும். அறிவியலில் புதிய நூல்களையும் இலக்கியங்களில் மிகப் பழமையானவற்றையும் கற்கவேண்டும். இலக்கியங் களில் பழமையான இலக்கியங்களில் உள்ள தரம், புதிய இலக்கியங்களில் காண்பது அரிதாக உள்ளது. வாழ்க்கை இலக்குகளின் தடம்கூட இல்லாதவைகளாகப் புதிய இலக்கியங்களில் பல வந்துவிடுகின்றன. கம்பனின் இராம காதை, சேக்கிழாரின் பெரியபுராணம், இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம், திருவள்ளுவரின் திருக்குறள் இவைகளுக்கு ஒத்த புகழ்வாய்ந்த இலக்கியங்கள்! அவைகளுக்குப் பின் தோன்றவில்லையே! பாரதியும்-பாவேந்தனும் இதற்கு விதி விலக்கானவர்கள். மாணவர்கள் இலக்கியங்களை ஆர்வத் துடன் படிக்கும்படித் தூண்டவேண்டும்.

கிராமப்புறங்களில் கணிதம் கற்கும் முயற்சி போதாது. வாழ்க்கைக்குக் கணிதக் கல்வி இன்றியமையாதது. எண், எழுத்து இவ்விரண்டிலும் எண் முதன்மைப்படுத்தப்படு வதற்குக் காரணம் யாது? எண் தொடர்பான கணிதக் கல்வி, கணித அறிவு வாழ்க்கையின் இன்றியமையாத் தேவை. வாழ்க்கையை வாழுங் காலத்தை நெறிப்படுத்திக் கொள்ள, நலமுடன் வாழ, வாழ்க்கையின் மிகப்பெரிய சக்தியாக விளங்கும் பொருளியலை ஆண்டனுபவிக்கக் கணிதப் பயிற்சி தேவை. வாழ்க்கையின் அடிப்படைத் தேவை கணிதம். வாழ்க்கையில் செழிப்பும் பயன்பாடும் உளவாக்குவது எழுத்து; இலக்கியம்! ஆதலால் எண்ணை முதன்மைப் படுத்திக் கூறியது உணரத்தக்கது. அறிவியல், தொழில், நிதி ஆகிய வாழ்க்கையைத் தழுவிய பல்துறைகளையும்

கற்க-சிறப்புறக் கற்கக் கணிதக் கல்வி இன்றியமையாதது. ஆதலால் கணிதக் கல்வி ஊக்குவிக்கப்படுதல் வேண்டும்.

மானுடம் கல்வியில் வளர்ந்து வாழும் நிலையில் கல்வித்துறை பலவாக விரிவடைகிறது. விரிவு, வாழ்க்கை அனுபவத்திலிருந்தும் புறநிலை ஆய்வுகளிலிருந்தும் நிகழ்கின்றன. இங்ஙனம் கல்வி இயல், இசை, நாடகம் என முதல் நிலையில் விரிவடைந்தது. பின் இயற்பியல், உயிரியல், வேளாண்மை இயல், கால்நடையியல், வேதியியல் என்றெல்லாம் வளர்ந்து வருகின்றது. விரிவடைந்து வருகின்றது. மேலும் விரிவடையும். இங்ஙனம் கல்வி, பல்வேறு துறைகளாக வளர்ந்தாலும் அவற்றுள்ளும் அறிவியலிலும் தொழில் நுட்பத்திலும் நாம் சிறந்து விளங்குவது நாட்டிற்கு நல்லது. இன்று உலகத்தை நாளும் இயக்கி வளர்த்து எடுத்துச் செல்லும் பொறுப்பை அறிவியல் சார்ந்த தொழில் நுட்பமே செய்து வருகிறது. இனி எதிர்வரும் காலங்களில் அறிவியல் சார்ந்த தொழில் நுட்பத்திற்குரிய இடம் நிலையானது; பயனுடையது; சிறப்புடையது.

## தொட்டி மீன்கள்

உணர்வுபூர்வமான சமுதாய அமைப்புத் தோன்று தலுக்குக் காரணமாகவும் கல்வி அமைகிறது. மனித சமுதாய வளர்ச்சிக்குக் கல்வி அடிப்படை. சமுதாய நலனுக்குரிய குணங்கள் தோன்றவும் வளரவும், பண்பு இடம் பெறவும் மனிதன் பெறும் கல்வியே துணை செய்கிறது. தான் வாழும் சூழலுக்கு ஏற்றவாறு தன்னை மாற்றிக் கொண்டு முன்னேறத் துணை செய்வது அவன் பெறும் கல்வியேயாகும். "உலகம் தழீஇயது ஒட்பம்" என்று திருக்குறள் கூறும். கடந்த பல நூறு ஆண்டுகளாகவே நமது நாட்டில் சமுதாய உணர்வு மங்கி மறைந்து வந்துள்ளது. இந்தக் குறை படித்தவர்களிடம் மிகுதியாக இருந்தது; இருந்து வருகிறது. மெத்தப்படித்தவர்கள் தான் மிகவும் கெட்டுப்போயினர். இன்று அந்தக் குறை வளர்ந்து பெரும்பாலோர் தொட்டி மீன்களாகிவிட்டனர். அதாவது தொட்டியில் வளர்ந்த மீன்கள் கடலில் விடப்

பெற்றாலும் தொட்டியின் அளவுக்குத்தான் நீந்திச் சுற்றும்; தன்னுடைய நீந்தி வாழும் பரப்பளவை விரிவு செய்து கொள்ளாது. இன்றைய மனிதர்களும் சாதி, மதம், கட்சி என்ற எல்லைகளைக் கடந்து ஊர், நாடு, உலகம் என்றோ சமூகம், சமுதாயம், மானுடம் என்றோ தன்னுடைய இதயத்தை விரிவுபடுத்திக் கொள்ள மறுக்கின்றனர். இந்தத் தீமை கல்வி உலகத்திலிருந்து முற்றாக நீக்கப்படவேண்டும். வளரும் தலைமுறையினர்-மாணவர்கள் சமூகக் கல்வி பெற்றாக வேண்டும். மாணவர்கள் சமூகத்தின்-மானுடத்தின் ஒருறுப் பாகத் தங்களை நினைத்துக்கொள்ளவேண்டும். பாரதிதாசன் வார்த்தையில் சொன்னால் மானிட சமுத்திரத்தில் சங்கம மாகவேண்டும்.

*"அறிவை விரிவு செய்! அகண்டமாக்கு!*
*விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!*
*அணைத்துகொள்! உன்னை சங்கமமாக்கு!*
*மானிட சமுத்திரம் நானென்று கூவு!"*

என்பது பாரதிதாசன் கவிதை வரிகள்.

## வரலாற்றுக் கல்வியில் மாறுதல் வேண்டும்

இன்று கல்வி கற்கும் பல்வேறு படிகளிலும் "வரலாறு" கற்பிக்கப்படுகிறது என்பது உண்மை. ஆனால் வரலாறு எப்படிக் கற்றுக் கொடுக்கப்படவேண்டுமோ அப்படிக் கற்றுக் கொடுக்கப்படவில்லை. சுரண்டல் பொருளாதாரச் சமுதாய அமைப்பு, பிற்போக்குத்தனம் ஆகியன வரலாற்றை உள்ளவாறு கற்க முடியாமல் தடை செய்கின்றன.

வரலாறு என்பது அரசர்களைப் பற்றியனவும், போர் களைப் பற்றியனவும் மட்டுமன்று. அரசர்களைச் சுற்றி மட்டும் எழுதுவது எப்படி வரலாறு ஆகமுடியும்? மக்களின் சிந்தனைப் போக்கையும், மக்களின் வாழ்க்கைப் போக்கையும் கூர்ந்து நோக்கி எழுதப்படுவதுதான் வரலாறு. சான்றாக இந்தியாவில் மொகலாய ஆட்சி அமைத்த

பாபரின் படையெடுப்பு வரலாற்றில் அளவுக்கு அதிகமாகவே பேசப்படுகிறது. ஆனால், இந்தியாவுக்கு முஸ்லீம்கள் படையெடுப்பாளர்களாகத்தான் வந்தார்களா? அல்லது வர்த்தகம், கலாசாரப் பரிவர்த்தனை அடிப்படையில் வந்தார்களா? என்று தெரியாது. இந்தியாவிற்கு முஸ்லீம்கள் முதன் முதலில் வியாபாரத்துக்கே வந்தார்கள்; கலாசாரப் பரிவர்த்தனை நடந்தது. எனவே, இந்திய முஸ்லீம்களின் வாழ்க்கைக்கும் படையெடுத்து வந்தவர்களான கோரி, பாபர் முதலியோருக்கும் சம்பந்தம் இல்லை என்பது அறிஞர்கள் கருத்து. இது வரலாற்றில் பேசப்படவில்லை.

தீண்டாமையை எதிர்த்து வழிபாட்டுரிமை கேட்டு கி.பி. ஆறாம் நூற்றாண்டில் திருநாளைப்போவார் போர் தொடுத்திருக்கின்றார். இந்தச் செய்தி, தமிழ்நாட்டு வரலாற்றில் இடம் பெறவில்லை. திருநாளைப்போவார் வரலாறு, வரலாற்றில் எழுதப்படாதது மட்டுமன்று. பின்வந்த இலக்கியங்களிலும் கூடப் பரவலாகப் பேசப்படவில்லை. ஏன்? உயர் சாதி மனப்பான்மையில் இருட்டடிப்புச் செய்துள்ளனர். திருநாளைப்போவார் வழிபாட்டுரிமைக்காக ஒரு போரே நடத்தியிருக்கிறார். அன்று கொழுத்து வளர்ந்திருந்த புரோகிதர்களின் ஆதிக்கம் திருக்கோயிலில் எழுந்தருளியிருந்த கடவுளைக் கட்டுப்படுத்திவிட்டது போலும்! திருப்புங்கூரில் கடவுளால் கூட நந்தனாரைத் திருக்கோயிலுக்குள் அழைத்துக் கொள்ள முடியவில்லை. இறைவன் நந்தனாரைக் காணப் புரோகிதர்களின் கட்டுக்காவலைக் கடந்து வெளியே வர இயலவில்லை. நந்தியைத்தான் சற்று விலகும்படி சொல்ல முடிந்தது. இந்த வரலாறு அப்படியே கடவுளைப் பாதிக்குமா? பாதிக்காது. சமுதாயம் கடவுள் பெயரால் செய்யும் கொடுமைகளின் நிலை! திருநாளைப்போவார் வரலாறு உள்ளவாறு நமது நாட்டுக் கல்வித் திட்டத்தில் இடம்பெற்றிருந்தால்

தீண்டாமை திருநாளைப்போவார் காலத்திலேயே போயி ருக்கும்! அம்பேத்கார், அண்ணல் காந்தியடிகள் ஆகியோர் போராட வேண்டிய அவசியம் இருந்திருக்காது. இன்றையத் தலைமுறையினர் ஒரு குல முறையில் அமைதியுடன் வாழ்ந்திருப்பர். ஆரம்பக் கல்வித் திட்டத்தில் தீண்டாமை விலக்கு, சாதி ஒழிப்பு ஆகியன கற்றுக் கொள்வதற்கு நிறைய வாய்ப்புகள் உள்ளன. ஆனால், இத்தகைய பாடங்கள் முறையாகக் கற்பிக்கப் பெறுவதில்லை; கற்பதும் இல்லை. பல ஆண்டுகளாக,

> "சாதி இரண்டொழிய வேறில்லை; சாற்றுங்கால்
> நீதி வழுவா நெறிமுறையில் - மேதினியில்
> இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
> பட்டாங்கில் உள்ளபடி"

என்ற பாடல் பாடத் திட்டத்தில் உள்ளது. இந்தப் பாடலை முறையாகப் பயிற்றுவித்தால் மாணவர்களுக்கு இந்த உலகில் சாதிகள் இல்லை! இரண்டே இரண்டு சாதிகள்தான்! என்பது உணர்வாக மாறியிருக்கும். இவையிரண்டு சாதிகளும் கூட இயற்கையல்ல! கடவுளின் படைப்புமல்ல! மனிதனின் படைப்பேயாம். உள்ளபடி இரண்டே சாதிதான்! அவை மற்றவர்களுக்கு உதவி செய்து அவர்கள் மகிழ மகிழ்பவன் உயர்சாதியினன்! மற்றவர்களுக்குக் கொடுத்து மகிழும் மனமிலாதான் இழி சாதியினன் என்று இந்தப் போக்கில் இந்தப் பாடல் கற்பிக்கப்பட்டிருந்தால் என்றோ நம்நாட்டில் தீண்டாமை அகற்றப்பட்டிருக்கும்! ஆலய நுழைவுச் சட்டமே வேண்டியிருந்திருக்காது.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ஜமீன்தாரி முறை கொண்டுவரப் பெற்றது. உயர்நிலைக் கல்வியில் ஜமீன்தாரி முறை பற்றிப் பேசப்படுகிறது. ஆனால் ஜமீன்தாரி முறை அறிமுகப்படுத்தியதன் மூலம் விவசாயிகள் அடிமைகளாக்கப் பெற்ற செய்தி சொல்லப் பெறவில்லை. ஆதலால், மக்களின்

வாழ்நிலைப் போக்குகளே வரலாற்றுக்கு கரு. இந்தியாவில் வழி வழியாகப் பின்பற்றி வந்த கல்வியில் "இந்த இரண்டு சாதி முறை" உயிர்ப்பிக்கப்பெற்றுள்ளது என்ற துன்பியல் செய்தி யாருக்குத் தெரியும்? ஆதலால், மக்களை மையமாகக் கொண்ட வரலாறு கற்பிக்கப் பெறுதல் வேண்டும்.

## பொருளாதாரக் கல்வியில் புதுமை தேவை

மாமுனிவர் மார்க்ஸ் எழுதிய மூலதனம் என்ற நூல் மனிதகுல வரலாற்றினைக் கவனமாகக் கற்றதன் பயனே யன்றோ! இந்த உலகத்தில் ஏன் இவ்வளவு முரண்பாடுகள்? பிரிவினைகள்? பொருளாதார ஏற்றத் தாழ்வுகள்? இந்தத் தவறுக்குக் காரணம் வரலாற்றுப் போக்கில் சமுதாயத்தில் ஏற்பட்ட ஆதிக்கம்தான்! "வல்லாண்மையுடையது வாழும்" என்ற நியதி, ஒழுக்கமாக ஏற்றுக் கொள்ளப்பட்டதுதான்! வலிமையில்லாததற்கு வலிமை தருவது எப்போது? வாழ வைப்பது எப்போது? வல்லாண்மை உடையது வாழும் – இது இயற்கையின் நியதி! வல்லாண்மை இல்லாததும் வலிமை பெறமுடியும்; வாழ முடியும் என்ற சமூக நீதி வெற்றி பெறத் தக்க கல்வி, மாணவர்களுக்கு வழங்கப் பெறுதல் வேண்டும்.

இன்று இந்தியா கூட 37 ஆண்டுகளுக்குப் பிறகு, தான் வகுத்துக் கொண்ட – எடுத்துக் கொண்ட பொருளாதாரக் கொள்கையிலிருந்து தடம் மாறிச் செல்கிறது. அதாவது, நமது நாட்டின் பொருளாதாரக் கொள்கை, கலப்புப் பொருளாதார மாகும். அதாவது நமது அரசின் பொருளாதாரக் கொள்கை தனியாருக்கு விரோதமானது அல்ல. ஆனால் அரசு, பொதுத் துறையை, கூட்டுறவுத் துறையை ஊக்குவித்து வளர்த்து ஆக்கம் சேர்க்கவேண்டும் என்பதாகும். இன்று இந்திய அரசு புதிய பொருளாதாரக் கொள்கை என்ற பெயரால் தனியார் துறைக்கு அதிக ஊக்கம் தர எண்ணியுள்ளது. எப்படியிருந் தாலும் தனியார்துறை இலாப நோக்குடையதுதான்! அதில் இலாபம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு இயந்திரமயப்படுத்துவார்கள். வேலை வாய்ப்புகள் குறையும்.

பல நூறாயிரம் இளைஞர்கள் வேலை இல்லாமல் திண்டாடும் நிலையில் இது சரிவருமா? அதுபோலவே நுகர்வோரின் நலங்கருதாமல் விலையை ஏற்றுவார்கள். இந்த விலைக் கொள்கை பெருவாரியான மக்களைப் பாதிக்கச் செய்யும். அதுபோலவே, திறந்த வெளிச் சந்தையின் மூலம் வியாபாரப் பொருளாதாரம் வளரும். ஆனால், உற்பத்திப் பொருளாதாரம் வளராது. பணப்புழக்கம் இருக்கும். ஆனால் அது சொத்தாக மாறாது. இது வளரும் நாட்டுக்கு ஒத்து வருமா? இந்தச் சிந்தனை இன்று உயர் கல்வியில் பொருளா தாரம் படிக்கும் மாணவர்களுக்குக் கற்பிக்கப்படுகிறதா? மாணவர்கள் என்ன நினைக்கிறார்கள்? புதிய பொருளா தாரக் கொள்கைகளைப் பற்றி இன்றைய பொருளாதாரப் பேராசிரியர்கள், மாணவர்கள் பரவலாக விவாதிக்க வில்லையே! இதற்கெல்லாம் உயர்தரக் கல்வி வழிசெய்ய வேண்டாமா?

சுரண்டும் பொருளாதார அமைப்பு உழைப்பாளர் பங்கைத் திருடி மூலதனக்காரர்களாகி உலகியல் நடத்திவரும் முதலாளிகளிடம் விழிப்பாக இருக்கவேண்டும் என்று இன்னமும் வரலாறு கற்றுத்தர மறுக்கிறதே! இந்த முதலாளித்துவ ஆதிக்கப் போட்டியால் உலகத்தில் எத்தனை எத்தனை கொடிய போர்கள்? உயிர் அழிவுகள்? பொருட் சேதங்கள்? இந்த அழிவு வேலையில் படித்தவர்கள், மதங்களைச் சேர்ந்தவர்கள் ஆகியோர் யார் எவர் என்ற வித்தியாசம் இல்லாமல் ஈடுபட்டனர். இன்றைய இளைஞர் களுக்குப் போர் மீது கடுமையான எதிர்ப்புணர்ச்சியைத் தூண்டி வளர்க்கவேண்டும். அவர்களை பாவேந்தன் பாரதி தாசன் பாடிய

> "புதியதோர் உலகம் செய்வோம்! கெட்ட
> போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்!"

என்ற பாடலை வாழ்க்கையின் இலட்சியமாக எடுத்துக் கொள்ளும்படி செய்யவேண்டும்.

## மெய்ப்பொருளியல் கல்வி தேவை

இன்றுள்ள நமது சிக்கல்களுக்கு எல்லாம் மூலகாரணம் நாம் மெய்ப்பொருளறிவை இகழ்ந்து இழந்தமைதான். அதோடு பகுத்தறிவு பெயரால் மெய்ப்பொருள் அறிவாகிய செம்பொருள் அறிவுக்கும்-மதத்திற்கும் உள்ள வேறுபாடு களை உய்த்துணராமல் ஒட்டுமொத்தமாக இழந்தமை பரிதாபத்திற்குரியது. மதச்சார்பற்ற தன்மை என்ற கோட்பாட்டின் பொருள் புரிந்துகொள்ளாமல், கடவுள் நம்பிக்கை, மெய்ப்பொருளறிவு ஆகியவற்றை அவசரப்பட்டு கல்வியி லிருந்து விலக்கியதுதான் காரணம். நாம் பூத, பௌதிக அறிவை வளர்த்தும் பொருளாதார அறிவை வளர்த்தும் இவையெல்லாவற்றையும் ஆளும் பேறுபெறும் மனிதனை அவனுடைய ஆன்மாவை-ஆன்மாவின் தரத்தை வளர்த்து உயர்த்தத் தவறிவிட்டால் இந்த உலகம் எப்படி இருக்கும்? சிதறுண்டு போன சோவியத் இதற்கு ஓர் உதாரணமாகும். ஆதலால், மெய்ப்பொருளியல் கல்வித் திட்டத்தில் இருக்க வேண்டும். கல்வி நிறுவனங்கள் மாணவர்களுக்கு அறிவையும் ஞானத்தையும் வழங்கவேண்டும். மெய்ப்பொருள் கல்வித் தேர்ச்சியால்தான் ஆன்மநேய ஒருமைப்பாடு தோன்றும்! இன்றைய உலகத்திற்கு ஆன்ம நேய ஒருமைப்பாடு தேவை! ஆதலால், இளமைக் காலம் தொட்டே மெய்ப்பொருளியல் கல்வி கற்கவும் தமது பொறி புலன்களைப் பக்குவப்படுத்தி வளர்த்துக் கொள்ளவும், சமூகத்திற்காகத் தம்மை அர்ப் பணித்துக் கொள்ளவும் கற்றுக் கொடுக்கவேண்டும். ஆதலால் எல்லாக் கல்வி நிலையங்களிலும் இலக்கியம், வரலாறு, தத்துவம், இசை, கலை ஆகியன கற்பிக்கும் திட்டம் கட்டாயம் தேவை. வேறுபாடற்ற ஒரு குலமே கடவுளின் சித்தம்.

இனிவரும் தலைமுறைக்குச் சிறந்த கல்வியை நாம் வழங்குவதற்குரிய முயற்சிகளை எடுத்துக் கொள்ளவேண்டும். வாழ்க்கையில் சற்றும் பயன்படாத செய்திகளை

உருப்போடச் செய்யும் கல்விக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும். எப்படியும் நமது சந்ததியினரை, அறிஞர்களாக்க நாம் முயலவேண்டும். அதற்கேற்ற கல்வியைத் தரவேண்டும். அறிவு பெறுவதிலும் வாழ்வதிலும் அக்கறையையும் ஆர்வத்தையும் காட்டத்தக்கவாறு கல்வி கற்பிக்கவேண்டும். ஐயத்தின் நீங்கித் தெளிந்த அறிவுடன் விளங்க, வாழக் கற்றுத் தரவேண்டும். நெடிய நோக்குடைய கல்வி கற்பிக்கவேண்டும்.

## செய்வதன்மூலம் கல்வி

"செய்வதன்மூலம் கல்வி" என்பது ஒரு கொள்கை. கல்வியின் பயனே செயற்பாடுதான். உடல், உள்ளம், ஆன்மா ஆகிய மூன்றையும் ஒருங்கே வளர்க்கும் கல்வி, செய்வதின் மூலம் கற்கும் கல்வியாகும். இன்று இந்தியாவை வருத்தும் மிகப்பெரிய சமூகக் கேடு, உழைப்பை அலட்சியப் படுத்தப்படுவதுதான். இந்த உலகத்தை இயக்குவதும் வளர்ப்பதும் உழைப்பேயாம். "அறிவு ஜீவிகள்," "உடலுழைப் பாளர்கள்" என்று இருவேறு உலகமாக இந்தியா பிரிந்து கிடக்கிறது. அறிவு ஜீவிகள் தங்கள் நலன்களை மட்டுமே கருதுகின்றனர். உழைப்பாளர்களுக்கு உழைப்புக்கு ஏற்ற ஊதியம் கிடைக்கவில்லை. நாளும் வறுமையில் உழல்கின்றனர். இந்தநிலை மாறுவதற்குரிய கல்வி வழங்கப் பெறுதல் வேண்டும். மாணவர்களின் உழைக்கும் ஆர்வம் வளர்க்கப்பெறுதல் வேண்டும். முடிந்தால் உழைப்பின்மூலமே கல்வி கற்றுத் தரலாமல்லவா? இதுபற்றிப் பல்கலைக் கழகங்கள் எண்ணுதல் வேண்டும்.

## வலிமையான அடிப்படை வேண்டும்

நம்முடைய கல்வித் திட்டத்திற்கு வலிமையான அடிப்படையை அமைக்கவேண்டும். அங்ஙனம் வலிமை யான அடிப்படையை அமைப்பது எளிதன்று! கடினம்தான்! பகீரத முயற்சி தேவை. இந்த இலட்சியத்திற்காக நாம் அனைவரும் நமது செல்வம் உடல், உயிர், எல்லாவற்றையும்

அர்ப்பணிக்கவேண்டும். எல்லாவற்றையும்விட நம்முடைய பணத்தையும் கல்வித் துறையில் அதிகமாக முதலீடு செய்ய வேண்டும். இத்துறையில் நாம் செய்யும் முதலீடு அதிக அளவு பலமடங்கு திரும்பி வரும் என்பதை நாம் உணர்தல் வேண்டும். இன்று நாம் மதத்தின் பெயராலும் அரசியலிலும் செய்யும் முதலீடு அளவு, கல்வித் துறையில் குடும்பமும் சமூகமும் அரசும் முதலீடு செய்வதில்லை என்பது வருந்தத் தக்க உண்மையாகும். "இன்றைய பள்ளிகளே நாளைய நாடாளுமன்றத்தின் கருவறைகள்" என்பதை உணர்தல் வேண்டும். கற்றுத்தரக்கூடிய ஆசிரியப் பெருமக்களை முதலில் உருவாக்கவேண்டும். அவர்களுக்கு அனைத்து வகையிலும் சமூகத்தில் மிக மிக உயர்ந்த இடத்தைத் தரவேண்டும். தரமான சிறந்த கல்வியை வழங்கும் மகத்தான பொறுப்பு நம் முன்னால் இருக்கிறது.

நமது பல்கலைக் கழகங்கள் உயர் நோக்கங்கள் உடைய உயர் கல்வியை வழங்கவேண்டும். எதிலும் புதிய அறிவையும் உண்மையையும் தேடும் மனப்பாங்கை வளர்க்கவேண்டும். நாடுகள் வளர வளரத் தேவைகள் பெருகி வளரும். மானுடத்தின் வளரும் தேவைகளை ஈடுசெய்ய முயற்சி செய்வதே அறிவின் பயன்; ஆக்கம்; ஆதலால், வளர்ந்து வரும் புதிய தேவைகளை ஈடுசெய்யும் முயற்சியே இன்று தேவை. இந்தப் போக்கிற்கேற்பப் புதியன கண்டுபிடிக்கும் முயற்சிகள் வளரவேண்டும். பழைய அறிவினை அறிந்து, பொருள் கண்டு வாழ்க்கையோடு இணைக்கவேண்டும். பழைய நம்பிக்கைகள் என்பன மூடத் தனமாகவே இருக்க முடியாது. அவற்றுக்கு ஏதாவது காரணம் இருந்தாகவேண்டும். அந்தக் காரணத்தைக் கண்டு வளர்ந்துவரும் புதிய வரலாற்றுடன் இணைக்கவேண்டும்.

இன்றைய இந்திய சமூகம் வேறுபாடுகள் மிக்குடையது. ஏற்றத்தாழ்வுகள் மிகவும் அதிகம். இன்று சமூக நீதி, அன்பு என்பன கிட்டத்தட்டப் பொருளற்ற சொற்களாகப் போய்

விட்டன. இந்தக் கொடுமை சராசரி மனிதனிடத்தில் இல்லை! “மிக உயர்ந்த இடங்கள்” என்று சமுதாயம் எண்ணும் இடங்களே நெறியும் முறையும் இழந்து சமூக நீதிக்கு உலைவைத்து வருகின்றன. இன்று உயர்கல்வி கற்கும் மாணவர்களிடத்தில் சமுதாய வாழ்விலும் பொது வாழ்விலும் சமத்துவம் (Equality) சகோதரத்துவம் (Brother hood) சமூகநீதி (Social Justice) ஆகியவற்றின் மீது ஆவேசம் உண்டாகச் செய்து, இந்த உயர்ந்த கோட்பாடுகளுக்காகப் போராடும் குணத்தை உருவாக்கி வளர்க்கவேண்டும்.

இன்றையத் தலைமுறை மாணவர்கள், பல்கலைக் கழகக் கல்வி பெறும் மாணவர்கள் எக்கருத்தையும் ஆராய்ந் தறிந்து ஏற்கும் துணிவைப் பெறத்தக்க வகையில் பயிற்று விக்கப் பெறுதல் வேண்டும். ஓர் இளைய தலைமுறையை, புதிய வலிமையான வாழ்க்கையைக் கட்டுமானம் செய்யும் பணியைச் செய்ய உறுதி பூணுவோமாக!

* * *

## ஆ. கல்விச் சீர்திருத்தம்

மதிப்புயர் நலஞ்சார்ந்த பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர்களே! பேராசிரியப் பெரு மக்களே!

இன்று மாலை, “கல்விச் சீர்திருத்தம்” பற்றிச் சிந்தனை செய்யவேண்டும். நமது நாட்டில் கல்விச் சீர்திருத்தம் என்று பேசத் தொடங்கினால், பல மணி நேரம் பேசுவதற்குச் செய்திகள் உண்டு. ஆயினும் காலத்தின் அருமை கருதிச் சில செய்திகளை - அவையும், தங்களுடைய கவலைபடர்ந்த நினைவில் இருப்பவைகளை நினைவூட்டுவதே இந்தப் பேச்சின் நோக்கமாகும்.

## வாழ்க்கையின் சாதனம்

மானுட வாழ்க்கை உயர்ந்தது. அதுவும் ஒரே ஒரு தடவைதான் வழங்கப்படுகிறது. ஆதலால், இந்தப் பிறப்பிலேயே மானுடத்தின் பயனை அடைதல் வேண்டும். "கல்வியைக் கற்பதிலும், ஞானத்தைத் தேடுவதிலும் நம்முடைய ஒவ்வொரு நாளையும் வாழ்க்கையின் கடைசி நாளாகக் கருதிக் கற்பதற்கும், ஞானம் பெறுதற்கும் உரிய முயற்சிகளில் ஈடுபடவேண்டும்" என்பது ஒரு பழைய அறிவுரை. மானுடம் - மனிதம் அறிவாலேயே மற்ற உயிரினங்களிலிருந்து வேறுபடுகின்றது. மற்ற உயிர்க்குலங்கள், இயக்க இயங்குவன. மனிதன் இயக்குகிறவன் இயங்குகிறவன். புவியை நடத்தும் பொறுப்பு மனிதனிடமே இருக்கிறது. புவியை நடத்தும் பொறுப்பை, மனிதன் சிறப்புறச் செய்வதற்குக் கல்வி தேவை; அறிவு தேவை; அறிவறிந்த ஆள்வினை தேவை. இங்ஙனம் மானுட வாழ்க்கை சிறப்புற அமையவும், புவிக்கோளம் இன்புற இயங்கவும், பயன்படும் சாதனமாக அமையும் கல்வி, சிறப்பானதாக, உந்து சக்தி உடையதாக அமைய வேண்டாமா? கல்வி, ஆன்மாவை எழுப்பி ஆவேசித்து இயங்கச் செய்ய வேண்டாமா? புவியை நடத்தும் ஆற்றலை மனிதன் பெற எத்தகைய கல்வி தேவை? அறிவு, வளரும் தன்மையது. "அறிதோறறியாமை" என்று திருக்குறள் கூறும். ஆதலால், கற்கும் கல்வியும் பெறும் அறிவும் வளர்ச்சிக் குரியன என்பதை மறந்துவிடக்கூடாது. நாள்தோறும், நாழிகை தோறும் மனிதன் புத்துணர்வு பெற்று வளரவேண்டும், மனிதன் வாழவேண்டும், பிழைப்பு நடத்தக்கூடாது.

மனிதனை உருவாக்குவதே கல்வியின் நோக்கம் என்பதை மறந்து விடக் கூடாது! உடல், உள்ளம், ஆன்மா இவை மூன்றும் பொருத்தப்பாட்டுடன் ஒத்திசைத்தும் வளர வேண்டும். உடலுக்கும் உள்ளத்துக்கும், ஆன்மாவுக்கும் மாறு பாடுகள் ஏற்பட்டால், மோதல்கள் ஏற்பட்டால் அனைத்து நலன்களும் கெடும்; வாழ்வு பாழாகும்; வையகமும் துயருறும்.

## கல்வியாளர்கள் சிந்திக்கும் உரிமை பெறவேண்டும்

அரசியலாளர், கல்வியை கல்வியாளர்களிடமிருந்து பிரிக்கவே முயற்சி செய்கின்றனர். கல்வியியல் சிந்தனை யாளர்கள், துணைவேந்தர்கள், பேராசிரியர்கள் யாருக்கும் அரசியலைப் பற்றிய கருத்துக்களைக் கூறவோ, விமர்சனம் செய்யவோ உரிமை இல்லை என்ற நிலை உருவாகி வந்துள்ளது. கல்வியாளர் பலர் சூழ்நிலை காரணமாக இதில் அக்கறை காட்டுவதில்லை. அதனால் இன்று அரசியல், பொருளியல் பற்றித் தக்க விவாதங்கள் நடப்பதில்லை; மாணவர்களுக்குக் கற்பிப்பதில்லை. இது மிகப்பெரிய தவறு. வாழ்க்கையிலிருந்தும் அரசியலிலிருந்தும் கல்வி - கல்வியிய லாளர்கள் விலகி நிற்பது ஒரு பொய்ம்மை; தற்கொலையும் கூட என்பதை அறிதல் வேண்டும். கல்வியியலாளர்கள், அறிஞர்கள், கட்சி அரசியலில் ஈடுபடுவதைத் தவிர்க்கலாம். தவிர்க்க வேண்டும். ஆனால், அரசியல், சமூக மாற்றங்கள், பொருளாதாரக் கொள்கைகள் பற்றி - விவாதிக்கவும் விமர்சனம் செய்யவும் உரிமை வேண்டும். அப்போதுதான் நல்ல அரசியல் கால்கொண்டும்; சமுதாயம் வளரும். பல்கலைக் கழகங்கள் தன்னாட்சியுடையனவாக அமைய வேண்டும். கல்வி உலகில்; சமுத்தாயத்தை அரசியலை நெறிப் படுத்துதலுக்குரிய வாய்ப்புக்கள் பெருகி வளரவேண்டும்.

## ஆசிரியர் ஒருதுணையே!

மாணாக்கனின் அகத்தில் உறங்கிக் கிடக்கும் ஆற்றலை, ஒளியை வெளிக் கொணர்தலே கல்வி. கல்விக்கு மாணாக்கனது உளப்பாங்கினை அறிதல் முதல் தேவை. நல்ல கல்வி மாணாக்கனிடமிருந்தே தொடங்குகிறது. ஆசிரியர் ஒரு துணையே: நூல்கள் கருவிகளாகும். மாணாக்கனை வினாக்கள் கேட்கவும் விடைகளைக் காணவும் பயிற்றுவிக்க வேண்டும். ஒரோ வழி, ஆசிரியர் மாணாக்கர்களிடம் வினாக்களைத் தொடுக்கலாம். ஆனால் எக்காரணத்தை

முன்னிட்டும் ஆசிரியரே மாணாக்கர்களுக்கு விடைகளைக் கற்றுக் கொடுத்துவிடக்கூடாது. மாணாக்கர்களே முயன்று சரியான விடைகளைக் காணத் தூண்டவேண்டும். அவசியமிருப்பின் துணை வினாக்களைத் தொடுத்து, துணை வினாக்களுக்கு விடை காணும் முயற்சியின்மூலம், முக்கிய வினாவிற்கும் விடை காணும் முயற்சியில் ஈடுபடுத்தலாம். நல்ல அறிவைத் தேடும் பயணத்திலும், அடுத்துக் கருத்துக்கள் பரிமாற்றத்திலும் மாணவர்களை ஊக்கப்படுத்த வேண்டும். இந்த முறையில் அமைவதே கல்வி.

கல்வி, புத்தகப் படிப்பு மட்டுமல்ல, அல்லது சில தகவல்களை மூளையில் திணித்துக் கொள்வதும் அல்ல. கல்வி, பன்முகத் தன்மையுடையது. கல்வியின் துறைகள் பலப்பலவாக நாளும் விரிவடைந்து வளர்ந்து வருவதை, கற்கும் மாணாக்கர்கள் உணர்ந்து, கல்விப் பயணத்தை விரிவுடையதாக்கிக் கொள்ளவேண்டும். கல்வி, ஆன்ம சக்தியின் வளர்ச்சிக்குத் துணையாக அமைவது. நம் மனோருடைய ஆன்ம சக்தியும், மனோ சக்தியும் பலாத்காரத்தினாலும் பயமுறுத்தலாலும் ஒடுக்கப்பட்டுப் பல நூற்றாண்டுகள் ஆகிவிட்டன. இப்போது நம்மிடம் ஆன்ம சக்தி இருக்கிறதா? அல்லது செத்துவிட்டதா? என்பதைச் சோதனை செய்து கண்டுபிடிக்க வேண்டிய நிலையில் இருக்கின்றோம். ஆன்ம சக்தியைத் தராத கல்வியும் ஒரு கல்வியா? பழையனவற்றை நினைவுகூர முடிகிறதா? புதியன எண்ணி ஏற்க முடிகிறதா? இன்றைய வாழ்க்கை ஆன்மாவின் உயிர்ப்பு இல்லாமல் இயந்திர மயமாகி ஓடிக்கொண்டிருக்கிறதே! இதுதான் கல்வியின் பயனா? இத்தகைய கல்வி நமக்குத் தேவைதானா?

## மாணாக்கர்களின் நிலை

வாழ்நாளிலேயே மாணவப் பருவம் கிடைத்தற்கரியது. வாழ்க்கையில் சிறப்புக்குரிய - மாட்சிமைக்குரிய பண்பு களைக் கற்றுச் சேர்த்துக் கொள்ளும் பருவம் இது! இன்று

நமது மாணாக்கர்களுக்கு நாம் வழங்கியுள்ள, அளித்துள்ள வாய்ப்புக்கள் என்ன? இன்றைய மாணாக்கர்கள் நம்முடைய தலைமுறையிலிருந்து – தலைமுறையினரின் வாழ்க்கையி லிருந்து எந்த முன்னுதாரணத்தை – படிப்பினையை எடுத்துக் கொள்வார்கள்? அன்புகூர்ந்து சிந்தனை செய்யுங்கள்!

சுதந்திரம் பெற்ற பிறகு நம்முடைய வாழ்க்கையில் 'தியாகம்' 'நேர்மை' – ஆகியன விடை பெற்றுக்கொண்டு விட்டன போலத் தோன்றுகிறது. இன்று நிலவும் சமுதாயம் பண மதிப்பீட்டுச் சமுதாயம். ஆதலால், இந்தச் சமுதாயத்தில் கல்வியோ, திறமையோ தகுதியைத் தருவதில்லை. இன்று எங்கும் பணமே ஆதிக்கம் செலுத்துகிறது. இந்தப் பொருந்தாச் சூழ்நிலை, மாணாக்கர்களிடையில் மனமுறிவையே ஏற்படுத்தியிருக்கிறது என்பதை நாம் உணர்தல் வேண்டும்.

இன்றைய மாணாக்கர்கள் கடந்துபோன யுகம், வரும் யுகம் ஆகிய யுக சந்திப்பில் நின்று கொண்டிருக்கிறார்கள். அவர்களால் கடந்த யுகப் பெருமைகளைக் காணமுடிய வில்லை. அந்தப் பழைய – பிரமிக்கத்தக்க வரலாறு தொடரவும் இல்லை. அதேபோழ்து தங்களுடைய போக்கினாலே தங்களுடைய எதிர்காலம் பழுதுறப் போகிறது; இருள் சூழப் போகிறது என்பதை அறிந்துணராமல் நிற்கும் மாணாக்கர் களின் நிலை இரக்கத்திற்குரியது. இந்த அபாயத்திலிருந்து நமது மாணாக்கர்களை – எதிர்கால இந்தியாவை பாது காக்கத் துணிவான முயற்சிகள் தேவை. இத்தகு முயற்சியில் ஈடுபடும் பொழுது மாணாக்கர்களின் ஈடுபாடு, நடத்தை மதிப்பு, சமூகம் மற்றும் முன்னேற்றம் ஆகியவற்றையும் கணக்கில் எடுத்துக் கொண்டு செய்ய வேண்டியன பற்றி எண்ணித் திட்டமிடல்வேண்டும்.

## கல்விக் கூடங்கள் – வகுப்பறைகள்

முதலில் கற்பிக்கும் பணியில் நல்ல பயன்தரத்தக்க உத்திகளைக் கையாளவேண்டும். வாழ்க்கைக்கும் நடை

முறைக்கும் உதவாத, காலத்தால் தேய்ந்துபோன கருத்துக் களைத் திரும்பத் திரும்பக் கற்றுக் கொடுக்கும் போக்குக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும். அது போலவே கற்பிக்கும் கல்விக்கூடங்களிலும், அவற்றின் அமைப்பிலும் நடப்பிலும் மாற்றங்களைக் கண்டு புதுமைப்படுத்துதல் வேண்டும்.

பள்ளிகள், கல்லூரிகளின் வகுப்பறைகள் நல்லெண்ணமும், நம்பிக்கையும், ஆர்வமும், உரிமையும், உறவும், சுறுசுறுப்பும் உடையனவாக விளங்குதல் வேண்டும். பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள், கற்கும் முறைகளை, ஆய்வு முறைகளை அறிமுகப்படுத்தி நெறிப் படுத்துவனவேயாம். ஆதலால், வகுப்பறைகளிலேயே மாணாக்கர்களுக்கு, படிக்க வேண்டிய பிற நூல்கள் அறிமுகப்படுத்தப் பெறுதல் வேண்டும். அதுபோலவே, படிக்கும் நூல்களைத் தேர்வு செய்வதில் மாணாக்கர்களுடைய விருப்பம் அங்கீகரிக்கப்படுதல் வேண்டும். இன்றையக் கல்வி உலகத்தில் மாணாக்கர்களின் விருப்பம் செயற்பாட்டிற்கு வருவதில்லை.

## மாணாக்கர் விரும்பும் கல்வி அமையவேண்டும்

மாணாக்கர்கள் தாம் படிக்க விரும்பும் துறையைக் கூடத் தேர்ந்தெடுத்துப் படிக்க முடிவதில்லை. மாணாக்கர் களுக்கு அவர்களின் இளமைக் காலம் முதலே எத்துறைக் கல்வியில் விருப்பமும் நாட்டமும் இருக்கிறது என்பதை அறிந்து, அவர்தம் விருப்பத்தின்படியே அவர்களைத் தூண்டி அவர்கள் கற்பதற்கும் ஆய்வு செய்வதற்கும் பணி செய்வதற்கு முரிய வாய்ப்புக்களை வழங்கவேண்டும். மாணாக்கர்கள் கற்கும் கல்வி, அவர்கள் விருப்பத்திற்கு ஏற்ப அமைய வேண்டும். அஃதன்றிச் சந்தர்ப்பங்களும் சூழ்நிலைகளும் அதை நிர்ணயிக்கும்படி அனுமதித்தல் கூடாது. எந்தச் சூழ்நிலையிலும் மாணாக்கர்கள் வெறுப்படையும் சூழ்நிலை உருவாகக் கூடாது. அதனால், கல்வி நிறுவனங்களில் பல

விழாக்களை நடத்தலாம். அந்த விழாக்களை நடத்தும் பொறுப்புக்களையும் முழுமையாக மாணாக்கர்களிடம் ஒப்படைக்கலாம். அதுபோலவே விளையாட்டு, சமூகப் பணிகள் முதலியவற்றிலும் மாணாக்கர்கள் பங்கேற்கும்படி செய்யவேண்டும். மாணாக்கர்களுடன் ஆசிரியர்கள் தோழமை உணர்வுடன் கலந்து கொள்வது வரவேற்கத் தக்கது. மாணாக்கர்களின் சிந்தனைத் திறனையும், செயல்திறனையும் வளர்க்கக் களப்பணித் திட்டங்கள், கருத்தரங்குகள், சிக்கல்களுக்குத் தீர்வு காணும் பயிற்சிகள் முதலியன நடத்துதல், கல்வியின் குறிக்கோளை அடைய உதவியாக இருக்கும். வளரும் மாணாக்கர்கள் அறிவை அமைதியாகவே ஏற்பர். அதற்காகக் கவலைப்படவேண்டிய அவசியமில்லை. மாணாக்கர்கள் கல்வியில் ஆர்வம் பெறவும், கல்வி மற்றும் பிற துறைகளில் ஆராயவும், எந்தவொரு கருத்தையும் பகுத்தறிந்து உண்மையையும், புதியனவற்றையும் கண்டுபிடிக்கும் வகையில் கற்பிக்கப் பெறுதல் வேண்டும். பாவேந்தன் பாரதிதாசன் "அறிவை விரிவாக்கு! அகண்டமாக்கு!" எனக் கூறியாங்கு மாணாக்கர்களின் அறிவு விரிதற்கு ஏற்றபடி கற்பித்தல் முறை அமையவேண்டும். படித்ததையே திரும்பத் திரும்பப் படித்தல், நெட்டுருச் செய்து ஒப்பித்தல், வாழ்க்கைக்கு இம்மியும் பயன்படாத செய்திகளை மூளையில் திணித்தல் போன்றவை இனியும் தொடர்தலாகா. மாணாக்கர்கள் தங்கள் அறிவுப் பரப்பை வளர்த்துக் கொள்ள வகுப்பறைகள் துணை செய்யவேண்டும்.

"கற்றில னாயினும் கேட்க"

என்பது திருக்குறள். அதனால், கல்வியில் மட்டுமன்றி, கேள்வியாலும் கல்வி பெறமுடியும்; அறிவைப் பெறமுடியும். எனவே, தக்கார் பலரின் இனிய ஆய்வுரைகளை, வரலாற்றுக்கு விசை கொடுக்கும் உரைகளைக் கேட்கும் வாய்ப்பு அடிக்கடி வழங்கப்பெறுதல் வேண்டும். மாணாக்கர்

களுக்கு வழங்கப்பெறும் கல்வி, ஆய்வு மனப்பான்மையைத் தூண்டி வளர்ப்பதாக அமையவேண்டும். சிறப்பாக மாணாக்கர்கள் அவர்கள் காணும் சமூக அமைப்பு, கலாச்சாரம், உற்பத்திப் பொருளாதாரம், கிராம முன்னேற்றம், சமூக மாற்றத்துக்குத் தேவையான ஆயத்தங்கள் முதலியன பற்றி ஆய்வு செய்தல் பயனுடையதாக அமையும். இத்தகு சிறந்த கல்வி கற்ற சமுதாயம் அமைய வேண்டுமானால், ஆரம்பக் கல்வி, அதாவது தொடக்கக் கல்வி நிலையிலேயே கவனம் செலுத்தப்படுதல் வேண்டும்.

## ஆரம்பப் பாடசாலைகள் திருத்தம் பெறவேண்டும்

இன்றைய நமது நாட்டு ஆரம்பக் கல்விநிலை பரிதாபகரமானது. மாணாக்கர்கள் விரும்பி ஆர்வத்துடன் கற்கத்தக்கதாக ஆரம்பக் கல்வி அமையவில்லை என்பது ஒரு வருந்தத்தக்க உண்மை! இன்றைய ஆரம்பக் கல்வியில் கற்பிக்கும் திறன், ஆரம்பப் பாடசாலைகளின் சூழ்நிலை இவற்றை உடனடியாக மேம்படுத்துதலுக்குரிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெறுதல் வேண்டும். ஆரம்பக் கல்வி, உயிர்ப்பும் அழகும் கவர்ச்சியும் இயற்கைச் சூழலும் உடையதாக அமையவேண்டும். கற்பிக்கும் சாதனங்கள் தேவையான அளவு இருக்க வேண்டும். இன்று 90% ஆரம்பப் பாடசாலைகளில் போதுமான கல்விச் சாதனங்கள் இல்லை! கரும்பலகை வசதிகூட இல்லாத பள்ளிக்கூடங்கள் பலப்பல. தொடக்கக் கல்வி வழங்கும் பள்ளிகளின் வகுப்பறை பாவம், துக்கமும் ஆற்றாமையும் சோம்பலும் படர்ந்ததாக இருப்பதை இன்றும் காணலாம். அதுமட்டுமா? ஆரம்பப் பாடசாலைகளில் வகுப்புக்கு ஓர் ஆசிரியர் என்ற நியதிகூட நடைமுறையில் இல்லை. பல ஆரம்பப் பாடசாலைகளில் முதல்வகுப்பு, இரண்டாம் வகுப்புகள் வகுப்பறைகளாக இருப்பதில்லை! சிறுவர்களை அடைத்து வைக்கும் கொட்டடிகள் போல இருக்கின்றன.

நூறு சிறுவர்களுக்கு ஓர் ஆசிரியர் எப்படி வகுப்பை நிர்வாகம் செய்வார்? கல்வி கற்பிப்பார்? ஆரம்பப் பாடசாலை ஆசிரியர் ஒருவருக்கு, ஆகக் கூடுதல் நிலையில் 35 மாணாக்கர்கள் என்ற விகிதம் நடைமுறைப்படுத்தப் படுதல் வேண்டும். ஆரம்பப் பாடசாலைகளில் பாடப் புத்தகங்களின் சுமையைக் குறைக்க வேண்டும். முதல் இரண்டு வகுப்புகளில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். ஆரம்பப் பாடசாலைகளில் பள்ளித் தோட்டம் அமைத்தல், பள்ளிச் சுற்றுப்புறங்களைத் தூய்மையாக வைத்துக் கொள்ளுதல் முதலியவற்றை ஆசிரியர்கள் மேற்பார்வையில் மாணாக்கர்கள் செய்யப் பயிற்சியளிக்க வேண்டும். விளையாட்டுத் திடலும் பள்ளித் தோட்டமும் இல்லாத பள்ளிகள் கல்விப் பணியை முழுமையாகச் செய்ய இயலாது.

உழைப்பில் மாணாக்கன் பெரும் அனுபவத்தைப் பெறுகிறான். அதுமட்டுமல்ல. உழைப்புப் பாடங்களின் வழி திட்டமிடல். கருவிகளை இயக்குதல், செய்தல் முதலிய பயன்பாடுடைய கல்வியையும் பெறமுடியும். ஆரம்பப் பள்ளி மாணாக்கர்களிடம் புலனுணர்வு, வளர்ச்சி, நினைவாற்றல் வளர்ச்சி, கற்பனை வளர்ச்சி, சிந்தனை வளர்ச்சி, ஆளுமை வளர்ச்சி ஆகியன முறையே தோன்ற வேண்டும் என்பது உளவியல் கோட்பாடு; கல்வியியலின் நியதி. இன்று இந்த நிலை இல்லை என்பது நாடறிந்த உண்மை. ஆரம்பப் பள்ளியில் கல்வியியல் நியதிகள் நடைமுறைப் படுத்தப்பட்டாலே அறிஞன் தோன்றுவான்; மனிதன் தோன்றுவான்.

## மாணாக்கரின் பருவ நிலையை உணரவேண்டும்

மாணாக்கன் உயர்நிலைப் பள்ளிக் கல்வி, மேல்நிலைப் பள்ளிக் கல்வி கற்கும் காலம், மிகவும் இடர்ப்பாடுகள் நிறைந்த காலம்! மாணாக்கனின் வயது வளர்ந்து வருகிறது. அதாவது 11–15, 16–17 வயது வரையிலான பருவம். இது வளரும் பருவம்; இளம்பருவ மாணாக்க, மாணாக்கியரின்

வாழ்க்கையில் மாற்றங்கள் ஏற்படும் காலம். இது ஏன்? இந்தப் பருவத்தில் பெரியவர்களுக்குரிய குணங்கள் தோன்றத் தொடங்கும். உடலமைப்பு, புதிய பண்பு, சுய உணர்வு, தன் மதிப்பு ஆகிய இயல்புகளும், பண்புகளும் தோன்றும். சமூக நடவடிக்கைகளில் இயல்பாக ஆர்வம் தலைப்படும். இந்த உணர்வைக், கற்பித்தல் மூலம் ஆசிரியர் உலகம் வழிகாட்ட வேண்டும். இந்தப் பருவ காலத்தில் மாணாக்கரிடம் தோன்றும் "பெரியவன்" என்ற உணர்வின் தோற்றத்தையும், அதன் மூல ஊற்றையும் ஆசிரியர்கள் அங்கீகரித்து நயமுடையதாக்க வேண்டும். இந்த வளரிளம் பருவத்தில்தான் பெரியவர்களுக்கும் – ஆசிரியர்களுக்கும், இளைஞர்களுக்கும் இடையிலான உறவு முறியக்கூடிய வாய்ப்புக்கள் தோன்றும். இந்தப் பருவ காலத்தில் மாணாக்கர்களுடன் பெரியவர்கள் ஆசிரியர்கள், ஒரு புதிய உறவை – சக வாழ்வு உறவை–வளர்த்துக் கொள்ள முன்வரவேண்டும். இந்த முயற்சி கற்பித்தலுக்கு மிக மிக அவசியம்!

## செயல்திறனுடைய கல்வி தேவை

இந்த வளரும் இளம் பருவத்தில் தான், மாணாக்கன் தானே படிக்க விரும்பிக் குறிப்புப் புத்தகங்களை நாடுகின்றான். ஏன் ஆசிரியர் கற்பித்தலிலும் மன நிறைவு பெறாமல் இருத்தலால் அல்ல. சுய முயற்சி எண்ணமே அது. எது எப்படியானாலும் ஆசிரியர் – மாணாக்கர்களுக் கிடையேயுள்ள கல்வி உறவில் குறிப்புப் புத்தகங்களை அனுமதிப்பதற்கில்லை. ஆசிரியர் – மாணாக்கர் முறையில் கல்வி கற்றால்தானே விவாதங்கள் தோன்றவும் அவ்வழி சிந்தனை வளரவும் வாய்ப்புகள் ஏற்படும். வளரும் பருவத்துக் கல்வியில் உடல் உழைப்புக் கல்வி கட்டாயம் இடம் பெற வேண்டும். விஞ்ஞானம் – விஞ்ஞான சோதனைக் கல்வி கணிசமான அளவுக்கு இடம் பெறவேண்டும். அறிவியல் சோதனைகளைச் செய்து மாணாக்கன் கற்க வேண்டும்.

வேளாண்மை, கால்நடை வளர்த்தல், முதலிய தொழிற் பாடங்கள் பாடத் திட்டத்தில் இடம் பெறுதல் அவசியம். இவை பாடத் திட்டத்தில் சேர்ந்தால்தான் வேளாண்மை, கால்நடை வளர்த்தல் முதலியவற்றில் அலட்சியப் போக்கு இல்லாமல் ஆர்வம் காட்டுவர். வளரும் இளம் பருவத்தில் உயர்நிலைப் பள்ளி, மேல்நிலைப் பள்ளிகளில் மாணாக்கர் பெறும் கல்வி, நாட்டின் வளர்ச்சிக்கு ஒரு கருவியாக இருக்க வேண்டும். இந்தப் பருவத்தில் மாணாக்கனின் - இளைஞனின் முழுத் திறமையையும் வளர்க்கும் முயற்சி தேவை. மாணாக்கனுக்குச் செயல் திறமையுடைய கல்வி தேவை என்பதை அறிக.

## ஆண் – பெண் சேர்ந்து பயிலவேண்டும்

உயர்நிலைக் கல்வியில் நமது நாட்டில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிக்கும் கல்வி நிலையங்களே தேவை. இத்தகு கூட்டுக் கல்வி முறையிலும் ஒரோவழி சில தவறுகள் நிகழ வாய்ப்புள்ளது. என்றாலும் விளையும் பயன் மிகுதி என்பதனைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். தனித்தனியே பிரித்து வைக்கும்பொழுது தோன்றும் கவர்ச்சி, ஆர்வம் ஒன்றாகப் படிக்கும்பொழுது தோன்றுவதில்லை. கூட்டுக் கல்வியில் பழகும் வாய்ப்புக்கள் இருப்பதால் கவர்ச்சி வயப்பட்ட ஆர்வம் குறைகிறது. வாழ்க்கையின் பிற்காலத்திலும் சமநிலை உணர்வு கால்கொள்கிறது ஏன்? தங்களுக்கேற்ற துணையைத் தேடிக்கொள்ளும் வாய்ப்பும் கிடைக்கிறது. திருமணங்கள் "செய்து" வைக்கப்படும் வரையில் வரதட்சணைக் கொடுமை நிலவும். திருமணங்கள் நிகழவேண்டுமே தவிர, செய்து வைத்தல் கூடாது. இதுவே மரபு இயற்கை நியதியும்கூட.

## பல்வகைப் பணிக்கல்வி

உயர்நிலைக் கல்வியில் மாணவர் அவை அமைத்துப் பள்ளியின் பணியை மேலும் பகிர்வு செய்து அளிக்கலாம்.

தமிழ் இலக்கிய மன்றம், ஆங்கில மன்றம், அறிவியல் மன்றம், கணித மன்றம், தோட்டப் பணி மன்றம், விளையாட்டுக்குழு, சமயப்பேரவை, மாணவர் நலக்குழு எல்லாம் அமைத்துப் பணி செய்யும் பொறுப்பை மாணாக்கர்களிடம் வழங்கலாம். மாணாக்கர்கள் சந்தா முறையில் நிதி சேர்க்கவும் வாய்ப்பளிக்கலாம். சாரணர் பயிற்சி, தேசிய மாணவர்படை, செஞ்சிலுவைச் சங்கம் முதலியன பள்ளிகளில் தொடங்க வேண்டும். விடுமுறை நாள்களில் சமூகத் தொண்டு செய்யப் பழக்கலாம்.

மேல்நிலைக் கல்வியில் அறிமுகப்படுத்தப்பெற்றுள்ள தொழிற் படிப்பின் சான்று பெற்ற அளவிலேயே பணி பார்க்கும் உரிமை வழங்குதல் கடமை. கலை, இசை, நாடகம் முதலிய துறைகளில் ஆர்வத்தை உண்டாக்கவேண்டும். தேசிய மாணவர் படை மூலம் நாட்டின் சேவைக்குரிய பயிற்சிகள் தரவேண்டும். மேல்நிலைக் கல்வியில் ஆளுமைப் பயிற்சி வழங்கப்படுதல் அவசியம். மேல்நிலைப் பள்ளி, கல்லூரி இவ்விரண்டு நிலையிலும் சமய வகுப்புக்கள், பிரார்த்தனை போன்றவைகள் சேர்க்கப்படவேண்டும்.

உயர் கல்வியில் கல்லூரி நிலையில் ஆய்வு மனப்பான்மை, புதியன புனைதல் முதலானவை அமைத்துத் தரலாம். அறிவியல் சார்ந்த தொழில் நுட்பக் கல்வியும் கற்றுத் தரவேண்டும். அறிவுழைப்பு, உடலுழைப்பு இவ்விரண்டுக்கும் கல்லூரிப் பருவமே சிறந்தது. கல்லூரிக் கல்வி நிலையில் பொறுப்புள்ள குடிமகனாக, குடிமகளாக வளர்க்க வேண்டும்.

## கல்லூரிகள் – பல்கலைக் கழகங்களின் பணி

பல்கலைக் கழகங்களைப் பொறுத்தவரையில் நல்ல ஆய்வு அன்றாடம் நிகழ வேண்டும். கல்லூரி நிலையில் ஆய்வியல் சோதனைக் கூடம் சிறப்பாக அமையவேண்டும். புதிய அறிவியல் உண்மைகளைத் தேட மாணவர்களுக்கு நிறைய வாய்ப்புண்டு. நாட்டில் நிகழ்வுகளைக் கணித்து நாடு

செல்லவேண்டிய திசையில் செலுத்தக் கற்றுத் தரவேண்டும். ஆய்வுகள் சமுதாயத் தொடர்புடையனவாக நடத்தப்பட வேண்டும். பல்கலைக் கழக மாணாக்கர்களை இந்த நாட்டின் அரசியல், பொருளாதார ஆய்வுகளை நடத்தவும் அவ்வழியில் தயக்கம் சிறிதுமின்றி வாழ்க்கையை நடத்தவும் பழக்கவேண்டும்.

பல்கலைக் கழகங்கள் வரலாற்றில் நின்று புகழ் பெறத்தக்க ஆய்வாளர்களையும், சாதனையாளர்களையும் உருவாக்கித் தரவேண்டும். கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் மற்றவர்களைச் சார்ந்து வாழ்கிறவர்களாகவும், மற்றவர்கள் உழைப்பிலே பயன்பெறுகின்றவர்களாகவும் விளங்குகிற தீமையிலிருந்து விடுதலை பெறக்கூடிய மாணாக்கர்களை - தலைவர்களை உருவாக்க வேண்டும் என்பது பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் விருப்பமாகும். இந்த நல்லெண்ணம் நிறைவேறக்கூடிய வகையில் நமது பல்கலைக் கழகங்களின் செயற்பாடு அமையுமாக.

## கல்விக்கூடங்கள் – சூழல் – வசதி

கல்வி பயிற்றுவிக்கும் கூடங்கள், ஊருக்கு வெளியில் அமைதியான சூழ்நிலையில் இருக்கவேண்டும். இரைச்சல், தூசி, முதலியவற்றால் பள்ளிச் சூழல் கெடக்கூடாது. பள்ளி, நல்ல இயற்கைச் சூழலில் நடைபெற வேண்டும். பள்ளியைச் சுற்றி வேம்பு, அரசு ஆகிய மரங்கள் நிறைய நடவேண்டும். வகுப்பறைகள் நல்ல வெளிச்சமும் காற்றோட்டமும் உடையனவாக அமையவேண்டும். சுகாதார வசதிகள் செய்யப் பெற்றிருக்கவேண்டும். இன்று நூற்றுக்குப் பத்துப் பள்ளிகளில்கூட இந்த வசதி இல்லை. இனிவரும்காலத்தில் முழுமையான வசதியை உருவாக்க வேண்டும். இதற்குச் சமூகமும் அரசும் நிறைய உதவியும் ஒத்துழைப்பும் நல்க வேண்டும். இன்று நாடு தழுவிய நிலையில் கல்வி இலவச மாதத் தருதல் வேண்டும்; தரமான கல்வி தருதல் வேண்டும்.

கல்வி தருவதற்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ கட்டணங்கள் வசூலிக்கக் கூடாது என்ற கருத்து உருவாகி விவாதிக்கப்பட்டு வருகிறது. இந்திய உயர்நீதி மன்றமும் கல்வி நிறுவனங்கள் நன்கொடை வாங்கக் கூடாது என்று தடை விதித்திருக்கிறது. இஃதொரு திருப்புமையம்; வரவேற்கத்தக்க நடைமுறை மாற்றம்.

## நிதி உதவி வேண்டும்

கல்வி நிறுவனங்கள் முறையாக வளர, நிறைய நிதி தேவை. கடந்த பல ஆண்டுகளாக அரசு பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் நிதி போதுமான அளவுக்கு அளிக்க வில்லை. தனியார் கல்வி நிறுவனங்களுக்கும் இதே நிலை தான். அரசு போதுமான நிதியளிக்க முன் வராததால்தான் நன்கொடை வாங்கும் பழக்கம் கால்கொண்டது என்பதை நினைவுகூர்தல் வேண்டும். ஆதலால், அரசு போதுமான நிதி உதவி செய்யவேண்டும். பெற்றோர்களும், சமூகமும்கூட நிதி வழங்க முன்வரவேண்டும். சமூகத்தில் பணம் இல்லாமல் இல்லை. மக்கள் மதம், அரசியல் பெயரில் எவ்வளவோ செலவழிக்கிறார்கள். ஏன், பள்ளிக்குத் தமது மக்கட் செல்வங் களின் எதிர்கால மேன்மைக்குச் செலவழிக்கக்கூடாது? கல்விக்குச் செலவழிக்கும் பணம் உண்மையில் செலவு அல்ல. அஃதொரு வகையான முதலீடு என்று பெற்றோர்கள் கருத வேண்டும்; அரசும் கருதவேண்டும். இது மிகவும் குறைந்த செலவில் தேசத்தைக் காக்கும் பணியுமாகும் என்பதை ஆள்பவர்கள் உணர்தல் வேண்டும்.

## அரசு தலையீடு கூடாது

அரசு, நிதி உதவி செய்யும் ஒரே காரணத்திற்காகப் பள்ளிக்கூடங்கள், கல்...ரிகள் ஆகியவற்றின் நிர்வாகத்தில் - குறிப்பாக பாடப்புத்தகக் குழு, பாடப் புத்தகங்கள் தேர்வு செய்வதிலும், ஆசிரியர் தேர்விலும், தலையிடக்கூடாது. அப்படித் தலையிட்டால் கல்விப் போக்கு அடிக்கடி மாறும்.

கல்வியின் தரமும் குறையும். கல்வியை தன்னாதிக்கம் உள்ள ஒரு வாரியத்தில் ஒப்படைப்பது நல்லது. எந்த நாட்டில் கல்வியில் சுதந்திரம் இல்லையோ அங்கு அடிமைத்தனம் வளரும்; பயமும் வளரும். கொத்தடிமைகளை வைத்துக் கொண்டு என்ன செய்ய இயலும்? கல்வித் துறையில் அமெரிக்க முறையைப் பின்பற்றுவது நல்லது. அதாவது கல்வியில் எல்லா நிலைகளிலும் - எல்லாப்படி நிலைகளிலும் சுதந்திரம் தேவை. தவறுகள் நேராமல் அரசு கண்காணிக்கலாம்; பாடநூல் நிறுவனங்கள் அரசுச் சார்பு இல்லாமல் சுதந்திரமான ஓர் அமைப்பாக இருக்கவேண்டும். பாட நூல் நிறுவனம் கல்வியியல் நிபுணர்களால் நிர்வாகம் செய்யப் பெறுதல் வேண்டும். ஆசிரியர்களுக்கு ஊதிய உயர்வு - பதவி உயர்வு முதலியன ஆசிரியரின் பணித்திறன் மதிப்பீட்டு அடிப்படையிலேயே அமையவேண்டும்.

## மாணாக்கர்

மாணாக்கர்கள் கல்வி பயிலும்காலத்தில் கல்வியில் ஆர்வம் காட்டவேண்டும். நல்ல உடல்நலம் பெற்றிருத்தல் அவசியம். தங்கள் வாழ்க்கையின் குறிக்கோள் இதுவென நிர்ணயித்துக் கொள்ளும் மனப்பான்மையும் மாணாக்கர் களுக்குத் தேவை. மாணாக்கன் நிலையில், கட்டுப்பாடான வாழ்க்கையை வாழக் கற்றுக் கொண்டால்தான் கற்பதில் முன்னேறமுடியும். காலம் போற்றுதல், ஆசிரியர்களை மதித்தல் முதலிய நற்பழக்கங்கள் மாணாக்கர்களுக்கு இன்றி யமையாதன. கவர்ச்சியின் வழிச் செல்லாமல், கல்வியிலும் தம்முன்னேற்றத்திலும் மாணாக்கர்கள் ஆர்வம் காட்ட வேண்டும். நாள்தோறும் முறையான கல்விப் பயிற்சி, சிந்தனைப் பயிற்சிகளைச்செய்து வளரவேண்டும். “கண்டதைப் படித்தால் பண்டிதன் ஆவான்” என்றொரு பழமொழி உண்டு. அதாவது காணும் காட்சிகளைக் கூர்ந்து நோக்கி, அவற்றின் அமைவுகளையும் உள்ளீடுகளையும்

அறிதல் வேண்டும். அதுபோலவே அறிஞருரை கேட்பதிலும் ஆர்வம் காட்டவேண்டும். கல்விப் பயணம் நீண்டது; அகலமானது, ஆழமானது என்ற உணர்வுடன் கற்றதில் திருப்தி அடைந்துவிடாமல், என்றும் கற்கும் மாணாக்கனாக இருக்கும் மனோநிலை கற்பவர்களுக்கு வேண்டும்.

இனிய அன்புடைய மாணாக்க நண்பர்களே! கல்வி பயிலுங்காலத்தில் அரசியற் கட்சிப் பணிகளில் ஈடுபடா தீர்கள்! நீங்கள் வளர்ந்து கல்வியை முடித்துக்கொண்டபிறகு நீங்கள் இந்த நாட்டை நடத்தும் பொறுப்பை ஏற்கும்போது இந்தப் புவியைத் திறமையாக நடத்த இப்போதே திட்டமிடுங்கள்! நாளைய வரலாறு உங்களுடையதே! இது உறுதி! திரைப்படங்களையே நம்பி-அதுவே வாழ்வு என்று நம்பி-நடக்காதீர்கள். உங்களுடைய வாழ்க்கையை அறிவும் ஆற்றலும் ஆளுமையும் உடைய வாழ்க்கையாக உருவாக்கிக் கொள்ளுங்கள்! உங்களை 'இந்த நாடு நம்பி இருக்கிறது' என்பதை நினைவிற்கொள்ளுங்கள்.

மாணாக்கர்கள் இளமைக் காலத்திலேயே தங்களுக்கென ஒரு குறிக்கோளை எடுத்துக்கொள்ள வேண்டும். அந்தக் குறிக்கோள் தற்சார்புடையதாக மட்டுமல்லாமல் நாட்டு நலமுடன் எதிர்வரும் தலைமுறையினருக்கும் ஆக்கம் அமைந்ததாய் இருக்கவேண்டும். நாடு விடுதலை பெற்றதி லிருந்து எத்தனையோ திட்டங்கள் தீட்டியும் பல்வேறு திட்டப்பணிகள் நிறைவேறியும் இந்த நாட்டில் இன்னமும் சம வாய்ப்புச் சமுதாயம் அமையவில்லை! பழைய தலை முறைகளில் வீடுகள் நாட்டுக்கு வந்தன, இன்றோ நாட்டையே வீட்டுக்குக் கொண்டுபோகும் முயற்சியிலேயே ஈடுபட்டுள்ளனர். இதனால், நாடு எய்த்துக் களைத்து நிற்கிறது! இன்று இந்த நாடு தங்களைத் தாங்கும் என்று நம்பாமல், நீங்கள் இந்த நாட்டைத் தாங்கும் ஆற்றலுடனும் உறுதியுடனும் நாட்டு வாழ்க்கையில் அடி எடுத்து வையுங்கள்

என்று இன்றைய மாணாக்கர்களை அன்புடன் கேட்டுக் கொள்கின்றோம்.

## ஆசிரியர்கள்

கல்வியியலில் ஆசிரியருக்கு உள்ள பொறுப்பும் பங்கும் அளவிடற்பாலதன்று; மகத்தானது. ஒரு மாணாக்கனது வாழ்க்கையை உருவாக்குவதில் ஆசிரியர் பூரணப் பொறுப்பை ஏற்கிறார். அவ்வழி நாட்டை வளர்ப்பதிலும் பங்கேற்கிறார். ஆதலால், சமூகத்தில் ஆசிரியருக்குத் தகுதியான ஓர் இடத்தை அளித்தல் அவசியம். ஆசிரியர் மதிக்கப்படுதல் வேண்டும். ஆசிரியர்களை அவர்களுடைய கற்பித்தல் பணியில் ஊக்கப்படுத்தும் முயற்சி, பெற்றோர்கள் பக்கலி லிருந்தும் அரசுச் சார்பிலும் தேவை. ஆசிரியர்களுடைய அடிப்படைத் தேவைகள் நிறைவு செய்யப்பெறுதல் வேண்டும். ஆசிரியர், சமூகத்தால் உரியவாறு பேணப் பெறுதல் வேண்டும். அப்போதுதான் ஆசிரியர்கள் தமது பங்கை உரியவாறு சமுதாயத்திற்குச் செய்யமுடியும்; கல்விப் பண்பும் வெற்றிகரமாக அமையும்.

## ஆசிரியர் – மாணாக்கர் உறவு

மாணாக்கர்கள் – ஆசிரியர் உறவு நல்ல வண்ணம் அமைதல் வேண்டும். இன்று நமது நாட்டில் மாணாக்கர் – ஆசிரியர் உறவு போதிய அளவு இல்லை. மாணாக்கர்கள் நலனில் போதிய அக்கறை காட்டும் ஆசிரியர்கள் இல்லை என்றே கூறலாம். தப்பித்தவறி ஓரிருவர் இருந்தால் அவர் களுக்கு நமது பாராட்டுக்கள்! மாணாக்கர்கள் – ஆசிரியர் உறவு மிகவும் கவனமாகப் பேணப்படவேண்டிய ஒன்று. பொதுவாக மாணாக்கர்கள் தம்பால் அக்கறை காட்டும் ஆசிரியர்களையே விரும்புகிறார்கள். வகுப்பறையில் எடுத்த எடுப்பிலேயே பாடத்தைத் தொடங்காமல் சில நிமிடங்கள் அன்பு கெழுமிய, அகநிலை தழுவிய உறவு வளர்க்கும் உரை யாடல்கள், நிகழ்வுகள் நிகழ்த்தியபிறகு பாடம் நடத்துதல்

நலம் பயக்குமா என்பதை ஆசிரியர்கள் ஆராய்க! அதுபோலவே பாட முடிவிலும் மாணாக்கர்கள் - ஆசிரியர் கற்பித்ததை வாங்கிக் கொண்டார்களா? என்பதைப் பரிவுடன் ஆராய்ந்தறிவது பயன்தரும். ஆசிரியர்கள் மாணாக்கர்களுக்கு அறிவு வழியிலும் அகவழியிலும் வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருத்தல்வேண்டும். ஆசிரியர்கள் மாணாக்கர்கள்பால் உளமார ஆர்வம் காட்டினால் மாணாக்கர்களை எளிதில் திருத்தமுடியும்; திருப்பமுடியும் என்பதை ஆசிரியப் பெருமக்கள் அறிதல் வேண்டும்.

## ஆசிரியர் கடமைகள்

இன்று பெரும்பாலான கல்வி நிறுவனங்களில் ஆசிரியப் பணி இயந்திரம் போல உயிர்ப்பு இல்லாமலே நடைபெறுகிறது. பாடக் குறிப்புகள் எழுதுவதுகூட ஒரு சடங்காகப் போய்விட்டது. கல்வி அதிகாரிகள் வரும் நேரத்தில் ஒரே மூச்சில் பாடக் குறிப்பு எழுதும் ஆசிரியர்களும் உள்ளனர். தம் வகுப்பில் கற்பதில் கடைசி வரிசையில் (தரத்தில்) இருக்கும் மாணவர்களையும் நினைவிற்கொண்டு பாடக்குறிப்புகள் எழுதுவதில்லை. பாடக் குறிப்பு, ஒப்புநோக்குச் செய்திகள் பெரும்பாலும் இருப்பதில்லை. ஒப்பு நோக்குப் புத்தகங்கள் எடுத்துப் படித்துக் குறிப்பு எழுதும் பழக்கம் இல்லை.

ஆதலால், கற்பிக்கும் ஆசிரியருக்கும், கற்கும் மாணாக்கருக்கும் இடையே உள்ள இடைவெளி மிக அதிகம் என்ற உண்மையை உணர்த்தத்தான் வால் மட்டுமே நுழையவில்லை என்ற எலிக்கதை பிறத்தது. மாணாக்கனுக்குப் புரியும்படி சொல்லிக் கொடுக்கவேண்டும் என்ற முனைப்பு ஆசிரியர்களிடம் தேவை. கற்பிக்கும் முயற்சியை உரிய அளவு ஏற்காமல் மாணாக்கனுக்கு "முட்டாள்" பட்டம் சூட்டுவது, பிற்பட்ட சமூகத்தினை சார்ந்தவன் என்று கூறுவது முதலியன ஏற்றுக்கொள்ள முடியாதவையாகும். இன்று

வகுப்பறையில் ஆசிரியர் செய்யும் பணியை, ஓர் ஒலி நாடாக்கூடச் செய்துவிடும் என்பதை உணர்தல் அவசியம். ஆசிரியர்கள் மாணாக்கர்களுக்குக் கற்பிக்கும் பாடத்தைப் பலகாலும் படித்து அந்தப் பாட நூற் கருத்தைச் செழுமைப்படுத்தப் பல நூல்களைக் கற்றல், பல ஆய்வுகள் செய்தல், சோதனை செய்தல் முதலியவற்றைச் செய்து தனது அறிவினைச் செழுமைப்படுத்திக் கொண்டால்தான், கற்பித் தலைத் திறமையாகச் செய்யமுடியும். உலகியலில் முறையான அலுவல் நேரம் மிகக் குறைவு ஆசிரியர்களுக்குத்தான். ஆசிரியர், சராசரி ஒரு நாளைக்கு 5½ மணிநேரம் தான் பணி செய்கிறார். ஆண்டு ஒன்றுக்கு 200 நாள்கள்தான் பணி நாள்கள்! ஏன் இவ்வளவு குறைந்த நாள்கள் பணிக்கு வரையறை செய்யப்பட்டது? மற்ற பணிகள் எல்லாம் செய்யும் மணி நேர அளவுக்குச் செய்தால் போதும்! பள்ளி வகுப்பறையில் ஒரு மணி நேரம் கற்பிக்கும் பணி செய்ய வேண்டுமென்றால், அந்த ஆசிரியர் வகுப்பிற்கு வெளியேயும் குறைந்தது ஒரு மணிநேரமாவது உழைக்கவேண்டும். அதாவது கற்பிக்கும் பாடத்தைப் படித்தல், சிந்தித்தல், குறிப்புகள் தயாரித்தல், காட்டுவதற்குக் காட்சிப் பொருள்கள் தயாரித்தல் முதலிய பணிகள் உள்ளன என்பதைக் கருத்தில் கொண்டேயாம். ஆனால், இந்த உண்மையை ஆசிரியர்கள் உணர்ந்திருக்கிறார்களா என்பது விளங்கவில்லை. அவர்கள் வகுப்பறை நேரத்தைத் தவிர மற்றநேரம் தங்களுக்குரியது என்று எண்ணி வீணாக்குகின்றனர். சிலர் அரசியல் இயக்கங் களில் ஈடுபாடு கொண்டு புனை பெயரில் பங்கேற்கின்றனர். மற்றும் சிலர் துணைத் தொழில்களை (வட்டிக்கடை முதலியன) செய்யத் தொடங்கிவிட்டனர். இவர்களுடைய மனப்போக்கில், ஆசிரியப் பணி இரண்டாம் இடத்திற்கு வந்துவிட்டது. சென்ற பல ஆண்டுகளில் ஆசிரியர்களின் வாழ்க்கைத் தரம் உயர அரசு கணிசமான அளவு ஊதியத்தை உயர்த்தி இருக்கிறது. மேலும் உயர்த்தவேண்டும் என்று

அரசை வற்புறுத்தலாம். இதைவிட்டுவிட்டு ஆசிரியர்களுடைய நேரம், மாணவர்களுடைய நேரம் என்பதை மறந்து ஆசிரியர் தன்மையை வளர்த்துக் கொள்ளும் பணியில் செலவழிக்காமல், புறம்பான வழிகளில் செலவழிப்பது நேர்மையும் அன்று; முறையும் அன்று. ஆசிரியர்கள் தொடர்ந்து கற்பது, ஆய்வு செய்வது என்று இருந்தால் நமது பள்ளிகளில், கல்லூரிகளிலேயே பல, புதிய உண்மைகள் வெளிப்படவும் - கண்டுபிடிப்புகள் செய்யவும் வாய்ப்புண்டு என்பதை ஆசிரியப் பெருமக்கள் உணர்தல் வேண்டும்.

நமது நாடு கல்வியில் முன்னேற வேண்டிய நிலையிலேயே இருக்கிறது. இந்த முன்னேற்றம் கற்பிக்கும் ஆசிரியரின் ஆற்றலையும், அவருடைய முயற்சியின் அளவையும் பொறுத்ததேயாம். நமது நாட்டின் முன்னேற்றம் ஆசிரியர் கற்பிக்கும் ஆற்றலையும் மாணாக்கர்களை நெறிப்படுத்தும் பண்பையும் சார்ந்திருக்கிறது என்பதை நமது ஆசிரியப் பெருமக்கள் அறிதல் வேண்டும். இந்த நாட்டில் எந்த நிலையில் தவறுகள் நிகழ்ந்தாலும் அல்லது சோம்பல் நிலவினாலும் நாட்டின் வளர்ச்சிப் போக்கு அவ்வளவாகப் பாதித்துவிடாது! ஆனால், பள்ளிகளின், கல்லூரிகளின், பல்கலைக் கழகங்களின் வகுப்பறைகளில் செய்கின்ற தவறு - செய்யவேண்டாதன செய்தலாகிய தவறு, சோம்பல் ஆகியன நிகழ்ந்தால் நாட்டின் வரலாறே கெடும் என்ற அபாயத்தை நாம் ஒவ்வொருவரும் உணர்ந்தாகவேண்டும். ஆசிரியர்கள் சமூக வளர்ச்சிக்கும் மாறுதலுக்குமுரிய பிரதிநிதிகளாவர். ஆசிரியர்கள் எப்போதும் புதியனவற்றைத் தேடிய வண்ணம் இருத்தல் வேண்டும். ஆசிரியர்கள் எதிர் பார்த்தும் எதிர்பாராமலும் பல பிரச்சனைகளுக்குத் தீர்வு காண்பதோடன்றி, அத்தீர்வைச் சமுதாயத்திற்கும் உரிமைப் படுத்தவேண்டும். வளர்ச்சியும் மாற்றமும் இயற்கையின் வரலாற்றின் நிகழ்வு என்பதை அறிந்து உணர்ந்து மாற்றத்துக்கு உந்து சக்தியாக இருப்பவர்கள் ஆசிரியர்கள்.

ஆனால், நம்முடைய சமுதாயத்தில் எந்தக் காலத்திலாவது கல்வி, சமுதாய மாற்றத்திற்கு உரிய கருவியாக இருந்ததாக நினைவில்லை. இருக்கவேண்டும் என்ற எண்ணமும் நமக்கு இல்லை! படித்தல்! பட்டம் பெறுதல், வேலை தேடுதல், வேலையைச் செய்யாமலே ஊதியம் பெறுதல் ஆகியன இன்றைய நடைமுறைகளாக-வாடிக்கைகளாக-ஆகிவிட்டது.

இன்று நூற்றுக்குத் தொண்ணூறு இளைஞர்கள் எத்துறையில் பட்டம் பெற்றாலும் அவர்கள் எங்கோ ஒரு அலுவலகத்தில், தொழிற்சாலையில் நாள்களை எண்ணி மாதக் கடைசியில் ஊதியம் வாங்கும் வேலையையே விரும்புகின்றார்கள்; விரும்பித் தேடி அலைகின்றார்கள். அது கிடைக்கும் வரை எந்த ஒரு வேலையையும் சுயமாகச் செய்ய முன்வரமாட்டேன் என்கிறார்கள். பொறுப்பையும் ஆபத்துக் களையும் சந்திக்கும் துணிவு அவர்களுக்கு இன்மையே இதற்குக் காரணம். இந்த நாட்டில் எவ்வளவு பேருக்கு வேலை வாய்ப்பை உண்டாக்கி வழங்கமுடியும். அதற்குரிய நிதி ஆதாரங்கள் கிடைப்பதில்லை. இந்தச் சூழ்நிலையை நமது இளைஞர்கள் உணர்ந்து தாமே தொழில் தொடங்கவும் பண்ணைகள் அமைக்கவும் முன்வரவேண்டும். சுதந்திரமாகச் சுய தொழில் செய்வதில் இன்பம் காணவேண்டும்.

நமது நாட்டின் கல்வித்தரம், அறிவின் ஆக்கம் ஆகியன தேசிய முன்னேற்றத்தில் வகிக்கும் பங்கு அதி முக்கியமானதொன்றாகும். இதற்கு ஆசிரியர்களே முக்கிய காரணமாக விளங்குகிறார்கள். நமது தேசத்தின் முன்னேற்றம் நமது ஆசிரியர்களையே சார்ந்தது. இன்று நமது நாடு முன்னேறுகிறதா? கடன் சுமை கூடுகிறது! பொதுத் துறைகள் இழப்பில் ஓடுகின்றன! கையூட்டுகள் மலிந்துவிட்டன. சமுதாய வாழ்வில் சாதி, மதங்கள் கொட்டமடிக்கின்றன! எங்குப் பார்த்தாலும் வன்முறை! கிளர்ச்சி! அமைதியின்மை! பொது வாழ்க்கையின் தரத்தில் ஒரு சரிவு! இவற்றிற் கெல்லாம் ஆசிரியர் பொறுப்பேற்க வேண்டாமா? அன்புகூர்ந்து

எண்ணிப்பாருங்கள்! ஆசிரியர்களின் பணிகள் சிறந்தால் இக்குறைகள் நீங்குவது உறுதி! நமது நாட்டிற்கு - தேசிய வாழ்க்கையின் தர உயர்வுக்குப் பாடுபட ஆசிரியர்களும் சமூகத்தினரும் பொறுப்பேற்க வேண்டும். நமது நாட்டு மக்களின் மேம்பாட்டுக்கும் கல்வி மேம்பாட்டுக்கும் உரிய முயற்சிகள், பயனளிக்காது தோல்வி ஏற்பட்டால், அத்தோல்விக்கும் பல காரணங்கள் உண்டு என்பது ஒத்துக் கொள்ளக்கூடிய உண்மை. ஆயினும் ஆசிரியர்களின் தன்மையும் ஈடுபாடும் பெரிய காரணமாக அமையும் என்பதை மறந்துவிடுதல் கூடாது! அதற்கேற்ப நமது ஆசிரியர்கள், சமுதாயத்தை மேம்பாடுறுத்தும் பணியில் ஈடுபடவேண்டும்.

இன்று நமது நாட்டை வேலையில்லாத் திண்டாட்டம் வருத்தி வருகிறது. பல நூறாயிரம் இளைஞர்கள் வேலை யில்லாமல் தங்களுடைய எதிர்காலத்தைப் பற்றி நிச்சய மில்லாமலே அழுதுகொண்டு இருப்பதை மறுக்க முடியுமா? மறக்க முடியுமா? நமது கல்வி முறையில் அறிவியல், தொழில் நுட்பங்கள் விரிவடையச்செய்திருக்கும் நிலையிலும் தொழிற் கல்வி விரிவுபடுத்தப்பெற்றும் ஏன், எதனால் வேலையில்லாத் திண்டாட்டம் நிலவுகிறது? கல்வித் துறையில் தொலை நோக்கோடு திட்டமிடத் தவறியமையும், பல ஆண்டுகளுக்கு முன் தயாரிக்கப்பட்ட பாடத் திட்டத்தையே கற்பதாலும் - கற்பிப்பதாலும் ஏற்பட்டுள்ள இடர்ப்பாடு இது. வளர்ந்து வரும் புதிய சூழல்களுக்கு ஏற்றவாறு மாணவர்களை ஆற்றுப் படுத்தும் திறமைக் குறைவுமே இன்றைய வேலையில்லாத் திண்டாட்டத்துக்குக் காரணம் என்பதை உணர்ந்து திருத்தம் காண முயலுதல் வேண்டும். இன்றைய இந்தியா விரைவில் சமூக மாற்றத்தை அடைதல் வேண்டும். இது காலத்தின் கட்டாயம்! சமுதாய மாற்றத்திற்குரிய கருதுகோள்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தோன்றி, அவைகளைப் பாடத் திட்டத்தில் சேர்த்து படித்திருந்தும் செயற்பாடின்மையால்

மாற்றம் ஏற்படவில்லை. இந்தச் சூழ்நிலையில் இன்று நாம் நம்முடைய ஆசிரியர் சமூகத்திற்கு வசதிகளையும் வாய்ப்புக் களையும் வழங்கி ஊக்கம் தந்து பேணுதல் வேண்டும்.

இந்தியா வளரும் நாடு. இந்த நாட்டில் பொருளாதாரப் பிரச்சனைகள் ஏராளமாக உள்ளன. வறுமைக்கோட்டிற்குக் கீழ் மூன்றில் ஒரு பங்கு மக்கள் வாழ்கின்றனர். இந்தச் சூழ் நிலையில் ஆசிரியர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாமல் அரசு தவிக்கலாம்; பெற்றோர்கள் கவலைப் படலாம். ஆயினும் ஆசிரியர்களுடைய தேவைகளை நிறைவு செய்ய, கொஞ்சம் காலம் பிடிக்கலாம் என்பதை ஆசிரியப் பெருமக்கள் உணரவேண்டும் என்பது நமது வேண்டுகோள்! அங்ஙனமின்றி ஆசிரியர்கள் மாறுபட்ட உணர்வில் பரபரப் புணர்வுடன் எரிச்சல் அடைகின்றனர். தங்களுடைய தேவை களை மட்டுமே நினைவிற்கொண்டும், முன்வைத்தும் போராடத் தொடங்கி விடுகின்றனர். அவர்களைச் சுற்றி யுள்ள மாணாக்கர்களையும் சுற்றுப்புறத்தையும் மறந்துவிடு கின்றனர். இந்த ஆசிரியர்கள் தங்களுடைய கடமைகளைப் புறக்கணித்துவிட்டு மாணாக்கர்களுக்குத் தவறான வழியைக் காட்ட முற்படுகின்றனர். பல்வேறு புதிய சிக்கல்களையும் தோற்றுவித்து விடுகின்றனர். ஆயினும் சமூகமாற்றத்தைக் கொண்டு வருவதில் ஆசிரியர்களுக்குள்ள ஈடுபாடு, திறமைகள் முதலியவற்றைக் கணக்கில் எடுத்துக்கொண்டு வாய்ப்புக்களை வழங்கி ஊக்கமளிக்க வேண்டும். ஏன் எனில் வேறு எந்தப் பணியையும்விடச் சிக்கலானது, கடுமையானது ஆசிரியப் பணி என்பதை மறந்து விடுதல் - கூடாது. பொறுப்பினை ஏற்றுக்கொண்ட ஆசிரியர்களும் உளமாரத் தங்களுடைய உழைப்பை அர்ப்பணித்து ஒத்துழைப்புத் தரவேண்டும். காலத்தின் அருமை கருதி விரைந்து செயற் பாடுறுதல் வேண்டும்.

ஒரு பள்ளியின் செயற்பாடு கட்டாயத்தின்பாற் பட்டதாக அமையாமல், சுய விருப்பமும் ஆர்வமும் கலந்ததாக

அமையவேண்டும். அப்படி அமையாவிடின் மக்கள் ஆட்சிக்கு ஊறு விளையும். ஆதலால், ஆசிரியர்கள் பள்ளியின் வாயிலாகச் சமூகத்தின் தரத்தைத் திருத்தி அமைக்கும் பணியை மேற்கொள்ள வேண்டும். ஆசிரியப் பயிற்சிக்குரிய கல்வித் திட்டத்தில், கற்பிக்கும் திறமை, நெறிமுறை யினாலான கல்விக்கு வலிமை சேர்த்தல், மாணாக்கர்களைப் புது வழிப்படுத்துதலுக்குரிய உத்திகள் அடங்கியனவாக பயனுள்ள மாற்றங்களைக் கொண்டுவரவேண்டும். ஆசிரியர் அவரிடம் ஒப்படைக்கப் பெற்ற மாணாக்கனின் முழுமையான வளர்ச்சிக்குப் பொறுப்பேற்று அந்த மாணாக்கனை ஒரு மேதையாக, ஒரு நல்ல குடிமகனாக உருவாக்குதலில் வெற்றி பெறவேண்டும். இதுவே ஆசிரியர்களிடம் சமுதாயம் எதிர்பார்ப்பது. இத்தகு உயர்ந்த பொறுப்பு வாய்ந்த பணியை ஆசிரியர் செய்ய, அவர் பணி செய்யும் கல்விக்கூடம் ஒரு சுயாட்சித் தன்மையுடைய நிரந்தர அமைப்பாக விளங்கு வதும் அவசியம் என்பதையும் கல்வியாளர்களும் அரசும் உணரவேண்டும்.

இங்கே ஆசிரியர்களின் குறைகளையும் நிறைகளையும் எடுத்துக் கூறியிருக்கிறோம். குறைகள் மிகுதியாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளனபோல் தெரிகிறது. இந்த விமர்சனங்கள் மதிப்புணர்வுடனும் நல்லெண்ணத்துடனும் சொல்லப்படு பவையேயாம். இவைகளையும் கடந்த சில நல்லாசிரியர்களும் இருக்கிறார்கள் என்பதும் மறுக்க முடியாத உண்மை.

அண்மையில்கூட ஒரு நல்லாசிரியரை - இலட்சிய நோக்குடைய ஆசிரியரை நமக்கு 'தினமணி' (7-9-92) இதழ் அறிமுகப்படுத்தியது. அவர்தான் பவானிசாகர் மல்லியம் பட்டி ஆரம்பப் பள்ளியின் தலைமை ஆசிரியர் பி. அருணா சலம். மல்லியம்பட்டியில் வாழும் தாழ்த்தப்பட்ட மக்கள் கல்வியில் மிகவும் பின் தங்கியவர்கள். ஐந்தாம் வகுப்பைக் கூடத் தாண்டுவதில்லை. தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த

ஒரு பையனையாவது பள்ளியிறுதி வகுப்பு (எஸ். எஸ். எல். ஸி.) தேர்ச்சி செய்யவைக்க வேண்டும் என்பதை இலட்சியமாகக் கொண்டு உழைத்து வந்திருக்கிறார். 1982இல் தொடங்கியது அவர் முயற்சி. 1992-ல் இரண்டு மாணாக்கர்களைத் தேர்வு பெற வைத்திருக்கிறது. மாணாக்கர்களுக்கு உடல் நலக்குறைவு ஏற்பட்டால் ஆசிரியர் அவர் செலவிலேயே மருத்துவ மனைக்கு அழைத்துச் செல்வாராம். இத்தகு பெரிய மனம் படைத்த ஆசிரியர்கள் இன்னும் பலர் இருக்கலாம். இத்தகு அருள்நலங் கனிந்த ஆசிரியப் பெருமக்களுக்கு நன்றி! பாராட்டு! வாழ்த்துக்கள்!

## ஆசிரியர்கள் நலன்பேண ஓர் ஆலோசனை

நமது நாட்டில் ஆசிரியர் தங்களுடைய நலன்களுக் காகத் தொழிற்சங்க வாதிகளைப் போல் போராடுகிறார்கள். இதனால் கல்வி பாதிக்கிறது. ஆசிரியர்கள் செய்வது தொழில் அல்ல; தொண்டு. இதனை ஆசிரியர்களும் மறவாது நினைவிற் கொள்ளவேண்டும். அரசும் ஆசிரியர்களை, போராட்டங்களில் ஈடுபடாதபடி கவனித்துக் கொள்ள வேண்டும்.

ஆசிரியர்கள் நலன் கருதி வழிகாட்டவும் அறிவுரை கூறவும் மாநில அளவில் ஒரு தன்னாட்சித் தன்மையுடைய குழுவை நியமிக்கலாம். இக்குழுவின் தலைவராக, உயர்நீதி மன்ற தலைமை நீதிபதியை நியமிக்க வேண்டும். இக்குழுவில் ஆசிரியர்களின் பிரதிநிதிகள், அரசின் பிரதிநிதிகள் இருத்தல் வேண்டும். இக்குழு அவ்வப்பொழுது ஆசிரியர்கள் பற்றிய அனைத்துப் பிரச்சனைகளையும் ஆராய்ந்து ஆணையிட வேண்டும். இந்த ஆணை சட்டபூர்வமானது. சம்பந்தப்பட்ட வர்கள் அனைவரும் இந்த ஆணையை நிறைவேற்றக் கடமைப்பட்டவர்கள் என்ற சட்ட வரையறையும் வேண்டும். இங்ஙனம் ஆசிரியர்களுக்கு உத்தரவாதமும் பாதுகாப்பும் தரக்கூடிய சட்ட சம்மதமான ஓர் அமைப்பைக் கண்டு

நிறுவுதல் அவசர அவசியக் கடமை. இந்த அமைப்பு தோன்றிச் செயற்படத் தொடங்கிய பிறகு ஆசிரியர்கள், இயக்கம் நடத்தும் உரிமையைத் தடுத்துவிடலாம்.

இங்கிலாந்து போன்ற நாடுகளில் ஆசிரியர்களுடைய பிரச்சனைகளை ஆய்வு செய்து, முடிவுகள் எடுத்து, நடைமுறைப்படுத்துவதற்கு என்றே தேர்ந்தெடுக்கப்பெற்ற ஆசிரியர்களின் பிரதிநிதிகள், அரசின் பிரதிநிதிகள் கூட்டுக் கூட்டம் - மாநாடு நடத்தப்படுகிறது. இந்த மாநாட்டில் பிரச்சனைகள் விவாதிக்கப்பட்டு அப்போதே உண்டு – இல்லை என்று முடிவு எடுக்கப்படுகிறது. எடுத்த முடிவுகளை அரசு நடைமுறைப் படுத்துகிறது; பள்ளி நிர்வாகம் நடைமுறைப் படுத்துகிறது. இந்த நடைமுறையை நமது நாட்டில் நடை முறைப் படுத்துவதன்மூலம் ஆசிரியர்களின் போராட்டத்தைத் தவிர்க்கலாம் என்பது பற்றி அரசு ஆலோசிக்க வேண்டும்.

சமுதாய அமைப்பே சீர்குலைந்து கிடக்கும்பொழுது ஆசிரியர்களிடம் எங்ஙனம் நிறைவைக் காணமுடியும்? நியாயமான கேள்வி! ஆசிரியர்களிடம் இயக்கத்தையும் அர்ப் பணிப்பு உணர்வையும் நாம் எதிர்பார்க்கிறோம். இல்லை! நாட்டின் நலன்கருதி வேண்டிக்கொள்கின்றோம். சமுதாயச் சீர்திருத்தம் ஆசிரியர்களிடமிருந்து தொடங்கட்டும் என்பது தான் நமது எண்ணம்! விருப்பம். இன்று நாட்டை நன்னெறியில் நடத்திட ஆசிரியர்களுக்கு உள்ள ஆற்றலும் திறமையும் துணை செய்யும் என்று நம்புகின்றோம்.

## பெற்றோர் கடமை – சமுதாயக் கடமை

ஆசிரியர்கள் அவர்களுடைய பொறுப்பு வாய்ந்த பணியைச் செய்யப் பெற்றோர்களுடைய ஒத்துழைப்புத் தேவை. அஞ்சல் தலையில் ஒட்டுதலுக்குரிய ஒருவகைப் பசை இருக்கிறது என்பது உண்மை. ஆனாலும் அந்தப் பசை ஒட்டுதலுக்குப் போதாது. புறத்தே ஈரப்பசையைக் கூட்ட வேண்டும். அதுபோல ஆசிரியர் பணிக்குப் பெற்றோர் ஒத்துழைப்புத் தேவை.

ஆனால் இன்று கல்வி பயிலும் மாணாக்கர்களின் பெற்றோர்களில் 60 விழுக்காட்டினர் கல்வி நலம் பெறாதவர்கள். கல்வியைத் துய்த்தும் அனுபவித்தும் அறியாத வர்கள். அதனால் தானே, கல்விப் பருவத்தில் வேலை செய்யக்கூடாது; பள்ளிக்கு வரவேண்டிய வயது வந்த அனைத்துக் குழந்தைகளும் பள்ளிக்கு வரவேண்டும் என்பது நமது ஆசை; நியதிச் சட்டமானது. ஆனால் நடைமுறையில் வெற்றி கிடைக்கவில்லை. குழந்தைகள் வேலை பார்ப்பதை தடைசெய்யக்கூடிய அளவுக்கு நமது முயற்சியும் இல்லை; பெற்றோர்களின் சூழ்நிலையும் இல்லை. ஆயினும் பெற்றோர்களே உங்களுடைய குழந்தைகளைக் கல்வியில் ஈடுபடச் செய்வது அவசியம். இந்தப் பணியை ஆங்காங்குள்ள மாதர் சங்கங்கள், இளைஞர் மன்றங்கள், திருக்கோயில்கள், செய்யலாம்.

பெற்றோர்களுக்குக் கல்வியில் ஆர்வம் வந்தால் தான், குழந்தைகளின் கல்விப் பயணம் முழு வெற்றிதரும். குழந்தைகள் பள்ளிக்கு வராமல் நிற்க அடியிற்கண்ட காரணங்கள் உண்டு.

1. பல குடும்பங்களில் தாய், தந்தை வேலை செய்யப் போவது, இத்தகைய குடும்பங்களில் அடுத்த சிறு குழந்தையை வைத்துக்கொள்வது ஒரு பிரச்சனை. முதலமைச்சர் சத்துணவு மையங்கள் ஓரளவு இந்தப் பிரச்சனையைத் தீர்த்து வைத்தாலும், இரண்டு வயதுக் குட்பட்ட குழந்தைகளின் பிரச்சனை தொடர்கின்றது. இந்தக் குழந்தைகளைப் பாதுகாக்க ஊர் தோறும் "குழந்தைகள் காப்பகங்கள்" அமைத்து உதவி செய்து, அந்த மழலைப் பருவத்திலேயே கல்வியை விளையாட்டின் மூலம் அறிமுகப் படுத்தலாம். தக்க செல்வர்கள் அல்லது திருக்கோயில்கள், திருமடங்கள், முதலமைச்சர் சத்துணவு மையங்கள் தத்து எடுத்துப் பாடப் புத்தகங்கள், கணிதம் கற்பிக்கும் கருவிகள், மூளையை இயக்கும் விளையாட்டுப் பொம்மைகள், வாங்கிக் கொடுப்பது பயனுடையதாக அமையும். இந்த இரண்டு

நிலைகளைக் கடந்து ஆரம்பக் கல்விக்கு வந்தால் ஓரளவு பெற்றோரின் ஒத்துழைப்புக் கிடைக்கும். ஆயினும், ஆரம்பப் பாடசாலை நிலையில் ஆசிரியர்களும் சமூகமும் ஒத்துழைத்தால் அதிகத் தொல்லையின்றிப் பெற்றோர்களின் ஒத்துழைப்பைப் பெறமுடியும். இந்த நிலையில் நிதி நிலை வாய்ப்பாக இருக்காது. சமூகம் தான் இந்தப் பொறுப்பை ஏற்க வேண்டும்.

2. ஆடு, மாடுகள் மேய்ப்பது கிராமப் புறங்களில் சிறுவர், சிறுமியர்களின் வேலை. இந்தப் பொறுப்பை ஊராட்சி மன்றங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும். பொதுவாக கிராமங்களில் பணி செய்யும் ஆசிரியர்களுக்கும், படித்த பொறுப்புள்ள சமுதாய உறுப்பினர்களுக்கும் உள்ள அக்கறை அளவுக்குப் பெற்றோர்களின் ஒத்துழைப்பைப் பெறமுடியும். இதுதான் இன்றைய நிலை.

ஆசிரியர்கள் பெற்றோர்களின் ஒத்துழைப்பை எவ்வளவு பெறமுடியுமோ அவ்வளவு பெற முயற்சியெடுத்துக் கொள்ள வேண்டும். பெற்றோர்கள் பயனடையத் தக்கவகையில் முதலுதவி, மனையியல், பொது அறிவு வகுப்புக்களை நடத்தலாம். பெற்றோர்கள் அன்றாடம் பள்ளியில் என்ன நிகழ்கிறது என்பதை அறிந்து கொள்ள ஆர்வம் காட்ட வேண்டும். பெற்றோர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் நெருக்கமான உறவும் தொடர்பும் இருத்தல் வேண்டும்.

பெற்றோர்கள் உயர்நிலைக் கல்வி, கல்லூரிக் கல்வி ஆகியவற்றில் பயிலும் மாணாக்கனை அவன் தங்கள் பிள்ளைகளாக இருந்தாலும்-சக வயதுக்கு வளர்ந்து வந்துள்ள அவர்களுடன் கலந்து பழகுதல் வேண்டும். விளையாட்டுக் களின்பொழுதும் நூல்களைப் படிக்கும் பொழுதும் அவர் களுடன் கலந்து கொள்ளவேண்டும். ஆசிரியர்கள் தங்களிடம் பயிலும் மாணாக்கர்களின் பெற்றோர்களிடம் அடிக்கடி தொடர்புகொண்டு மாணாக்கர்களின் வாழ்க்கையை மேம்

பாடடையச் செய்வதில் பெற்றோர்களுடைய ஒத்துழைப்பைப் பெறவேண்டும். அனைத்து மட்டக் கல்வி நிறுவனங்களிலும் பெற்றோர் - ஆசிரியர் தொடர்பு மையங்கள் உயிர்ப்புடன் இயங்கச் செய்யவேண்டும்.

தங்களுடைய பிள்ளைகளை நாடறிந்த சான்றோனாக ஆக்குவதன் மூலமே மனையறத்தின் பயனை அடைய முடியும். “நல்ல தாய்”, “நல்ல தந்தை” என்ற புகழை அடைய ஒவ்வொரு பெற்றோரும் முயற்சி செய்யவேண்டும். தங்கள் பிள்ளைகளின் வளர்ச்சிக்கும் சீரான வளர்ச்சிக்கும் செலவழிப்பதை மகிழ்வுடன் செய்யவேண்டும். இளமைக் காலத்தில் குழந்தைகளிடத்தில் மனமுறிவு ஏற்பட அனுமதிக்கக்கூடாது. தங்கள் பிள்ளைகள் தானே என்றும், இளையோர் என்றும் கருதி அலட்சியப்படுத்தாமல் அவர் களுடன் தோழமை உணர்வுடன் உட்கார்ந்து மனம் விட்டுப் பேசிக் கலந்துரையாடி மகிழ்வது, குழந்தைகளின் வளர்ச்சிக்குத் துணையாக அமையும். சிவபெருமான் முருகனிடம் பிரணவப் பொருள் கேட்டறிந்த வரலாற்றின் உட்பொருளும் இதுவேயாம்.

பெற்றோர்கள் தமது பிள்ளைகள் கல்விச் சுற்றுலாப் பயணம் மேற்கொள்ளத் தாராளமாக உதவி செய்ய வேண்டும். பல இடங்களைப் பார்ப்பதன்மூலம் பல்வேறு பட்ட சமூகத்தினருடன் கலந்து பேசிப் பழகுவதன் மூலமும் இளைஞர்களின் அறிவு விரிவடையும்; புத்துணர்வு பெறுவார்கள்; மனித குலத்தை நேசிக்கும் உயரிய பண்பைப் பெறுவர். கல்விச் சுற்றுலாவில் செலவிடும் முதலீடு, பலமடங்கு பயன்தரும் என்பதைப் பெற்றோர்களும் ஆசிரியர் களும் உணர்ந்து ஆண்டுதோறும் கல்விச் சுற்றுலாவிற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகள் படித்து மகிழ, நல்லதோர் நூலகம் அமைத்துத் தருவதைத் தலையாய கடமையாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

## தொகுப்புரை

*கல்விச் சீர்திருத்தம் என்ற தலைப்பில் நிறையச் சிந்தித்திருக்கின்றோம். நம்முள் கல்வித் துறையில் செய்ய வேண்டிய பணிகள் மலைபோல் குவித்துள்ளன. தரமான கல்வி வசதிகள், கல்விக்குள்ள நிறைந்த பயிற்சி வசதிகளைச் செய்துமுடிக்க நமது தமிழ் நாட்டின் வரவு செலவுத் திட்டத் தொகை முழுவதையும் ஒதுக்கினாலும் போதாது என்ற நிலையே வரும். ஆயினும், நாம் அடுத்த தலைமுறைக்குச் செய்யவேண்டிய ஒரே ஒரு தலையாய பணி சிறந்த கல்வியைத் தருதலேயாகும். இந்தப் பணியை நிறைவேற்ற, "பள்ளித்தல மனைத்தும் கோயில் செய்குவோம்" என்ற பாரதியின் வாக்கினை நினைவிற்கொண்டு ஊர் தோறும் பள்ளிகளை வளர்க்க நிதியளிக்க வேண்டும். அன்று, பாரதி பாடியது எப்படியோ? இன்றைய சூழ்நிலையில் பாரதியின் வாக்கை பொன்னெனப் போற்றி - எழுத்தறிவு நல்கும் போரில் ஈடுபடுவோமாக; நல்ல இலட்சிய நோக்குடைய ஆசிரியர்களைக் கண்டு, நாட்டை அவர் தம் வழியில் இயக்குவோமாக! எதிர்வரும் தலைமுறையினரை அறிவும் ஆற்றலும் விழுமிய குறிக்கோளும் உடையவர்களாக உருவாக்கி நாட்டிற்கு அணியென விளங்கச் செய்ய, நம்மை அர்ப்பணிப்போமாக! உறுதிகொள்வோமாக!*

*இனிய அன்புடையீர்! நமது தலைமுறையில் வாழும் சிறந்த அறிஞராகிய துணைவேந்தர் டாக்டர் ச. முத்துக்குமரன் அவர்கள் தலைமையில் முதல் துணைவேந்தர் முனைவர் பி. சு. மணிசுந்தரம் அறக்கட்டளையின் சார்பில் கல்வியைப் பற்றிய சிந்தனை செய்ய, பேச, கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ளக் கிடைத்த வாய்ப்புக்கு நன்றி! கல்வியியலில் துறைப் பேராசிரியர் முனைவர் - எஸ். புருஷோத்தமன் அவர்களுக்கும் நன்றி!*

*நமது இலட்சியம் உயர்ந்ததாக இருக்கட்டும்!*

# இ. தாய்மொழியில் கல்வி

*அன்புடைய பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ச. முத்துக்குமரன் அவர்களே! பேராசிரியப் பெரு மக்களே!*

*இன்று கல்விச் சிந்தனைத் தொடரில் மூன்றாவது சொற்பொழிவு. இந்தப் பேச்சு கல்வி மொழி பற்றியதாகும். இன்று, கல்வி மொழி பற்றிய சிக்கல் இந்தியாவை - குறிப்பாகத் தமிழகத்தைக் குழப்பிக் கொண்டிருக்கும் சிக்கல் மட்டுமல்ல. அதிகக் கவலையைத் தரக்கூடியதும் ஆகும்!*

*இந்தியா ஒரு பெரிய நாடு! சற்றேறக்குறைய 380 மொழிகள் பேசப்பெறும் நாடு. நூற்றுக் கணக்கான மொழி களில் பதினெட்டு மொழிகளே தேசிய மொழிகள் என்ற தகுதியைப் பெற்றுள்ளன. இவற்றுக்கும் இந்தி, இந்திய நாட்டு மக்களை இணைக்கும் மொழி என்ற அடிப்படையில் இந்திய நாட்டு அரசின் அலுவலக மொழியாகவும் இடம் பெற்றிருக்கிறது! ஆங்கிலம் இணை ஆட்சி மொழியாக இடம் பெற்றிருக்கிறது. ஆயினும் ஆங்கிலம் எத்தனை ஆண்டுகள் இணை ஆட்சி மொழியாக இருக்கும் என்ற வரையறை திட்டமாக இல்லை! தமிழ்நாட்டில் எழுந்த இந்தி எதிர்ப் புணர்வு, தமிழை வளர்க்கப் பயன்படாமல் ஆங்கிலத்திற்குச் சாதகமாக அமைந்துவிட்டது என்ற வருந்தத்தக்க உண்மையை உணர்த்தாமல் இருக்க இயலவில்லை!*

## சிந்தனைத் தெளிவுக்கு வாயில் கல்வி

*மானுடம் வெற்றிபெறத் தரமான கல்வி தேவை. வகுப் பறையில் ஆசிரியர் - மாணாக்கர்களுக்கிடையே வினாவின் மூலம் கலந்து பயிலும் கல்வியே அறிவைத் தரமுடியும். தாய் மொழிப் பாட வகுப்பில் - தமிழ் மொழிப்பாட வகுப்பில் மாணாக்கர்கள் ஐயம் கொள்கின்றனர்; கேட்டுத் தெளிவு பெறுகின்றனர். ஆங்கில மொழி வழிக் கற்கும் பாடங்களில்*

பெரும்பாலும் வினாக் கேட்கப்படுவதில்லை. ஏன்? முதலில் பிழையில்லா ஆங்கிலத்தில் வினாக் கேட்கவேண்டுமே! மாணாக்கன் கேட்கும் வினாவில் இலக்கணப் பிழையிருந்தால் ஆசிரியர் அதைப் பிடித்துக்கொண்டு விமர்சனம் செய்வார்! மாணாக்கன் பாடு அழாக்குறையாக அமையும். கடைசி வரையில் ஆசிரியர் ஐயத்தைத் தெளிவிக்கமாட்டார். இதனால் கல்வி வளர்வதில்லை. ஐயங்கள் தெளிவதில்லை; அறிவு வளர்வதில்லை. இந்தக் குறை நீங்கக் கலந்துரை யாடல்களிலும் விவாதங்களிலும் மாணாக்கர்கள் கலந்து கொள்ளவேண்டும்.

வகுப்பறையில் கலந்துரையாடிச் சிறந்த முறையில் கற்ற கல்வியையும், அக்கல்வியின் வழி பெற்ற கருத்துக்களையும் சிந்தனைப் பட்டறையிலும், செயற்களத்திலும் சோதனை செய்து பெறுவதே அறிவு. இந்த அறிவே வாழ்க்கைக்குத் துணை செய்ய இயலும்! அறிவு பெறுதலுக்குரிய கல்வி, சிந்தனையைத் தூண்டுவதாக அமையவேண்டும். சிந்தனையும், சிந்தனையின் தெளிவுமே அறிவுக்கு வாயில்கள் என்பதைத் தமிழ் மக்கள் அறிதல் வேண்டும். "சிந்தனையுள் தெளிவுமாகி" என்ற அப்பரடிகள் அருள்வாக்கினை எண்ணத்தில் கொள்வது நல்லது.

## அறிவு தேவை

வாழ்க்கை வெற்றிபெற அறிவு தேவை. அறிவை எப்படிப் பெறலாம்? கல்வியின் மூலம் அறிவு பெறலாம் - பெறமுடியும் என்பது பொது விதி! ஆனால் கற்றவர்கள் எல்லாரும் அறிவுடையவர்களாக இருக்கிறார்களா, என்ன? "கற்ற நிர் மூடர்" என்ற வழக்கினை ஓர்க. "பலகற்றும் கல்லார் அறிவிலாதார்" என்ற திருக்குறளையும் எண்ணிப் பார்க்க வேண்டும். கல்வி, அறிவு பெறுதலுக்கு வாயிலாக அமைய முடியும்! ஆனாலும் சிந்தனை, செயல் இரண்டும் இருந்தால் தான் கல்வி பயனுடையதாக, அறிவு வழங்கும் இயல்பினதாக

அமைய முடியும். வாழ்வாங்கு வாழத் துணைசெய்யும்; அறிவினைப் பெற, சிந்திக்க கற்றுக் கொள்ளவேண்டும். சிந்தனையில் தெளிவும் - முடிவும் காணவேண்டும். முடிவுகள் செயல்களாக உருக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டு அறிவினைப் பெறுதல் வேண்டும்.

## அறிவு

அறிவு ஒரு கருவி; மனிதனை, மனித சமூகத்தைத் துன்பத்திலிருந்து – பாதுகாக்கும் கருவி. இந்த அறிவு என்னும் கருவி பண்டைக்காலத் தமிழர்களிடம் இருந்ததாகத் தெரிகிறது. ஆனால், பிற்காலத்தில் அதாவது சற்றேறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளாகத் தமிழர்கள் இந்த அறிவினை இழந்து விட்டார்களோ என்ற ஐயம் தோன்றுகிறது. அல்லது அறிவினைப் பெறும் முயற்சியே இல்லையா? அல்லது அறிவு இருந்தும் பயன்படுத்தவில்லையா? அறிவைப் பயன்படுத் தாமல் இருக்க இயலாது. அறிவு ஓர் இயங்கும் கருவி. தானே இயங்கும் கருவி. தமிழர் வரலாற்றைக் கூர்ந்து கவனித்தால் அறிவு நம்மனோரிடத்தில் இல்லைபோல் உணர வேண்டியிருக்கிறது. நம்மிடையில் கற்றவர்கள் மெத்தப் படித்தவர்கள் பலர் உள்ளனர். பேசும் திறமை உடையவர்கள் நிறைய பேர் உண்டு. ஆனால், சமுதாயச் சிக்கல்களை அறைகூவல்களாக ஏற்றுக்கொண்டு போராடுபவர்கள் தான் இல்லாமல் போனார்கள். அதுமட்டுமா? அயல் வழக்கின் வழிவந்த நவக்கிரக வழிபாட்டை ஏற்றுக்கொண்டதன் விளைவாக வாழ்நிலைக்குக் கிரகங்களைக் காரணம் காட்டுதல் தலைவிதியைக் காரணமாகக் கூறல் போன்ற அறிவுக்குப் பொருந்தாத, தமிழர் மரபுக்குப் பொருந்தாத நிலைப்பாடுகளை எடுத்துக்கொண்டதன் விளைவாக நாளும் வறுமை வளர்கிறது. இது என்ன கொடுமை? “வினையே ஆடவர்க்கு உயிரே” என்று வாழ்ந்தனர் தமிழர்.

*நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்*
*நரகத்தில் இடர்ப்படோம்; நடலையல்லோம்;*
*ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோமல்லோம்*
*இன்பமே எந்நாளும் துன்பமில்லை;*
*நாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான*
*சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்*
*கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்*
*கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே!*

என்னும் நெறிபற்றி நிற்கவேண்டிய தமிழ்மக்கள் நிலை இரங்கத்தக்கதாயிற்று. இனிவரும் காலத்தில் சமுதாயத் தீமைகளை அறியாமையை வேற்றுமைகளை, வறுமையை, ஏழ்மையைத் தாங்கிக் கொண்டிருக்காமல் அவற்றை எதிர்த்துப் போராடும் போர்க்குணம் உடையவர்களைப் பல்கலைக் கழகங்கள் நாட்டுக்கு வழங்குதல் வேண்டும். வாழ்க்கைக்குப் போர்க்குணம் இன்றியமையாதது. தமிழர்க்கு உலகில் வேறு எந்த இனங்களையும் விடப் போர்க்குணம் மிகுதி! நமது சங்க காலமே போர்க்காலம் தானே! உடன் பங்காளிப் போராட்டமாகப் போனதுதான் அவலமாயிற்று! மாந்தருக்குள் சண்டை நடந்தது போதும்! இனி சமூகத் தீமைகளை எதிர்த்துப் போராடி, சமுதாயத்திற்குச் சம வாய்ப்பு - சமநிலை உருவம் கொடுப்போமாக!

## தாய் மொழியிலேயே சிந்தனை இயங்கும்

கல்வியில் வளர, சிந்தனைப் பயிற்சி தேவை. சிந்தனையே மனிதனுக்கு நுண்மாண் நுழைபுலத்தினை வழங்கும். சிந்தனை எளிதில் புலனாகா உண்மைகளைக் காணத் துணை செய்யும். சிந்தனை சார்ந்த கல்விதான் அறிவாக ஆக்கம் தருகிறது; சிந்தனை அறிவை விரிவாக்கும். சிந்தனைத் திறன், பிறந்த நாள் தொட்டுப் பேசிப் பயிலும் தாய் மொழியிலேயே இயங்கும். தாய்மொழி வழிச் சிந்தனைக்கு எந்த ஒன்றையும் விரைவில் ஆய்வு செய்து

முடிவெடுக்கும் - தெளிவான முடிவெடுக்கும் ஆற்றல் உண்டு. நமது நாட்டில் கல்வி பயிலும் அனைத்து நிலைகளிலும் சிந்தனையைத் தூண்டும் தாய்மொழி வழிக் கல்வியே தேவை. தாய்மொழி வழிக் கல்வி - மக்களிடத்தில் சென்று துணையாக அமையும்.

## மொழிச் சிக்கல்

இந்தியா சிக்கல்கள் நிறைந்த நாடு. உண்ணும் உணவிலிருந்து உயர் மனிதனை உருவாக்கும் உணர்வுவரை இங்குச் சிக்கல்தான். இந்தியாவில் சிக்கல் இல்லாத துறை ஏதாவது உண்டா? நாடு ஒரு நாளாவது அமைதியாக நகர்ந்ததுண்டா? சிக்கல்களை உருவாக்குவதன் மூலமே வாழ்க்கையை நடத்துகிறவர்கள் இன்று பல்கிவிட்டனர். நாளொரு கொலையும் பொழுதொரு கொள்ளையுமாக நாடு துக்கச் சுமையைத் தூக்கிக்கொண்டு நகர்கிறது. ஏன்? நல்ல தரமான பண்பாட்டுக் கல்வி வழங்கத் தவறியதன் விளைவே காரணமாகும். வளரும் இளைஞர்களுக்கு உயர்ந்த இலட்சியத்தை - குறிக்கோளைக் காட்டி வழிகாட்ட, வழி நடத்தத் தவறிவிட்டோம்! வழிகாட்டும் தகுதியை நாம் பெற்றிருக்கிறோமா? இதுவே ஒரு பெரிய கேள்வி.

எந்த ஒன்றையும் உணர்ச்சியுடன் அணுகும் பழக்கம் நாட்டில் வளர்ந்து வருகிறது. நமது மொழி, அந்நிய மொழி என்ற அணுகும் முறை உணர்ச்சியைத் தூண்டத்தான் செய்யும். அதற்குப் பதிலாக உலகமாந்தர் பேசும் மொழிகள் அனைத்தும் நம்முடைய மொழிகளே! அதில் நமது தாய்மொழி ஒன்று. தாய்மொழி உரிமையுடைய மொழி. மற்ற மொழிகள் உறவு மொழிகள் என்பதை உணரவேண்டும். ஒவ்வொருவரும் எத்தனை மொழிகளைக் கற்க இயலுமோ அத்தனை மொழிகளைக் கற்கவேண்டும். "நான்கு மொழிகள் கற்றவன் நான்கு மனிதர்களுக்கு ஈடாவான்" என்று மன்னர் சார்லஸ் கூறினான். நம்முடைய நாட்டில் மூன்று மொழித்

திட்டமே வெற்றிகரமாக நடைபெறவில்லை சாரளங்கள் நிறைந்த வீட்டில் தாரராளமாக ஒளியும் வளியும் புழங்கி - நலவாழ்வளிப்பது போலவே, பல மொழிக் கல்வியும் நலம் தரும். அது அறிவை விரிவு செய்யும்; அகண்டமாக்கும். ஆனால், நமது அணுகுமுறை சரியாக இருந்தால்தான் எல்லாம் நடக்க இயலும்! தாய் மொழிப் பற்றினையும் பிறமொழிப் பற்றினையும நீக்கினாலே தூய்மையான உண்மை புலப்படும். அறிவிலே தெளிவு காண இயலும்.

தாய்மொழி, வழிபாட்டுப் பொருளன்று. தாய்மொழிப் பற்று செயலில் காணப்பெறுதல் வேண்டும். எந்த மொழி உயர்ந்தது என்ற விவாதம் அவசியம் இல்லாதது, தாய் மொழியை, தமிழைச் சிந்தை மறந்து வாழ்த்துவதால் மொழி என்ன பயனை அடையும்? அல்லது தமிழர்தான் என்ன பயனை அடைவர், பாவேந்தன் கூறியது போல்,

> "செந்தமிழே! உயிரே! நறுந்தேனே!
> செயலினை மூச்சினை உனக்களித் தேனே!
> நைந்தா யெனில் நைந்து போகுமென் வாழ்வு
> நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே!"

என்று தமிழை உயிராகக் கருதித் தமிழை வளர்க்கும் பணியில் அயராது உழைத்திட வேண்டும். துறைதோறும் தமிழ் வளர்தல் வேண்டும்; வளர்க்கப் பெறுதல் வேண்டும். கல்வித் துறைக்கு மொழி ஒரு கருவி என்ற தெளிவு வேண்டும்.

அன்புகூர்ந்து மொழிச் சிந்தனைப் பெரிது படுத்தாதீர்கள்! பயிற்று மொழிச் சிக்கலில் எந்தமொழி உயர்ந்தது என்பதல்ல கேள்வி! எம்மொழி தேவை என்பது தான். காலம் தேவையை உணர்த்தும்; தேவைகள் நிறைவு செய்யப்பெறும்! உணர்ச்சியைத் தொடும் மொழி, மதம் ஆகிய துறைகளில் நிதானம் கடைப்பிடிக்கப்படுதல் வேண்டும். ஒவ்வொரு இந்தியனும் அவனுடைய தாய்மொழியால் சிறந்த அறிஞராக விளங்கவேண்டும். தாய்மொழிக்

கல்வியிலும், தாய் மொழிப் பண்பிலும் சிறந்து விளங்குகிற வர்கள் பிற மொழிகளை எளிதில் கற்க முடியும்; கற்க வேண்டும். இந்தியாவைக் கண்டுணர்ந்து அனுபவிக்க வேண்டுமானால் இந்திய மொழிகள் பலவற்றையும் கற்கும் முயற்சி தேவை. அரசும், சமூகமும் பல மொழிகளைக் குறைந்த காலத்தில் கற்பதற்குரிய மையங்களைத் தோற்று வித்து வசதிகள் செய்து தரவேண்டும்.

## கல்வி மொழி

இன்று நமக்குக் கல்வி மொழி எது? இன்று தமிழ்நாட்டில் கல்வி மொழி ஏழைகளுக்குத் தமிழ்; வசதியும் வாய்ப்புமுடையவர்களுக்கு ஆங்கிலம். கல்வி மனிதர்களை ஒன்றுபடுத்தும் சாதனம்! ஆனால், இங்குக் கல்வியே இரண்டு வகையாக இருக்கிறது. கல்வியில் இரண்டு சாதி உருவாகிறது. இது அவசியம் தானா? அல்லது நியாயமா?

கல்வி மொழி தாய்மொழியாகத்தான் இருக்க வேண்டும் என்ற கருத்து உலகந்தழீஇய உண்மை. அந்நிய மொழியாகிய ஆங்கிலம் கல்வி மொழியாக இருக்குமாயின் ஆங்கிலத்தை ஒரு மொழியாகக் கற்று அம் மொழியறிவை வளர்த்துக் கொள்வதே நோக்கமாகிவிடும். தாய்மொழி யாயின் அம்மொழி பற்றிய அறிவும், இலக்கண வரம்பும் இயல்பாகவே அமைந்துவிடுவதால் தாய் மொழியை ஒரு மொழியாகக் கற்கவேண்டிய அவசியமில்லாமல் நேரடியாகப் பொருளறிவு பெறும் முயற்சி ஏற்படும். ஆங்கில வழிக் கற்கும்பொழுது மொழியறிவு முட்டுப்பாடு இருப்பதால் பெறும் பொருளறிவு குறைவாகிவிடும். தாய்மொழி வழிக் கற்றால் பொருளறிவு கூடுதலாகப் பெறமுடியும். தாய்மொழி வழியே அறிவியலில் பல துறைகளையும் கற்பது எளிது. தாய்மொழியில் சிந்தனைக் கிளர்ச்சி எழுவதைப்போல அந்நிய மொழிகளில் ஆங்கிலத்தில் – தோன்றுவதில்லை. ஆங்கில வழிக் கல்வி என்பது ஒரு சுமை என்பதை அறிக. தாய்மொழி வாயிலாகத்தான் எளிதில் மக்களை அணுக

முடியும். "தாய்மொழியிலேயே - பிரதேச மொழியிலேயே கல்வியைப் பரப்ப வேண்டும்" என்று அமரர் நேருஜி கூறினார். 1941-ல் ஸ்ரீ நகரில் இந்தியக் கல்வி மாநாடு ஒன்று நடந்தது. அந்த மாநாடு "கல்லூரிகளில் அனைத்துப் பாடங்களும் தாய்மொழி வாயிலாகவே கற்பிக்கப் பெறுதல் வேண்டும்" என்று தீர்மானித்தது. ஆனால் நடைமுறைக்கு வரவில்லை. வடபுலத்தில் இந்தியைத் தாய்மொழியாகப் பெற்றிருப்பவர்கள் தாய்மொழி வழிக் கல்வித் திட்டத்தைத் தொடங்கிவிட்டார்கள். ஆக்ரா, அலிகார் முஸ்லீம், அலகாபாத், காசி இந்து, பீகார், லக்னோ, நாகபுரி, உஸ்மானியா, இராசபுதனா, சாகர், என்.என்.டிடி. ஆகிய பல்கலைக் கழகங்கள் எல்லாம் இந்தி மொழி வழியாகவும், தாய் மொழிகள் வழியாகவும் இ.ஆ.ப., உயர் பட்டப் படிப்பு, பட்டப் படிப்பு முதலியவற்றைத் தொடங்கி 25 ஆண்டு களுக்கு மேலாகக் கற்பித்து வருகின்றன என்பது அறியத் தக்கது. இத்துறையில் தமிழ்நாடு தான் பின்னடைவில் இருக்கிறது. நாம் இந்தியை ஏற்க மறுத்தபோதெல்லாம் தமிழைப் போல் இந்தி ஒரு வளர்ந்த மொழியல்ல, வளமான மொழியல்ல என்ற காரணங்களையே கூறிவந்தோம். இன்றைய நடப்பு நிலையைப் பார்த்தால் இந்தி, தமிழைவிட வளர்ந்த மொழியாக 21ஆம் நூற்றாண்டில் விளங்கும் போலத் தெரிகிறது. தமிழின் வளர்ச்சியற்ற வருந்தத்தக்க வரலாற்று நிகழ்வு தமிழர்க்கும் தமிழுக்கும் வராமல் தடுக்க உடனடி யாகத் தமிழ்நாட்டில் அனைத்து நிலைகளிலும் தமிழைப் பயிற்சி மொழியாக்கிடுதல் வேண்டும். இனியும் இந்த முயற்சியில் ஒரு நொடி காலத்தாழ்வு ஏற்பட்டாலும் தமிழரின் வளர்ச்சி பாதிக்கும்; தமிழ் சமஸ்கிருத மொழியடைந்த நிலையை அடையும்.

"இந்திய தேசிய ஒருமைப்பாடு ஏற்பட, தாய் மொழி வழிக் கல்வி அனைத்து மாநிலங்களிலும் நடைமுறைப் படுத்தப் பெறவேண்டும்" என்று இந்திய தேசிய ஒருமைப்

பாட்டுக் குழு தீர்மானித்தது. ஆங்கிலம் பயிற்சி மொழியாகத் தொடர்ந்து இருப்பது இந்திய மொழிகளின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ளது. உலக நாடுகள் அனைத்திலும் தாய் மொழி வழிக் கல்வியே வழங்கப்பெறுகிறது. இற்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் ஜப்பான் மொழிக்கு வரி வடிவம் - எழுத்துக் கண்டனர். ஜப்பான் நாடு, தாய்மொழி வழிக் கல்விக் கொள்கையை நடைமுறைப்படுத்தியதால் இன்று அந்தநாடு, அறிவியலில், தொழில் நுட்பத்தில் உலக நாடுகளில் சிறந்து விளங்குகின்றது. எந்த ஒரு ஜப்பானியனும் இந்தியனைப்போல் - தமிழனைப்போலக் கையறு நிலையில் இல்லை. சிந்தனையைத் தூண்டாத, சிந்திக்கத் துணை செய்யாத மொழி வழியே கல்விப் பெறுவது தற்கொலைக்குச் சமம். உண்மையில் அறிவுபெற விரும்பினால் தாய்மொழி வழிக் கல்வியே தேவை. உலகத்தில் எந்த ஒரு நாட்டிலும் அந்நிய மொழி, கல்வி மொழியாக, பயிற்று மொழியாக இல்லை. சோவியத் ஒன்றியத்தில் மாநிலங்கள் அனைத்திலும் தாய்மொழி வழிக் கல்வியே அன்றும் நடைமுறையில் இருந்தது; இன்றும் இருக்கிறது. இன்று சோவியத் நாட்டின் அறிவியல் வளர்ச்சி சாதாரணமானதா? சோவியத் ஒன்றியத்தின் பொது மொழியாகிய ருஷ்ய மொழி, புரட்சிக்குப் பின்தான் வளரத் தொடங்கியது. தமிழுக்கோ மூவாயிரம் ஆண்டுக்கால வரலாறு உண்டு; இலக்கியம் உண்டு; இலக்கணமும் உண்டு.

தமிழ் ஒரு பழைமையான மொழி. வளர்ந்து வரும் மொழி. அப்படியானால் தமிழில் ஏன் அறிவியல் கற்பிக்கக் கூடாது? முடியாதா? தமிழில் அறிவியல் நூல்கள் இல்லை என்று காரணம் கூறுவர். தமிழ் வழிக் கல்வியைத் தொடங்கித் தொடர்ந்து நடைபோட்டால்தான் நூல்கள் வெளிவர இயலும். பாடப் புத்தகங்களுக்காகக் காத்திருக்க இயலாது, காத்திருக்கக் கூடாது. தாய்மொழி வழிக் கல்வி நடை முறைக்குப் புத்தகங்கள் இல்லை என்று காத்திருப்பது பற்றி

வங்கத்துக் கவிஞர் ரவீந்திரநாத தாகூர் "தழைக்குப் பின் மரம், கரைக்குப் பின் நதி" என்று இருப்பது போல ஆகும், என்று கூறியதை உய்த்துணர்க. அண்ணல் காந்தியடிகள் தாய்மொழி வழிக் கல்வியை வற்புறுத்தினார். அதுவும் உடனடியாகச் செய்யவேண்டும் என்றார். மேலும் "தாய்மொழி வழிக் கல்வியைக் கட்டாயமாக உடனடியாக நடைமுறைப்படுத்த வேண்டும்; இதில் தாமதம் ஏற்படுமானால் சோர்வு வளரும். ஒரு நாடு சோர்வைத் தாங்கிக் கொள்வதைவிட, குழப்பத்தைத் தாங்கிக்கொள்வது நல்லது" என்றார் அண்ணல் காந்தியடிகள். தாய்மொழி வழிக் கல்வி வழங்குதல் மூலம் உடல், உள்ளம், ஆன்மா இம் மூன்றும் வளரும் என்பது அண்ணல் காந்தியடிகளின் திடமான நம்பிக்கை.

## ஆங்கிலத்தை நீட்டிக்கவிடக்கூடாது

தாய் மொழி வழிக் கல்விக் கொள்கையினால் ஆங்கிலம் அகற்றப்படுமா? அப்படி ஒன்றும் இல்லை. தாய் மொழியில் - தமிழில் அறிவியல் துறைகள் கற்கப்படுவதன் மூலம் ஆங்கிலம் அகற்றப்படாது; ஆங்கிலம் அகற்றப்பட வேண்டிய அவசியமும் இல்லை. ஆங்கிலம் ஒரு மொழியாகக் கற்கப்பெறும். மொழிப் பாடம் வேறு, பயிற்சி மொழிவேறு, தமிழ் பயிற்று மொழியாக வேண்டும். எல்லா மட்டங்களிலும் தாய் மொழி வழியே - தமிழ்மொழி வழியே கல்வி கற்பிக்கப் பெறுதல் வேண்டும்; சோதனைக்குக் கூட ஆங்கிலம் பயிற்று மொழியாக நீடிக்க அனுமதிக்கக்கூடாது.

## ஆதிக்கத் தீமை

தாய்மொழி வழி - தமிழ்மொழி வழிக் கல்வி உழுத நிலத்தில் பெய்த மழை போன்றது! ஆங்கில வழிக் கல்வி கற்பாறையில் பெய்த மழை போன்றது.

தமிழ்நாட்டில் தாய்மொழி வழிக் கல்வியை - தமிழ் மொழி வழிக் கல்வியை விரும்பாதவர்கள் தடையாக

இருப்பவர்கள் இரண்டு முதல் ஏழு சதவீதத்தினராக இருக்கும் மேட்டுக் குடியினர்தாம்! மக்கள் யாவரும் சமநிலையில் கல்வி கற்று முன்னேறுவதை விரும்பாதவர்கள், ஆங்கில வழிக் கல்வியை ஆதரிக்கின்றனர். இன்றும் அறிஞர்கள் என்று மதிக்கப்படுபவர்கள் பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள் அனைவரும் தாய்மொழி வழிக் கல்வியை - தமிழ் மொழி வழிக் கல்வியை ஆதரிக்கின்றனர். ஆயினும் எங்கோ ஒரு தயக்கம் இருக்கிறது. தமிழ்நாடு அரசு கல்வியிலும் இரு மொழிக் கொள்கையைக் கடைப்பிடிக்கிறது; இது தவறு! இந்தியாவிற்குத்தான் இருமொழிக் கொள்கை! தமிழ் நாட்டு அரசின் நடைமுறைக்குத்தான் இருமொழிக் கொள்கை; கல்விக்கல்ல; கல்வித்துறையில் தமிழ்நாட்டில் தமிழ்மட்டுமே பயிற்று மொழியாக இருக்க வேண்டும்; ஆங்கிலம் ஒரு மொழியாக மட்டும் கற்பிக்கப்படுதல் வேண்டும். ஆனால் தமிழ் நாடு அரசு தமிழ், ஆங்கிலம் ஆகிய இரண்டு மொழிகளையும் பயிற்று மொழியாக வைத்திருப்பது தமிழ் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கிறது. தமிழ் பயிற்று மொழியின் மூலம் கற்பதின் பயனை அறியாத பெற்றோர்கள் மேட்டுக்குடியினர் வழியில் ஆங்கில வழிக் கல்வியையே தமது பிள்ளைகள் கற்கவேண்டும் என்று விரும்புகின்றனர். பெரும்பாலும் தமிழ் வழிக் கல்வியைத் தேர்ந்தெடுப்பவர்கள் தமிழுக்கு ஆக்கந்தரும் திறமுடையவர்களாக இருப்பதில்லை தரமும், திறமும் உடையவர்கள் ஆங்கில மொழி வழிக் கல்வி வகுப்புகளிலேயே சேர்கின்றனர். இதனால் சம வாய்ப்பு மறுக்கப்படுகிறது; ஒருமைப்பாடு இல்லாமல் போகிறது. ஆதலால் ஆங்கில மொழி வழிக் கல்வி வகுப்புக்களைத் தமிழ்நாடு அரசு மூடவேண்டும். ஆங்கில மொழி வழிக் கல்வி கற்பிக்கும் பள்ளிகளுக்கு அங்கீகாரம் தரக்கூடாது. மாணவர்களும் - ஆங்கில மொழி வழிக் கல்வி வகுப்புக்களை மறுத்து, தமிழ் வழிக் கல்வி வகுப்புக்களிலேயே சேர்ந்து படிக்கவேண்டும்.

தமிழ்நாட்டில் ஆங்கிலப் பயிற்சி பெற்றவர்கள், மேட்டுச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள், தங்களுடைய சமூகத்தின் நலன்களைக் காத்துக்கொள்ள, சாதாரணப் பொது மக்களிடமிருந்து விலகி, உயர்வு நிலை எய்த விரும்புகிறார்கள். இஃது ஓர் ஆதிக்கத் தீமை, விரும்பத்தக்க குணம் அல்ல. இம்முயற்சிக்கு அரசு துணை போகக்கூடாது.

## தமிழ்நாடு அறிவியலில் வளராமைக்குக் காரணம்

இஃது அறிவியல் யுகம். ஆனால் தமிழ்நாடு அறிவியலில் வளரவில்லை. ஏன்? அண்மைக் காலத்தில் உலகின் பல பாகங்களிலும் அந்தந்த நாட்டு மொழிகளில் அறிவியல் வளர்ந்துள்ளது. செர்மன் மொழி, ருஷ்ய மொழி, சப்பாணிய மொழி ஆகிய மொழிகள் முதலியன குறிப்பிடத்தக்கவை. இன்று இந்த மொழிகளைப் படிக்கப் பலரும் விரும்புகின்றனர். தமிழும் பயிற்றுமொழியாகி, தமிழில் அறிவியல் வளர்ந்தால் தமிழையும் உலக மாந்தர் விரும்பிப் படிப்பர். செயற்பாட்டின்மையே காரணம். 'தமிழ் வாழ்க' என்று கூச்சல் போட்டால் போதுமா? தமிழன் வளர்ந்தால் தமிழ் வளரும் – வாழும். நாட்டில் மொழிப் பாதுகாப்புப் பணியே நடைபெறுகிறது. அதுவும் கூட முழுமையாக அல்ல. தமிழ் பாதுகாப்புப் பணி வேறு; தமிழ் வளர்ச்சிப் பணி வேறு. "தமிழ் வளர்ச்சிப் பணி இன்னமும் தொடங்கப் பெறவில்லை" என்பார் விஞ்ஞானி வா.செ. குழந்தைச்சாமி. தமிழ் காலந்தோறும் பகைப்புலம் கண்டு வெற்றி பெற்றுத்தான் வளர்ந்து வந்திருக்கிறது. சமஸ்கிருதம், இந்தி ஆகிய மொழிகளால் தமிழனின் ஆன்மீக வாழ்க்கை தான் பாதித்தது; மூளையை – புத்தியைப் பாதிக்கவில்லை. ஆனால் ஆங்கிலம், தமிழ் வளர்ச்சியைத் தடை செய்து தமிழனின் அறிவு வளர்ச்சியையே கெடுத்துவிட்டது. இந்நிலை ஆற்றொணாத் துயரம் தருகிறது. ஆங்கிலம் வளர்ந்த

வகுப்பினரின் சுயநலத்திற்கு ஆக்கம் சேர்த்ததால் நிலை பெற்றுவிட்டது. ஆனால் இது நீடிக்கும் என்று நம்பாதீர்கள்.

## காலந்தாழ்த்தக்கூடாது

ஆங்கிலம் இந்திய நாட்டின் இணை ஆட்சிமொழியாக நாடாளு மன்றத் தீர்மானத்தின் வழி நடைமுறையில் இருக்கிறது. ஆனால் ஆங்கிலம் – இந்தியாவின் இணை ஆட்சி மொழியாக நீடிக்குமா? எவ்வளவு காலத்திற்கு நீடிக்கும்? அமரர் நேருவின் உறுதிமொழி, "இந்தி பேசாத மக்கள் விரும்புகின்ற வரை ஆங்கிலம் இணை ஆட்சி மொழியாக நீடிக்கும்" என்பதுதான். ஆக என்றாவது ஒரு நாள் இந்தி ஏற்கப்படும்; ஏற்கப்பட வேண்டும் என்பது முடிவு. நாம் இந்தியை எப்போதுமே ஏற்கமாட்டோம் என்றால் ஏற்றுக் கொண்ட உண்மைக்குப் புறம்பான செயலாகப் போகும் என்பதை அறிக. இன்று இந்தியாவில் தமிழ் நாட்டைத் தவிர மற்ற எல்லா மாநிலங்களிலும் மும்மொழித் திட்டம் நடைமுறையில் இருக்கிறது; இந்தி கற்பிக்கப்படுகிறது. ஏன்? தமிழ் நாட்டில்கூட அரசு பள்ளிகளிலும் கிராமப்புறப் பள்ளி களிலும் அதாவது தமிழ் வழிக் கல்வி கற்பிக்கும் பள்ளி களிலும்தான் இந்தி கற்பிக்கப்படுவது இல்லை. நகர்ப்புறங் களில் ஆங்கில வழிக் கல்வி கற்பிக்கும் பள்ளிகளில் இந்தியும் ஒரு மொழியாகக் கற்பிக்கப்படுகிறது. ஆக தமிழ் நாட்டிலும் இந்தி படிக்கிறார்கள், முன்னேறியவர்கள் – முன்னேறக்கூடிய வர்கள். தமிழ்நாட்டில் இந்தி படிக்கிறவர்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் கூடிவருகிறது. இவர்களே நாளை இந்தியை வரவேற்று நடைபாவாடை விரித்தாலும் ஆச்சரியப்படுவதற் கில்லை. ஏமாற்றம் பெரும்பாலும் கிராமத்து மக்களுக்குத் தான். எனவே ஆங்கில வழிக் கல்விப் பள்ளிக்கூடங்கள் மூடப்பெற்றால்தான் தமிழ் வளரும்; தமிழன் வளர்வான்; தமிழ்நாடு வளரும்; நகர்ப்புறம், கிராமப்புறம் என்ற வேற்றுமை அகலும். இல்லையெனில் தமிழ்நாட்டின் எதிர்

காலம் ஒளிமயமாக இருக்காது; இருக்கமுடியாது. ஆங்கிலத்தை எடுத்துவிட்டால் அந்த இடத்திற்கு இந்தி வந்து விடும் என்று சொல்வதில் உண்மை இல்லை. நமது அரசியல் சட்டம் பிரிவு 345 - 348 விதியின்படி மாநிலங்களின் அனைத்து நடவடிக்கைகளும் அந்தந்த மாநில மொழிகளி லேயே - தாய்மொழியிலேயே நடைபெற வேண்டும் என்ப தாகும். இது அரசியல் சட்டம். ஆதலால் தமிழ்நாட்டில் இந்தி வர வழியும் இல்லை; வாயிலும் இல்லை. நடுவண் அரசின் இணை ஆட்சி மொழியாக ஆங்கிலம் நீட்டிக்கப்படுமாயின் அதில் பங்கேற்க ஆங்கிலத்தை ஒரு மொழியாகக் கற்றல் போதும். ஆனால் நடுவண் அரசின் அணுகுமுறையில் காலப் போக்கில் ஆங்கிலம் அகற்றப்பட்டுவிடும். இந்த இடத்தில் அந்தந்த மாநில மொழி இடம்பெறும் போலத் தெரிகிறது. உதாரணமாக இந்திய ஆட்சிப் பணித் தேர்வை மாநில மொழிகளில் எழுதலாம் என்று அரசு அறிவித்திருக்கிறது. தமிழிலேயே இந்திய ஆட்சிப் பணித் தேர்வு எழுதலாம். அது போலவே நாடாளுமன்றத்தில் தாய்மொழியிலேயே பேசலாம். வினாக்கள் கேட்கலாம் என்ற நடைமுறையையும் கொண்டு வந்துவிட்டார்கள். இதனால் காலப்போக்கில் இந்திய அரசின் செயல்முறைகளில் இந்திய மொழிகளே இடம் பெறும் என்ற நிலை உருவாகியிருக்கிறது. இது வரவேற்கத்தக்க ஒன்று. ஆதலால் இனியும் காலந்தாழ்த்தாது அனைத்து நிலைகளிலும் அனைத்துத் துறைகளிலும் தமிழைப் பயிற்றுமொழியாக்க வேண்டும்.

## பயிற்று மொழியாகும் தகுதியுடையது தமிழ்

தமிழ், பயிற்று மொழியாவதற்குரிய தகுதி பெற்ற மொழி என்பதையும் அறிக. மாமன்னன் இராசராசன் கட்டிய தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலும் அப்பெருமன்னன் கடலில் ஓட்டிய கப்பலும், கரிகாலன் கட்டிய கல்லணையும் தமிழரின் அறிவியல் - தொழில்

நுட்பத்திற்குச் சான்றுகளாக விளங்குவன. இவை மட்டுமா? தமிழிலக்கியங்களில் பரவலாகத் தாவர இயல் செய்திகள், பொறியியல் செய்திகள், மருத்துவ இயல் செய்திகள் காணக்கிடக்கின்றன. அந்தக் கருத்துக்களைத் தொடர்ந்து செயலாக்கம் தந்து வளர்க்காமையால் தமிழ் வளர்ச்சியில் ஒரு தேக்கம் ஏற்பட்டுவிட்டது. சமச்சீரான தட்ப வெப்ப அறைகளைப் பற்றி இளங்கோவடிகள் தாம் இயற்றிய சிலம்பில் கோவலன் வாழ்ந்த எழுநிலை மாடத்தைக் காட்டுகிறார். ஏன் கண்ணப்பர் வரலாற்று நிகழ்வு கி.மு. 42 என்பார் சிவக்கவிமணி சுப்பிரமணிய முதலியார். கிறிஸ்து பிறப்பதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே 'கண் பதிய முறை' மருத்துவத்தை இந்தியா கண்டிருக்கிறது என்பதைக் கண்ணப்பநாயனார் வரலாற்றின் வழி அறிகின்றோம். ஆயினும் என்ன பயன்? தொடர்ச்சி இல்லையே! வளர்ச்சியில் நாட்டமில்லையே! ஆதலால் தமிழ் அறிவியல் மொழியாக வளராததற்குத் தடை தமிழின் தகுதிப்பாட்டுக் குறையல்ல. வரலாறு செய்த பிழையும் அல்ல; தமிழரின் மூளைச் சோம்பலே காரணம்! செயலின்மையே காரணம். இந்த நூற்றாண்டிலாவது விழிப்புணர்வு பெற்று வளரத் தமிழ்வழிக் கல்வி பெறுவோம்! அறிவு பெறுவோம்! தமிழை வளர்ப்போம்!

தமிழ் வழிக் கல்வி கற்பித்தால் சிந்தனை விரிவடையும். வினாக்களும் விடைகளும் கல்வியில் இடம் பெறும். அறிந்த – உணர்ந்த கல்வி பெற இயலும். நெட்டுரு அவசியப்படாது. ஆதலால் அறிவு பெற தமிழ் வழிக் கல்வியே தேவை.

இன்று, தமிழ் பயிற்று மொழி ஆவதற்குத் தடை – தமிழின் தகுதியின்மை காரணம் அல்ல. சமூக மேலாதிக்க மனப்போக்கே காரணம். பள்ளத்தில் வீழ்ந்து கிடக்கும் மனிதர், மேலே எழுந்து வந்துவிடக்கூடாது என்று கருது கின்றனர். இந்தச் சமூக மேலாதிக்கக் கொள்கை தலைமுறை தலைமுறையாக வளர்ந்து வருகிறது. ஒரு காலத்தில்

சமஸ்கிருதம் வளர்ந்து வந்தது. அந்தச் சூழ்நிலையில் தமிழர் சமஸ்கிருதம் படிக்கத் தடை விதிக்கப்பட்டது. இந்தி, இந்தி பிரசார சபைகளில் படிக்கப்பெற்றது. ஆனால் எல்லாரும் இந்தியைப் படிக்க வாயில் திறந்து விட்டபோது இந்தி எதிர்ப்பு இயக்கம் தோன்றியது. இது ஒரு சமூக ரீதியான பின்னடைவு என்பதை உணர்தல் வேண்டும்.

## திட்டமிட்டுச் செயல்படவேண்டும்

தமிழ் பயிற்று மொழியாவதற்கு நன்றாகச் சிந்தித்துத் திட்டமிடுதல் வேண்டும். தமிழ்ப் பல்கலைக் கழகம் இந்தப் பணியைச் செய்யலாம். இப்போதும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் அறிவியல்புலம் என்று ஒன்று அமைந்து சில பணிகளைச் செய்து வருகிறது. ஆயினும் இதுபோதாது. இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் உள்ள அறிவியல் ஆய்வுக் கழகங்கள் அவ்வப்பொழுது ஆய்வு செய்து, கண்டுபிடித்து, வளரும் புதிய அறிவியல் சார்ந்த தொழில் நுட்பங்களைத் தமிழில் வெளிவரச் செய்யவேண்டும். அதுபோலவே, உலக நாடுகளில் வெளிவரும் அறிவியல், தொழில் நுட்ப நூல்களைத் தமிழாக்கம் செய்து அச்சிட்டுத் தமிழ் நாட்டு மக்களுக்கு வழங்கவேண்டும். சாதாரண மக்களும் பங்கேற்கக் கூடிய அறிவியல் தொழில் நுட்பக் கருத்தரங்குகளை நடத்த வேண்டும். பாவேந்தன் பாரதிதாசன்;

> *"உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூல்கள்*
> *ஒருத்தர்தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்*
> *சலசலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்"*

என்று கூறியாங்கு நடைமுறைப்படுத்த வேண்டும். தமிழ் நாட்டின் சிற்றூர்களில் எல்லாம் அறிவியல், தொழில்நுட்பச் செய்திகள் சாதாரண மக்களால் பேசப்படும் செய்தியாக இடம் பெறவேண்டும்.

தமிழ் பயிற்று மொழியாதல் மூலம் அடியிற்கண்டுள்ள நன்மைகள் உண்டு என்று நமது பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முனைவர் ச. முத்துக் குமரன் அவர்கள் பட்டியலிடுகிறார்கள்:

1. இயற்கையாக அறிவு பெறலாம்
2. விரைவாகக் கற்கலாம்
3. முழுமையாக அறிவு பெறலாம்
4. சுயமரியாதையை வளர்க்கலாம்
5. கற்றது நன்கு மனதில் பதியும்
6. எளிதாகக் கற்கலாம்
7. சரியாகப் புரிந்து கொள்ளலாம்
8. கற்கும் நேரம் முழுதும் பயன்படும்
9. பள்ளிக்கும் வீட்டிற்கும் தொடர்பு வாய்க்கும்
10. எல்லாரும் உயர்கல்வி கற்கலாம்

இவற்றுடன்

1. சிந்தனை வளரும்!
2. அறிவு விரிவாகும்!
3. புதியன காண வாயில்கள் தென்படும்
4. மூளைக்குச் சோர்வு வராது

என்றும் சேர்த்துக் கொள்ளலாம்.

## முயன்று வெற்றிபெறுவோம்!

1937-ம் ஆண்டில் கூடிய தேசியக் கல்வி மாநாடு தாய்மொழி மூலமே கற்கவேண்டும் என்று தீர்மானம் இயற்றி வலியுறுத்தியது.

கோத்தாரி கமிஷன் அறிக்கை, “இந்திய மொழிகளை அறிவியல், தொழில் நுட்பஞ் சார்ந்த மொழியாக் வளர்த்து நவீனப்படுத்த வேண்டும்” என்று கூறியது. இந்தப் பணி

நிறைவேற வேண்டுமானால் "உயர்கல்வி முதல் பல்கலைக் கழகங்கள் வரையில் மாநில மொழிகள் – தாய் மொழி, மக்கள் மொழி – முதலில் பயிற்று மொழியாதல் வேண்டும்" என்று வற்புறுத்தியுள்ளது.

தமிழ் பயிற்று மொழி இயக்கம் கடந்த அரை நூற்றாண்டாக முயன்றும் வெற்றி பெறவில்லை. ஏன்? மாணவர்கள், பெற்றோர்களிடமிருந்து ஆதரவு கிடைக்கவில்லை. நாடு தழுவிய நிலையில் அனைத்து மக்களும் அகன்ற அறிவு பெற்றால்தான் தமிழ் பயிற்று மொழி இயக்கம் வெற்றி பெறமுடியும்; தமிழ்மொழி அறிவியல் மொழியாக வளரமுடியும். "நமது கொள்கை வெற்றிபெறும் வரையில் முழுமனத்தோடு முயன்று ஆவன அனைத்தையும் தயங்காமல் செய்து வைத்தால் நாம் விரைவில் வெற்றி பெறுவோம். ஆனால் வெற்றிபெறும் நாள், வேண்டினால் வராது; வணங்கினால் வராது; சினந்தால் வராது; முயன்றால் மட்டுமே வரும்! அந்நாள் விரைவில் வருமாறு அனைவரும் ஒன்றாக முயல்வோமாக!" என்ற பெ.நா. அப்புசுவாமி அவர்களின் அழைப்பை ஏற்போமாக!

## தொகுப்புரை

இனிய அன்புடையீர்! மனித குலத்திற்கு வாய்க்கும் அருட்கொடைகளில் தாய்மொழியும் ஒன்று. தமிழர்களின் தாய்மொழி தமிழ். இது இலக்கிய இலக்கண வளம் செறிந்தது; நீண்டநெடிய வரலாறுடையது. தமிழ் மொழியைக் காலங்கள் தோறும் உரியவாறு பேணி வளர்த்துக் காத்து, நமக்குத் தந்தருளி இருக்கிறார்கள் நமது முன்னோர்கள். நீர், நெருப்பு இரண்டையும் கடந்து தமிழ் வென்று விளங்குகிறது. இந்த நூற்றாண்டு அறிவியல் நூற்றாண்டு. இந்த அறிவியல் நூற்றாண்டுக்கு ஏற்றாற்போல் தமிழை அறிவியல் மொழி யாகத் தமிழர்கள் வளர்க்கும் முயற்சியில் தமிழர்கள் ஈடுபட வில்லை. தங்களுடைய சிந்தனையை அறிவியல் சார்ந்ததாக

அமைத்துக் கொள்ளவில்லை. இவற்றுக்கெல்லாம் காரணம், தமிழ் பயிற்று மொழியாகத் தமிழ்நாட்டில் இடம் பெறாதது தான். கல்வித்துறையின் அனைத்து நிலைகளிலும் - துறை தோறும் தமிழையே பயிற்று மொழியாக்க வேண்டும். ஆங்கில வழி கற்கும் கல்விக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும். ஆங்கிலத்தை ஒரு மொழியாக மட்டுமே கற்கவேண்டும். அறிவியலில் துறைதோறும் தமிழ் நூல்கள் காணவேண்டும். முன்னேற வேண்டும். இது தமிழன் செய்யவேண்டிய - காலம் வழங்கியுள்ள கடமை. இக்கடமையை நாம் நிறைவேற்று வதைப் பொருத்தே நமது எதிர்காலம் அமையும்.'

## 2. கல்வியியல் கட்டுரை

மானுடம் வெற்றிபெற வேண்டும். இது மானுடப் பிறப்பின் குறிக்கோள். பயன். மானுடம் வெற்றிபெற முதல் தேவை அறிவு; இரண்டாவது தேவை அறிவறிந்த ஆள்வினை; மூன்றாவது தேவை ஒப்புரவு நெறி மேற்கொண்டு ஒழுகுதல். இம்மூன்றனுள் முதல் நிலையில் அறிவு வாய்க்கப்பெறின் மற்ற இரண்டும் தாமே வந்தமையும். இம்மூன்றும் தனித்தனியே எண்ணிக் கூறப் பெற்றாலும் உடனிகழ்வாலும், ஒத்திசைவாலும் பயன்பாட்டாலும் ஒன்று போலவே கருதினாலும் தவறில்லை.

அறிவு தலையாயது. எப்பாடுபட்டேனும் அறிவைத் தேடுதல் வேண்டும். அறிவு எங்கிருந்தாலும் தேடிச் சென்றடைதல் வேண்டும். ஏன்? அறிவுடையோருக்கு எதிர் காலம் பற்றிய சிந்தனை உண்டு; செயல் உண்டு. அறிவுடையார் எல்லாம் உடையார். மானுடத்திற்கு வாய்க்கும் கருவிகளுள் மிகச் சிறந்த கருவி அறிவேயாம். அறிவு, மானுடத்தைத் துன்பத்திலிருந்து மீட்கும். அறிவு மானுடத்தை வளர்க்கும்; புகழ்பெறச் செய்யும். அறிவு பெறுவதற்குரிய வாயில்கள் பலப்பல. அவற்றுள் தலையாயது கல்வி.

இன்று இந்தியாவில் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் – கற்காதவர்கள் மிகுதி. கற்றவர்கள் மிகமிகக் குறைவு. கற்றவர்களிலும் அறிவுடையார் மிகமிகச் சிலரேயாம். இன்று இந்தியா சந்தித்துவரும் இன்னல்கள் பலப்பல. ஏன் இந்த அவலம்? எங்கும் எவரிடமும் எடுத்துக் கொண்ட பணியில் சிரத்தையில்லை. அதாவது அக்கறை இல்லை. எங்கும் எவரிடமும் சந்தேகம், பரஸ்பரம் சந்தேகம் நிலவுகிறது. நம்முடைய ஆட்சியமைப்பு, சட்டங்கள்கூட சந்தேகங்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. உண்மையில் களத்தில் பணி செய்வோர் சிலர். ஆனால் அப்பணி சிறப்பாக நடைபெறுகின்றதா என்று பார்ப்பவர் பலர். இதனாலேயே, இந்தியா வளரவில்லை. போதிய வளர்ச்சியின்மையின் காரணமாக ஒருமைப்பாடு கால்கொள்ளவில்லை. வேலை யில்லாத் திண்டாட்டம், வறுமை, கடன் சுமை இவற்றால் நாடு நலிவடைந்து வருகிறது. "அறிவற்றவன், சிரத்தையை இழந்த மனிதன். ஐயுறுகிற மனிதன் கெட்டே போகிறான். அதனாலேயே நாம் கேட்டின் அண்மையிலேயே இருக்கிறோம்." என்ற சுவாமி விவேகானந்தரின் உரையை எண்ணுக. உணர்வு கலந்த நிலையில் உன்னுக; மாற்றங்களை விரும்பி வேட்புறுக.

மனிதனை வளர்க்கக் கல்வி தேவை. அதுவும் ஆரம்பக் கல்வி இன்றியமையாதது. ஆரம்பக் கல்வியில் தரம் பேணப் படுதல் வேண்டும். ஒரு குழந்தைக்கோ இளைஞனுக்கோ முன்னேற்றத்திற்குரிய கல்வியைப் பெற உரிமை உண்டு. அவர்களுக்கு வாழ்க்கையின் அடிப்படைத் தேவையாகிய சிறந்த கல்வியை வழங்குவது பெற்றோர்களின் தலையாய கடமையாகும். கடமை மட்டுமல்ல, பொறுப்பும் ஆகும். ஏன் பெற்றோர்களுடைய கடமை மட்டும்தானா? சமூகத்தின் பொறுப்பும், கடமையுமாகும். சமூகத்தின் பொறுப்பும் கடமையும் மட்டுமன்று அரசின் தலையாய கடமையுமாகும். கல்விக்குச் செலவிடும் தொகை கொழுத்த வட்டி கிடைக்கும்

மூலதனமாகும். அதுமட்டுமன்று தேசப் பாதுகாப்புக்கு படை மட்டுமன்று போலீசு மட்டுமல்ல, கல்வியே மிகக் குறைந்த செலவில் செய்யப் பெறும் பாதுகாப்பு ஆகும்.

மனிதப் பிறப்பு உயர்ந்தது; மிக மிக உயர்ந்தது. எண்ணரிய ஆற்றல்கள் உள்ளடங்கிய பிறப்பு மானுடப் பிறப்பு. மானுடத்தின் ஆற்றலுக்கு எல்லையே இல்லை. ஆயினும் மானுடத்தின் உள்ளடக்கமாகிய ஆற்றல் கல்வியினாலேயே செயற்பாட்டு நிலையையும் பயன்பாட்டு நிலையையும் எய்தும். கல்வி என்பது சற்றும் பயன்படாத செய்திகளை மூளையில் திணித்து, திரும்ப அவைகளைத் தேர்வுகள் மூலம் வெளிக் கொணர்வதல்ல. வைரக் கற்களுக்குள் ஒளிந்து கிடக்கும் ஒளியைக் கடைசல் மூலம் வெளிக் கொணர்வதைப் போல, மனிதனிடத்தில் முதலீடாக இருக்கும் உயர்ந்த ஆற்றல்களைக் கண்டுபிடிப்பதும் அந்த ஆற்றலை வளர்ப்பதும் கல்வியின் நோக்கமாகும்; பயனாகும். "பொதுக்கல்வி" என வந்தபின் இந்தத் தனித்தன்மைமிக்க செயல்முறைகள் ஆசிரியர்களிடத்தில் காணப்பெறவில்லை; மாணவர்களிடமும் காணப்பெறவில்லை.

மனித்ன், வாழ்க்கையை முறையாக மதிப்பீடு செய்யத் தெரிந்து கொள்ளவேண்டும். இன்று பலர் வாழ்க்கையை மிகமிகச் சாதாரணமாக மதிக்கின்றனர். நிலையாமையை அதிகமாக எண்ணுகின்றனர்; வாழ்க்கையைக் கொச்சைப் படுத்துகின்றனர். பொன்னுக்கும், பொருளுக்கும் வாழ்க்கையை ஒத்தி வைக்கின்றனர். இவர்களிடம் "காலம் பொன்போன்றது" என்ற பழமொழி எடுபடுமா? வாழும் காலம் அருமையானது; மிக மிக அருமையானது.

> "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி
> மதித்திடுமின்"

என்று அன்று திருநாவுக்கரசர் வாழ்க்கையை மதிப்பீடு செய்தார். இன்று மீண்டும் வாழ்க்கையை வாழுங் காலத்தை

முறையாக நன்மதிப்பீடு செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும். இது கல்வியின் முதற்குறிக்கோள்! மனிதன் தன்னுள் இருக்கும் அளவில்லாத ஆற்றலை உணர வேண்டும். தனக்கு இயல்பாக வாய்த்துள்ள நுண்ணறிவை-சுய அறிவைத் தூண்டிக்கொண்டு வாழ்க்கையின் அனுபவத்திற்குக் கொண்டு வரவேண்டும். மனிதன், வாழுங்காலத்தில் நொடி தோறும் புதிய புதிய எண்ணங்களை அடைய வேண்டும். அந்த எண்ணங்களும் உலகை நோக்கி விரிந்தனவாகவும் உயர்வுடையனவாகவும் அமைதல் வேண்டும். அவன் எண்ணிய எண்ணங்களை அடைய, புத்தார்வத்துடன் எழுச்சியுடன் உழைப்பவனாகவும் இருக்க வேண்டும். இவ்வளவையும் மனிதன் பெறும்படி செய்வது கல்வி. இத்தகைய கல்வியை நாம் நமது தலைமுறையினருக்குத் தருகிறோமா? தர முயற்சியாவது எடுக்கிறோமா? எண்ணிப் பாருங்கள். நமது குழந்தைகளிடம் வளர்ந்து வரும் சார்பு களைச் சார்ந்தே வாழும் மனப்போக்கை மாற்றவேண்டும். குழந்தைகள் தன்னம்பிக்கையுடன்கூடிய தற்சாற்பு நிறைந்த வாழ்க்கையைப் பெறச் செய்வதையும் கல்வியின் நோக்க மாகக் கொள்ள வேண்டும். நமது குழந்தைகள் அவர் களுடைய முழு ஆற்றலையும் உபயோகிக்கும் தகுதியுடைய வர்களாகச் செய்ய வேண்டும். இங்ஙனம் குழந்தைகளை வளர்ப்பதே உண்மையான கல்வி.

இன்றைய குழந்தைகள் நாளைய இந்தியர்கள். இன்றைய இளைஞர்கள் நாளைய இந்தியாவை ஆள்பவர்கள். ஆதலால், கல்வி என்பது அவர்களின் எதிர் காலத்தில் எழும் சிக்கல்களுக்குத் தீர்வு காணக்கூடிய வகையில் அமைய வேண்டும். கல்வி ஏன்? நல்ல காரியங்கள் செய்வதற்காக மட்டுமா? இல்லை. ஒரோவழி நல்ல காரியங்கள் கற்காதவர்கள், அறிஞர்கள் மூலமாகக்கூட நடந்துவிடலாம். ஆதலால், நல்லவனாக வாழ்ந்திடவும் நன்மைகள் செய்யவும் கற்றுக்கொடுப்பது கல்வியின் நோக்கமன்று. நல்லவர்களாகவும்

வாழவேண்டும்; வல்லவர்களாகவும் வாழவேண்டும். நன்மை செய்வதில், நல்ல காரியங்களைச் செய்வதில் ஆர்வம் உடையவர்களாகவும் இன்பம் அடைபவர்களாகவும் விளங்க வேண்டும். நாம் தரும் கல்வி விலங்கியலிலிருந்து மனிதரை மீட்டு, மனிதராக்கி இம்மண்ணில் அமரர்களாக்கி வாழ்ந்திடச் செய்தல் வேண்டும். அத்தகு விழுப்பம் நிறைந்த கல்வியை நாம் நமது குழந்தைகளுக்கு வழங்குகிறோமா? எண்ணுக!

நமது நாட்டு கல்விமுறை எதிர்முறையானதாகவே அமைந்திருப்பதை நாம் உணர்ந்ததாக வேண்டும். கடவுள் பெயரால் அமைந்துள்ள நமது புராணக் கதைகள்கூட எதிர்மறை அமைப்பேயாகும். தவறு செய்தான்; தண்டிக்கப் பட்டான்; மன்னிக்கப்பட்டான் என்பது போலத்தான் நமது புராணங்களில் அமைந்துள்ளன. நமது சிந்தனை, கல்விமுறை எல்லாமே மறுப்பின் வழியன. அதாவது எதிர்மறை வழியினவேயாம். இதனால், நமது இளைஞர்கள் ஊக்கத்தை இழக்கின்றனர். வாழ்க்கையில் ஆர்வம் என்பதனைப் பெறாமலே, சுற்றி சுற்றி வந்து எய்த்துக் களைத்துப் போகின்றனர். நமது நாட்டுக் கல்வி முறையில் புத்தகங்களின் சுமைதான் கூடியிருக்கிறது. புத்தகச் சுமை குறைந்து சிந்தனைத் திறன், செயல் திறன் வளர்வது அவசியம். செயல் மூலம் கல்வி என்பது இன்றைய உலகின் நடைமுறை. நமது நாட்டில் செயல் மூலம் கல்வி முறையை மிகுந்த அளவு அறிமுகப்படுத்துதல் வேண்டும். அவசியமும்கூட. நமது நாட்டுக் கல்வி முறையில் குறிப்பாகத் தமிழ்நாட்டில் தாய்மொழி தமிழைப் புறக்கணிக்கும் போக்கு மேலோங்கி வருகிறது. ஆங்கிலத்திற்கு அளவுக்கு மீறிய முக்கியத்துவம் கொடுக்கப்படுவது ஏன் என்பது விளங்கவில்லை. ஆங்கிலம் வாயிலாகக் கற்பதனால் மற்ற பாடங்களின் படிப்பு பாதிக்கப் படுகிறது. இது மிகவும் இரங்கத்தக்கநிலை. தாய்மொழியை மதித்துப் போற்றுங்கள்; மடமையைக் கொளுத்துங்கள்; தாய்

மொழிக் கல்வியும் உள்ளக் கல்வியும் உலகக் கல்வியும் நமது மாணவர்களுக்குத் தேவை. இன்றைய போக்கு நமது மாணவர்களின் தற்சார்பான சிந்தனை வளர்ச்சி, அறிவு வளர்ச்சியை மிகவும் பாதிக்கும். தாய்மொழிக் கல்வி ஊற்றுப் பெருக்கனையது. அந்நிய மொழிவழிக் கல்வி காட்டாற்றில் எப்போதோ ஓடிவரும் வெள்ளம் போன்றது. தாய்மொழி வாயிலாக வரலாற்றியலை, அறிவியலை, பொருளியலை, தொழில் நுட்பவியலைக் கற்பின் நமது இளைஞர்கள் வளர்வர். நமது இளைஞர்கள் - மாணவர்கள் அறிஞர் களானால்தான் தமிழ்மொழி வளரும், தமிழ்நாடு வளரும். ஆதலால் தமிழ்நாட்டில் பயிற்றுமொழி தமிழாகவே இருத்தல் வேண்டும். அதேபோழ்து ஆங்கிலத்தை ஒரு மொழியாக நன்றாகப் படிக்கவும் வேண்டும். ஏன், இன்று பல மொழி களையும் நமது இளைஞர்கள் கற்கத் தூண்டும் வகையில் தமிழ்நாட்டு முதலமைச்சர் செல்வி ஜெயலலிதா அவர்கள் "மொழிகளின் அவை" அமைப்பதை ஒரு கொள்கையாக அறிவித்திருப்பது வரவேற்கத்தக்க முயற்சி.

கல்வி, ஓர் இயக்கமாதல் வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய திருக்குறள்:

> "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
> நிற்க அதற்குத் தக"

என்று கூறியது.

'கற்க' என்பது ஆணைச் சொல். ஆம், யாதொரு காரணமும் கூறாமல் அனைவரும் கற்க வேண்டும். மனிதர்கள் தங்களிடமுள்ள உள்ளம், மனம், புலன்கள், பொறிகள் ஆகியவற்றில் உள்ள குற்றங்கள் நீங்குவதற்குரிய நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்கவேண்டும். உயிர்களைச் சார்ந்த நோய்க்கு நல்ல கருத்துக்களே மருந்து. உயிர்க்குலம் குற்றங்களினின்றும் விடுதலைப்பெற்று நல்லெண்ணம்,

நம்பிக்கை, ஒத்து வாழ்தல் ஆகிய நெறியில் வாழக் கல்வி துணை செய்யும்.

கல்வி முயற்சி பலமுனை முயற்சியாகும். கல்விக் களம் பெற்றோர், மாணவர், ஆசிரியர், சமூகம் என விரிவாகப் பரந்து கிடக்கிறது. இதில் முதல் நிலையில் உள்ள பெற்றோர்கள் நமது கல்வித்துறைக்கு வாய்ப்பாக அமையாதது ஒரு பெருங்குறை. ஏன் எனின், நமது நாட்டின் பெற்றோர்களில் பலர், எழுத்தறிவு இல்லாதவர்கள். இவர் களில் பலர் விபத்துக்களின் காரணமாகப் பெற்றோர்களான வர்கள். இவர்களுக்குக் குழந்தைகள் வளர்ச்சியில் போதிய அளவு அறிவியல் சார்ந்த ஆர்வம் இல்லை. ஆதலால் இவர் களை நம்பி நாம் கல்விப் பயிரை வளர்க்க முடியாது. அடுத்து, மாணாக்கர்கள், இவர்கள் நல்லவர்கள்! எழுதப்படாத கரும்பலகை போன்றவர்கள். சமூகம்... குறிப்பாக அரசியல் ஊடாடாத வரையில் மாணவர் உலகம், நல்ல உலகமே! அடுத்து நமது கவனத்திற்குரிய பொறுப்புள்ள உறுப்பு ஆசிரியர் இனம். ஆம்! ஆசிரியர்கள். நமது சமுதாயத்தின் முன்னோடிகள்; மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவர்கள்! நாம் அனைவரும் ஆசிரியரிடமிருந்தே கற்றுக் கொள் கின்றோம். ஆசிரியர் என்போர் போதிப்பவர் மட்டுமல்லர். ஆசிரியரின் வாழ்க்கையே ஒரு நூல் போன்றது. நாம் யாரிடமிருந்து கற்றுக் கொள்கிறோமோ அவர்தான் ஆசிரியர். இளந் தலைமுறையினரின் அறிவு வளர நல்ல ஆசிரியர்கள் வேண்டும். ஆம்! கல்வியின் பொறுப்பு ஆசிரியர்களிடமே பெரும்பான்மையும் இருக்கிறது. ஒரு சிறந்த ஆசிரியர் தன்னிடம் ஒப்படைக்கப்பெறும் மாணவர்களின் உள்ளத் தினை ஆலோசித்து நின்று அற்புதமாக உருவாக்குகிறார். அதனால் சமூகத்தின் வரலாற்றில் ஆசிரியர்களுக்கு உள்ள இடம் மிகமிக உயர்ந்தது. ஆனால், இன்றைய நமது சமுதாயத்தில் ஆசிரியர்களுக்கு நமது மாணவர்கள், பெற்றோர்கள் கொடுக்கும் இடம் அவ்வளவு சிறப்பாக இல்லை.

அதேபோழ்து ஆசிரியர்களுடைய பொருளாதார வாழ்நிலை முதலியன கடந்த காலத்திருந்ததைவிட உயர்ந்திருக்கிறது. ஆயினும், மேலும் இன்னமும் ஆசிரியர்களுடைய வாழ்நிலைத் தரத்தை உயர்த்தவேண்டும். இந்தப் பொறுப்பு அரசுக்கும் சமூகத்திற்கும் இருக்கிறது. இத்துறையில் அதிகக் கவனமும் முயற்சியும் தேவை.

அதுபோலவே, ஆசிரியர்களுடைய கல்வி நிலை, கலாசார நிலையையும் வளர்த்து - உயர்த்தியாக வேண்டும். திருவள்ளுவரின் "அறிதோ றறியாமை" என்ற திருக்குறள் வரி, சமுதாயத்தில் வேறு எவருக்குப் பொருந்தினாலும் பொருந் தாது போனாலும் ஆசிரியர் உலகத்திற்குப் பொருந்தும்; பொருந்தவேண்டும். ஆசிரியர்களுடைய அறிவுத் திறனும் செயல்திறனும் போதிக்கும் திறனும் இடையறாத நிலையில் வளர - வளர்த்துக்கொள்ள வாய்ப்புகள் வழங்கப்பெற வேண்டும். இன்று இந்தச் சூழ்நிலை இல்லை. பள்ளிகளிலும் - மாவட்ட அளிவிலும் ஒப்புநோக்கு நூலகங்கள் (Reference library) தேவை. செய்முறை ஆய்வுக் கூடங்கள் அமைய வேண்டும். ஓர் ஆசிரியர் திறமையாகப் பாடம் சொல்லித்தர வேண்டுமெனில், பல மணி நேரம் அவர் சிந்திக்க வேண்டும்; கற்க வேண்டும்; குறிப்புகள் தயாரிக்க வேண்டும். இத்தகு அருமையான முயற்சியில் ஆசிரியர்கள் ஈடுபடுவதற்குரிய வசதிகள் அளிக்கப்பெறுதல் வேண்டும்; சூழ்நிலைகள் உருவாக்கப்பெறுதல் வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக ஆசிரியர்களின் பொருளாதாரத் தேவைகள் நிறைவு செய்யப்பெறுதல் வேண்டும். ஆசிரியர்களுடைய வாழ்க்கைத் தேவைகள் நிறைவேறாத நிலையில் ஆசிரியர்கள் ஓய்வு நேரங்களைப் பொருள் செய்யும் முயற்சிக்கே பயன்படுத்துவர். இதனால் கற்கும் நிலை பாதிக்கும்; கல்வி உலகம் தரத்தை இழக்கும்; எதிர்காலம் கடுமையான பாதிப்புக்குள்ளாகும் என்பதை அரசு அறிந்து உரியன செய்ய வேண்டும் என்று வற்புறுத்துவோமாக!

மனிதம் வளரும் தன்மையது. வளரும் சமுதாயமே வாழும். ஆதலால் கல்விச் சிந்தனை மாறவேண்டும்; வளர வேண்டும். பழைய பாடங்களையே, பல்லவி அனுபல்லவி ஆக்குவதில் பயன் இல்லை. ஆசிரியர்கள் பழக்கப்பட்டுப் போன பாதையிலிருந்து விலகிப் புதுமை நெறிகளில் பொதுமை நெறிகளில் நடை பயிலவேண்டும். சமுதாயத்தில் எழும் புதுப்புதுச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் ஆற்றலை ஆசிரியர்கள் பெற்று, அத்திறனை மாணவர்களுக்குக் கற்றுக் கொடுக்கவேண்டும். புதிய கல்வி முறைகளிலும் சமயச் சார்பற்ற வாழ்முறைகளிலும் ஆன்மநேய ஒருமைப்பாட்டிலும் மாணவர்களுக்கு அக்கறையை ஆசிரியர்கள் தூண்டி வளர்க்க வேண்டும்.

அடுத்து ஆசிரியர்-மாணவர்கள் உறவில் உள்ள ஒரு பிரச்சனை. ஆசிரியர் சொல்லிக் கொடுப்பதை மாணவர்கள் ஏற்க முடியாத நிலையில் மாணவர்களில் பலர் மந்த நிலையில் இருப்பது. இன்று பள்ளிகளுக்கு வந்துள்ள மாணவர்களில் பலர், முதல் தலைமுறையாக வந்துள்ளனர். தரமான கல்விச் சூழலுக்குரிய பாரம்பரியம் (Hereditary) சுற்றுப்புறச் சூழ்நிலையும் (Environment) இந்த மாணவர் களுக்கு இல்லை. இவர்களுடைய மூளைப் புலன்கள் முதன் முறையாக இயக்கப்படுகின்றன. கடினத் தன்மை இருக்கலாம். ஆயினும் ஆசிரியப் பெருமக்கள் கடின உழைப்பை மேற்கொண்டால் இவர்களையும் முதல்தர மாணவர்களாக்க முடியும். ஓர் இயந்திரம் ஓடவில்லையானால் அந்த இயந்திரத்தைத் தூக்கியா எறிந்து விடுகின்றோம்? அல்லது இயந்திரத்தை அடிக்கிறோமா? ஓடாத இயந்திரத்தை அடித்தால் பயன் ஏற்படுமா? இயந்திரத்தில் உள்ள பழுதைக் கண்டுபிடித்து பழுதை நீக்குவதன் மூலம் இயந்திரத்தை ஓடவைக்க முடியும். இதுபோன்றதே ஒரு சிறந்த ஆசிரியரின் கடமை. உண்மையான கல்வி முறையும்கூட, ஆசிரியர் மாணவரைப் பயமுறுத்துவதன் மூலமோ, அடிப்பதன்

மூலமோ கற்பித்துவிட முடியாது. மாணவரிடம் உள்ள குறைகள் நீக்கப் பெறுதல் வேண்டும். கல்வி கற்பதற்குரிய இனிய உள்ளார்வம் தோற்றுவிக்கப்பட்டாதல் வேண்டும். தண்ணீர் எப்படி மெள்ள மெள்ளக் கல்லையும் கரைத்துவிடு கிறதோ, அதுபோல ஓர் ஆசிரியர் தமது அன்பு நிறைந்த ஆர்வம் கூடிய முயற்சியால் எவ்வளவு மோசமான மாணவனையும் திருத்த முடியும்; அறிஞனாக்க முடியும். தேவை ஆசிரியரின் கருணையே!

நாம் நம்முடைய இளந்தலைமுறை பெறும் கல்வியில் அதிகக் கவனம் செலுத்தவேண்டும். இந்தக் கல்விப் பணியில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டுள்ள பள்ளி ஆசிரியர்களைப் போற்றுவோம்! அவர்களுடைய வாழ் நிலைகள் உயர உரியனவெல்லாம் செய்ய உறுதி கொள்வோம்!

நம்முடைய கல்வித்துறைக்கு இன்னும் பலமான அஸ்திவாரம் தேவை. இன்றைய சூழ்நிலையில் நம்முடைய கல்வித் துறைக்குப் பலமான அஸ்திவாரம் அமைப்பது கடினமாக இருக்கலாம். ஆயினும் செய்தேயாக வேண்டும். நமது உடல், உள்ளம், ஆன்மா - முக்கியமாகப் பணம் ஆகிய எல்லாவற்றையும் நமது இளந்தலைமுறையினரின் கல்வி வளர்ச்சிக்கு அர்ப்பணிப்புச் செய்ய வேண்டும். இன்று சமயத்துறையிலும் அரசியல் துறையிலும் செய்யப்படும் முதலீட்டில் கணிசமான ஒரு பகுதியை பள்ளிகளுக்குச் செய்ய நாம் எண்ணவேண்டும். எண்ணினால் உறுதியாக நடக்கும்.

## 5. அறிவியல் யாருக்காக?

"அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றது திருக்குறள். அறிவே வாழ்க்கையை இயக்கக்கூடியது. ஒரு நாட்டுக்குப் பெருமை சேர்ப்பவர்கள் அறிவுடைய

மக்களேயாவர். அறிவில்லாத மக்கள் தங்களுக்குத் தாங்களே தீமையும் செய்துகொண்டு மற்றவர்களுக்குத் துன்பமும் இழைப்பர்.

இயல்பாக அமைந்த வாழ்க்கை பதப்படுத்தப்படாத கச்சாப் பொருள் போன்றது. அறிவு நலஞ்சார்ந்த வாழ்க்கையில்தான் வாழ்க்கை வளர்கிறது; பண்படுகிறது; ஆன்மா சிறப்படைகிறது.

அறிவு எது? படிப்பறிவு அறிவுக்கு வாயிலேயாம். படிப்பறிவே அறிவாகாது. வாழ்வறிவுதான் அறிவு. அதாவது வாழ்க்கையை, வாழ்க்கையின் அமைவுகளை நிகழ்வுகளை அணுகும் பாங்கு, ஆய்வு செய்யும் பாங்கு ஆகியனதான் அறிவாகும். காரண காரியங்களை நுண்மாண் நுழைபுலத்துடன் ஆய்வு செய்தலே அறிவுடைமை. வாழ்க்கையில் துன்பங்கள், தீமைகள் ஒவ்வாமைகள் ஆகிய அனைத்துடனும் சமாதானம் செய்துகொண்டு அழுதுகொண்டே அனுபவித்துத் தீர்க்காமல் அவைகளுக்குரிய காரணங்களைக் கண்டு, அக்காரணங்களை அகற்றி நலன்களைப் படைப்பதூஉம், காண்பதூஉம், மானுட வாழ்க்கையின் தொழில்; குறிக்கோள்.

துன்பத்துக்குப் பகை அறிவே! "அறிவு அற்றம் காக்கும் கருவி" என்றார் திருவள்ளுவர். இன்று நம்மிடையில் 'அறிவு' பற்றி நிகழும் கொள்கை என்ன? பல புத்தகங்களில் உரிய கருத்துக்களை மூளையில் ஏற்றி, பின் அவற்றைப் பேச்சாகவும் எழுத்தாகவும் தருவதே அறிவு என்று எண்ணம் பரவியுள்ளது. பல நூல்களைக் கற்பது அறிவு பெறத் தூண்டலாம்; துணை செய்யலாம். ஆனால் செய்களத்தில் பெறுவதே அறிவு. உலக வரலாற்றில் ஒளியைப் பரப்பிய தாமஸ் ஆல்வா எடிசன் மூவாயிரம் பொருள்களை – பொருள்களினூடே உள்ளீடாக இருந்த ஆற்றலைச் சோதித்து அறிந்தார்; அறிவைக் கருவியாக்கினார். அவருடைய புத்தறிவு புவியில் புது ஒளியைப் பரப்பியது. ஆம்! வாழ்க்கையில்

துன்பங்களைச் சந்திப்பது இயல்பு. ஆனால், துன்பங்கள் இயற்கை என்றும், துன்பங்கள் மாற்ற இயலாதவை என்றும் எண்ணக்கூடாது; முடிவுக்கும் வரக்கூடாது. நேற்றைய அவலம் இன்றைய அறிவறிந்த ஆள்வினைக்குத் தூண்டு கோள்! இன்றைய அறிவறிந்த ஆள்வினை நாளைய ஆக்கம்! வாழ்க்கையை இன்று, நாளை என்று பிரித்துப் பகுத்தது பக்குவப்படுத்துதலுக்கேயாம். "இன்று மட்டுமே வாழ்க்கை! நாளை யாரறிவார்?" என்று நிலையாமைத் தத்துவத்தின் பிடியில் சிக்கிப் புலம்புதல் அறியாமை. நாளையும் நமது வாழ்க்கை இருக்கிறது. நாளை மட்டும் அல்ல, நாளை மறுநாளும் இருக்கிறது. நாளை மறுநாள் மட்டும் அல்ல, என்றென்றும் ஆன்மா வாழ்கிறது என்பதே உயர் சமய நெறிக் கொள்கை. அது மட்டுமல்ல, நாளைய வரலாற்றில் நினைவு கூறப்படுதலும் வாழ்தல்தானே! வரலாற்றில் நினைவு கூறப்படும் வாழ்க்கையைத்தானே "உளதாகும் சாக்காடு" என்று திருவள்ளுவர் கூறினார்.

ஆம்! இன்று பலர் வாழ்கின்றனர்! இல்லை! வாழ்வது போலக் காட்டுகின்றனர்! ஆனால் உண்மையில் வாழவில்லை. "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே!" என்ற திருவாசகம் அறிக, வாழும் பொழுதே செத்துப் போனவர்களே பயன்பாடு இல்லாத வாழ்க்கையைச் சுமந்துகொண்டு திரிபவர்களே, வையத்திற்குச் சுமையாக இருப்பவர்களே எண்ணற்றோர். இவர்கள் வாழ்வில் செத்தவர்கள்; ஒரு சிலர் சாவில் வாழ்பவர்கள்! மரண வாயிலின் விளிம்பிலும் அறிவு மூச்சுவிட்ட கிரேக்க நாட்டறிஞன் சிந்தனையாளர் சாக்ரடீஸ் நினைவுக்குரியவர். மானுடத்தின் அறிவியல் சார்ந்த அணுகுமுறை நிலவும் வரை சாக்ரடீஸ் வாழ்வார். மரணத்தை வென்று புறங்கண்ட அப்பரடிகள் உழைப்பும் தொண்டும் மானுடத்தின் உயர்நிலையாக நிலவும் வரையில் வாழ்வார். மற்றும் அறியாமையால் இழைத்த இன்னல் களைத் தாங்கிக் கொண்டு அன்பையும் கருணையையும்

வழங்கியருளிய ஏசு வாழ்கிறார்! இதுதான் உளதாகும் சாக்காடு! இத்தகு வாழ்வியல் எளிதில் கிடைக்குமா? உடற் சுகமும் சோம்பலும் பேணப்படும் வரை சாதலே மிகுதி! உளதாகும் சாக்காடு ஏது? "உளதாகும் சாக்காடு" பற்றிய அறிவியல் மக்களிடையில் அறிமுகப்படுத்தப்படுதல் வேண்டும்.

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே

என்று புறநானூறு கூறியது. ஆதலால், துன்பங்களைப் பற்றிக் கவலைப்படாது சாவைக்கண்டு அஞ்சாது வாழ்தல் வேண்டும் என்ற அறிவியல் சார்ந்த உண்மையை நமது நாட்டு மக்கள் ஏற்றுக்கொண்டு, வாழ்தலை விருப்புடன் நிகழ்த்த முன்வரும்படி செய்தல்வேண்டும். வெறும் பிழைப்பு நடத்தாமல் வாழவிரும்பும் மானுடத்தின் கருவியே அறிவுடைமை.

ஆன்மாவிற்கு அழிவில்லை. ஆன்மாக்கள் என்றும் வாழக்கூடியவையே. ஆனாலும் இந்த ஆன்மாக்கள் கால நியதிகளின்பாற்பட்டவை. அதாவது காலந்தோறும் உயிர்கள் பண்பாட்டு வாழ்நிலையில் படிமுறை வளர்ச்சிகளைக் கண்டாக வேண்டும். ஒவ்வொரு நிலையிலும் காலத்துடன் இசைந்த வளர்ச்சியை இழப்பின் வாழ்க்கை பாழ்படும். ஆதலால், காலத்தைத் தவறாமல் பயன்படுத்தி மேம்பாடடைதல் வேண்டும். மானுடத்தின் வாழ்வில் முதற்பொருள் காலமே என்பதறிக. மக்கள் அறியாமையால் இன்று 'காலம் பொன் போன்றது' என்றும், 'காலம் கண் போன்றது' என்றும் கூறுகின்றனர். இது தவறு மட்டுமல்ல அறியாமையும் கூட! காலம் வேறு எதனுடனும் இணைத்துப் பேசக்கூடியதல்ல; உவமிக்கக்கூடியதல்ல.

காலம், காலத்திற்கே நேர்; வாழ்க்கையின் முதற் பொருளும் காலமே என்ற அறிவுப்பார்வை மக்களிடத்தில்

பரவிடவேண்டும். காலத்தை நல்ல நாள் என்றும் கெட்ட நாள் என்றும் 'இராகுகாலம்' என்றும் 'சகுணம்' சரியாக இல்லை என்றும் யோகம் சரியாக இல்லை என்றும் கூறிக் காலத்தை வீணாக்கும் அறியாமையை மக்களிடத்திலிருந்து அகற்றிக் காலம் பற்றிய அறிவியல் மனப்பான்மையை வளர்க்கவேண்டும்.

மக்கள் தங்களுடைய வாழ்க்கைக்கு அவர்களே பொறுப்பு. மக்களின் வாழ்க்கை அமைபுக்கு வேறு யாரும் காரணமல்ல. ஊழும்கூடக் காரணமல்ல. ஊழ் என்பதும் வாழ்க்கையிலிருந்து பிறந்த தத்துவமே! ஒவ்வொருவரின் பழக்க வழக்கங்களே ஊழ்த்து ஊழாக உருப்பெறுகிறது. மானிடர் தாம் மேற்கொள்ளும் பழக்கங்களில் விழிப்பாக இருக்கவேண்டும். இன்று தொடங்கும் பழக்கம் இன்றோடு நிற்பதில்லை. இன்றைய பழக்கம் சில நாட்களில் வழக்கமாக மாறிவிடும். வழக்கங்களிலிருந்து மனிதர் எளிதில் விடுதலை பெற முடிவதில்லை. ஆதலால் நமது பழக்கங்களும் வழக்கங் களுமே ஊழ் ஆகும். நமது பழக்கங்களும் வழக்கங்களுமே ஊழ் என்பது. அப்பழக்கங்கள் தவிரப் பழகுவதன் மூலமே ஊழினை வெற்றி பெறவேண்டும். "பழக்கம் தவிரப் பழகு மின்" என்றது சாத்திர நூலும். ஊழியல் குறித்த அறிவைத் தெளிவாகப் பெற்றால் வளர்ச்சி வந்து பொருந்தும். நன்றாக வாழலாம். நாடும் வளரும்.

மக்கள், தங்களுடைய வாழ்க்கையுடன் இணைந்துள்ள நிலம், நீர், தீ, வளி, வான் ஆகிய ஐம்பூதங்களைப் பற்றிய அறிவைப் பெறுதல்வேண்டும். நிலம், வாழ்க்கை நிகழும் இடம் - மட்டுமல்ல. வாழ்க்கையின் இன்றியமையாத் தேவையாகிய உணவைத் தருகிறது. ஆனால், இன்று பலர் நிலத்தைப் பேணுவதில்லை; நிலத்திற்கு ஒருவகையான உயிர்ப்பு ஆற்றல் இருப்பதை உணர்வதில்லை; நிலத்தை வளமாகப் பாதுகாக்காமல் மண் அரிப்புக்கு இலக்காக்கியும், உரப்படுத்தாமல் பூசாரம் இழக்கச் செய்தும் அழிக்கிறார்கள்.

நிலத்தின் மேற்பரப்பில் உள்ள மண் கண்டமே பசுமையை கருவுயிர்க்கும் ஆற்றலுடைய மண். இந்த மண் கண்டம் தோன்ற ஓராயிரம் ஆண்டுகள் ஆகின்றன என்று அறிவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். கல்தோன்றி மண் தோன்ற நீண்ட காலம் பிடிக்கிறது. ஆதலால் நிலப்பரப்பின் மேற்பகுதி மண் கண்டத்தை பாதுகாக்கவேண்டும். அதற்கு என்ன செய்யவேண்டும்? நிலமகள் எப்போதும் பசுமையால் மூடப் பெற்றிருக்க வேண்டும் என்ற அறிவியல் சார்ந்த நோக்கில் மக்கள் வளர்ந்தால் இந்த நாட்டு நிலம் தள்ளா விளையுளாக வளரும், மாறும்!

நிலத்தைப் போலவே, தண்ணீரையும் தூய்மையாகக் காப்பாற்றுவதுடன் தண்ணீர் வளத்தையும் பராமரிக்க வேண்டும். பழங்காலத்தில் தண்ணீர் தாராளமாகக் கிடைத்திருக்கும்போல் தெரிகிறது. அதனால் தாராளமான செலவினங்களைத் 'தண்ணீரைப்போல' என்று கூறுவதுண்டு. இன்று மழை வளம் குறைவதால் நிலத்தடி நீர் வளமும் குறைகிறது. ஆதலால் நீர் மேலாண்மை அறிவியல் மக்களிடம் வளர்ந்தாக வேண்டும். அதுபோலவே மழை வளத்தை மேலும் மேலும் பெறவும் நிலத்தடி நீர் வளத்தைப் பாதுகாக்கவும் காடுகள் துணை செய்யும். ஆதலால் நல்ல உயரமான அடர்த்தியாக வளரக்கூடிய மரங்களைக் காடுகளாக வளர்க்கவேண்டும். காடுகள் பல நோக்குப் பயனுடையன என்பதை மக்கள் அறிந்து கொள்ள வேண்டும். காடுகள் பற்றிய அறிவியல் சார்ந்த விழிப்புணர்வே மக்கள் நலன் காக்கும். நாட்டின் வளம் காக்கும்.

உயிர், உடல் சார்ந்த வாழ்க்கையை நடத்துகிறது. ஆதலால் உடல், உடலின் இயக்கம், உடலின் தேவைகள் ஆகியனபற்றிய அறிவியல் உணர்வு தேவை. உடம்பு வளர்ந்தால்தான் உயிர் வளரும். "உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே!" என்றார் திருமூலர். உடம்பு ஒரு அறிவுக் கருவி. உயிரின் அறிவு வாயில்கள் புலன்கள் உயிரின்

செயற் கருவிகள் பொறிகள் இவைகளைத் திறம்பட வளர்த்துப் பாதுகாத்துக்கொள்ளும் அறிவியல் பாங்கு மக்களிடத்தில் வளரவேண்டும். நல்ல உணவு, நறுநீர், தூய்மையான காற்று, வெப்ப தட்பம் நிறைந்த வாழ்விடம் ஆகியன நல்வாழ்வுக்கு ஆதாரங்கள். நல்ல உழைப்பும் ஓய்வும் உறக்கமும் வாழ்வுக்குத் தேவை. இவற்றையெல்லாம் பெற்று மக்கள் வாழ்ந்திட, மக்களிடம் அறிவியல் சென்றாக வேண்டும்.

உடலை இயக்குவது உழைப்பு. உலகை இயக்குவது உழைப்பு. உழைப்பினை ஆள்வினை என்பார் திருவள்ளுவர்.' "அறிவறிந்த ஆள்வினை" என்பது திருக்குறள். குறைந்த நேரத்தில், குறைந்த சக்தியைச் செலவிட்டு உழைத்து அதிகப் பயன் கொள்வது அறிவறிந்த ஆள்வினையாகும். இன்றைய உலகில் உழைப்பை எளிமைப்படுத்திப் பெரும் பயன் அடையச் செய்யக்கூடிய கருவிகள் பல வந்துள்ளன. கருவிகள் உழைப்பே அறிவியல் யுகத்தின் புரட்சி. நாளும் கருவிகளில் மாற்றங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. அறிவியல் யுகத்திற்கு ஏற்ற இந்தக் கருவிகளைக் கையாண்டு உழைத்து வாழ மக்களைப் பயிற்றுவிக்கவேண்டும்.

உழைப்பு, மானுடம் கண்ட ஒப்பற்ற பண்பு. உழைப்பே உலக வாழ்க்கையின் உயிர்ப்பாக விளங்குகின்றது. உழைப்பும் உற்பத்தி சார்ந்த உழைப்பாக இருப்பது நல்லது. "பொருளில் லார்க்கு இவ்வுலகமில்லை" என்றார் திருவள்ளுவர். பொருள் என்பது என்ன? பணமா? இல்லை; இல்லை! பணம் பிறப்பதற்குக் காரணமாக இருக்கும் உயிர்க்குலம் நுகர்ந்து வாழும் - அதாவது உண்டும் உடுத்தும் அனுபவித்தும் மகிழும் பொருள்களே பொருள்கள். இன்று பொருளின் உண்மையான நிலைமை தெரியாதார் பலர் பண்டங்களைத் தேடாமல் பணத்தையே தேடுகிறார்கள். இன்று நமது நாட்டுச் சமுதாயம் பண மதிப்பீட்டுச் சமுதாயமாகப் போய்விட்டது. அதனால் பணம் பண்ணும் பரிசுச் சீட்டு முதலியனவற்றை

அரசே விற்கும் அவல நிலை தோன்றிவிட்டது. இன்று பணத்தால் பணம் சம்பாதிக்கும் ஆர்வமே மக்களிடையே வளர்ந்துள்ளது. ஆதலால் நாட்டை – நாடாக – வளமான நாடாகப் படைத்தளிக்க அறிவியல் சார்ந்த உழைப்பு தேவை.

உலக வாழ்வியலை, உயிரோட்டமாக இருந்து இயக்குவது பொருளியல். பண்டம் மாற்று முறைக்குப் பதிலாக நாணய மாற்றுமுறை வந்த பிறகு இன்றைய செல்வம் உலகந்தழுவிய வடிவத்தைப் பெற்றிருக்கிறது. ஆதலால் பொருளியல் சார்ந்த அறிவியல் தேவை. திருக்குறள்,

> "இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
> வகுத்தலும் வல்ல தரசு"

என்று கூறுகிறது. இயற்றலாவது-பொருள் வருதலுக்குரிய புதிய வாயில்களைக் கண்டறிதலும் அவ்வாயில்களுக்குத் திட்ட வடிவம் கொடுத்து இயங்கி உழைத்துப் பொருளை ஈட்டுதலாகும். ஈட்டும் செல்வம் சில்லறையாக அழிந்து போகக்கூடாது. ஈட்டும் செல்வம் "முதல்" ஆகும் தகுதி பெறும் வரையில் காத்தல் வேண்டும். காத்த செல்வத்தை வாழ்க்கையின் துறைகள் பலவற்றிற்கும் வகுத்துப் பயன் படுத்த வேண்டும். பொருளாதார அறிவு, மக்களிடையில் வளர்ந்தால்தான் அவர்களைச் சுரண்டிக் கொழுக்கும் வர்க்கத்தினரிடமிருந்து மக்களைக் காக்க முடியும். மக்கள் பொருளியல் சார்ந்த அறிவியலில் போதிய அறிவு விளக்கம் பெற்றால்தான் பல தலைமுறைகளாக வாட்டி வதைக்கும் வறுமை ஏழ்மையிலிருந்து மக்களை மீட்க முடியும். "உள்ள வர்களுக்கு மேலும் தரப்படும். இல்லாதவர்களிடமிருந்து உள்ளதும் எடுக்கப்படும்" என்ற விவிலிய உரையை ஓர்க! உணர்க!

இன்று அறிவியல் துறை பலப்பலவாக வளர்ந்துள்ளது. நாளும் வளர்ந்துகொண்டிருக்கிறது. இயற்பியல், உயிரியல், தாவரவியல், வேதியல், மின்னியல் என்றெல்லாம் வளர்ந்து

வந்துள்ளன. மேலும் விண்ணியல், பொறியியல், கணிதவியல், கணிப் பொறியியல் என்றெல்லாமும் வளர்ந்துள்ளன; வளர்ந்து வருகின்றன. மேலும் உடலியல், உளவியல், சமூகவியல், ஒழுக்கவியல், அறம் சார்ந்த நீதியியல், பழகும் பாங்கியல் என்ற எண்ணற்ற துறைகள் மானுட வாழ்வி யலைச் சுற்றி வளர்ந்துவருகின்றன. இவ்வாறு துறைதோறும் வளர்ந்துவரும் அறிவியலில் மக்கள் தேர்ச்சி பெற்றால்தான் அவர்களுடைய வாழ்வு சிறக்கும்.

இவற்றுள்ளும் சமூகவியல் அறிவு, நமது மக்களுக்கு மிகுதியும் தேவை. ஏன்? நமது மக்கள் பல்லாயிரம் ஆண்டு களாகச் சாதிப் பிரிவினைகளாலும் மதப் பிரிவினைகளாலும் பிரிந்து கலகம் செய்துகொண்டு வாழ்ந்து வந்திருக்கிறார்கள்; வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இன்றைய மானுட உலகம் புதிய அறிவியல் உலகத்தில் வளர்கிறது; வாழ்கிறது. அறிவியல் உலகம் நாடுகளைக் கடந்து, கடல்களைக் கடந்து, மலைகளைக் கடந்து புவியுருண்டையை இணைத்து இன்று வெற்றி பெற்றுள்ளது. இன்று எந்தச் சிக்கலானாலும் 'புவி' யைச் சார்ந்த சிக்கல்தான். ஆனால் நாட்டு மக்களோ பழைய பானைக்குள் தலையை விட்டுக் கொண்டு தத்துவங்கள் பேசுகின்றனர். இன்று இந்தியா புறவுலக வளர்ச்சியில் 20ஆம் நூற்றாண்டில்தான் இருக்கிறது! ஆனால் இந்தியனின், தமிழனின் மூளையும் உள்ளமும் காட்டுமிராண்டித்தனமான வாழ்ந்த யுகத்திலேயே இருக்கிறது. இந்தியன் மாறவில்லை. தமிழன் மாறவில்லை. ஆதலால் இந்தியர்கள், தமிழர்கள் புத்தம் புதிய உள்ளம் பெற்று சமூக மாந்தர்களாக விளங்க வேண்டும். எந்த நாட்டில் சமூக மனசாட்சி, சமூக உணர்வு, சமூக ஒழுங்கியல், சமூக ஒழுக்கவியல், சிறந்த முறையில் வளர்ந்து, சிறந்த சமுதாயம் வடிவம் பெறுகிறதோ அந்த நாடுதான் வளர முடியும்; வாழ முடியும். இதற்கு இன்று ஜப்பானை உதாரணமாகப் பின்பற்றலாம். ஆயினும் உலகின் பெரும்பான்மையான நாடுகளில் ஆப்பிரிக்க நாடுகள், மத்திய

கிழக்கு நாடுகளைத் தவிர மற்ற நாடுகளில் எல்லாம் சமூகவியல் சிறப்பாக இருக்கிறது. அந்த நாடுகளின் மக்கள் நாட்டுக்காக உழைக்கிறார்கள்; நாட்டுக்காக வாழ்கிறார்கள். நமது நாட்டிலோ நாட்டையே திருடி வீட்டுக்குக் கொண்டுபோவதே மிகுதி. இந்த நாட்டில் எப்படி சமூகம் உருவாகும்? "ஒருவன் எல்லோருக்காகவும் எல்லோரும் ஒருவருக்காகவும்" என்ற சமூகவியல் அறிவு, உணர்வு, ஒழுக்கம் நமது மக்களைச் சென்றடைய வேண்டும். அன்று தான் நமது நாடு வளரும்; வாழும்.

சமூக அமைப்புக்கும் இயக்கத்துக்கும் உந்து சக்தி அன்பு. அன்பு ஒரு ஆற்றல் நிறைந்த மொழி. அன்புணர்வும் அன்புணர்வு சார்ந்த ஒழுக்கமும் வாழ்வியலும் ஆயிரம் மேடைகளிலும் உயர்ந்தவை, அன்பின் மொழி மௌனப் புரட்சி செய்யும்; எண்ணற்றோரை இணைக்கும்; ஒரு நெறிப்படுத்தும். இத்தகு அன்பினை காட்டுதல் - பெறுதல், அன்பின் பயணத்தின் தடைகளை அறிதல், தடைகளை விலக்கி அன்பால் திணைந்த மாந்தருலகத்தைக் காணுதல் ஆகிய வாழ்க்கைப்பற்றிய அறிவியல் இன்றைய தேவை; உடனடியாகத் தேவை. புவிக்கோளம் அழியாமல் பாதுகாக்க, அன்பினால் உருப்பெறும் மானுடத்தினாலே ப ய இயலும்; முடியும்.

இந்த நூற்றாண்டில் ஒரு அறிவியல் பற்றிப் பேசாது விட்டால் கற்றுத் துறைபோய அறிஞருலகம் மன்னிக்காது. அது எந்த அறிவியல்? அதுதான் அரசியல். அரசியல் என்பது ஓர் அறிவியலேயாம். இதனை Political science என்பர். ஆனால் நமது மக்களில் பலருக்கு இல்லை. இல்லை! இன்று நாம் காண்பது கட்சிகள்! கொடிகள்! தலைவரைப் புகழ்தல்! கட்சிக்காரரே சுற்றம் - நாட்டு மக்கள் என்பனதான்! நமது நாட்டு மக்களோ தேர்தலில் வாக்களிப்பதை ஒரு தீராக் கடமையாகச் செய்து முடிக்கின்றனர். ஆனால் அரசியல் அறிவு இல்லாது போனாலும் மக்கள் கட்சிகளின் போக்கில்

விருப்பு வெறுப்புக்களால் பாதிக்கப் படுகிறார்கள் என்பது தேர்தல் முடிவுகளில் புலனாகிறது. விருப்பு-வெறுப்புக்கள் மட்டுமே அவற்றின்பார்ப்பட்ட உணர்ச்சிகள் மட்டுமே நிரந்தரத் தீர்வைத் தந்துவிட முடியாது. எல்லாருக்கும் எல்லாம் கிடைக்கக்கூடிய வகையில் மக்களாட்சி அமையத்தக்க வகையில் உள்ள கொள்கை, கோட்பாடு உடையவர்களை மக்கள் ஆதரித்து ஆட்சியில் அமர்த்த வேண்டும். ஆட்சியின் திட்டங்கள், செயற்பாடுகள் அவற்றில் உள்ள குற்றங் குறைகள் முதலியவற்றை மக்கள் கூர்ந்து கவனித்து விமர்சனம் செய்யும் அறிவைப் பெற்றால்தான் நல்ல அரசு அமையும். மனிதன் பயமின்றிச் சுதந்திரமாகப் பேச, எழுத, வாழ வாய்ப்பு வேண்டும்.

அறிவியலில் மணிமுடியாகத் திகழ்வது சமயம். சமயமும் ஓர் அறிவியலேயாம். அறிவியல் துறையில் உயிரியலில் சமயவியல் வருகிறது.

> "அறிவுதந்தெனை ஆண்டுகொண்ட
> அற்புதம் அறியேனே!"

என்பது திருவாசகம்.

உயிர் நிறைநலம் பெறுதலே வாழ்க்கையின் நோக்கம்; குறிக்கோள். அந்நிறைநலமாகிய இன்ப அன்பினை நோக்கித் தொடங்கிய பயணமே வாழ்க்கை. இன்றோ சமயவியல் அறிவியலாக விளங்காமல் மூடத்தனம் நிறைந்த கொள்கைகள், கோட்பாடுகள், பழக்கங்கள், வழக்கங்கள், சடங்குகள் நிறைந்து பயனற்றுப் போனதோடன்றி, நம்முடைய காலத்தையும், ஆற்றலையும், செல்வத்தையும் கொள்ளையடிக்கிறது! இவை மட்டுமா! மனிதத்தை முட்டாளாக்கி பயமுறுத்தி 'கடவுள் கோபம்' என்றெல்லாம் சொல்லி, வாழ்க்கையைக் கெடுக்கின்றது! கடவுள் ஒருவர் தான்! ஒருவரே தான்! சத்தியமாக வேறொரு கடவுள் இல்லை! இதுவே உண்மை. ஒரே கடவுளை வணங்கும் மாந்தர்களிடையில் மதங்களைப் படைத்து, வேற்றுமையை வளர்த்து, பகைமையை மூட்டி

இந்தப் புவியைக் கலகக் காடாக்கி வருகின்றனர். இதுவல்ல சமயம்!

சமயம் ஒரு சிறந்த-அறிவியலுள் சிறந்த அறிவியலாகும். குறைவிலா நிறைவாக, கோதிலா அமுதாக, அறிவுக்கு அறிவாக, நன்றாக, இன்பமாக விளங்கும் பரம்பொருள் நெறி நின்று, எண்ணி வாழ்தல் மூலம், உயிர்கள் தாமும் நிறைநலம் பெறுதலே, சமயவியல். இத்தகு சமயவியல் அறிவு, மக்களைச் சென்றடையாதவரை அவர்கள் ஞானம் பெறமாட்டார்கள். இந்த மண்ணகம் விண்ணகமாகாது.

இந்த யுகம் அறிவியல் யுகம். இந்த அறிவியல் யுகத்தில் அறிஞர்கள் மக்களுக்காக அறிவியலை வளர்த்து மக்களை அறிவியல் நெறியில் ஈர்த்து, இணைத்து, அழைத்துச் சென்றாலே, மன்பதை சிறக்கும்; வையகம் வளரும்; வாழும்!

# 4. தமிழ்ப் பல்கலைக் கழக அறக்கட்டளைச் சொற்பொழிவு

1–8–1991

## 1. மக்களுக்காக அறிவியல்

### மானுட வாழ்க்கை

வாழ்க்கையென்பது இன்னமும் பூரணமாக விளக்கப் பெறாதது. வாழ்க்கையென்பது ஒரு அந்நிய மொழி போலவே இன்றுவரை விளங்குகிறது. எல்லாரும் இதைத் தவறாகவே உச்சரிக்கிறார்கள்.

மானுட வாழ்க்கை மாயையுமல்ல. பொய்யும் அல்ல; கற்பனையும் அல்ல; விபத்தும் அல்ல. இந்த வாழ்க்கை உண்மை; முற்றிலும் உண்மை. மானுட வாழ்க்கை வாய்த்ததே

ஒரு நல் வாய்ப்பு. மானுட வாழ்க்கை அருமையானது; மதிப்புயர்வுடையது.

"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி" என்பது திருமுறை மொழி.

மானுடம் பெற்றுள்ள அறிவுக் கருவிகள் ஐம்புலன்கள். மானுடத்திற்கு வாய்த்துள்ள செயற்கருவிகள் ஐம்பொறிகள். மானுடம் அற்புதமானது. மானுடம் வெற்றி பொருந்திய வாழ்க்கையை நடத்த வேண்டும். மானுடம், மானுடத்தின் தோற்றம் விந்தைமிகு அறிவியல் ஆக்கமாகும். இந்த மானுடம் தோற்றத்திலும் சரி, மானுடம் வாழும் புவிக் கோளத்திலும் சரி, எத்தனை கோடி இன்பச் சூழல்கள்! இயற்கை வளங்கள்! இவற்றில் மானுடம் அனுபவித்துவரும் மகிழ்ச்சி அனுபவங்களை எண்ணத்தான் இயலுமா? இந்த உலக அமைப்பில் மானுடத் தோற்றத்தில் எத்தனை எத்தனை அறிவியல் நுட்பங்கள்! யாரோ, எவரோ, எதுவோ ஒன்றின் செயல்திறன் புவிக்கோள இயக்கத்தில் வெளிப்படுகிறது. இந்த உலகத்தின் அமைப்பிலும், விளக்கத்தக்க இயக்கத்திலும் ஏதோ ஓர் ஒழுங்குமுறை பிறழா நிகழ்ச்சி இருக்கிறது. அது எதனால்? நிச்சயமாக மனிதனைவிட மேம்பட்ட சக்தியாக இருக்க வேண்டும். அது கடவுளைத் தவிர வேறு எதுவாக இருக்க முடியும்? என்ற சிசிரோ என்னும் அறிஞனின் கருத்து சிந்தனைக்குரியது.

ஒரேயொரு சவ்வரிப் பிரமாணமுள்ள விந்து தாயின் கருப்பையில் அற்புதமான மானுட உடலை உருவாக்குகிறது! இந்த உலகப் படைப்பில் - இயக்கத்தில் மனிதனுக்கு அப்பாற் பட்ட ஏதோ ஒன்று இருக்கிறது. அறிவுக்குப் புலனாகாத ஒரு இரகசியம் இருக்கிறது. இன்னமும் ஆய்வுக்குரியதாகவே அமைந்து இருக்கிறது. சிலர் அது கடவுள் என்பர்; சிலர் இயற்கை என்பர்; இன்னும் இது விவாதப் பொருளாகவே இருந்து வருகிறது.

*மானுடம் உடல் அல்ல; மானுடம் உயிர் அல்ல. மானுடம் உடம்பும் உயிரும் இணைந்தது. உயிர் அறிவுக் கருவிகள் பொருந்திய - புலன்கள் அமைந்த நுண்ணுடம் புடையது. மானுடத்தின் உடல், செயற்பாட்டுக்குரிய பொறிகள் அமைவுடன் கடியது. மானுடம் வெற்றிக்குரியது. மானுடம் வென்று விளங்குவதற்குரிய அமைவுகள் பலவும் கூடியது. அதனாலன்றோ கம்பன், "மானுடம் வென்றதம்மா!" என்று கூறுகின்றான்.*

*மானுட வாழ்க்கை ஒரு தொடர் நிகழ்ச்சி. மானுடத்தின் வாழ்க்கை என்று நிறைவு பெறும்? என்று முடியும்? யார் கண்டது? மானுடம் வெற்றி பெறுவது மானுடத்தின் வாழும் தரத்தைப் பொருத்தது. மானுடம் எதிர்பார்ப்புகள் பல உடையது. வரலாறே மானுடத்தால் தான் இயக்கப் பெறுகிறது. மானுடம் முதலில் வாழ்தல் வேண்டும். பிழைப்பு நடத்தக்கூடாது. வாழும் மாந்தர் சிலரே! பலர் பிழைப்பு நடத்துகின்றனர்; உண்டு, உறங்கிக் காலங்கழிக்கின்றனர்; வெந்ததைத் தின்கின்றனர் விதி வந்தால் சாகின்றனர். என்னே கொடுமை! உண்டு உறங்கிச் சாவதற்காகவா வாழ்க்கை? அல்லது கலகப் பூச்சிகளாகச் சிலநாள் வாழ்ந்து சாவதற்காகவா? இல்லை, இல்லை! மானுடம் வாழ்வதற்கே! புலன்களை, பொறிகளை வென்று விளங்கும் வாழ்க்கையே வாழ்க்கை!*

*உருண்டோடும் நாள்கள் ஊனை வளர்ந்திடும்; உடலை வளர்த்திடும். ஆனால் உயிரை வளர்க்காது; உணர்வை வளர்க்காது. உயிரையும் உணர்வையும் வளர்க்கும் முயற்சி ஆன்மாவுக்குத் தேவை! ஆம்! கருவிகளைப் பயன்படுத்தத் தெரிந்த மனிதன் உலகியலில் வெற்றி பெறுகிறான். அது போல், தமது பொறிகளை முறையாகப் பயன்படுத்தக் கற்றுக் கொண்ட மாந்தனும் வளர்கின்றான்; வெற்றி பெறுகின்றான். பொறிகள், மதம் பிடித்த யானைகள்! இவைகள் மாவுத்தனைத் தம் தம் திசையில் இழுத்துச் செல்லும்! இப்*

பொறிகளை அடக்கி வெற்றி கொண்டு தாம் விரும்பியவாறு இயக்கிப் பயன்கொள்வதே மானுடத்தின் வெற்றி. பொறி களின் மீது தனியரசாணை செலுத்தும் மானுடம் வெற்றிபெறும். மானுடம், மானுட வாழ்க்கை இயக்கத் தன்மையுடையது. தேக்கம் மானுடத்திற்குப் பகை! ஆதலால், மாந்தன் ஓயாது ஒழியாது செயற்பட்டால் வெற்றி பெறுவான்.

மானுடத்திற்கு விரிந்து பரந்த செயற்களம் இயற்கை யாகவே அமைந்துள்ளது. செயற்பாட்டுக்கே உரிய புலன் களும் பொறிகளும் அமைந்துள்ளன. மானுடம் தொழில் புரிதலையே இலட்சியமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். மானுடம் தொழில் செய்வதிலேயே வளர்கிறது! பக்குவப்படு கிறது. மானுடம், மானுடத்தின் வளர்ச்சிக்காக அமைந்த புவிக்கோளத்துடன் பொருந்தித் தொழில் புரிதல் வேண்டும்! உடன் பிறந்து வாழும் மாந்தருடன் கூடித் தொழில் புரிதல் வேண்டும். மானுடம் பொய்யாய், கனவாய், பழங்கதையாய்ப் போய்விடக்கூடாது. மானுட வாழ்வு முழுமையுடையதாக அமையின் மானுடம் வெற்றிபெறும்! இந்த வையகம் பயன் பெறும்; வரலாறு சிறக்கும்; இந்தப் புவிக்கோளத்தில் வளம் கொழிக்கும்; எல்லாரும் இன்புற்று வாழ்வர்!

## மானுடத்தின் வளர்ச்சி

இந்தப் புவிக்கோளத்தில் உயிர்க்குலம் தோன்றிப் பல நூறாயிரம் ஆண்டுகள் உருண்டோடிய பிறகு பரிணாம வளர்ச்சியில் மனித குலம் தோன்றியது. உயிர்க்குலம் - மனிதகுலம் படைக்கப்பட்டதன்று. உயிர் என்றும் உள் பொருள் "உள்ளது தோன்றாது; இல்லது வாராது" என்பது கோட்பாடு! மனித குலம் தோன்றி மெள்ள மெள்ள இன்றுள்ள நாகரிக நிலைக்கு வளர்ந்து வந்திருக்கிறது. ஆதி மனிதன் நிர்வாண நிலையில் திரிந்தான். குடும்ப அமைப்பு இல்லை. முதலில், கிடைத்ததைத் தின்றான். பின் மெள்ள உள்ளிருந்து உந்திச் செலுத்திய உணர்வினாலும் நடைமுறை

களினாலும் கருவியைக் கண்டு பிடித்தான். மனித நாகரிகம் மனிதனுக்குக் கருவித் தொடர்பு கிடைத்ததிலிருந்து தான் மாறி வளர்ந்து வருகிறது. முதலில் கல், கம்பு முதலியன கொண்டு வேட்டையாடினான். அதன்பின் ஈட்டி, வில் - அம்பு முதலியன கண்டு வேட்டையாடினான். இறைச்சியைச் சுட்டுப் பக்குவப்படுத்தித் தின்றான். பாலுணர்வு - மான உணர்வு தலைதூக்கியது. தழைகளை உடுத்துக் கொண்டான். அதன்பின் மெள்ள மெள்ள ஆடை உலகத்திற்கு வளர்ந்து வந்தான். வேளாண்மை செய்தான். விலங்குகளை வளர்த்தான். குகைகளில் வாழ்ந்தவன் வீடுகள் கட்டினான்.

தொடக்க காலத்தில் மனித குலம் இயற்கைக்கு அஞ்சி வாழ்ந்தது. பின் இயற்கையைப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டது. இப்போது மனிதகுலம் இயற்கையை வென்று வாழத் தலைப்பட்டுள்ளது. இந்தச் சாதனையை மனித குலம் செய்ய முடிந்தது சிந்தனை செய்யும் இயல்பினாலேயாம். இன்று மனிதன் காலத்தையும் காலனையும் வென்று விளங்குகின்றான். இன்று தூரம் ஒரு பிரச்சனையல்ல. உலகம் சுருங்கி வந்துவிட்டது. இன்றைய மனிதன் அறிவியலைக் கருவியாகக் கொண்டு சந்திரன் இயல்பு கண்டு ஆராயத் தலைப்பட்டுள்ளான். கண்டம் விட்டுக் கண்டம் செல்லும் ஏவுகணைகள் செய்துள்ளான். மனிதனின் வளர்ச்சி அற்புத மானது; அதிசயிக்கத் தக்கது. ஆயினும் உலகியலில் வளர்ந் துள்ள அளவுக்கு அருளியலில் வளரவில்லை. நயத்தக்க நாகரிகம் வளரவில்லை.

மனித நாகரிகம் மேம்பாடு அடையாமல் பழைய சரித்திரத்தை நோக்கித் திரும்பச் செல்கிறது. கற்கால மனிதர்களைப் போலக் கலகம் செய்கிறான். விரிந்த பரந்த உலகத்தில் வாழ்வதறிந்தும் சின்னப் புத்தியையே பாராட்டு கிறான். திரும்பவும் மனிதனை மடைமாற்றம் செய்து வாழச் செய்ய வேண்டும்.

## மூட நம்பிக்கை

அறிவியல் வளர்ந்து வருகிறது; நாளும் வளர்ந்து வருகிறது. அதேபோழ்து மனிதர்களிடம் உள்ள மூட நம்பிக்கைகள் அகன்றனவா? இல்லை? மூட நம்பிக்கைகள் அகலாத நிலையில் அறிவியல் வளர்ச்சி போதிய பயனைத் தராது. விமானத்தில் பறக்கும் நிலைக்கு வளர்ந்த மனிதன் கருப்பர் வாழும் பகுதியெனப் பிரித்தல் முறைதானா? ஆதி திராவிடர் வாழும் காலனி என்று ஒதுக்குதல் அறிவுடைமையா? இதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இனம், சாதி வேறுபாடற்ற மனித குலத்தை உருவாக்காத நிலையில் விமானத்தால் என்ன பயன்? "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்ற இலக்கியம் வாழ்வாகாமல் உலகஞ் சுற்றி வருவதில் என்ன பயன்? மனிதன் என்ன பருந்தா? கழுகா? சமூகச் சிந்தனையும் மனித நேயமும் இல்லாதவர்கள் - இன்று ஏற்றுக்கொள்ளும் மத யாத்திரரை பலப்பல.

உலகம், கோள்களால் இயங்குகிறது. கோள்கள், மனிதனின் கைக்கு எட்டிய அனுபவத்திற்கு வரும் நாள் தூரத்தில் இல்லை என்பதைச் சந்திரனுக்கு மனிதன் சென்றதன் மூலம் அறிவியல் நிரூபணம் செய்திருக்கிறது. ஆக, உலக இயக்கத்திற்குச் சாதனமாக உள்ள கோள்கள் - கிரகங்கள் தெய்வங்கள் அல்ல; அவை வணங்கத் தக்கவையல்ல. பயன்படுத்திக் கொள்ளத்தக்கன என்ற உண்மையை உணர வேண்டாமா? கிரகங்களைப் பற்றிய அறிவு இன்று வளர்ந்துள்ளது. சந்திரனைக் கண்டு எட்டிப் பிடித்த பின்னும் மற்ற கிரகங்களைக் காணும் முயற்சி நடப்பதறிந்தும் நவக்கிரக வழிபாடு செய்யலாமா? இது பக்தித் துறையிலுள்ள மூடநம்பிக்கை. பகுத்தறிவுத் துறையிலும் மூடநம்பிக்கைகள் இல்லாமல் இல்லை.

கிரகங்களின் சஞ்சாரத்திற்கும் நமது நரம்பு மண்டலத் திற்கும் உறவு இருக்கிறது. அதனால் கிரகங்களின் நகர்வு

களுக்கும் இயக்கத்திற்கும் ஏற்ப, நமது நரம்பு மண்டலத்தில் பாதிப்புகள் ஏற்படும். இந்தப் பாதிப்புகள் நமது உடலியக்கத்தில் சில பாதிப்புகளை ஏற்படுத்தும். இந்தப் பாதிப்புகளிலிருந்து உடலை - உடலியக்கத்தைக் காத்துக் கொள்வது பழக்க வழக்கங்களை மாற்றிக் கொள்வது அறிவுடைமையே யாகும். ஆனால் பகுத்தறிவுவாளர் இதை மூடநம்பிக்கை என்று சொல்கின்றனர். இது தவறான அறிவியலுக்கு முரணான முறை.

நல்ல உடல், நோயை எதிர்த்துப் போராடிப் பாதுகாத்துக் கொள்ளும். உடல், வலிமை குன்றின் தற்சார்புச் சூழ்நிலைகளால் பாதிக்கப்பெற்று நோய் உருவாகிறது. எனவே நோயின்றி வாழ்தலும் நோய் வந்தால் மருத்துவம் செய்து கொள்ளும் முறையும் வளர வேண்டாமா? நோயில்லாமல் நெடியநாள் வாழும் முறைமையைக் கற்றுக் கொள்ள வேண்டாமா?

வளமும் வாழ்வும் மானுடத்தின் படைப்பு. உழைப்பே மூலதனம். முயற்சியே முன்னேற்றத்தின் படி. விதி என்பது என்ன? என்றெல்லாம் தெரிந்து கொண்டு அறிவறிந்த ஆள்வினையுடன் வாழவேண்டாமா? விதித் தத்துவத்தின் பொருள் புரியாமல் ஆற்றல் மிக்க வாழ்க்கையை முடக்கிப் போட்டு ஆண்டாண்டு காலமாக அழுதுகொண்டிருப்பது நியாயமா? திருஞானசம்பந்தர் அருளியதுபோல் ஊனமுடையாராக வாழலாமா?

> "அவ்வினைக் கிவ்வினை யாமென்று
> சொல்லும் அஃதறிவீர்,
> உய்வினை நாடா திருப்பதும்
> உந்தமக்கு ஊனமன்றே!"

வாய்த்த பிறப்பிற்கு ஏற்ப முறையாக வாழும் ஆர்வம் வேண்டும். ஆன்ற அறிவு வேண்டும். ஆக்கம் பல நல்கும் ஆள்வினை வேண்டும்.

## விதியை நிர்ணயிப்பது எது?

இந்திய தத்துவ ஞானத்தில் ஊழ் - விதி என்பது மேலாதிக்கம் செய்வது. 'விதி' என்பது என்ன? வீதி - விதி என்னும் சொற்களை ஒப்புநோக்கிப் பொருள் கொள்க. பலகாலும் பலரும் நடப்பது வீதி. பலகாலும் பலரும் தனி மனிதரும் பழகுவது விதி - ஊழ். விதி, வாழ்க்கையின் துறைதோறும் உண்டு! விதி பற்றி எண்ணுவது தவறில்லை. ஆனால், விதி மாற்ற முடியாதது என்ற கருத்து ஏற்புடைய தன்று. விதி, பழக்கங்களால் வழக்கங்களால் ஆவது. மனிதன் பழக்கங்களின் வயப்பட்ட பிராணி என்று சொல்லும் வழக்குண்டு. பழக்கங்கள் மனிதன் எடுத்துக் கொள்பவை; எளிதில் கைவிடக்கூடியவை. பழக்கத்தின் முதிர்ச்சி வழக்கங்கள்! வழக்கங்கள் மனிதன் மீது ஆதிக்கம் செலுத்தும் இயல்புடையன. மனிதன் எளிதில் வழக்கங்களிலிருந்து மீளான். இந்த வழக்கங்களை 'விதி' என்றும் கூறலாம். ஆக, மனிதனின் பழக்கங்கள் வழக்கங்கள் ஆகின்றன. வழக்கங்கள் விதிகள் ஆகின்றன.

இந்த விதிகள், சிந்திக்க மறுக்கும் மனிதனின் வாழ்க்கையை நிர்ணயிக்கின்றன என்பது ஒரு நம்பிக்கை, இவையெல்லாம் உண்மையும் கூட. நாளும் மனிதன் தன்னைப் புத்துயிர்ப்புச் செய்து கொள்வனாயின் விதி மேலாதிக்கம் செய்யாது. நேற்றைய தவறுகளைத் திருத்திக் கொள்ளத்தானே இன்றைய வாழ்க்கை. விதி மாற்ற இயலாதது என்ற கருத்து ஆட்சேபனைக்குரியது; ஆய்வுக் குரியது. விதியின் அமைவை மாற்ற முடியாதெனில் பிறப்பு ஏன்? அறிவு ஏன்? கடவுள் ஏன்? மனிதனின் விதியை மனிதனே நிர்ணயிக்கிறான்; முடிவு செய்கிறான். அவரவர் செய்த செயற்பயனை அவரவரே துய்ப்பதிலிருந்து தப்பித்துக் கொள்ளாமல் முறைப்படுத்துவது நியதி. இந்த நியதி ஒரு மேலாண்மையின் வழி விருப்பு வெறுப்பு இல்லாமல் செய்யப் படுகிறது.

வாழ்க்கையென்பது கட்டிமுடிக்கப் பெற்ற மாளிகை யல்ல. மனிதன் முயன்று கட்டிக் கொண்டே இருக்கும் மாளிகை. மனிதன் வாழத் தொடங்கினால் அவன் வாழ்வு வளரும்; மாற்றங்களைப் பெறும். "விதிக்கு விதி செய்வதை"க் கம்பனும் ஏற்றுப் பாடியிருக்கிறான். "ஊழையும் உப்பக்கம் காணலாம்" என்பது வள்ளுவம். ஊழ்' - விதி அவனவ னுடைய தனி வாழ்க்கையில் சில பாதிப்புகளை ஏற்படுத்தலாம். அது எப்படி சமூகத்தைப் பாதிப்படையச் செய்ய இயலும்? ஒரு மனிதனைத் தாழ்த்தப்பட்டவனென்றும் ஏழை என்றும் தாழ்த்தவோ ஒடுக்கவோ எந்த விதிமுறைக்கு அதிகாரம் வந்தது? அந்த அதிகாரத்தை வழங்கியவர் யார்? ஒழுக்கங்கள்தான் காரணம் என்றால் நடைமுறையில் அப்படி அல்லவே! இன்று தாழ்த்தப்பட்டவன் பிறக்கிறான். பார்ப்பனன் பிறக்கிறான். ஏழை பிறக்கிறான். முதலாளி பிறக்கிறான். இது சாத்தியமா? நடைமுறையா? அல்லது நியாயம்தானா? இல்லை! இந்த அநியாயங்கள் தொடர்ந்து நடந்து வருகின்றன. இவை சமூக நீதியின்மையால் சமூக விதிகளை மீறிய கொடிய செயல்கள்! சமூக ஊழ் என்றும் கூறலாம். சமூக விதி, தனி மனிதனைப் பாதிக்கிறது. தனி மனித விதி சமூகத்தையும் பாதிக்கிறது. ஆதலால் மனிதனின் வாழ்க்கை விதியை நிர்ணயிப்பது அவனுடைய அறிவறிந்த ஆள்வினையே! இடையீடு இல்லாது சோர்வு இல்லாது செய்யும் முயற்சிகளே! நாளும் நாளும் வளரும் உழைப்பின் ஆக்கமே மானுடத்தின் வாழ்க்கை; பயன்; எல்லாம்! ஊழே துணை செய்யாது போனாலும் மனிதன் வெற்றி பெறுவான்! மனிதன் தலை விதியை அவனே நிர்ணயிக்கிறான்!

## அறியாமை

"அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றது திருக்குறள்! அறிவே வாழ்க்கையைப் பயனுடைய வகையில் இயக்குவது. நாட்டுக்குப் பெருமை, மக்கள் தொகையின் அளவல்ல; அறிவுடைய மக்கள், அறிவறிந்த ஆள்வினை

யுடைய மக்கள் சிலர் வாழ்ந்தாலும் அந்த நாடு வளரும்! பெருமையுறும். அறிவில்லாத மக்கள் நாட்டுக்குச் சுமை! அறிவில்லாத மக்கள் தங்களுக்குத் தாங்களே தீமை செய்து கொள்வர். மற்றவர்களுக்கும் காரணமில்லாமலே துன்ப மிழைப்பர்; அறிவில்லாதவர்களே மூட நம்பிக்கைகளில் முடக்குண்டு கிடப்பர். அறிவில்லாதவர்கள் தாமும் வாழார்; மற்றவர்களையும் வாழவிடார். அறிவில்லாதவர்கள் சிந்திக்க மறந்து விடுவர். இல்லை, இல்லை! சிந்திக்க மறுத்துவிடுவர். அறிவில்லாதவர்கள் சொன்னாலும் கேட்கமாட்டார்கள்; கேட்டாலும் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்; செயல்பட மாட்டார்கள்; வாழவும் மாட்டார்கள். அறிவில்லாதவர்கள் கழனியில் பதர்ப் பயிர் அனையர்; ஆம், தலை விரித்தாடுவர்! அகங்காரத்துடனிருப்பர். இவர்கள் மூர்க்கர்கள். ஒரு பெரிய கொடுமை அதிசயம் இவர்களுக்கு தமக்கு அறிவில்லை என்பது தெரியாததுதான். இல்லை என்று தெரிந்து கொண்டால்தான் தேடுவார்களே!

அறியாமை கொடுமையானது. அறியாமை சாபக்கேடு! அறிவு ஆக்கம் அறிவு இன்பம், அறிவு வாழச் செய்யும்; அறிவு புகழ் சேர்க்கும்; அறிவு பெரியாராக்கும்.

குழந்தை பிறக்கிறது! மனிதன் பிறக்கவில்லை. மனிதன் உருவாகின்றான்! மனிதன் உருவாக்கப்படுகின்றான். குழந்தை மனிதனாவது உருவத்தால் மட்டும் அல்ல. அறிவால் தான் மனிதன் உருவாகின்றான்! அறிவில்லாதவர்கள் உருவத்தில் வளர்ந்தாலும் “மக்களே போல்வர்” தான்! உறுப்பொத்தல் மக்கள் ஒப்பல்ல. பதப்படுத்தப்படாத சக்காப்பொருள் தொழிலுக்குப் பயன்படாது. அதுபோலத்தான் அறிவு நலம் இல்லாத மனிதன் எதற்கும் பயன்படான். அறிவு நலஞ் சார்ந்த வாழ்க்கையில் வளர்ச்சி உண்டு; மாற்றங்கள் உண்டு; வளம் சேரும்; வாழ்க்கை சிறக்கும்; புகழ் பூத்த வாழ்வு அமையும். அறிவு குற்றங்களினின்று மீட்டு எடுக்கும். அறிவு குறைகளைத் தவிர்க்கத் துணை செய்யும்.

அறிவு எது? கற்ற கல்வி அறிவாகுமா? தகவல்களும் செய்திகளும் தெரிந்தால் அறிவாகுமா? தொடுத்த வினாக் களுக்கு விடை சொல்லுவது அறிவாகுமா? இல்லை, இல்லை! இவையெல்லாம் அறிவின் வாயில்கள். நல்ல பயன்களைத் தருவது அறிவு. நல்ல காரியங்களை நாளும் நாடிச் செய்தல் அறிவு. ஊக்கம் கைவிடாதது அறிவு. சூழ் நிலைகளை அறிவு வென்று விளங்கும். கவனமான உழைப்பு, உறுதியான உழைப்பு அறிவுக்கு அடையாளம்!

அறிவுக்கு வாயில்கள் பலப்பல. ஆனாலும் அறிவு வெளிப்பட்டுத் தோன்றும் களம் சிந்தனை! கல்வி, கேள்வி, செயல் ஆகியன அறிவின் வாயில்கள்! கற்ற அறிவு, கேட்ட அறிவு, நுண்ணறிவு, பட்டறிவு என்று அறிவு பலப்பல. நாட்டில் நடக்கும் நிகழ்வுகளை, தன் வாழ்க்கையின் நிகழ்வு களை அறிவுப் பாங்குடன் அணுகுவது அறிவு; அறிவியல். எந்த நிகழ்வுக்கும் எது அடிப்படை? காரணம் எது? காரியம் எது? பயன்பாடு என்ன? என்றெல்லாம் ஆய்வு செய்து வாழச் செய்தல் அறிவுதான்!

வாழ்க்கையில் ஆயிரம் ஆயிரம் நிகழ்வுகள்! தீமைகள்! துன்பங்கள்! ஒவ்வாமைகள்! இவைகளைத் தாங்கிக்கொண்டு அனுபவிப்பதா? அல்லது போராடி வெற்றி பெறுவதா? இந்த வினாக்களுக்குரிய விடையில்தான் அறிவின் மாட்சி புலப்படும். “துன்பங்களும் துயரங்களும் இயற்கை, வினைப் பயன். இவைகளை அனுபவித்துத்தான் தீரவேண்டும்! தீர்வே இல்லை” - என்று மூடத்தனத்தில் மூழ்கி அழுது அழுது வாழ்தல் அறியாமை. வாழ்வதற்குப் பதில் வாழ்க்கையைத் தூக்கிச் சுமப்பது அறியாமை.

## அறிவு

மனிதன் - மனிதகுலம் அறியாமையிலிருந்து விடுதலை பெறவேண்டும். மனிதன் அறிவுப் பிராணி. ஆனால், இயல்பாக அறியாமையில் கிடந்துழல்கின்றான். ஏன் இந்த

அவலம்? அறியாமை என்றால் என்ன? பெரும்பாலோர் தங்களுடைய அறியாமையையே அறிவு என்று பறைசாற்றிக் கொண்டு உலாவருகின்றனர். ஐயோ..... பரிதாபம்! "அறிவுடையோம் யாம்!" என்னும் செருக்கே அறியாமைதான்! அறியாமை என்பது ஒன்றும் தெரியாமையன்று. யாதொன்றும் அறியாதார் உலகில் அன்றும் இருந்ததில்லை; இன்றும் இல்லை. இனிமேலும் இருக்கமாட்டார்கள். அப்படியானால் அறியாமை என்பது என்ன? ஒன்றைப் பிரிதொன்றாக முறை பிறழ உணர்தலுக்கு அறியாமை என்று பெயர். அதாவது நல்லதைத் தீயதென்றும் தீயதை நல்லது என்றும் இன்பத்தைத் துன்பம் என்றும் துன்பத்தை இன்பம் என்றும் முறை பிறழ உணர்வது அறியாமை.

'நன்றுடையானை, தீயதில்லானை' - என்பது தேவாரம். நன்றுடையான் என்று கூறினாலே போதும்; தீயதில்லான் என்று எதிர் மறையாகவும் கூறியது எதனால் என்று ஆய்வு செய்க! மக்கள் நன்மை, நல்லது, நன்று என்று எண்ணிக்கொண்டிருப்பவை பல தீமையும் கலந்த நன்மையேயாம். எது நன்று? எது நன்மை? எங்கும் எப்பொழுதும் எல்லாருக்கும் எது நன்மை பயக்குமோ அதுவே நன்மை. ஒருபொழுது நன்மையாக இருப்பது பிறிதொரு பொழுது தீமையாகவும் இருப்பது நன்மையாகாது. அதுபோலவே, ஒருவருக்கு நன்மையாகவும் பிறிதொருவருக்குத் தீமையாகவும் இருப்பது நன்மையாகாது. அதனால் மக்கள் நன்மையென்று கருதிக் கொண்டிருக்கும் தன்மையல்ல கடவுள். இது அறியாமைக்கு ஓர் எடுத்துக் காட்டு.

வாழ்க்கை ஒரு நெடியபயணம். பல்வேறு துறைகளையும் படிகளையும் இடர்ப்பாடுகளையும் கடந்து வளர்ந்து முன்னேற வேண்டியது வாழ்க்கை. பல்வேறு மனிதர்களைச் சந்திக்க வேண்டிய அவசியமும் கட்டாயமும் வாழ்க்கையில் உண்டு. எண்ணத் தொலையாத சிக்கல்களுக்குத் தீர்வு உண்டு.

வாழ்க்கையைப் பயனுடையதாக்க வேண்டும் வாழ்க்கையைப் பயனுடையதாக்குவதற்குப் பெரிய தடையாக இருப்பது அறியாமையேயாம். திருக்குறள்,

*"பிறப்பென்னும் பேதைமை"*

என்று கூறும்.

*"இருளே உலகத் தியற்கை இருளகற்றும்*
*கைவிளக்கே கற்ற அறிவுடைமை"*

என்றும் சான்றோர் கூறுவர். அறியாமையினின்று விடுதலை பெற்றால்தான் வாழ்க்கை வளரும்; மாறும். எதையும் ஏன்? எதனால்? என்று கேள்வி கேட்டு எப்படி சிக்கலுக்குத் தீர்வு காண்பது என்று எண்ணி ஆய்வு செய்து தீர்வு கண்டு வாழ்தலுக்கு அறிவே முதல்; முடிவு; எல்லாம்!

மனிதன் தனது புலன்களையும் பொறிகளையும் முறையாக இயக்கிப் பயன் கொள்ளத் துணை செய்வது அறிவு. துன்பத் தொடக்கின்றி வாழ்வதற்கு அறிவு பயன்படுகிறது. அறிவு பலதிறத்தன. எழுதப் படிக்கத் தெரியாதவர்களிடம் கூட அறிவு இருக்கும். இது பொது அறிவு. வாழ்வின் அடிப்படையொடு தொடர்புள்ள இந்த அறிவு வளமான வாழ்க்கைக்குப் போதாது.

அறிவு வளர்ச்சிக்குக் கல்வி முதல் தேவை. திருக்குறள் 'கற்க' என்று ஆணையிட்டது. கல்வி, புலன்களின் விரிவாக்கத்திற்குப் பயன்படும். கல்வி, பொறிகளிடத்தில் பண்பட்ட செயல்முறையினைக் காணும். கல்வி, சென்ற பல தலைமுறையினருடைய வாழ்க்கையை அறிந்து கொள்ளத் துணை செய்கிறது. கல்வி, வாழ்க்கையின் இலக்குகளை ஏற்றுக் கொள்ளத் தூண்டுகிறது. அந்த இலக்குகளை அடையவும் துணை செய்கிறது. அறிவியல் வளர்ச்சிக்குப் பின் தான் இலக்கியப் படைப்பு, தொழில் நுட்பம், பொருளியல், சமயநெறிகள், அரசியல் முதலியன.

கல்வி கற்பதன் மூலமே அறிவு ஆக்கம் பெற்றுவிடாது கற்றார் வாய்க் கேட்பது அவசியம். ஏன்? கேட்டறிவது மிகமிக அவசியம். மூளைகள் பலவிதம். ஒரு மனிதனின் மூளை சென்ற வழியே செல்லும். இது பலருக்கும் இயல்பு. சிந்திக்கும் பழக்கம் உடைய சிலர் விதிவிலக்காய் பலமுறை கற்றுச் சிந்தித்துப் பொருள் காண்பர்; மெய்ப் பொருள் காண்பர்; தெளிவு காண்பர். ஆயினும் பல மூளைகளின் அறிவு ஒரு சேரத் துணை செய்வது கேட்டறியும் முறையில் தான். "கற்றில னாயினும் கேட்க!" என்றது திருக்குறள்.

அறிவு மனிதனைத் துன்பத்திலிருந்து மீட்டு எடுப்பது. அறிவு, நாள்தோறும் புத்துயிர்ப்புத் தந்து புதுவாழ்வு தருவது. இந்த அறிவே பூரணத்துவம் அமைந்த வாழ்க்கைக்கு முதல்.

## அறிவியல்

அறிவியல் என்பது என்ன? நம்முடைய உடல் இயங்குகிறது; உயிர் செயற்படுகிறது. நம்மைச் சுற்றியிருக்கின்ற உலகம் இயங்குகிறது; ஓயாது இயங்கித் தொழிற்படுவதே இயற்கை. இவற்றோடு பிறந்து வளரும் மனிதன் - வாழும் மனிதன் இந்த இயக்கங்களின் காரணம் என்ன? ஏன்? என்று வினாத் தொடுக்கின்றானே அந்த வினாத்தான் அறிவியலின் தொடக்கம். அந்த வினாக்களுக்குக் காணும் விடைகளே அறிவியல்! அறிவியலின் வாய்பாடுகள் அனைத்தும் விடைகளே. நிலத்தின் இயல்பு, புவிக்கோள் இயக்கம், தண்ணீரின் தண்மை, வளி மண்டலம், எரி சக்தி என வாழ்க்கைக்குத் துணையாயமைந்து கிடப்பனவற்றை யெல்லாம் பற்றி அறிதலே அறிவியல்.

இந்த அறிவியல் தொடங்கி உலகளாவியதாக வளர்ந்து வந்துள்ளது. இன்று மனிதனுடைய ஆய்வுப் புலன் நுழையாத துறை இல்லை. விண்ணும் மண்ணும் இன்று மனிதனுடைய அறிவாராய்ச்சிக்குக் களங்களாகிவிட்டன. நிலத்தியல்பும், நீரின் இயல்பும், கதிரவனின் இயல்பும், வளிமண்டலத்தின்

இயக்க இயல்பும் இன்று அறியப்படுகின்றன, உணரப்படு கின்றன. ஏன்? ஐம்பூதங்களைக் கண்டு அஞ்சி வாழ்ந்த மனிதன் இன்று அவற்றை அடக்கி ஆண்டனுபவிக்கக் கற்றுக் கொண்டுவிட்டான். மனிதன் பிறந்த நாளன்றே அவனைத் துன்பமும் மரணமும் தொடர்ந்தது. இன்றோ மனிதன் மரணத்தைத் தள்ளி வைத்துக் கொண்டே போகிறான். காலப் போக்கில் மரணமிலாப் பெருவாழ்வும் அடைந்துவிடுவான். ஆனாலும் மனிதனின் பேராசைகளும் இயற்கை நிகழ்வுகளும் புதுப்புதுத் துன்பத் தொடக்குகளை உருவாக்கிய வண்ணம் இருக்கின்றன. இன்று போகும் போக்கைப் பார்த்தால் மானுடம் தோற்கும் போலத் தெரிகிறது. அறிந்தும் சுற்றுப்புறச் சூழலைக் கெடுக்கிறான் மனிதன். பகையும் போரும் கொடியது என்று கற்கிறான்; உணர்கிறான். ஆயினும் போர்க் கருவிகளைச் செய்வதிலிருந்து அவன் இன்னமும் ஓய்வு பெறவில்லை. இது கடவுள் உலகம். ஆயினும் கடவுள் பெயராலேயே கலகங்களை உருவாக்குகின்றான். மனிதனுக்கு இன்னமும் வாழ்வில் விருப்பம் இல்லை. சகோதரத்துவத்தை அவன் உணர மறுக்கிறான். இன்றைய மனிதனுக்குச் சமாதானத்தில் வேட்கை இல்லை. அமைதியில் அவனுக்கு நாட்டம் இல்லை. ஐயோ, பாவம்! கையில் விளக்கைப் பிடித்துக் கொண்டே கிணற்றில் விழுகின்றான்.

அறிவியல் வளரத் தொடங்கிய நிலையிலேயே தொழில் நுட்பமும் வளரத் தலைப்பட்டது. அறிவியலை அறிந்து கொள்வது, தொழில் நுட்பத்தைக் காண்பது ஏன்? அறிவியல் எப்படி வளர்ந்தது? மனிதன் கருவிகளைக் கண்ட காலமே தொழில் நுட்பம் தொடங்கிய காலம்! மரங்களி லிருந்து காய்த்தவைகள் விழுகின்றன. பட்டுப்போன குச்சிகள் விழுகின்றன. பட்டுப்போன குச்சிகள் விழுகின்ற வேகத்தில் மண்ணில் குத்திக் கொள்கின்றன. காய்கள் விழுந்த இடத்தில் பள்ளம் விழுகிறது. இதனை ஆராய்ந்த மனிதன் நிலத்தை உழுது பயன்படுத்த முடியும் என்று அரிகின்றான். கலப்பை

உருவாகிறது. மனிதன் கண்ட முதல் அறிவியல் தொழில் நுட்பம் வேளாண்மைதான் என்று எண்ணத் தோன்றுகிறது.

## வேளாண்மை

வேளாண்மைத்துறை அறிவியல் நாளும் வளர்ந்து இன்று அது ஒரு சிறந்த அறிவியல் துறையாக விளங்குகிறது. இன்று நமது நாட்டில் உணவுப் பொருள் பற்றாக்குறை இல்லை. தன்னிறைவு ஏற்பட்டுள்ளது. இந்த நிலையை அடையத் துணையாக இருந்தது வேளாண்மைத்துறை அறிவியலே. நிலத்தின் இயல்பறியும் அறிவியல் வளர்ந்துள்ளது. மண் சோதனை செய்து மண்ணுக்குத் தகுந்த பயிரினம் பயிரிடலாம்; அல்லது நிலத்திற்கு ஏற்ற உரம் முதலியன இட்டுப் பண்படுத்தி நிலத்தின் இயல்பை மாற்றலாம் என்ற தொழில் நுட்பம் கிடைத்துள்ளது. மற்றும் பயிர்ப் பாதுகாப்புமுறைகள் வளர்ந்துள்ளன. குறுகிய காலப் பயிர்கள் இன்னபிற கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. எல்லாவற்றிற்கும் மேலாக வேளாண்மைத் துறையில் இயந்திரங்கள் நிறைய வளர்ந்துள்ளன. பலநூறு ஏக்கர் நிலத்தை இரண்டு மணி நேரத்தில் எளிதில் சாகுபடி செய்யக் கூடிய அளவுக்கு வேளாண்மையியலில் இயந்திரப் புரட்சி வளர்ந்து வந்துள்ளது. வேளாண்மைத்துறை அறிவியல் வளர்ச்சி மக்களுக்காகவே. ஆனால், மக்கள் எவ்வளவு தூரம் புரிந்து கொண்டிருக்கின்றனர்?

## நிலம்

ஐம்பூதங்களில் தலையாயது நிலம்! ஏன்? மானுடத்தின் வாழ்க்கை முழுதும் நிகழ்வது இந்த மண்ணில் தானே! மனிதனுக்கு வேண்டிய உணவைத் தருவது நிலமே. நிலத்தின உயிர்ப்பு நிலை உணரப்படுவதில்லை. இன்று மக்கள் பணத்தை மதிக்கிறார்கள். ஆனால் நிலையான அடிப்படைச் சொத்தாகிய நிலத்தின் மதிப்பைக் குறைத்துவிடுகிறார்கள். சரியானபடி உரமிடாமல் நிலத்தைச்

சுரண்டியே வாழ்கிறார்கள். இதனால் நிலம் பூசாரத்தை இழக்கின்றது. ஒரோவழி உரமிட்டாலும் இரசாயன உரங்கள் – யூரியா போன்றவை உண்மையில் உரங்களே அல்ல. அவை நிலத்தில் பற்றாக்குறை நிலையில் உள்ள உரத்தைப் பயிர் எடுத்துக் கொள்ளத் துணை செய்யும் ஒருவகையான கிரியா ஊக்கியேயாம். நிலத்திற்கு இயற்கை உரமே சாணம், குப்பை கலந்து மட்க வைத்த கம்போஸ்டு உரமே சிறந்த உரம். இந்த கம்போஸ்டு உரத்துடன் யூரியா ஒரு பங்கு கலந்து 48 மணி நேரம் வைத்திருந்து இடலாம். இது உரமேற்றிய உரம். பசுந்தழை உரம் நிறைய இடவேண்டும். இங்ஙனம் நிலத்தின் வளத்தைக் காப்பாற்ற வேண்டும்.

வேளாண்மைத் தொழில் சிறக்க மண் சோதனை செய்து மண்ணின் தரத்தையும் உரத்தின் தேவையையும் அறிதல், நிலத்தைப் பண்படுத்தல், நிலத்திற்கேற்ப பயிர் தேர்வு செய்தல், சுழற்சி முறையில் பயிர் மாற்றம் செய்தல், விதைகளை நேர்த்தி செய்தல், பயிர்ப் பாதுகாப்பு முதலிய துறைகள் உள்ளன. பயிர்ப் பாதுகாப்புத் துறையில் பூச்சிகளை எதிர்த்துப் போராட இன்று ஒட்டுண்ணி என்றும் "உயிர்க் குயிர் பகை" என்றும் சொல்லப் பெறுபவை வந்துவிட்டன. இது ஒரு நல்ல முன்னேற்றம். நிலத்தை வளமாகப் பாதுகாக்காமல் மண் அரிப்புக்கு இரையாக்குகிறார்கள். மண் அரிப்பு என்றால் என்ன? நிலத்தின் மேற்பரப்பில் உள்ள ஒரு முழம் உயரம் படிந்துள்ள மணலே கருத்தாங்கும் ஆற்றலுடையது. இதனை மண்கண்டம் என்று கூறுவர். இந்த மண் தோன்றுவதற்குப் பல நூறாயிரம் ஆண்டுகள் ஆகியுள்ளன. "கல்தோன்றி மண் தோன்றாக் காலம்" என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறும். இந்த மண் கண்டத்தைப் பேணிப் பாதுகாக்க வேண்டும். தன் போக்காகத் தண்ணீர் ஓடுதலால் ஏற்படுவது மண் அரிப்பு. வரன் முறையில்லாமல் நிலத்தில் கால்நடைகள் மேய்ப்பது, புயல், காற்று இவைகளால் மண் அரிப்பு ஏற்படுகிறது. நிலப்

பாத்தியாகப் பிரிக்கப்பெற்று வரப்புக்கள் கட்டப்பெற வேண்டும். நிலத்தில் ஏதாவது மரம், செடி, கொடிகள் இருந்து கொண்டே இருக்கவேண்டும். அப்படியிருந்தால் மண் அரிப்பிலிருந்து நிலத்தை மீட்கலாம்.

நிலத்தில் தண்ணீர் தேங்கக்கூடாது; நிற்கக்கூடாது. "நீர் மறைய நீர் விடு" என்பது பழமொழி. நீர் தேங்கி நின்றால் நிலம் களர் நிலமாக மாறிவிடும். களர் நிலத்திற்கு என்று பயிர்கள் இருந்தாலும் ஏன் களர் நிலமாக வேண்டும்?

நிலத்தின் வளத்தையும் நிலத்தடி நீர் வளத்தையும் மனித வளத்தையும் காப்பாற்றக் கூடிய ஒரே வழி மரங்கள் வளர்த்தலேயாம். நிலங்களின் பூசாரத்தைக் காப்பதற்கு மரங்களிலிருந்து உதிரும் தழைகள் உதவி செய்கின்றன. நிலத்திற்குள் செலுத்தி நிலத்தடி நீர் வளத்தைப் பெருக்கிப் பாதுகாக்கின்றது. சிலர் நினைப்பதுபோல உழுவதால், மரங்கள் நடுவதால் தண்ணீர் வீணாவதில்லை. மாறாக மரங்கள் 10% தான் தண்ணீர் குடிக்கும். மண் குடிப்பதையும் சேர்த்தால் 20% க்கு மேல் போகாது. ஆன்றால் நிலத்தில் தாவரங்கள், மரங்கள் இல்லாது போனால் நிலம் மண் அரிப்புக்கு இரையாகி நிலம் முழுதுமே பாழ்படும். அதுமட்டுமல்ல. பெய்த மழை நீர் 10% முதல் 20% தான் பயிற்களுக்குச் சேரும். மீதி மழை நீரெல்லாம் வீணாகிவிடும். அல்லது ஆவியாகிவிடும். நிலமகள் என்றும் எப்போதும் பசுமைக்கோலத்தில் விளங்கவேண்டும்.

## மரம் வளர்ப்பு

மரம் வளர்ப்பு ஒரு நல்ல விவசாயப் பணி. மரங்கள் பயன்படுவதுபோல வேறு எந்த உயிர்வர்க்கமும் பயன்படுவ தில்லை. புவிக்கோளத்தின் தட்ப வெட்ப நிலைகளைச் சீராகப் பராமரிக்கவும், சுற்றுப்புறச் சூழ்நிலையைப் பாதுகாக்கவும் மரம் வளர்ப்பதே நல்லது. தூசிகளிலிருந்து பாதுகாப்பு, பேரிரைச்சலிலிருந்து பாதுகாப்பு - மரங்கள்

தருகின்றன. மரங்கள் மழையைத் தருகின்றன. இந்தப் புவிக் கோளத்தில் உயிர்ப்புக் காற்று பிராணவாயுவின் அளவுக்கு அடங்கியதாக கரியமில வாயு இருக்க வேண்டும். கரிய மிலவாயு, பிராணவாயுவை விடக் கூடுதலாகிவிட்டால் சுற்றுப்புறச் சூழ்நிலை பாதிக்கிறது. இதனால் மழை பெய்யாது. இன்று என்ன நிகழ்கிறது? நமது நாட்டின் சுற்றுப் புறச் சூழ்நிலையில் காடுகள் அழிக்கப் பெற்றதாலும் மரங்கள் வெட்டப்பட்டதாலும் பிராணவாயுவுக்குத் தட்டுப்பாடு! அதுமட்டுமா? ஆலைகள், தொழிற்சாலைகளிலிருந்து வெளி வரும் புகை முதலியனவும் கரியமில வாயுவின் அளவைக் கூட்டியுள்ளன. இதனால் பெய்யும் மழையின் அளவு குறைந்து வருகிறது. பெய்யும் மழையும் முறையாகப் பெய்வதில்லை. நீண்ட இடைவெளிகளுக்குப் பிறகு பெய்கிறது. அல்லது புயலாக, வெள்ளமாக அமைந்து விடுகிறது. இவற்றையெல்லாம் சீரமைக்க வேண்டும் எனில் மரம் வளர்க்கும் பணியில் அனைவரும் ஈடுபடவேண்டும். வீட்டுக்கு ஒரு மரம் போதாது. நபருக்கு ஒரு மரம் திட்டமிட்டு வளர்க்கவேண்டும். ஊராட்சிகள் வீதி ஓரங்களில் மரங்கள் நடுவதன்மூலம் ஊருக்கு அழகுதரலாம். மக்களுக்குத் தூசி இல்லாத தூய்மையான காற்றுக் கிடைக்கும். பள்ளிகள் எல்லாம் பசுஞ்சோலையாக மாறவேண்டும். நிலமகள் நிர்வாணமாக இல்லாமல் பசுஞ்சோலையை ஆடையாக அணியும் நாளிலேயே, நமது நாடு நாடாவளம் உள்ள நாடாக வளரும்.

## நீர் நிர்வாகம்

"நீரின்றமையாது உலகு" - என்றார் திருவள்ளுவர். தண்ணீருக்கு மூலம் மழையே! இதனைத் திருவள்ளுவர் "வானின்றமையாது ஒழுக்கு" என்று கூறுகிறார். ஆதலால், தண்ணீருக்கு மூலமாக உள்ள மழையைப் போதிய அளவு பெறும் முயற்சி தேவை. பெய்யும் மழைத் தண்ணீரைத் தேக்கி வைத்துப் பயன்படுத்தும் நீர் மேலாண்மை தேவை. பூமியில்

இயற்கையாகத் தோன்றியது நீர். இப்பூமி முக்கால் பாகத்திற்கு மேல் கடல் நீரால் சூழப்பட்டிருந்தாலும் கடல் நீர் பயன்படும் நீர் இல்லை. குடிக்கத் தண்ணீருக்கே பற்றாக்குறை உள்ள நாடு நமது நாடு. நீர் வளம் இல்லாத நாடு என்று கூறமுடியாது. ஆனால் நீர் நிர்வாகம் போதிய அளவு இல்லை.

தண்ணீரை அளவோடு பயன்படுத்தக் கற்றுக்கொள்ள வேண்டும். நிலத்தடி நீரைப் பராமரிக்க வேண்டும். நிலத்தை உழுதல், மரங்கள் நடுதல் மூலம் நிலத்தடி நீரைப் பராமரிக்கலாம். சிலர் நினைப்பதுபோல நிலத்தை உழுவதாலும் மரங்கள் பராமரிக்கப் படுவதாலும் தண்ணீர் ஏரி, குளங்களுக்கு வராது என்பது தவறு. மரங்கள் அவற்றின் வேர்கள் வழியாகத் தேவையான தண்ணீரை எடுத்துக் கொண்டு மீதியை நிலத்திடி நீராகச் சேமிக்க உதவி செய்கின்றன. தண்ணீர் குறைவாகக் குடிக்கும் பயிர்களைத் தேர்வு செய்து பயிர் செய்வது பயனுடையது. எல்லாப் பயிர்களுக்கும் தண்ணீர் அளவுண்டு. அளவுக்கு மேலே பாய்ச்சினாலும் குடிக்காது. அந்தத் தண்ணீர் வீண்தான். தண்ணீரைப் பற்றிய மனப்பான்மை மாறுவது அவசியம். நீர் மேலாண்மை அறிவியல் வளரவேண்டும்.

## காற்று

அடுத்து, காற்று! உயிர்கள் உயிர்ப்புடன் வாழ்வதற்கு முதல் தேவை காற்றே. மனிதன் பிறந்த நாள் முதல் இறக்கும் வரையில் ஓயாது சுவாசிக்கிறான். அவனுடைய முயற்சி யின்றியே சுவாசிக்கிறான். இந்தக் காற்றைத் தூய்மையாகப் பேணவேண்டும். புகை, தூசி முதலியவை காற்றைத் தூய்மைக்கேடு அடையச் செய்கின்றன. தூய்மைக் கேடடைந்த காற்றை மனிதன் விலக்கிச் சுவாசிக்க இயலாது. ஆதலால், காற்றைத் தூய்மையுடையதாகப் பேணவேண்டும். ஆதலால் தூசியில்லாத சாலைகள், தெருக்கள் தேவை, இது

உடனடியான தேவை. ஆனாலும் இந்தியா போன்ற நாட்டில் சாத்தியமல்ல. ஆதலால் தூசி வடிகட்டி என்று பாராட்டப் பெறும் மரங்களை வீதிகளிலும் வீடுகளைச் சுற்றியும் வளர்க்க வேண்டும். புகையில்லா அடுப்புகள் மகஞ்சூனா வந்து விட்டன. திருக்கோயில் கருவறைகளிலும் கூடக் கற்பூரம் கொளுத்துவதை விட நெய் விளக்கேற்றி வழிபடும் வழக்கம் வளர்ந்து வருகிறது. ஆனால், ஆலைக் கழிவுகளும் ஊர்ப்புறக் கழிவுகளும் காற்றைத் தூய்மைக் கேடு செய்வது குறைந்த பாடில்லை. இத்துறையில் மேலும் கவனம் தேவை. குப்பை கூளங்கள், கழிவுகளை உடனுக்குடன் குழிகளில் போட்டு மூடவேண்டும். மக்களும் ஊராட்சிமன்றங்களும் விழிப்புடன் இருக்க வேண்டும். ஆலைகளின் கழிவு காற்றில் கலக்காமல் செய்ய நிறையப் பாதுகாப்பு முறைகள் வந்துவிட்டன. இவற்றைக் கட்டாயம் பயன்படுத்தவேண்டும்.

## கால்நடை

மனிதனின் தோழமை மிக்க உயிர்களில் கால்நடை களும் அடங்கும். மரங்களைப் போலவே கால்நடைகளும் மனித வாழ்க்கைக்குத் துணை செய்வன. ஏன்? நிலம், மரங்கள் இவைகளுக்கு உரமூட்டக்கூடக் கால்நடைகளின் எருக்கள் தேவைப்படுகின்றன. ஆதலால், கால்நடைகள் மனித வாழ்க்கையில் முதலிடம் பெறுகின்றன. மனிதனின் சிறந்த உணவு பால். பசுமாடுகளைத் தரமாகப் பேணி வளர்க்க வேண்டும். பசுவை வணங்கும் வழக்கம் நாட்டில் உள்ளது. ஆனால், முறையாக வளர்ப்பதில்லை. பசு மாடுகள் வளர்ப்பு ஒரு நல்ல தொழில். ஆனால் நமது நாட்டில் இன்னமும் கால்நடைகள் வளர்ப்பு. ஒரு நல்ல தொழிலாக உருக்கொள்ளவில்லை. அன்று பசுவாகிக் கன்று ஈன 12 மாதம் அல்லது 15 மாதம் போதும். ஆனால், நமது நாட்டில் 3 ஆண்டுகள் ஆகின்றன. அதுபோலவே, ஆண்டுக்கு ஒரு கன்று அல்லது 15 மாதத்திற்கு ஒரு கன்று ஈனும். ஆனால் நமது நாட்டில் கறவை மறைவைக் காலம் சராசரி 8 மாதமாக

இருக்கிறது. இது பொருளாதார இழப்பு. செயற்கை முறைகளில் கருத்தரிப்புச் செய்யும் முறை வளர்ந்து வருகிறது. செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்வதிலும் கூட நமது கால்நடைப் பல்கலைக் கழகம் செபடக்ஸ் வடிகட்டுதல் என்ற முறையை ஆய்வு செய்து அறிமுகப் படுத்தியுள்ளது. இது நல்ல பயனுள்ள முறை. ஆடு மாடுகளுக்குச் சுத்தமான நல்ல தண்ணீர் கொடுக்க வேண்டும். இதுபோலத் தேவையான தீவனமும் ஆடு மாடுகளுக்குத் தரவேண்டும். பசு மாட்டுத் தீவனத்தில் பிண்ணாக்கு முதலிடம் பெறுகிறது. செலவும் குறையும்.

அதிக முதலீடும் உழைப்புமின்றி வளர்க்கப்படுவது மீன். மீன் ஒரு சிறந்த உணவு. மீன் வளர்ப்பு தண்ணீரைத் தூய்மையாக வைத்துக் கொள்ள உதவும். கால்நடை வளர்ப்பில் செம்மறி ஆடுகள் வளர்ப்பு ஒரு தொழில். வெள்ளாடுகள் ஆழ்கூள முறையில் வளர்க்கலாம். அப்படியல்லாது வெள்ளாடுகள் வளர்ப்பது விவசாயத்திற்கு உதவி செய்யாது. கால்நடைகளுக்குப் பசும்புல் நிறையத் தேவை. கால்நடை வளர்ப்பு ஒரு வேளாண்மைத்துறை. தொழில். கால்நடை வளர்ப்பில் செல்பாக்ஸ்களும் முறை கடைப்பிடிக்கப் பெறுதல் வேண்டும். மரபு, மரபியல் மாற்றங்கள் மற்றும் உணவு, மருந்து முதலிய துறைகளில் நிறைய ஆய்வுகள் நடந்துள்ளன. ஆய்வுகள் நடந்து கொண்டேயிருக்கின்றன. இந்த ஆய்வின் முடிவுகள் என்று கிராமப்புறங்களின் மாட்டுக் கொட்டில்களுக்கு வருகின்றனவோ அன்றுதான் நாடு வளரும். கால்நடை வளர்ப்பு இந்தியப் பொருளாதாரத்தில் ஒரு முக்கிய இடத்தை வகிக்கிறது. விவசாயிகளுக்குக் கால்நடை வளர்ப்பு தவிர்க்க இயலாதது; கட்டாயத் தொழிலுமாகும்.

## வேதியியல்

வேதியியல் துறையில் பல தொழில்கள் வளர்ந்து வந்துள்ளன. குறிப்பாக மனிதன் படைத்த பலவகைப்

பொருள்களை அழியாமல் பாதுகாக்க வேதியியல் அறிவியல் பயன்படுகிறது. நமது நாட்டில் ஆண்டு ஒன்றுக்கு ஏறத்தாழ ரூபாய் 10,000 கோடி மதிப்புள்ள பொருள்கள் அழிந்து வருகின்றன. இந்த அழிவிலிருந்து நாட்டைக் காக்க வேதியியல் அறிவியல் துறை துணை செய்யும். உலோகப் பொருள்கள், குறிப்பாக இரும்பு அரிமானத்திற்கு ஆளாகாமல் தடுக்கும் முறை உள்ளது. அதுபோலவே அதிவேகக் கடத்திகள் பற்றிய ஆய்வு முடிவுகள். மின் தடைகள் அளவு குறைகின்றன. இயந்திரங்களை வேகமாக இயக்குவதால் காலமும் ஆற்றலும் மிச்சப்படுகின்றன.

## பொருளியல்

மனித வாழ்க்கையின் இன்றியமையாத் தேவை பொருள். "பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்பது திருக்குறள். திருக்குறள் குறிப்பிடும் பொருள், மனித வாழ்வின் இயக்கத்திற்கு இன்றியமையாத் தேவையாகிய உண்பனவும் தின்பனவும் உடுத்துவனவும் ஆகிய பண்டங்களே. உண்மையில் இவையே பொருள்கள். இந்தப் பொருள்களில் சில இயற்கையில் தோன்றுவன. மற்றபடி பெரும்பாலும் மனித முயற்சியில் உற்பத்திச் செய்யப் படுவனவே பொருள்கள். மனிதனின் நுகர்வுக்குரியன தரும் தொழில்களே விவசாயம், கால்நடை வளர்ப்பு, தொழிற்சாலைகள் முதலியன. மனிதனின் வாழ்க்கை முழுதும் பொருளைச் சுற்றியே வட்டமிடுகின்றது. மனிதனின் அகநிலை, புறநிலைப் பண்புகள் கூடப் பொருளைச் சார்ந்தவையேயாம். பொருட் சார்பிலேதான் சமய நெறிகளும்கூட ஆக்கம் பெறுகின்றன.

உடல் நல்ல வண்ணம் வளர வேண்டும். பாதுகாக்கப் பெறுதல் வேண்டும். உயிர் உடலைச் சார்ந்துதான் வாழ்கிறது. உடலும் உயிரும் ஒன்றையொன்று தழுவியன. நல்ல உடலில் நல்ல ஆன்மா! நல்ல ஆன்மாவினிடத்தில் நல்ல மனம்! ஆதலால், உடல், உடலியல் உடலியக்கத்திற்குத் தேவையான

பொருள்கள் பற்றிய அறிவியல் தேவை. திருமூலர் உடன் பாட்டாலும் எதிர்மறையாலும் உடம்பின் நலன் பற்றிப் பேசுகின்றார்.

> "உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே!"
> "உடம்பார் அழியின் உயிரார் அழிவார்"

என்பார் திருமூலர். உடம்பின் உழைப்புத் திறனை வளர்த்துக் கொள்ளுதல் மிகவும் தேவை. உடம்பை நோயிலிருந்து பாதுகாத்துக் கொள்ளும் அறிவு தேவை. நல்ல அறிவியல் சார்ந்த உழைப்பு தேவை. உடலின் வளர்ச்சி, உயிரின் ஆக்கம் உழைப்பில் இருக்கின்றன. உலகை இயக்குவது உழைப்பு. குறைந்த நேரத்தில் குறைந்த சக்தியைச் செலவிட்டு உழைக்கவும் உழைப்பின் பயனைக் காணவும் மனிதத்தின் உழைப்பை எளிமைப்படுத்தவும் அரிய கருவிகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. உடல் தேவை, உழைப்பின் காலத்தைச் சிக்கனப்படுத்தி உயிர்த் தேவையாகிய கற்றல், கேட்டல், நட்பாடல், பிரார்த்தனை போன்றவைகளில் பயன்படுத்த ஆன்மாவை வளர்த்துக் கொள்ளவேண்டும். ஏன்? மானுடம் உயர்நிலையை உன்னத நிலையை அடையவேண்டும்.

உழைப்பு, மானுடம் வாழ்க்கைப் போக்கில் கண்ட ஓர் அரிய பண்பு. உலகத்தின் உயிர்ப்பும் உழைப்பேயாம். அந்த உழைப்பும் அறிவியல் சார்ந்த உழைப்பாக உற்பத்தி சார்ந்த உழைப்பாக அமைந்தால் நல்லது. பணம் படைக்கப்பட்ட பின் பணத்திலிருந்து பணம் செய்யும்முறை வளர்ந்து வந்துள்ளது; வளர்ந்து வருகிறது. இது நெறியுமன்று; முறையுமன்று. இன்று உற்பத்தி சாராத உழைப்பில் செல்வம் திரட்டுவதுபோல உற்பத்தி சார்ந்த உழைப்பில் செல்வம் திரட்ட இயலவில்லை. இது ஒரு பெரிய குறை.

இன்று நமது நாட்டில் இருப்பது பண மதிப்பீட்டுச் சமுதாயம். இதை மனித மதிப்பீட்டுச் சமுதாயமாக மாற்றவேண்டும்; வளர்க்க வேண்டும். பணத்திலிருந்து பணம்

சம்பாதிக்கும் முறை வளர்ந்து பரிசுச் சீட்டில் வந்து நிற்கிறது. இன்று அரசுகளே பரிசுச் சீட்டுகள் விற்கும் நிலைக்கு வந்துள்ளமை வேதனைக்குரிய செய்தி. பொருள் ஈட்டுதலுக் குரிய புதிய புதிய வாயில்களைக் கண்டாகவேண்டும். பொருளை ஈட்டும் துறைகள் எண்ணியவாக நாளும் பெருக வேண்டும்; பொருள் ஈட்டவேண்டும். ஈட்டும் பொருளைச் சேமிக்க வேண்டும். சேமித்த பொருளை நலஞ்சார்ந்த வாழ்க்கைக்காகத் திட்டமிட்டுச் செலவழிக்க வேண்டும்.

பொருள் ஈட்டல் - செலவிடுதலில் திட்டமிடும் அறிவு தேவை. "திட்டமிலாதான் வாழ்க்கை தேடுவாரற்றுப் போகும்" என்பது பழமொழி. பொருள் ஈட்டுவதற்குப் பொருள் உற்பத்திக் களங்கள், பொருள் உற்பத்திக்குத் துணை செய்யும். கருவிகள், மனித சக்தி இவைகளுக்கு நமது நாட்டில் பற்றாக்குறை இல்லை. ஆனால், இவைகளைப் பயன்படுத்தி நாம் கால்பகுதிகூட இன்னமும் செல்வத்தை ஆக்கவில்லை. உடலால் உழைக்கும் குணம் வளரவில்லை. எழுத்தில், பொருளில் 'போலி' போல உழைப்பிலும் போலிகள் வந்துள்ளன. இதனாலேயே நாடு வளரும் நாடாகவே இருந்து வருகிறது. பொருள்கள் செய்து குவித்தால் மட்டும் போதாது. உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் சமச்சீர் விநியோகம் செய்யப்பட வேண்டும். நமது நாட்டில் செல்வ விநியோக முறையில் ஏராளமான சீர்கேடுகள்! சுரண்டும் சமுதாய அமைப்பே கால்கொண்டிருக்கிறது. உழைப்புக்குத் தகுந்த ஊதியத்திற்கே போராட வேண்டியதிருக்கிறது. உழைப்பு, விலைப்பண்டம் ஆகிவிட்டது. சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் மிகுதி. பிறர் பங்கை, உழைப்பாளிகளின் பங்கைத் திருடி வாழ்பவர்கள் இன்று சமுதாயத்தில் வாழ்கின்றனர். உயர்நிலையில் வாழ்கின்றனர். ஆட்சியே அவர்களுக்காகத் தானே நடக்கிறது. இந்த அவலம் நீடிக்கும் வரையில் எப்படி எல்லாரும் இன்புற்று வாழமுடியும்? அதோடு ஊழ் - தலைவிதி தொடர்பான நம்பிக்கை வேறு, வாழ்க்கையின்

முன்னேற்றத்திற்குத் தடை. மேலும் மனிதத் தராதரம் என்ற பெயரில் அமைந்துள்ள பிரிவினைகள்; மனிதர்கள், மனிதர்களுடன் போராடும் நிலை உருவாகிப் பொருளியல் சார்ந்த முயற்சியினை முடக்கிவிட்டது. விட்டது. ஆதலால், நமது நாட்டில் பொருளியல் வளர்ச்சி வேகம் உரியவாறு இல்லை. தனிமை உணர்வின் காரணமாகக் கூட்டு உழைப்புமுறை முறையாக வரவேற்கப்படவுமில்லை. ஒரோவழி தென்பட்டாலும் கூட்டு வாழ்க்கையில் காணப்படும் ஆர்வம் குறைவே. இதனால் நிலங்கள் துண்டாடப்பட்டுவிட்டன. இரண்டு ஏக்கருக்குக் குறைவாக உரிமை பெற்றுள்ள விவசாயிகள் பல ஆயிரக் கணக்கில் உள்ளனர். இந்த இரண்டு ஏக்கரும் கூட சிதறுண்டு கிடக்கும் நிலை. இந்த விவசாயம் கட்டுபடி ஆகுமா? ஆலோசனை செய்க. கால்நடை வளர்ப்பிலும் பொருள் புழக்கம் போலத் தோற்றம். உண்மையில் பொருளாதார இழப்பே. தரமான கால்நடைகள் வளர்ப்பு அறிமுகப்படுத்தப்படுதல் வேண்டும். இங்ஙனம் பொருள் சார்ந்த அறிவியல் வளர்ந்தால் மக்கள் வளர்வர்; நாடு வளரும்;

## மருத்துவம் – சுகாதாரம்

நோயற்ற வாழ்வு தேவை. இதற்குச் சுற்றுப்புறச் சூழ்நிலைப் பாதுகாப்புத் தேவை. சுற்றுப்புறச் சூழ்நிலைப் பாதுகாப்புக்குச் சுகாதாரம் தேவை. சுகாதார வசதி பெருகினால் நோய்கள் அணுகா. மருத்துவ மனைகளின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியும்; கட்டுப்படுத்தலாம்.

இன்று நமது நாட்டில் மருத்துவமனைகள் பெருகி வளர்வதைப் போல சுகாதார வசதிகள் வளரவில்லை. பாதுகாக்கப்பெற்ற குடி தண்ணீர் இன்றும் பலகோடி மக்களுக்குக் கிடைக்கவில்லை. இன்று தூசியற்ற சாலைகள் இல்லை. கழிப்பறை வசதிகள் போதாமை. நல்ல சத்துணவு உண்ண வழியில்லை. இதனால் நாளும் நோய்கள் பெருகி

வளர்கின்றன. இவையெல்லாம் முறையாக அமையும் நாள்வரை நாட்டு மக்கள் காத்திருக்கப் போகிறார்களா? அல்லது தாங்களே செய்துகொண்டு நலமுடன் வாழப் போகிறார்களா?

எந்தத் தண்ணீரையும் கொதிக்க வைத்து வடிகட்டிக் குடித்தால் நல்லது. வீடுகளைச் சுற்றியும் வீதிகளைச் சுற்றியும் நல்ல மரங்கள் வளர்த்தால் சுத்தமான காற்றும் கிடைக்கும்; தூசி வடிக்கட்டியாகவும் பயன்படும். நான்கு வேப்ப மரங்கள் ஒரு குளிர் சாதனப் பெட்டிக்குச் சமம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். மரங்கள் பலவகையிலும் பயன்படக்கூடியவை. நல்ல காற்றோட்டமும் கதிரொளியும் புகுதலுக்குரியவாறு வீடுகள் கட்டப்பெறுதல் வேண்டும். வீடுகளுக்கிடையில் போதிய இடைவெளி வேண்டும். கழிவு நீர்களை அப்புறப் படுத்தி உறிஞ்சு தொட்டிகள் கட்டி அவற்றில் விட வேண்டும். கழிப்பிட வசதிகள் இல்லாத வீடுகள் கூடாது. அப்படிக் கட்ட வசதியில்லையென்றால் வார்தாமுறைக் கழிப்பிட மாவது அமைத்துக் கொள்ள வேண்டும். கழிவுகளை, குழிகளில் போட்டு மூடினால் பாதுகாப்பு; மேலும் உரமும் கிடைக்கும்.

நன்றாகச் சாப்பிடக் கற்றுக் கொள்ளவேண்டும். நமது நாட்டில் பலருக்குச் சாப்பிடத் தெரியாது. சுவைக்காக மட்டுமே சாப்பிடுகிறவர்கள் பலர். உடல் ஓர் இயந்திரம். இந்த இயந்திரத்துக்குத் தேவையான உணவு தரவேண்டும். உண்ணும்பொழுது முதலில் உடலுக்குத் தேவையான உணவுகளை உண்ணவேண்டும். அறிவியல் முறைப்படியும், அறநெறிப்படியும் எண்ணினால் புலால் உணவு அவசிய மில்லை என்பதே முடிவு. தாவரவகை உணவே நல்லது. தாவர வகை உணவு நல்ல உடல் நலத்தையும் அமைதியான வாழ்க்கையையும் தரும். காய்களும் கனிகளும் சிறந்த உணவு. உணவில் அரிசியின் அளவைக் குறித்து, காய்களையும் அதிகமாகக் கொள்வது நல்லது. ஒரே அரிசி உணவு

இல்லாமல் கோதுமை மற்றும் தானிய வகைகளையும் சுழற்சிமுறையில் சேர்த்துக் கொள்வது நல்லது. அதுபோலவே, பருப்பு வகைகளை உணவில் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

உடம்பு, உழைப்புக்கு உரிய சாதனம். பயன்படுத்தப் பெறாத உடம்பு நோய்க்கு இரையாதல் இயற்கை. கதிரொளியில் தோய்தலும் காற்றில் தோய்தலும் உடலுக்கு நலம் தரும்; ஆற்றல் கூட்டும்; ஆயுளை வளர்க்கும்.

எல்லாவற்றிற்கும் மேலாக உடல் நலத்திற்கு ஆன்ம நலம் தேவை: ஆன்ம நலத்தினை அரண் செய்ய உடல் நலம் தேவை. ஆன்ம நலத்தின் விளைவு மன நலம். மன நலத்திற்கு அரண் நல்ல சமுதாய அமைப்பும் அறிவின் தெளிவும் ஆகும்.

## சமூகவியல்

மனிதன் ஒரு சமூகப் பிராணி. மனிதன் கூடி வாழப் பிறந்தவன். மனிதன் குடும்பம், சமூகம், சமுதாயம், தேசிய இனம் என்ற பரிணாம வளர்ச்சியில் வளர்ந்து இணைந்து ஒன்றுபட்டு வாழப்பிறந்தவன். ஆனால் நடைமுறையில் மனிதன் தோன்றிய காலந்தொட்டு நடைபெறவில்லை. நன்மையும் பலனும் இருக்கிறவரையில் சேர்ந்திருக்கிறான். அது கிடைக்காது என்றவுடன் பிரிந்து பகை கொள்கிறான் மோதுகிறான். அன்பு, நன்றி என்ற சொற்கள் அகராதியில் மட்டும் உள்ள. சொற்களாக மாறிவிட்டன. ஏன்? அரசியல் விஞ்ஞானமே மனித உறவுகளின் எல்லைகளை நிர்ணயித்து மோதல்களைத் தவிர்த்து மனித குலத்தை ஒன்றுபட்டு நின்று வளரவும் வாழவும் தான் தோன்றியது. இன்று அந்த அறிவியல் சார்ந்த அரசியலை எங்கே காணமுடிகிறது? அரசியல் கட்சிகள் இன்று இழிநிலைக்கு வந்து விட்டன. அரசியல் கட்சிகள் சமுதாயத்தை உடைத்திருப்பதுபோல வேறு எதுவும் உடைக்கவில்லை. கட்சிகள் - அவரவர் கட்சிகள் என்ற சிற்றெல்லைக்குள்ளேயே விளையாடுகின்றன. அவற்றுக்குள்ளே உட் குழுக்கள் எண்ணற்றவை. திருக்குறள்

கூறிய "பல் குழு" இன்றைய அரசியல் கட்சிகளிடத்தில் தான் உள்ளன. மக்கள் மனம் இறுக்கத்தில் சிக்கிக் கொண்டதால் அதற்கு நேர் எதிரில் செல்கின்றன. இன்று பிரச்சினைகளை வைத்தே கட்சிகள் வளர ஆசைப்படுகின்றன; அதனால் பிரச்சினைகளைத் தேடி அலைகிறார்கள்.

மனித குலம் நல் வாழ்வு வாழ இன்னும் நெடியதூரம் செல்ல வேண்டியிருக்கிறது. நமது நாட்டில் முன்னேற்றம் என்ற திசையில். நடந்து கொண்டிருக்கிறோம். ஆனால் நடை மிக மிக மெது. மற்ற நாடுகளை நோக்க நாம் ஒரு நூறு ஆண்டுகள் பின்னடையில் இருக்கின்றோம். இது உறுதி. ஏன்? ஒரு மூலப்பொருள் கூட இல்லாத ஜப்பான் நாடு இன்று உலகச் சந்தையைப் பிடித்தாள்கிறது. அமெரிக்க நாட்டுச் சந்தைகூட இன்று ஜப்பான் வசம் இருக்கிறது. உலகப் போரில் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்ட ஜெர்மனி இன்று திரும்ப ஆலைகளையும் தொழிற்சாலைகளையும் கட்டி, மாட மாளிகை கூடகோபுரத்துடன் விளங்குகிறது. எப்படி? எதனால்? அந்த நாடுகளின் மக்கள் வாழ்க்கையில் ஒற்றுமை இருக்கிறது. கூட்டுறவு வளர்ந்திருக்கிறது. கடின உழைப்பு இருக்கிறது. வேலை நிறுத்தங்கள் கூட உற்பத்திக்கும் வேலைக்கும் இடையூறாக நடப்பதில்லை. நமது நாட்டிலோ நாட்டுப் பிரிவினைக் கிளர்ச்சிகள்! கடின உழைப்பு என்பது மருந்துக்குக்கூட இல்லை. வேலை நிறுத்தம் செய்யும் பழக்கத்தின் காரணமாக ஏதாவது காரணத்தைத் தேடி அலைந்து கொண்டிருப்பவர்கள் நம்முடைய நாட்டினர். ஆம்! இங்கு வேலை நிறுத்த நாட்களுக்கும் ஊதியம் உண்டு. நமக்கு நமது நாட்டைப் பற்றிய கவலை. சமூகத்தைப் பற்றிய நினைப்பு இல்லை. நாம் ஒரு சமுதாயமல்ல. ஒரு கூட்டம். அவ்வளவு தான். "ஒருவருக்காக எல்லாரும்" "எல்லாருக்காகவும் ஒருவர்" என்ற சித்தாந்தத்தைப் புரிந்துகொண்டு வாழத்தலைப் பட்டால் எல்லாரும் வாழலாம்; இன்புற்று வாழலாம். ஆனால், நமது நினைப்பு என்ன? "எல்லாரும் நமக்காகவே

இருக்கிறார்கள்” என்று நினைக்கிறார்கள். இதனால் சமூக உறவுகள் பாதிக்கின்றன.. ஒருவரோடு ஒருவர் இணைந்து நல்ல உறவுடன் வாழ்வது ஓர் அறிவியல் சார்ந்த முயற்சி. சாதனை என்று கூடச் சொல்லலாம். இங்ஙனம் ஊர் தோறும் ஓரிருவர் வாழ்ந்தால் கூட அற்புதங்கள் நிகழ்த்தலாம்.

அன்பு, உறவு, நம்பிக்கை, நல்லெண்ணெம் முதலியன விலைச் சரக்குகளல்ல. மனிதன் தன்னிடத்தில் வளர்த்துக் கொள்ளக்கூடிய பண்புகள். இவைகள் வளர்வதற்குத் தடையாக அமைபவை சுயநலம். சொத்து! சொத்து இன்று மக்களைப் பேயாட்டம் ஆடவைத்துள்ளது. சொத்து ஒரு கருவி என்ற அணுகுமுறை இல்லாமல் “சொத்தே வாழ்வு” என்ற கொள்கை உருப்பெற்று விட்டதால் சொத்தின் காரணமாக உடன்பிறந்தாரும் கூட பகைவர்களாகி விடுகின்றனர். ஈன்ற தாய்கூட அந்நியப்பட்டு நிற்கும் நிலை! தனி உடைமைச் சமுதாயம். பண மதிப்பீட்டுச் சமுதாயம் நிலவும் வரை இந்த மனிதக் கூட்டத்தின் போக்கு மாறாது. கூட்டுறவு சமுதாயம் தோன்றுதல் வேண்டும். உத்தரவாதம் தேவை.

சமூகவியல் அறிவு, நமது மக்களுக்கு மிகுதியும் தேவை. ஏன்? நமது மக்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகச் சாதிப் பிரிவினைகளாலும் மதப்பிரிவினைகளாலும் பிரிந்து கலகம் செய்துகொண்டு வாழ்ந்து வந்திருக்கிறார்கள்; வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இன்றைய மானுட உலகம் புதிய அறிவியல் உலகத்தில் வாழ்கிறது; வளர்கிறது. அறிவியல் உலகம் நாடுகளைக் கடந்து, கடல்களைக் கடந்து, மலை களைக் கடந்து, புவியுருண்டையை இணைத்து இன்று வெற்றி பெற்றுள்ளது. இன்று எந்தச் சிக்கலானாலும் ‘புவி’ யைச் சார்ந்த சிக்கல்தான் ஆனால், நாட்டு மக்களோ பழைய பானைக்குள் தலையை விட்டுக் கொண்டு தத்துவங்கள் பேசுகின்றனர். இன்று இந்தியா புறவுலக வளர்ச்சியில் 20ஆம் நூற்றாண்டில்தான் இருக்கிறது. ஆனால், இந்தியனின் -

தமிழனின் மூளையும் உள்ளமும் காட்டுமிராண்டித் தனமாக வாழ்ந்த யுகத்திலேயே இருக்கிறது. இந்தியன் மாறவில்லை. தமிழன் மாறவில்லை. ஆதலால், இந்தியர்கள் தமிழர்கள் புத்தம்புதிய உள்ளம் பெற்று, சமூக மாந்தர்களாக விளங்க வேண்டும். எந்த நாட்டில் சமூக மனச்சாட்சி, சமூக உணர்வு, சமூக ஒழுங்கியல், சமூக ஒழுக்கவியல் சிறந்த முறையில் வளர்ந்து சிறந்த சமுதாயம் வடிவம் பெறுகிறதோ அந்த நாடுதான் வளரமுடியும்; வாழமுடியும். இதற்கு இன்று ஜப்பானை உதாரணமாகப் பின்பற்றலாம். ஆயினும் உலகின் பெரும்பான்மையான நாடுகளில் - ஆப்பிரிக்க நாடுகள், மத்திய கிழக்கு நாடுகளைத் தவிர மற்ற நாடுகளிலெல்லாம் சமூகவியல் சிறப்பாக இருக்கிறது. அந் நாடுகளின் மக்கள் நாட்டுக்காக உழைக்கிறார்கள்; நாட்டுக்காக வாழ்கிறார்கள். நமது நாட்டிலோ நாட்டையே திருடி வீட்டுக்குக் கொண்டு போவதே மிகுதி. இந்த நாட்டில் எப்படி "சமூகம்" உருவாகும்?

## பழகும் பாங்கியல்

மனிதன் மதிக்கப்படுதல் வேண்டும். அங்கீகரிக்கப் படுதல் வேண்டும். மனிதன் அங்கீகரிக்கப்படாதவரை சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வு காண இயலாது. மனிதனை அங்கீகாரம் செய்ய, பழகும் உறவுகளே துணை செய்ய இயலும். ஒருவரோடு ஒருவர் பழகி வெற்றிகொள்ள அறிவியல் அறிவு தேவை. ஒவ்வொருவருக்கும் பலமும் உண்டு. பலவீனமும் உண்டு. குறையும் உண்டு; நிறையும் உண்டு. இவற்றில் பலவீனங்களையும், குறைகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் பலத்தையும் நிறையையும் எடுத்துக் கொண்டு பாராட்டி மகிழ்ந்து உறவு கொண்டாடி வளர வேண்டும்; வாழவேண்டும். பலவீனத்தையும் குறையையும் மருத்துவப் பாங்கில் அணுகி அகற்ற வேண்டும். ஒருவரோடு பழகுதலும் உறவு கொள்ளுதலும் ஒரு கலை;

பண்பு. "பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்" என்றது கலித்தொகை. ஆங்கில மொழியில் பழகும் பாங்கியல் சார்ந்த நூல்கள் நிறைய வந்துள்ளன. நமது மொழியில் அத்தகைய நூல்கள் மிகுதியாக வரவில்லை. நமக்கு ஒருவரோடு ஒருவர் பழகுவது, உறவை வளர்த்துக் கொள்வது என்பது இன்னமும் கடமையாகக் கருதப்பெறவில்லை. ஒருவர் ஒருவரைக் காணவும் கலந்து பேசிப் பழகவும் பணம் கேட்பார்கள் போலத் தெரிகிறது. ஏதாவது ஓர் அவசியம் பிடர் பிடித்துத் தள்ளினால் ஒழிய, காண்பதில்லை. இது வளரும் வாழ்க்கைக்குத் துணை செய்யாது. ஒருவரை ஒருவர் காண்பதும் பழகுவதும் கலந்து பேசுவதும் வாழ்க்கையின் வளர்ச்சிக்குக் கட்டாயத் தேவை. கேட்காத கடன் வராது. பார்க்காத பயிர் வளராது. பழகாத நட்பு வளராது என்பது ஆன்றோர் வாக்கு. விபத்துக்கள் நிகழும் பொழுது காணப் பெறும் இனந்தெரியாது எழும் உணர்ச்சி ஏன் நன்மை செய்ய உருவாவதில்லை? சமாதானம் ஏன் தோன்றவில்லை? "யாரொடும் பகை கொள்ளலன் என்றபின் போரொடுங்கும் புகழொடுங்காது" என்ற கம்பன் கண்ட மனித வாழ்வின் இலக்கணம் ஏன் இலக்கியமாகவில்லை? மனிதர்கள் சமூக வாழ்க்கை வாழத் தலைப்படவேண்டும். அப்போதுதான் அவனுடைய பிரச்சனைகளுக்குத் தீர்வு காணமுடியும். இது உறுதி. இல்லையெனில் வெந்ததைத் தின்று கலகம் செய்து வெற்று மாந்தராகச் சாகவேண்டியதுதான்.

ஆம் கூடி வாழ்வது பலம்! மனிதர்கள் கூடி வாழ்வதற்குரிய வாயில்களே அதிகம்! வாய்ப்புக்களும் பலப்பல. இயற்கையாக அமைந்த உடல் அமைப்பு, தொழில் அமைவுகள் பால் வகைப் பிரிவுகள் கூடி வாழ்தலின் அவசியத்தை உணர்த்துகின்றன. கண்கள் மற்றவர்களைப் பார்த்துப் பழகும் அமைப்பிலேயே அமைந்துள்ளன. செவிகளும் மற்றவர்கள் கூறுவதைக் கேட்கவேயாம்! உலக மாந்தரைக் கண்டு அவர்தம் வாய்ச் சொல் கேட்டுப் பழகும்

அமைப்பே உடல் அமைப்பு. வாய் கூடப் பிறருடன் பேசத்தான். நமக்கு நாமே பேசிக் கொண்டால் ஐயப்படு வார்கள். ஆனால் நடைமுறையில் நமக்கு மற்றவர்களுடன் உள்ள உறவு தளர்கிறது.

ஒருவர் மற்றொருவரிடம் பழகி வாழ்க்கையில் வெற்றி பெறவேண்டுமெனில் எதிர்பார்ப்புக்கள் இல்லாத அன்பு காட்டவேண்டும். நோன்பு என்றால் என்ன? இன்று உண்ணாது, உறங்காது வாழ்தலே நோன்பு என்று கருது கின்றனர். இல்லை, இல்லை!

"தனக்கென முயலா நோன்றான்
பிறர்க்கென முயலுநர்"

என்று புறநானூறு கூறும். பிறர்க்கென முயன்று உதவி செய்தலே நோன்பு. இதனை பாரதி

"ஊருக்கு உழைத்திடல் யோகம்"

என்றான். ஆதலால் உறவு வளர வேண்டுமாயின் தன் முனைப்பும் தற்சார்பும் இன்றி வாழ்தல் வேண்டும். இதுதான் வாழும் முறைமை. பலருடன் கூடி வாழும் வாழ்க்கையில் ஏமாற்றங்களும் இழப்புக்களும் இருந்தால்கூட ஏற்றுக் கொண்டு அன்பு காட்டவேண்டும்; உறவு பேணவேண்டும்?

நம்முடன் பழகுபவரின் குணநலங்களையும் புரிந்து கொள்ள வேண்டும். நட்பு, உறவு, நீதி, சட்டம், பக்தி முதலியன கூடக் குறுக்கிடக்கூடாது. உறவுக்கு அடுத்த இடத்தில்தான் இவையெல்லாம்! ஏன்? உறவுகள் நல்ல வண்ணம் பராமரிக்கப் பெற்றால்தானே நீதியை எடுத்துக் கூறமுடியும்! அவரும் கேட்பார். உறவு கெட்டுப்போன நிலையில் சொன்னால் முதலில், சொல்பவர் மீது சந்தேகம்! ஆதலால், சொல்லும் நீதியிலும் ஐயப்பாடேதோன்றும்! அதனால்தானே சிவபெருமான் சுந்தரர் செய்த துரிசுகளுக்கு உடந்தையாக இருந்தார்.

நட்பும், உறவும் கலந்த வாழ்க்கையின் ஊடே வேறு எதுவும் - பணம், பரிசு, பதவி, புகழ் ஆகிய எதுவுமே தலை காட்ட அனுமதிக்கக்கூடாது. பழக்கம், பழக்கத்திற்காகவே, உறவு, உறவுக்காகவே! வேறு எதற்காகவும் அல்ல. ஏன்? மற்றவை நட்புறவைத் தொடர்ந்து வரக்கூடியவை. வாழ்க்கையின் முதல் அன்பு, நட்பு, உறவு என்பதறிக. ஒவ்வொரு மனிதனுக்கும் குணங்கள் மாறுபடும். மாறுபட்ட குணங்களை அங்கீகரித்துப் பழகும் பாங்கிருந்தால்தான் நட்பு வளரும். உறவில் ஐயப்பாடு தலைகாட்டக்கூடாது. இழப்பைவிட ஐயப்பாடு - சந்தேகம் கொடிது, ஆதலால் நட்புறவுக்கு நம்பிக்கை அடிப்படை. கர்ணன், துரியோதனன் மனைவி விளையாடும் காட்சியை வில்லிப்புத்தூரார் எடுத்துக் காட்டுவது உணர்க. சந்தேகம் ஒரு தீமை. சந்தேகம் எந்த ஒரு நன்மையும் தராது. பாதுகாக்கவும் செய்யாது. ஐயம் வேறு; ஆய்வு வேறு. சிலர் ஆய்வையே ஐயம் என்று கருதுகிறார்கள். இது பிழை. ஆய்வு, வளர்ச்சியின்பாற்பட்டது.

நல்லெண்ணம் வளர வேண்டும். நல்லெண்ணங் களாலேயே நட்பு உரம் பெறும். வாழ்க்கை ஆக்கம் பெறும். கெட்டவர்களுக்கு நல்லனவும் தீயனவாம். தீயனவும் நல்லனவாம். அதாவது நல்லது சொன்னால் - செய்தால்கூட நம்பமாட்டார்கள். இதில் ஏதோ சூதிருக்கிறது என்பர். இதற்குக் காரணம் பரஸ்பர நம்பிக்கையும் நல்லெண்ணமும் இல்லை என்பது தான். நம்பினார் கெடுவதில்லை. மனிதன் நம்பிக்கையோடும் நல்லெண்ணத்தோடும் வாழ்ந்தால் எவராலும் எந்தக் கேடும் செய்ய இயலாது. பாதிப்புக்களும் ஏற்படாது.

நட்புறவுகளுக்கு அன்பு, நம்பிக்கை, நல்லெண்ணம் இவற்றைத் தொடர்ந்து மண்ணின் பண்பும், மறக்கும் பண்பும் தேவை. “நன்றல்லது அன்றே மறப்பது நன்று” என்று திருக்குறள் கூறியது. மன்னித்தல் என்பது அருட்பண்பு. மன்னிக்கும் பண்புக்கு இணை இந்த உலகில் இல்லை. “அறியாமல்

செய்கிறார்கள் மன்னித்து விடுக” என்ற ஏசுவின் பிரார்த் தனையை ஓர்க. மறத்தல் நிகழ்ந்தால்தான் மன்னிப்புக்குப் பொருள் உண்டு, பயன் உண்டு. என்று இப்பண்புகள் எல்லாம் நினைத்து மகிழக்கூடியவையாகி விட்டன என்று நம் மக்கள் வாழ்க்கையில் இடம் பெறும்?

## அரசியல்

இந்த நூற்றாண்டில் ஓர் அறிவியல் பற்றிப் பேசாது விட்டால் சுற்றுத் துறைபோய அறிஞருலகம் மன்னிக்காது. அது எந்த அறிவியல்? அரசியல் என்பது ஓர் அறிவியலேயாம். நமது மக்களில் பலருக்கு இந்த அறிவியல் இல்லை. இன்று நாம் காண்பது கட்சிகள்! கொடிகள்! தலைவரைப் புகழ்தல்! கட்சிக்காரரே சுற்றம்! நமது நாட்டு மக்களோ தேர்தலில் வாக்களிப்பதை ஒரு தீராக் கடமையாகச் செய்து முடிக்கின்றனர். அரசியல் அறிவு இல்லாது போனாலும் மக்கள், கட்சிகளின் போக்கில் விருப்பு வெறுப்புக்களால் பாதிக்கப்படுகிறார்கள் என்பது தேர்தல் முடிவுகளில் புலனாகிறது. விருப்பு - வெறுப்புக்கள் மட்டுமே அவற்றின்பாற்பட்ட உணர்ச்சிகள் மட்டுமே நிரந்தரத் தீர்வைத் தந்துவிடமுடியாது. எல்லாருக்கும் எல்லாம் கிடைக்கக்கூடிய வகையில் மக்களாட்சி அமையத்தக்க வகையில் உள்ள கொள்கை, கோட்பாடு உடையவர்களை மக்கள் ஆதரித்து ஆட்சியில் அமர்த்த வேண்டும். ஆட்சியின் திட்டங்கள், செயற்பாடுகள் அவற்றில் உள்ள குற்றங்குறைகள் முதலியவற்றை மக்கள் கூர்ந்து கவனித்து விமர்சனம் செய்யும் அறிவைப் பெற்றால்தான் நல்ல அரசு அமையும். மனிதன் பயமின்றிச் சுதந்திரமாகப் பேசவும், எழுதவும், வாழவும் வாய்ப்பு வேண்டும்!

மனிதகுலம் பல நூறாயிரம் ஆண்டுகள் வாழ்ந்த பிறகே தங்களுக்கிடையில் இருந்த பிரச்சனைகளுக்குத் தீர்வுகாண அரசியலைக் கண்டனர். அரசியல் மனித உறவுகள், உரிமை

களின் எல்லைகளை நிர்ணயிப்பது, மக்கள் தங்களைத் தாங்களே மேலாண்மை செய்ய அரசைக் கண்டனர். காலப் போக்கில் அரசைக் கண்டனர். காலப்போக்கில் அரசியல் பலவாகத் தோன்றியது. இன்று பரவலாக இருக்கும் அரசு களை முடியரசு, குடியரசு என்பர். முடியரசு மன்னராட்சி. மக்கள் முடியாட்சியுடன் போராடி அதனை அகற்றிக் குடியரசு கண்டனர். இன்று தரமான நலம் பயக்கும் குடியரசு விரல் விட்டு எண்ணத்தக்கவை சிலவேயாம். குடியரசில் வாக்காளர்கள் தரம் கூடினால்தான் குடியரசு சிறப்பாக அமையும். சில சமயங்களில் குடியரசு, முடியரசைவிட மோசமாகப் போய்விடுவதைக் கண்டிருக்கிறோம்.

நமது நாட்டுக் குடியரசு வளரவேண்டும். மேலும் வளர வேண்டும். தேர்தலில் ஆதிக்கம் வகிக்கும் பணம், சாதி, மதம் இவைகளை அறவே நீக்கவேண்டும். பண ஆதிக்கத்தை அரசும் தேர்தல் ஆணையமும் எளிதில் நீக்கலாம். அதாவது, தேர்தல் செலவை அரசே ஏற்கவேண்டும். அரசியற் கட்சி களின் கணக்குகள் தணிக்கை செய்யப் பெறுதல் வேண்டும். அடுத்து, சாதி மதங்களின் ஆதிக்கத்தைத் தேர்தலிலிருந்து அகற்ற அனைத்துக் கட்சிகளும் ஒத்துழைக்க வேண்டும். பெரும்பான்மையான சாதியை, மதத்தைச் சேர்ந்தவர்களை அந்தந்தத் தொகுதிகளில் நிறுத்துவதற்குச் சில நெறிமுறை களைத் தேர்தல் ஆணையத்தின் ஒப்புதலுடன் கட்சிகள் கடைப்பிடிக்க வேண்டும். நமது அரசு சமயச் சார்பற்ற அரசு. ஆதலால் சமயச் சார்புடைய கட்சிகளை அரசியல் கட்சிகளாகத் தேர்தல் ஆணையம் அங்கீகரிக்கக்கூடாது.

தேர்தல் அறிக்கைகளை, தேர்தல் அறிவித்த 15 நாளில் தயார் செய்து மூன்று படிகள் முத்திரை வைத்த உறையில் வைத்து, தேர்தல் ஆணையத்திடம் கட்சிகள் தந்துவிட வேண்டும். தேர்தல் ஆணையம் ஒரு குறிப்பிட்ட நாளில் அனைத்துக் கட்சிகளின் முன்பாகத் திறந்து தேர்தல் ஆணை யத்தின் முத்திரை வைத்துத் தரும் தேர்தல் அறிக்கையினைக்

கடந்த உறதிமொழி எதுவும் கட்சிகள் தரக்கூடாது. தேர்தலில் கூட்டணிகள் நிற்க அனுமதிக்கக்கூடாது. தேர்தலில் கூட்டணி அமைத்து நிற்க வேண்டியிருப்பின் ஒரே தேர்தல் அறிக்கை அடிப்படையில் நிற்கவேண்டும். மந்திரி சபையும் கூட்டணி மந்திரி சபையாக இருக்க வேண்டும். தேர்தலில் அளிக்கப்பெற்ற வாக்குகளில் 50% வாக்குகள் பெறாத கட்சிகள் ஆட்சி அமைக்க அனுமதி இருக்கக்கூடாது. தேர்தல் வாக்குகள் எண்ணிக்கை தொகுதி வாரியாக எண்ணுதல் கூடாது. இந்தச் சில சீர்திருத்தங்களைச் செய்தால்கூடப் போதும்! நமது நாட்டில் மக்களாட்சி சிறக்கும்.

### சமயவியல்

இன்று நம்மிடையே நிலவும் மதங்கள், சமயங்கள் அனைத்தும் உண்மையிலிருந்து நீண்டதூரம் விலகி வந்து விட்டன. இன்றைய மதங்கள் நம்பிக்கையை மட்டுமே நம்பு கின்றன. ஆனால், உண்மையில் சமயம் ஆய்வு நெறிகளைச் சார்ந்தது தான்!

*"நானார் என் உள்ளமார் ஞானங்களார்*
*என்னையார றிவார்*
*வானோர் பிரானென்னை ஆண்டிலனேல்*
*மதிமயங்கி*
*ஊனார் உடை தலையில் உண்பலிதேர்*
*அம்பலவன்*
*தேனார் கமலமே சென்றூ தாய்*
*கோத்தும் பீ!*

என்று ஆய்வுநெறி வகுத்துத் தருகிறது திருவாசகம்.

திருஞானசம்பந்தரும்

*"ஏதுக்கு ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்*
*சோதிக்க வேண்டா"*

என்றார். ஏன்? ஏதுக்களுக்குப் பொருள் காண்பதும் எடுத்த மொழியாளர் அறிவும் எல்லைக்குட்பட்டவை என்பதால் விலக்கினார். இறைவனைக் காணும் அறிவே அறிவு என்பதை

"அறிவு தந்தெனை ஆண்டு கொண்டருளிய
அற்புதம் அறியேன்!"

என்ற திருவாசகம் உணர்க. உயிர் நிறைநலம் பெறுதலே வாழ்க்கையின் நோக்கம்; குறிக்கோள். அந்த நிறைநலமாகிய இன்ப அன்பினை நோக்கித் தொடங்கிய பயணமே வாழ்க்கை.

இன்றோ சமயவியல் அறிவியலாக விளங்காமல் மூடத்தனம் நிறைந்த கொள்கைகள், கோட்பாடுகள், பழக்கங்கள், வழக்கங்கள், சடங்குகள் நிறைந்து பயனற்றுப் போனதோடன்றி. நம்முடைய காலத்தையும் ஆற்றலையும் செல்வத்தையும் கொள்ளையடிக்கின்றது. இது மட்டுமா? மனிதத்தை முட்டாளாக்கிப் பயமுறுத்தி 'கடவுள் கோபம்' என்றும் சொல்லி வாழ்க்கையைக் கெடுக்கின்றது.

கடவுள் ஒருவர் தான்! ஒருவரே தான்! சத்தியமாக வேறு ஒரு கடவுள் இல்லை! இதுவே உண்மை. ஒரே கடவுளை வணங்கும் மாந்தர்களிடையே மதங்களைப் படைத்து, வேற்றுமையை வளர்த்து, பகைமையை மூட்டி இந்தப் புவியைக் கலகக் காடாக்கி வருகின்றனர். இதுவல்ல சமயம். சமயம் ஒரு சிறந்த அறிவியலுள் சிறந்த அறிவியலாகும். குறைவிலா நிறைவாக, கோதிலா அமுதாக, அறிவுக்கு அறிவாக, நன்றாக, இன்பமாக விளங்கும் பரம்பொருள் நெறி நின்று எண்ணி வாழ்தல் மூலம் உயிர்கள் தாமும் நிறைநலம் பெறுதலே சமயவியல். இத்தகு சமயவியல் அறிவு மக்களைச் சென்றடையாதவரை மக்கள் ஞானம் பெறமாட்டார்கள். இந்த மண்ணகம் விண்ணகமாகாது.

## முடிவுரை

அறிவியல் மக்களுக்காகவே. மக்களின் மேம்பாட்டுக் காகவே. அறிவியலை எந்தக் காரணத்தை முன்னிட்டும் மக்களுக்கு விரோதமான காரியங்களுக்குப் பயன்படுத்தக் கூடாது. மேலும் மேலும் அறிவியல் நெறி வழி மனிதகுலம் மேம்பாடு அடைந்து இந்த மண்ணில் விண்ணகம் தலைப்படுமாறு செய்யவேண்டும்.

முனைவர் ஏசுதாசன் அவர்கள் அறக்கட்டளையின் சார்பில் ‘மக்களுக்காக அறிவியல்’ என்ற சொற்பொழி வாற்றிடக் கிடைத்த வாய்ப்பை இனிதே போற்றி மகிழ் கின்றோம். அறக்கட்டளையினருக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தினருக்கும்

**நன்றி! பாராட்டு! வாழ்த்துக்கள்!**

***

# 2

# சமயவியல் கட்டுரைகள்

## 1. சமய வாழ்வு

வாழ விரும்புகின்ற-வாழ்கின்ற மனித சமுதாயத்திற்கு மார்கழித் திங்கள் மிக முக்கியமான திங்கள். மனித குலத்தை நன்னெறியில் அழைத்துச் செல்லும் திங்கள் மார்கழித் திங்கள். பன்னிரெண்டு திங்களில் பள்ளி எழுச்சி பாடுகின்ற திங்களும் இந்தத் திங்கள் தான். இத் திங்களில் பாவை நோன்பு என்றே சொல்லுகிறோம். பாவைப் பாட்டுப் பாடுகிறோம்-பாவைப் பாடல்களைப் பாடச் சொல்லு கிறோம். பரிசுகள் வழங்குகிறோம். எனினும், பாவைப் பாடல் களைப் பாடும் எழுச்சி பெறுகவில்லை. பாவை நோன்பின் அடிப்படையை நாம் மறந்துவிட்டோம். நமது மாணிக்கவாசகப் பெருமான் சொல்லியவண்ணம் தமிழ கத்துப் பெண்கள் இப் பாவை நோன்பை நோற்பார்களானால் வீட்டிலும் நாட்டிலும் ஞானச் செல்வம் பெருகும்.

சுந்தரரை ஈன்றெடுத்துக்-கொடுத்த தந்தையும் ஒரு நாயனார், தாயும் ஒரு நாயனார். சுந்தரரை ஈன்றெடுத்த இசை ஞானியார் புகழை நாவால் கூறமுடியாது என்று சேக்கிழார் பெருமானே பேசுகின்றார். இசை ஞானியார் குடும்பம் ஒரு ஞானக் குடும்பம். அவர் குடும்பம் சமயம் தழுவிய குடும்பம்.

வீடுகளில் சமய வாழ்வு இருந்தால் நாட்டில் சமயப் பண்புமிகும். சமயம் கற்றுக்கொடுக்கக்கூடியதல்ல -

அனுபவத்தால் எடுத்துக்கொள்ளக்கூடியது. இன்றைக்கு நமது சமய உலகில் சமய ஒழுக்கம் இலைமறை காய்மறையாகவே இருக்கிறது. மாணிக்கவாசகர் பெண்ணின் விளையாட்டு - தொழில் தொடர்பில் திருப்பொன்னூசல், திருப்பொற் சுண்ணம், அம்மானை முதலிய பல பதிகங்களைப் பாடியுள்ளார். வீட்டில் கோவிலின் சூழல் அமையுமானால் திருக்கோவில்கள் திருவருளின் பெட்டகமாகத் திகழும்.

சமயத் துறையில் பெண்களுக்குப் பெரும் பங்குண்டு. பெண்கள் எதையும் சீக்கிரமாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். ஆண்கள் அப்படியல்ல. உணர்ச்சி வேகத்தில் ஒன்றைச் சட்டென்று ஒத்துக் கொள்வார்கள் - உதறித் தள்ளு வதிலும் அப்படித்தான்.

அன்று, பாண்டிமாநாட்டை ஆண்ட மன்னனே வழிவழி வாழ்ந்த சைவத்தைவிட்டுச் சமண மதத்திற்கு மாறினான்-ஆனால், மங்கையர்க்கரசி மாறவில்லை. சொந்தக் குடும்ப வாழ்க்கையின் நலன்களை - குலத்தை - குடும்பத்தை வளர்க்கின்ற தெய்வத்தைத்தான் குல தெய்வம் என்கிறோம். சேக்கிழார் பெருமான் மங்கையர்க்கரசியைத் தவிர வேறு எவரையும் "குலதெய்வம்" என்று பாராட்டவில்லை. மங்கையர்க்கரசியை "எங்கள் குலதெய்வம்" என்று பெருமை யோடு பேசுகின்றார். சிவநெறியின் பெருமை சிறப்பு மங்கையர்க்கரசிக்கு உண்டு.

பொதுவாக ஐந்து ஆடவர்களை மதம் மாற்றுவதை விட ஒரு பெண்ணை மதமாற்றுவது சிறந்தது என்பது விவிலிய மதத்தினரின் கோட்பாடு. பெண்களிடத்துப் பரவிய கொள்கை மேலும் மேலும் வளரும் என்ற நம்பிக்கையே இதற்குக் காரணம். மாணிக்கவாசகரும் இந்தப் பேருண்மையை உணர்ந்து தான் பாவையர்க்குப் பாடினார். பாவை காட்டும் பண்பட்ட வழியில் சென்றால் நாடு நலமுறும். பாவையர்க்கே பாடினார் என்பதில் இன்னொரு

தத்துவப் பொருளும் உண்டு. உலகத்திற்கு நாயகன் ஒருவன் – அவனே இறைவன். அவனை ஆன்ம நாயகன் என்பார்கள். ஏனைய உயிர்கள் அனைத்தும் நாயகியர் என்பது வழக்கு.

திருப்பெருந்துறை மண்ணில் இன்றும் ஞானத்தின் தேக்கம், இருக்கிறது "திருப்பெருந்துறை என்று சொன்னேன் – என் பிறப்பறுத்தேன்" என்று பேசுகின்றார். நாட்டின் போக்கு – சமுதாயத்தின் பலவீனம் இவற்றைத் தெளிவாகக் கணக்கில் எடுத்து வைத்துக் கொண்டு பாடினார் மாணிக்க வாசகர் "என்னை ஒரு வார்த்தை உட்படுத்தி ஆண்டாய்" என்று பாடிநின்றார். சொல்லாமற் சொல்லிக் குறிப்பால் உணர்த்தி ஆட்கொள்ளும் உயரிய நெறி நமது சிவநெறி.

நான் மாணிக்கவாசகரை எம்பெருமான் என்றே குறிப்பிடுகின்றேன்; அழைக்கின்றேன். "அறிவினாற் சிவனே ஆனவன்" என்று பாராட்டப்பெற்றவர் அல்லவா மாணிக்க வாசகர். சிவநெறியில் அடியார்களுக்குச் சிறப்புண்டு. சிவ பூசை செய்தாலும் செய்யலாம். திருவாசக பூசை பண்ணினாலும் பண்ணலாம். இரண்டும் ஒரு பயனைத்தரும் என்பது ஆன்றோர் வழக்கு.

எம்பெருமான் இறைவனைப் பார்க்கின்ற காட்சி தனிச் சிறப்பு வாய்ந்தது.

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியே!" என்கிறார். "சோதியே! சுடரே! சூழ் ஒளி விளக்கே!" என்று பேசுகிறார். இறைக் காட்சியில் எப்போதும் வண்ணம்தான் முதலில் தோன்றும். "வண்ணம்தான் அதுகாட்டி வடிவு காட்டி மலர்க் கழல்கள் அவைகாட்டி..." என்கிறார். "கண்ணாலும் யானும் கண்டேன் காண்க" என்கிறார். "புவனியில் சேவடி தீண்டினன் காண்க" என்று பேசுகின்றார்.

பொதுவாக மனிதக் காட்சிக்கும் இறைக்காட்சிக்கும் வேறுபாடு உண்டு. மனிதக் காட்சியில் வடிவம் முதலில் தோன்றும். பின்னர் உறுப்பு நலன் தோன்றும். அண்மையில்

நெருங்கிய பின்பே வண்ணம் தோன்றும். இறைக்காட்சி அப்படியல்ல. வண்ணம் காட்டினார்., வடிவு காட்டினார்..... மலர்க்கழல்கள் காட்டினார் என்று முறை வைத்துப் பேசுகிறார் மாணிக்கவாசகர்.

பஞ்ச பூதங்களில் நெருப்புக்குத் தனி ஆற்றல் உண்டு. நிலம், நீர், காற்று யாவும் அசுத்தத்தோடு சேர்ந்தால் தாமும் தமது தூய்மையை இழக்கும். தீ மட்டும் தன்னைச் சார்ந்த அசுத்தத்தை மாசுகளை எரித்துத் தனது தூய்மையையும் காப்பாற்றிக்கொள்ளும் இத்தகைய தீ ஒளியைத்தான்... அனற்பிழம்பைத்தான் "சோதியே" என்கிறார். கார்த்திகை அன்று நாம் ஏற்றுகிற சொக்கப்பானை இதன் அறிகுறிகள்.

"பொய்யினைப் பெருக்கிப் பொழுதினைச் சுருக்க" என்று எம்பெருமான் பாடுகின்றார். மாணிக்கவாசகரைப் பொறுத்தவரை இது உண்மையல்ல...மாணிக்கவாசகர் போன்ற சிவஞானச் செல்வர்கள் பிறர் மீதுள்ள குற்றத்தைத் தன்மீது ஏற்றிச்சொல்வது மரபு. அம்மரபின் வழிப்பட்ட தாகவே இதனைக் கருதவேண்டும்.

"வாழ்க்கையில் அறியாமைகூடப் பிழையல்ல... அறியாமையை அறிவு என்று நினைத்துக்கொண்டு மயங்குவதுதான் பெருந்தவறு என்று குறிப்பிடுகிறார் மாணிக்கவாசகர்." குடும்பங்களைவிட நாடு வேண்டும் என்பார் சிலர்; குடும்பமே பெரிதென மதிப்பார் சிலர். நாடும் வீடும் சேர்ந்த வாழ்வே நலமுடைய வாழ்வு. அவ்வாறு நாடும் குடும்பமும் வாழ்வதற்குரிய பிரார்த்தனை தான் பாவை நோன்பு.

நாடு செழிக்க மழை வேண்டும். பெண்கள் வானமழை வேண்டி நோன்பிருந்தார்கள். இதையே மாணிக்கவாசகர் "எம்பிராட்டி அருளே என்னப் பொழியோல் ஓர் எம்பா வாய்" என்று பேசுகிறார். மழை, வேண்டுவார் வேண்டாதார்

என்று பார்ப்பதில்லை. அதுபோல, எம்பிராட்டி அருளுக்குக் காலம்...கருத்து வேறுபாடு... எல்லைக்கோடு இவை இல்லை.

பொதுவாக மனையற வாழ்க்கையும், பிறவும் இடையிலே ஒரு சாதனம்தான். இலட்சிய வாழ்க்கையுடைய ஒரு பெண் பிறவி விடுதலையையே விரும்புகிறாள்... அந்தப் பிறவி விடுதலைக்கு, இலட்சியத்தோடு ஒத்த கணவன் வேண்டும் என்கிறாள். இன்ப துன்பங்களுக்குக் கட்டுப்பட்ட பிறவித் துன்பத்தினின்றும் விடுதலை பெறுவதுதான் அவளது இலட்சியம். அதனால்தான்,

> "எங் கொங்கை நின் அன்பர்
> அல்லார் தோள் சேரற்க
> எங்கைகள் நினக் கல்லாது
> எப்பணியும் செய்யற்க"

என்று வேண்டுகின்றார். நோன்பிலும் தவத்திலும் சிறந்த பழைய சிவனடியார்களை நோக்கி, "புத்தடியோம் புன்மை தீர்த்தாட் கொண்டாற் பொல்லாதோ?" என்று விண்ணப்பிக் கின்றார்.

ஒரு மாம்பழ விற்பனைக்காரி; பழங்களைப் பறிக் கிறாள்; பறிக்கும்போது பிஞ்சுகளும் காய்களும் விழுந்து விட்டன. எல்லாவற்றையும் சேர்த்துச் சந்தைக்குக் கொண்டு போகிறாள். வந்தவர்கள் பழங்களையே வாங்கிச் செல்கின்றனர். இன்னும் ஒரே ஒரு பழம்தான் இருக்கிறது-அத்தோடு காய்களும் பிஞ்சுகளும் இருக்கின்றன. பெரிதும் ஏக்கமடை கிறாள். சமுதாய நாகரிகம் படைத்த ஒருவன் வருகிறான். அவன் காயையும், பிஞ்சையும் சேர்த்து வாங்கிச் செல்லு கிறான். காய் பச்சடிக்கும், பிஞ்சு ஊறுகாய்க்கும் உதவும் என்று கருதி அவன் அவற்றை வாங்கிச் செல்லுகிறான்.

மாணிக்கவாசகர் அமைச்சராக இருந்தார். கோவில் திருப்பணி செய்தார்...எனினும் புளியம்பழம்போல பற்றற்று

இருந்தார். "புளியம்பழம் ஒத்திருந்தேன்" என்று அவரே பேசுகின்றார்.

புளியம் பிஞ்சுபோல் இருப்பவர்கள் மனித விலங்குகள். புளியங்காய்போல் இருப்பவர்கள் மனிதர்கள். புளியம்பழம் போல் இருப்பவர்கள் ஞானிகள். புளியம் பிஞ்சு தோற்ற மிருக்கும். ஆனால் பயன்படக்கூடிய சத்து ஒன்றும் உள்ளே இருக்காது. அதேபோல பலரிடத்து மனித உருவமிருக்கும், ஆனால் மனித சமுதாயத்திற்குப் பயன்படக்கூடிய மனிதப் பண்பு இருக்காது. காயில் பசையிருக்கும்...ஆனாலும் புளிக்கும்...அதுமட்டுமின்றி, ஓடும் பசையும் ஒட்டிக்கொண் டிருக்கும். அதே போல காய்போன்ற மனிதர்கள் தன்னலப்பற்று மிக்குடையவர்களாக இருப்பர்... மற்றவர்களுக்குப் புளித்த வாழ்க்கை நடத்துவர். பழம் சுவையுடையதாக இருக்கும்; ஓடும் உட்பகுதியும் பற்றற்ற நிலையில் தொடர்பு கொண்டிருக்கும். பழம்போன்ற மனிதர்கள் மற்றவர்கட்கு இன்பந் தரத்தக்க விதத்தில் வாழ்வார்கள், தன்னலப் பற்றின்றி வாழ்வார்கள்.

மாணிக்கவாசகர், இறைவனைத் தினையளவு நேரம் கூடப் பிரிந்திருக்க முடியவில்லை என்பதனைத் "தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்பன்று" என்று பேசுகின்றார். எம்பெருமானை ஆட்கொண்ட இறைவன், அவரை விட்டுச் சென்றார். இறைவனைப் பிரிந்த இப்பிரிவுத் துயர் திருவாசகம் முழுவதிலும் சாறாக ஓடியிருக்கிறது. இப்பிரிவின்றேல் திருவாசகம் பிறந்திருக்காது. மாணிக்க வாசகரிடம் சொற்கள் வந்து ஏவல் செய்திருக்கின்றன.

"கோதாட்டி அருளும் சீலம்" என்று பேசுகின்றார். அடியார்களை ஆட்கொள்வதுதான் சீலம். அதுதான் இறை வனின் கடமைப்பாடுங்கூட. இந்தக் கடமையையும் இறைவன் கடமையாக எண்ணிச் செய்யாமல் விளை யாட்டாகவே செய்கிறோம்.

"காலமொடு தேச வர்த்தமான மாதிக்
கலந்துநின்ற கருணைமொழி"

என்றார் தாயுமானார். "கணக்கு, வழக்குகளைக் கடந்த திருவடி" என்றும், "விரதங்கள் மாண்ட மனத்தினன் கண்டாய்" என்றும் அப்பரடிகள் பேசுகின்றார். மாணிக்க வாசகரோ,

முன்னைப் பழம்பொருளே
முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும்
பெயர்த்தும் அப்பெற்றியனே!"

என்று பாடிப்பரவுகிறார்.

இல்லங்கள் தோறும் இறைவன் எழுந்தருளுகின்றான். ஆன்மாக்களை உய்விக்க வான்பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட்கொள்ளுகிறான். ஆன்மாக்கள் குடியிருக்கும் இல்லங்களின் பட்டியல் இங்கு அற நிலையங்களுக்கு வேண்டும். மதரீதியில் வீடுகளின் எண்ணிக்கை வரையறுக்கப் பட வேண்டும்.

மாணிக்கவாசகர் தான் பெற்ற இன்ப அனுபவத்தைப் பேசுகின்றபோது,

"செங்கணவன்பால் திசைமுகன்பால்
தேவர்கள்பால் எங்கும் இல்லாதோர் இன்பம்"

என்று குறிப்பிடுகின்றார்.

"நான் ஈடிணையற்ற உனது திருவடிகளைப் பெற்றேன்" என்கிறார். இத்தனையே,

"தந்தது உன் தன்னை;
கொண்டது என் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்!"

என்று வணிகக் கண்ணோட்டத்தோடு முடிக்கிறார்.

கு.XV.11.

"நாம் நீறணிவது நம்வினை போக, இறைவன் நீறணிவது தம்மைத்தொழுகின்ற அடியார்களின் வினை நீறாக" என்கின்றார். முழுவடிவாகப் பார்த்தால், திருவெம் பாவை வீட்டுப்பாட்டு இந்த வீடுகளில் நாம் அந்தப் பாடல் களைப் பாடினால் அந்த வீட்டின்பம் இங்கேயே கிடைக்கும். வீடு செழிக்கும்...நாடு செழிக்கும். அடுத்த ஆண்டில் ஆற்றங் கரைகளில் பாவை நோன்பு நோற்கும் முறை வரவேண்டும். இப்படிச் செய்தால் நாடுதழுவிய குடும்பங்களுக்கும் குடும்பங்கள் தழுவிய நாடும் தோன்றும்.

திருப்பாவை, திருவெம்பாவையைவிட மொழிநடையில் எளிமையானது, ஆனாலும் தத்துவச் செறிவிற்கும் பொருள் வளத்திற்கும் குறைவில்லை. எம்பாவையை விடத் திருப்பாவையில் பெண்மையை மிகுதியாகப் பாக்கிறோம்.

வில்லிபுத்தூர் மண்ணும், மண்ணின்றெழும்பும் தூசியும், தூசியைக் கொணரும் காற்றும் நல்லின்பம் தரும் என்பது ஆன்றோர் வழக்கு. திருப்பாவைக்கு எழுதிய உரை யினை ஈடு என்று அழைக்கின்றனர். ஈடும் ஓர் இணையற்ற இலக்கியமாக விளங்குகிறது. வைணவம் சம்பிரதாயத்தையும் மரபையும் காப்பாற்றி வந்துள்ளது. வேதங்களையும் ஒத்துக் கொண்டுள்ளது. ஆனாலும், வைணவர்கள் திவ்வியப் பிரபந்தத்தை வேதங்களைக் காட்டிலும் முக்கியமானதாகக் கருதுகிறார்கள். நாமே வேதங்கள் முதன்மையானவை என்கிறோம். ஆனாலும், திருமுறைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் இருக்கிறோம்.

வாழ்க்கை நெறியைக் காப்பாற்ற உதவுவன திரு வெம்பாவையும் திருப்பாவையும்.

திருவெம்பாவையால் நாடு செழிக்க மழைமொழியும். மழைபொழிந்தால் நெல் விளையும்; சோறு கிடைக்கும் திருப் பாவையால் பால்வளம் பெருகும். இரண்டையும் படித்தால் பாற்சோறு கிடைக்கும்.

'செய்யாதன செய்யோம்
தீக்குரளைச் சென்றோதோம்"

என்று ஆண்டாள் பேசுகிறார். எதைச் செய்யக் கூடாதோ அதைச் செய்யாதிருப்பது முதல் ஒழுக்கம். அதைச் செய்யா திருக்கச் சில விதிகள் வேண்டுமே. பெரும்பாலும் செய்யத் தகாதன செய்வதற்கு ஊனின் பெருக்கமே முதற்காரணமாக உள்ளது. எனவே, அவ்வூனினைப் பெருக்காமல் இருக்க நோன்புக்காலத்திலாவது நெய், பால் முதலிய சத்துணவு களை நீக்கவேண்டும் இதற்காகவே,

'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்றனர்.

வைணவப் பரம்பரையில் வாழ்க்கை நெறியைப் பாடியவர் ஆண்டாள். சைவப்பரம்பரையில் இறை அன்பிலே ஊறித்திளைத்தவர் கண்ணப்பர். இறைவனே அழகு. அந்த அழகுக்கு அழகு செய்யச் சூடிக்கொடுத்தார் அந்தச் சுடர்க் கொடியாள். ஆண்டாளும், கண்ணப்பரும் அன்பு நெறி நின்றவர்கள். கடவுளை வாழ்வுப் பொருளாகக் கண்டவர்கள். ஆண்டாள் கண்ணனைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பினார்.

மனிதனின் கண்ணுக்குப் பாவை இன்றியமையாதது. அது இருந்தால் தானே காட்சி. அதுபோல, திரு வெம்பாவையும், திருப்பாவையும் இருபாவைகள். அவற்றின் மூலம் நாம் ஞானக்காட்சியை அனுபவிக்கலாம். கடவுள் நம்பிக்கையில் சந்தேகம் இருப்பவர்கள் பாவையைப் படியுங்கள். அது உங்களை இன்ப அனுபவத்திற்கு இழுத்துச் செல்லும்.

திருவெம்பாவை திருப்பாவைப் பாடல்கள் மனித வாழ்க்கையை ஈடேற்றும். திருவாசகம், சிவானந்த அனுபவம் பொங்கி எழுந்தபோது வந்த பாடல்கள். குற்றால நீரருவி போல்-குற்றாலத்தருவியில் தண்மையை அனுபவிக் கின்றோம்; மாணிக்கவாசகர் தந்த திருவாசகத்தில் தண்ணார்

தமிழளிக்கும் தென்பாண்டி நாட்டானின் தண்ணருளை அனுபவிக்கின்றோம். குற்றாலத்தருவியில் குளித்தால் உடலின் வெப்பம் கழியும்; மாணிக்கவாசகருடைய திருவாசகத் தேனருவியில் மூழ்கித் திளைத்தால் உயிரின் மல வெப்பங்கள் கழியும்; துன்பம் நீங்கும்; இன்ப அன்பு பெருகும்; விடுதலை கிடைக்கும்.

மனிதன் உணர்ச்சியின் பிண்டம்; தெரிந்தோ தெரியாமலோ மனிதன் உணர்ச்சி வசப்படுகிறான். அவ்வுணர்ச்சி வெற்றியும் தரலாம்-தோல்வியும் தரலாம். அந்த உணர்ச்சிகளினின்றும் மனிதனை விடுதலை பெறச் செய்வது சற்றுக் கடினமானது. உணர்ச்சி தோன்றுவதை அடிப்படையிலேயே தடுத்துவிடுவது என்பது முடியாதது. அந்த உணர்ச்சிகளால் அவன் வாழுகிறானா? அல்லது விழுகிறானா என்பவற்றை யெல்லாம் அறிந்து அவனை ஆற்றுப்படுத்தி-ஒழுங்குபடுத்தி விட்டால் உயரிய பயனை அடையலாம். அந்த உணர்வுகளை வேறு வழிகளில் திருப்பி அவனைப் பக்குவப்படுத்துவதற்குரிய சாதனம்தான் சமயம். மனிதனின் உணர்ச்சிகளை இன்ப அன்பிலே ஈடுபடுத்தவே பக்தி, சமயம், கடவுள் எல்லாம் இருக்கின்றன.

சமய வாழ்வும், சமயத் தொடர்பும் இல்லாதவன் கரடு முரடாகவே இருப்பான். அவன் மனம் மண்பானை போன்றது. ஒரு தடவை உடைந்தால் ஒட்ட வைப்பது கடினம். சிலர் சமயச்சார்பிலே ஊறித் திளைத்தவர்கள் போலக் காணப்படுவார்கள். ஆனாலும் அவர்கள் வாழ்க்கையிலே சமயப் பண்பு-சமய அனுபவம் இருக்காது.

'கற்றாழையும் கள்ளியும் இயல்பாக முளைப்பன. அவற்றிற்கு நீரோ, எருவோ, மனித முயற்சியோ தேவையில்லை. ஆனால்' களைவிளையும் நிலத்தைக் கழனியாக்கி அதிலே நெல் விளைவிக்க எருவும், நீரும் மனித முயற்சியும் தேவை. மனிதனின் பலவீன அமைப்பை மாற்றி, அவனைப் பயன்படுகின்றவனாக மாற்றியமைக்க வேண்டும். அதற்குச் சமயம் பயன்படுகிறது. பிறரை வாழ்விப்பது என் கடமை

என்ற கருத்தை வளர்ப்பது சமயத்தின் அடித்தளமான நோக்கம்.

மனிதனை நல்லாற்றுப்படுத்தும் சக்தி சொற்களுக்கு இருக்கிறது. இந்த நாட்டின்மீது பற்றும், இந்த நாட்டு மக்கள் நல்வாழ்வு பெறவேண்டுமே என்ற ஏக்கமும் உடைய வர்களின் சொற்கள், வாழும் மனிதர்களின் உள்ளத்திலே புதிய தெம்பை உண்டாக்கும்.

ஆண்டாள் நாச்சியாரும், மாணிக்கவாசகரும் உணர்ச்சியில் ஊறித்திளைத்தவர்கள். 'தான் வாழ வேண்டும் - தனக்கு நல்ல கணவன் வாய்க்கப்பெற வேண்டும்' என்று ஆண்டாள் நாச்சியார் கருதினாள் என்பதை ஒத்துக் கொள்ளுவதில் தவறில்லை. ஆண்டாளின் எண்ணத்திலே தன்னலம் இருந்தது. ஆனால் அந்தத் தன்னலம் மற்றவர் களைப் பாதிப்பதாக இல்லை. மற்றவர்களை உறிஞ்சுவதாக இல்லை. தன்னலமே இருக்கக்கூடாது என்று சொல்ல முடியாது. அந்தத் தன்னலம் மற்றவர்களுக்குத் தீங்காக அமைந்துவிடக் கூடாது என்பதுதான் முக்கியம்.

நம்முடைய அரசியல் சட்டத்தின் அடிப்படை அமைப்பே எல்லாரும் எல்லா வாய்ப்பும் பெற்று வாழ வேண்டும் என்பதுதான். இத்தகு நாடு தழுவிய வாழ்க்கை யுணர்ச்சி ஆண்டாள் நாச்சியாரிடம் இருந்தது. அவர் சமுதாயத்திற்குத் தலைமை தாங்கிய அருளியல் கவிஞர்.

பாதகத்திற்கு முதற் காரணமாக இருப்பது மனம். மனிதனின் உள்ளுணர்வுகளைப் பக்குவப்படுத்திட்டால் தீமை நிகழா, தவறு செய்ய வேண்டும் என்ற உணர்விலிருந்தே மனிதனை விடுதலைப் பெறச் செய்ய வேண்டும்.

நமது திருக்கோவில்கள் அங்கு வருகிறவர்களின் மனப்புண்களைக் கணக்கில் எடுத்துப் பார்த்து அவர்களைப் பக்குவப்படுத்தும் பண்ணைகளாக விளங்க வேண்டும். உயிர்களைப் பக்குவப்படுத்தும் பண்பாட்டு நிலையங்கள்

திருக்கோயில்கள். மனிதர்களை அவ்வாறு பக்குவப்படுத்தும் தகுதியும், திறமையும் உடையவர்களே மதப்பிரச்சாரகர்களாக வரத் தகுதியுடையவர்கள், பொதுவாக மனித தர்மத்திற்குப் பணியும் பண்பும் நம் மக்களிடையே வளரவேண்டும்.

நம்முடைய உணர்வில் அன்பை-அறத்தை-உடன் பிறப்பு உணர்வைக் கொப்பளிக்கச் செய்யும் சக்திவாய்ந்தது ஆண்டாளின் திருப்பாவை. ஆண்டாளிடத்தில் நல்ல உணர்வு இருக்கிறது-திருவருள் சிந்தனை இருக்கிறது-நல்ல தமிழ் இருக்கிறது. இவற்றை வைத்துப் பாவை பாடினார் ஆண்டாள் நாச்சியார்.

இரும்பை நெருப்பில் போட்டுச் சூடாக்கிச் சம்மட்டியால் அடித்தால்தான் அது வில்லாக வளையும். அது போல மனிதனை நோன்பிலே வருத்திப் பக்குவப்படுத்தினால்தான் அவன் பயன்படும் மனிதனாவான்.

ஆண்டாள் நாச்சியார் வீட்டைச் செழிப்படையச் செய்ய வேண்டுமென விரும்பினார். அதன் வழியே நாட்டையும் செழிப்படையச் செய்ய வேண்டுமென விரும்பினார். ஆண்டாள் நாச்சியார் கண்ணனையே வழிபட்டார். கண்ண னிடத்தில் காதல் கொண்டார். கண்ணனின் முதுகிலே ஒரு ஈ, கொசு உட்கார்ந்தால் கூடப் படபடத்தார். அத்தகைய தூய பக்தி நமக்கு வேண்டும்.

செய்யக்கூடாதனவற்றைச் செய்யக் கூடாது; தீக் குறளைச் சென்றோதக் கூடாது; முடிந்தவரை மற்றவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்ற தலையாய மூன்று ஒழுக்கங்களை ஆண்டாள் நாச்சியார் வலியுறுத்துகிறார்.

கிறித்தவர்கள் முதலியோரின் சமயப் பிரச்சாரத்திற்கு மையமாகத் "தொண்டு" அமைந்திருக்கிறது. நம்மவர்களின் சமயப் பிரச்சாரத்திற்குப் பெரும்பாலும் பேச்சுதான் மையமாக அமைந்திருக்கிறது. எனவே நம்மில் 70 விழுக்காடு தோல்வியடைகிறோம்.

அறங்கூறும் அவைகளிலே நடக்கும் வழக்குகளைக் கணக்கிலெடுத்துப் பார்த்தால், கிறித்தவர்களின் வழக்குகளை விட, முஸ்லீம்களின் வழக்குகளைவிட நம்மவர்களின் வழக்குகளே மிகுதியாக இருக்கும் பிச்சைக்காரர்களைக் கணக்கிலெடுத்துக்கொண்டால் இந்து மதத்திலேதான் அதிகமாக இருப்பார்கள்; சிறைக் கைதிகளை எடுத்துக் கொள்ளுங்கள், அவர்களிலும் இந்துக்கள் தாம் அதிகம் இருப்பார்கள்.

கிறித்தவர்களிலே முழுநேர ஊழியர்கள் இருக்கிறார்கள். ஒரு சர்ச்சுக்கு மூவாயிரம் குடும்பங்கள் என்று கணக்கிட்டு வைத்திருக்கிறார்கள். அந்த முழுநேரத் தொண்டர்கள் மூவாயிரம் குடும்பங்களுக்கும் தொண்டு செய்கிறார்கள். மூவாயிரம் குடும்பங்களின் நன்மை, தீமைகள் யாவற்றிலும் அவர்கள் கலந்து கொள்கிறார்கள். அதுபோல நமது கோயில் களும் சமுதாயத்தின் மையங்களாக விளங்கவேண்டும். நாமும் தொண்டின் வழியான பிரச்சாரம் செய்யவேண்டும். ஒரு கோயிலுக்கு மூவாயிரம் குடும்பங்கள் வீதம் பிரிக்கப்பெற வேண்டும். அவர்கள் குடும்பத்திற்கு ஒரு ரூபாய் வீதம் கோயிலுக்கு கொடுக்க வேண்டும். அதிலிருந்து அந்த மூவாயிரம் குடும்பத்தினருக்கும் மருத்துவ வசதி, கல்வி வசதி முதலியனவற்றைச் செய்து கொடுக்க வேண்டும்.

எல்லையைப் பகைவர் ஆக்கிரமித்திருப்பதைப்போல, நம்மிற் பலரை அறியாமையும் ஆணவமும் ஆக்கிரமித்திருக் கின்றன. தலைமையில் நம்பிக்கையும் தளராத முயற்சியும் நம்மை அந்நியரிடமிருந்து காப்பாற்றும்; அன்பு பண்பாடு, அனுபவம் முதலியன நம்மை ஆணவம், அறியாமை என்பவற்றின் பிடியிலிருந்து காப்பாற்றும். சமுதாயத்தின் முழு மட்டமும் ஆரோக்கியமாக இருக்கவேண்டும் என்று ஆண்டாள் நாச்சியார் விரும்பினார். வீட்டிலும் நாட்டிலும் சமய வாழ்வை – சமயப் பண்பைக் காப்பாற்றுங்கள் என்று பெண்களுக்குக் கூற அவர் திருப்பாவை பாடினார்.

மின்சாரத்துடன் இணைக்கப் பெற்ற கம்பி மின்சக்தி பெறுவதுபோல, நம்முடைய உள்ளம் கல்லாக-மண்ணாக-இரும்பாக இருந்தாலும் திருப்பாவைப் பாடல்களைப் பாடும்போது, இறைவனின் தண்ணருட்சாரலை நாமும் பெற்று அனுபவிக்கிறோம்.

## 2. சமய மறுமலர்ச்சி

தமிழினத்தின் வாழ்வு சமயப் பண்பிலே வளர்ந்து வளம் பெற்றது. வாழ்க்கைக் கடலில் வீசும் துன்பத்தை இன்பமாக மாற்றிக் கொடுப்பது சமயம். அன்பு பொருந்திய-அறந்தழுவிய-ஒழுக்கம் நிறைந்த நல்வாழ்வைக் கொடுக்கும் தகுதி சமயத்திற்கே உண்டு. சமயச் சார்பற்ற ஒழுக்கம் உலகில் நிலைபெற்றிருத்தல் இயலாது. தனிவாழ்வின் தேவைகள் நிறைந்துகொண்டிருக்கின்ற அளவுக்குத்தான் சமயச் சார்பற்ற ஒழுக்கம் நிலை பெற்றிருக்க முடியும். வாழ்க்கையில் தேவை பெருகி, அவை கிடைக்காதும் போகுமானால், ஒழுக்கம் சிதைந்து-எவ்வாற்றாலும் தேவையை நிறைவு செய்துகொள்ள மக்கள் தலைப்படுவர். சமய வாழ்வொன்றாலேயே நீதியையும் நேர்மையையும், ஒழுக்கத்தையும் காக்க முடியும். இதனை நன்குணர்ந்தே தமிழ் மக்கள் சமய வாழ்க்கையின் இன்றியமையாமையை வற்புறுத்தினர்.

தமிழர் கண்ட சமய வாழ்வு அகம், புறம் இரண்டும் ஒத்த சமய வாழ்வு. இரண்டும் இயைந்து கலக்காத வாழ்வு வாழ்வல்ல. அதனாலேயே அகமும் புறமும் (புறக் கருவிகள்) ஈடுபடுகின்ற வழிபாட்டு முறையைத் தமிழகத்துச் சமயம் வற்புறுத்துகின்றது. நமது சமயம் வழிபாட்டுக் கலையிலும் வாழ்த்துகின்ற பண்பிலும் மிகச் சிறந்து நிற்கின்றது. அதனால் வழிபாட்டுக்காக விண்ணை அளந்து காட்டுகின்ற பல நூற்றுக்கணக்கான ஆலயங்களை எடுத்து வழிபட்டனர். அதன் மூலம் அகத்தின் நல்லுணர்ச்சியைக் காத்துப்

பெருக்கிக் கொண்டனர். புறத்தால் தாங்கும் வேடங்கள் பல வற்றைக் கைக்கொண்டு, அவற்றின் மூலமும் சிந்தனையைத் திருத்திச் சிவத்தில் ஆழ்த்தினர். காலப்போக்கில் சமய வாழ்வு சிதைந்துகொண்டே வந்தது. சமயம் வேறு, வாழ்க்கை வேறு என்ற புல்லிய உணர்ச்சி தலையெடுத்து வளர்ந்தது. வாழ்க்கை யோடு ஒட்டிய சமயம் சடங்குச் சமயமாக மாறிவிட்டது. அகத்தைத் தூய்மைப் படுத்தச் செய்யப் பெறும் சடங்குகள், உள்ளத் தோய்வுடன் செய்யப் பெறாமையினால் வழிபாடு களும் சடங்குகளும் நெஞ்சத்திற் கலக்கவில்லை. இருதயத்தில் ஒலிக்கவேண்டிய சமயம் வாயளவிலே ஒலிக்கும் நிலைக்கு வந்து விட்டது. உண்மைச் சமய வாழ்வு அருகிக்கொண்டே வந்தது. அதனால் பண்பாடும் சிதைந்து சாதி முதலியப் போலிப் பிளவு மனப்பான்மைகளும் உருவெடுத்து விட்டன.

ஆனால் இப்பொழுது சில ஆண்டுகளாக எங்கும் ஒரு மாற்றம். சமயத்துறையில் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டுள்ளது. சமயச் சார்பற்ற வாழ்க்கை சாரமற்ற வாழ்க்கை என்று மக்கள் நம்புகின்ற நிலைக்கு வந்துள்ளனர். வாழ்க்கையோடு ஒன்றுபட்ட சமய வாழ்வை விரும்புகின்ற வேட்கையும் மலர்ந்திருக்கிறது. எங்கும் சமயத்தின் பேச்சு, ஊர்தோறும் கூட்டு வழிபாட்டு இயக்கங்களும் பொதுப் பிரார்த்தனை களும் உண்டாகிக் கொண்டிருக்கின்றன.

சமயத்தால் எழுந்தவை திருமடங்கள். சமயத்துக் காகவே வாழும் தகுதியுமுடையன திருமடங்கள். சமயக் கொள்கையைப் பேணிக் காத்து-மக்களை அருள் நெறியில் ஆற்றுப்படுத்தும் கடமையை மேற்கொண்டவைகளே திரு மடங்கள். சன்மார்க்க சாலைகளாக-தமிழ் வளர்க்கும் பண்ணைகளாக விளங்கியவை-விளங்க வேண்டியவை திருமடங்கள். நல்லூழின்மையின் காரணமாக இந்த நிலை சிலகாலம் மாறுபட்டிருந்தது என்பதை ஒத்துக்கொள்ளத் தான் வேண்டியிருக்கிறது. இப்பொழுது சில ஆண்டுகளாக

மடாதிபதிகளின் வாழ்க்கையிலும் மாற்றம்; அவர்களும் பணியில் ஈடுபட்டுவிட்டார்கள்.

சமய நூல்கள் எல்லாம் அச்சு வாகனமேறி வெளிவந்து கொண்டிருக்கின்றன. சமய நூல்களின் பயிற்சியிற் சிறந்தார்க்குப் பரிசுகள் வழங்கி ஊக்கமும் உணர்வும் ஊட்டப் பெறுகிறது. கல்வி நிலையங்கள் பல கண்டு, அவற்றின் மூலம் அறிவோடு அருளுணர்ச்சியும் தரப்படுகிறது. வீதிகளிலும் வீடுகளிலும் நின்று சமயக் கொள்கைகளைப் பரப்புகின்றனர். சேரிகளிலும் – சிறைகளிலும் கூடப் புகுந்து தமது பணிகளைச் செய்யத் தலைப்பட்டு விட்டனர். நாட்டின் வரலாற்றில், சமயத்தில் மடாதிபதிகளால் ஏற்பட்ட இம் மறுமலர்ச்சி வரவேற்கத் தக்கது–வாழ்த்தத் தக்கது.

தக்க அறிவு சான்ற பெருமக்களின் தனி வாழ்விலும் இன்று ஒரு மாற்றம் காண்கிறது. ஆங்கிலம் படித்து ஊழியம் பார்த்து ஊதியம் பெறுதலிலேயே ஈடுபட்டிருக்கும் மனநிலை இன்று பலரிடத்தில் இல்லை. அவர்களும் அருள்நெறி வளர்க்கும் பணியில் பல்வேறு பகுதிகளிலும் சிறந்த முறையில் சமயப் பணி செய்து வருகின்றார்கள். இத்தகு பெரு மக்களால் தமிழகத்தின் சமயத் துறையில் ஏற்பட்டுள்ள மறுமலர்ச்சி மறக்க முடியாததொன்று.

தமிழ் நாட்டில் தமிழ்ப் பெருமக்களது உணர்வில் எழுந்தவை ஆலயங்கள். முத்தமிழ் பயிலும் பள்ளிகளே தேவாலயங்கள். தமிழ் பயிலவேண்டிய ஆலயத்தில் தமிழ் மறக்கப்பட்டது. வேற்றுமொழி இடம் பெற்று வேரூன்றி விட்டது. கடவுளோடு உறவாடிய கன்னித் தமிழ் என்று வரலாறு பேசுவர். நால்வரின் தமிழ் மறையே நானிலத்தை வாழ்விக்கும் என்று எடுத்துப் பேசுவர். எனினும் ஆலயத்தில் தமிழுக்கு இடங்கொடுக்கா திருந்தனர். நெஞ்சந் தொடாத மொழியில் வழிபாடு செய்வது பழக்கத்தின் மூலம் வழக்க மாகிவிட்டது. தமிழ் அன்பர்களுக்கும் தமிழ்த் தொண்டர்

களுக்கும் இந்த நிலை தாங்கொணாத் துயரத்தைத் தந்தது. தேவார, திருவாசகங்கள் முழங்காத ஆலயங்கள் எதற்கு என்ற எண்ணம் இதயங்களில் எதிரொலித்தது. எண்ணம் பாழ்படுமா? இன்று தமிழ் நாட்டில் பல தேவாலயங்களில் அருமைத் தமிழில் அருச்சனையும் வழிபாடும் நடைபெறுகின்றன. தமிழ் நாட்டின் எல்லா ஆலயங்களிலும் முத்தமிழ் முழங்குங் காலம் விரைவில் வர மறுமலர்ச்சி வித்திட்டுள்ளதை யாரும் மறுக்க முடியாது.

தமிழ் நாட்டின் தனித்த பண்பு சமயச் சண்டையில் ஈடுபடாது, பல்வேறு சமயங்களையும் உவப்புடன் ஒப்பக் கருதும் பண்பாடு ஆகும். இது தமிழர்களுக்கு இயற்கை யிலேயே உண்டு. எனினும் இடையில் பல சந்தர்ப்பங்களில் சமய வெறியும் பூசல்களும் எழுந்தன. ஆனால் மறுபடியும் இன்று பிற சமய வெறுப்பின்றிச் சமயம் வளர்க்கப் பெறு கிறது. சமயத்துறையில் வெறுப்பும் காழ்ப்புங்கொள்ளாது பல்வேறு சமயங்களையும் ஒப்பக் கருதும் இன்றைய மறுமலர்ச்சி காலத்திற் கேற்ற மறுமலர்ச்சி; தேவையான மறுமலர்ச்சியுமாகும்.

சமயத்தின் பேரால் சாதிகள் பிறப்பிக்கப் பெற்றது உண்டு; இன்று சாதிகள் தகர்த்தெறியப் பெற்று வருகின்றன. "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற பண்டைத் தமிழனின் குரல் மீண்டும் தமிழகத்தில் ஒலிக்கிறது. வாழ்க்கை யிலும் கைக்கொள்ளப் பெறுகிறது. தமிழினம் ஓர் குலமாக ஒன்றுபட, சமயத்துறையில் ஏற்பட்டுள்ள இந்த மறுமலர்ச்சி வேண்டத் தக்கது; விரும்பத் தக்கது.

இங்ஙனம் தமிழ் நாட்டில் சமயத்துறையில் புதியதொரு பொலிவும் மறுமலர்ச்சியும் ஏற்பட்டுள்ளது. இம் மறுமலர்ச்சி இயக்கத்தில் ஆயிரக்கணக்கான ஆர்வமுடைய இளைஞர்களும், பெருமக்களும் ஈடுபட்டுள்ளனர். இத்தகு மறுமலர்ச்சியால்

தமிழகம் அருள் வெள்ளம் பொங்கித் ததும்பும் திருநாடாக விளங்கப் போகிறது என்று நமது இதயம் சொல்லுகிறது.

## 3. இறைவன்

மனித உயிர்களுக்கு எப்பொழுதும் நல்ல சமயம் தான். சிலருக்கு கொஞ்சம் முன்னே நடக்கலாம்-சிலருக்குக் கொஞ்சம் பின்னே நடக்கலாம். அவ்வளவுதான்.

சமாதானம் செய்து கொள்வதில் நம்மவர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். இனம், மொழி, நாகரிகம் இவைகளை யெல்லாம் கடந்து நமது சமயத்தைக் கொண்டு போயிருந்தால் அது இன்று உலகம் முழுவதும் பரவியிருக்கும்.

வாழ்க்கைக்கு ஒரு நோக்கு இருக்கிறது-உயிர்ப் பொருளாக இருந்தாலும் உயிரில் பொருளாக இருந்தாலும் அறிவில்லாதவைகளாக இருந்தாலும் அதன் அசைவில் ஒரு நோக்கு...இலட்சியம் இருக்கிறது. பொருள், வாழ்க்கையின் இலட்சியமாக இருந்தால் அதைப் பெற்றுவிட்டபோது அமைதிபெற வேண்டும். பெறுகிறோமா? அறிவு, வாழ்க்கையின் இலட்சியமாக இருந்தால் அதைப் பெற்று அமைதி பெறு கிறோமா? புகழ், வாழ்க்கையின் இலட்சியமாக இருந்தால் அது கிடைத்ததும் அமைதி பெறுகிறோமா? இல்லையே!

மனிதன் வாழத்தான் பிறந்திருக்கிறான்-அவன் தன்னலக்காரனாக் இருந்தால்கூட எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் வீட்டிற்குச் சுவர், வயலுக்கு வேலி, ஆற்றுக்குக் கரை போல தன்னலத்திற்கு ஓர் எல்லை வைத்துக் கொள்ள வேண்டும்.

"மனமெனும் குரங்கே" என்றார் இராமலிங்கர். இந்தக் காலத்திற்கு அதுகூட அவ்வளவு பொருத்தமானதாக நமக்குத் தோன்றவில்லை. குரங்கு ஒரு கொம்பிலிருந்து இன்னொரு கொம்பிற்குத் தாவும்போது முன்பு பிடித்துக்கொண்டிருந்த

கொம்பை விட்டுவிட்டுத்தான் தாவும். மனிதன் அப்படி யில்லை. ஒன்றைப் பிடித்துக் கொண்டு, ஓராயிரத்தை ஒருசேரப்பிடிக்க நினைக்கிறானே!

பண்பியல் வழியாகத் தன்னை வழிப்படுத்திக்கொள்வது தான் வழிபாடு; அவ்வாறு வழிபடுத்திக் கொள்ளச் செய்கின்ற பண்பாடுதான் நம்மை உயர்ந்த பாதையில் வழிப்படுத்திக் கொள்வது. ஒழுங்குபடுத்திக் கொள்ள உயிரின் பிரயாணத்தில் நமக்கு வழிபாடு இன்றியமையாதது.

நம்மை இறைவன் படைத்தான் என்பதோ நாமே இறைவன் என்பதோ சரியான கருத்தல்ல. இறைவன் உலக உயிர்களுக்குத் தாய் போன்றவன், தந்தை போன்றவன், தோழன் போன்றவன். "மன்னுயிர்" என்றார் வள்ளுவர். உயிர் நிலையானது. அது அழிவதுமில்லை, பிறப்பதுமில்லை. உயிர் என்றைக்கும் ஓர் உள் பொருள்தான். கற்கண்டு கட்டியில் எப்படி கசப்பு வரும்? ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பாராட்டிப் பேசப்பெற்று வருகிற இறைவன் பல்வேறு குண வேறுபாடுகள்-பண்பியல்புகள் உள்ள மனிதர்களைப் படைக்க முடியுமா? உயிருக்குப் புலன்களை-நுண் ணுடம்பைத் தருவதன் மூலம் அவன் உதவுகின்றான். சிவபெருமான் ஓர் உடன்போக்குத் தோழன், பொன்னை, பொருளை, போகத்தைக் கொடுத்து உடன்வந்து நம்மைத் திருத்தி அழைத்துக்கொண்டு போகின்றான்.

தங்கத்தை உயிருக்கு ஒப்பிடலாம். தங்கத்திற்கு ஒளியுண்டு, விலை மதிப்பு உண்டு. அது மண்ணோடு மண்ணாகத்தான் கிடக்கிறது. அது ஏன் என்று கேட்க முடியுமா? தொழிலாளி-விஞ்ஞானி அதை மண்ணிலிருந்து பிரிக்கின்றான்-தூய்மைப்படுத்துகின்றான்-அது ஒளி பெறு கிறது. இதை வைத்துக்கொண்டு தொழிலாளி தங்கத்தை உண்டாக்கியதாகக் கூறலாமா? அது போலவே, ஆன் மாவைச் சூழ்ந்திருக்கிற ஆணவம் என்ற அழுக்கை இறைவன்

போக்குகின்றான். அதற்காக இறைவன் நம்மைப் படைத்தான் என்று சொல்ல முடியுமா? "இப்பிறவி த்ப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?" என்றார் அப்பரடிகள். இறைவன் அந்தப் பிறவிப் பயத்தை - பிணியைப் போக்குகிறான். மனித சமுதாயம் பரிபூரணத்தை நோக்கிப் போவதுதான் வாழ்க்கை என்பது, அவனை முழு மனிதனாக ஆக்குவதே சமயம். உப்பு, புளி, மிளகாய், கத்தரிக்காய் எல்லாம் மூட்டை மூட்டையாக இருந்தாலும் அவற்றை அப்படியே எப்படிச் சாப்பிட முடியும்? அதை நாக்குக்கும் மூக்குக்கும் சுவையான வகையில் சமைத்துத் தானே சாப்பிட முடியும்; அப்படிச் சமைத்துக் கொடுப்பதுதான் சமையல். அதுபோல மனித வாழ்க்கையை ஒழுங்குபடுத்துவதுதான் சமயம்.

கடவுள் என்பதன் மறுபொருள் பரிபூரணம் என்பது தான். இறைவனை 'குறைவிலா நிலவே! கோதிலா அமுதே' என்கிறார் மாணிக்கவாசகர்.

கடவுள் பயங்கரப்பொருள் அல்ல-கடவுளிடத்து நமக்குப் பரிவும் பக்தியும் வேண்டுமே தவிர பயமும் பக்தியும் இருத்தல் கூடாது. ஆண்டவனைப் பார்த்து அடிமை பயப் படுவதுபோல இறைவனைப் பார்த்து மனிதன் பயப்பட வேண்டியதில்லை.

எண்ணத்தால் சிந்தனையால் நாம் செய்த தீமைகளை நன்மைகளை நாம்தான் அனுபவிக்க வேண்டும் என்பது மனித ஒழுக்க நியதி. இதை உணர்த்தாத நிலையில் மனிதன் எண்ணற்ற ஒழுக்கக் கேடுகளைச் செய்து கொண்டேதான் இருப்பான். அதை உணர்த்துவதற்குத்தானே சமயம்.

நமது சமயம், கடவுளை வாழ்க்கைப் பொருளாக-வாழ் முதலாக-வாழ்வுப் பொருளாகக் கண்டது.

திருஞான சம்பந்தர் தெருவழியே நடந்து சென்றபோது சிவமணம் கமழ்ந்தது. எண்ணத்தில் சிவமணம் ஏற்பட்டு அது

பரவுகிறது. மனத்திற்கு மணமுண்டா என்பது சமீபகாலம்வரை ஐயப்பாடாகத்தான் இருந்தது. இப்போது கொலைகாரனை, திருடனைத் துப்பறியும் நாய் கண்டுபிடித்து விடுகிறது. இதிலிருந்து மனத்திற்கு மணம் உண்டு என்பதை நம்பத்தானே வேண்டும்.

"கயிலாயத்து உச்சியுள்ளான் காளத்தியான்
அவன் என் கண்ணுள்ளானே"

என்றார் மாணிக்கவாசகர்.

கண்ணுளான் என்பதை மறந்து விட்டோம். அவன் எங்கேயோ இருப்பதாக எண்ணுகிறோம். கடவுளை வாழ்த்துவதெல்லாம் நமக்காகத்தானேயன்றி கடவுளுக்காக அல்ல. காற்றைச் சுவாசிப்பது காற்றுக்காகவா? சோற்றைத் தின்பது சோற்றுக்காகவா? எனவே கடவுளை வாழ்த்துவதும் வழிபடுவதும் நமக்காகத்தானேயன்றி கடவுளுக்காக அல்ல.

வளர்ந்து வருகிற அறிவியல் உலகில் தலைசிறந்தவர்களாகக் கருதப்பெறுகிற விஞ்ஞானிகள்கூட கடவுள் நம்பிக்கையை மறுக்கவில்லை. இன்று கண் பாங்கிகள் உள்ளன. கண்தானம் செய்தவர்களின் கண்களை, பார்வையிழந்தவர்களின் இமைகளில் பொருத்தி மீண்டும் கண் ஒளி பெறச் செய்யலாம். ஆனால், பத்துபேரின் கை, கால் முதலிய அவயவங்களை வாங்கி ஒரு மனிதனை உருவாக்க முடியுமா? நாம் உண்ணுகின்ற உணவுதான் பல்வேறு மாறுதல்களுக்கு உள்ளாகி இறுதியில் இரத்தமாகிறது. ஆனால், நாமே அந்த உணவுப் பொருள்கள் யாவற்றையும் ஒரு சேரக் கலந்து எத்தகைய இரசாயன மாறுதல்களாலும் ஒரு சொட்டு இரத்தத்தைப் பிரித்தெடுக்க முடியுமா? இப்படி நாம் தோல்வியுறும்போதுதான் அதனை உருவாக்கும் பேராற்றலை–இறைவனை நாம் உணர்கிறோம்.

அ, ஆ முதலிய தமிழ் எழுத்துக்களைக் கொண்டு தான் திருக்குறள், கம்ப ராமாயணம், சிலப்பதிகாரம் முதலிய

யாவும் உருவாக்கப் பெற்றன என்பதனாலேயே எல்லாம் ஒன்று என்று கூறிவிடலாமா? கூற முடியுமா? அ, ஆ, வை எடுத்து, எண்ணி, சிந்தித்துத் தொகுத்துக் கவிஞன் பெருமை செய்கின்றான். அவன் எடுத்து எண்ணி, சிந்தித்துத் தொகுத்ததற்கேற்ப அந்தக் காவியம், கவிதை சிறப்புப் பெறுகிறது. அது போல, எல்லாவற்றையும் கல் என்று கூறிவிடலாமா? சிற்பி எப்படி எண்ணி சிந்தித்துச் செதுக்கு கின்றானோ அதற்கேற்ப அந்தச் சிலையும் சிறப்புப் பெறுகிறது.

திருக்கோயில்களில் உள்ள மூர்த்திகளைத் திரு உருவங்களாக எண்ணிப் பார்ப்பது பாவம். 'இவன் அவன்' என்ற மேலான நோக்கோடு பார்க்க வேண்டும். அவனையே இறைவனாக எண்ணிக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க வேண்டும்.

செவிப்புலன் இல்லாதவனுக்கு ஒலிபெருக்கி கேட்காது. கண்பார்வை இல்லாதவனுக்கு ஒளி தெரியுமா? அதுபோல நெஞ்சம் தூய்மையாக இருந்தால் இறைவனைக் காணலாம். நெஞ்சமே அவனுக்கு-இறைவனுக்கு இடமாக வேண்டும். இறைவனைக் காண இருதயம் தேவை. அந்த இருதயத்தைப் பிசைந்து கனிவாக்க-காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கத்தான் வழிபாடு. வழிபாட்டால் உள்ளுணர்ச்சி ஆன்ம உணர்வு பெருக வேண்டும். இல்லையானால் வழிபாட்டால் ஒரு பயனுமில்லை. அதற்கு அரற்றி அழுது தொழவேண்டும்.

இறைவனை நாம் எங்கும் தேடிப்போக வேண்டிய தில்லை. இறைவன் நமக்காக இங்கு இறங்கி வருகின்றான். வான்பழித்து இம்மண் புகுந்து நம்மை அவன் ஆட்கொள்ளு கிறான். தினமும் காலையில் வழிபாடு செய்யுங்கள். திருக் குறள் வாழ்க்கைக்கு வழிகாட்டும் நூல் - திருவாசகம் நம்மை உயர்ந்த அனுபவத்திற்கே அழைத்துச் செல்லும் வழிபாட்டு நூல். அதை ஓதுவதும் வழிபடுவதுமே வழிபாடுதான்.

கவிதையைப் பாராட்டுவது கவிஞனுக்கு மரியாதை செலுத்துவது. ஓவியத்தைப் பாராட்டுவது ஓவியனுக்கு மரியாதை செய்வதுபோல, உலக மனிதர்களுக்குச் சேவை செய்வதும், மரியாதை செய்வதும் உலக மக்களின் தலைவனான தாயும் தந்தையுமான இறைவனுக்கு மரியாதை செய்வதுபோல.

தேவைக்கு ஏற்ப அறம் செய்ய வேண்டும். அதை செய்வதற்கு முயற்சிதான் வேண்டும். வாழ்க்கை முழுவதும் வழிபாடாக இருக்க வேண்டும். அந்த வழிபாடு சிறக்க திருக்கோவிலுக்கு வந்து 'அவனை'யே காண வேண்டும். அத்தகைய வழிபாடு பரவினால், 'உலகம் ஒன்றே மனிதர்கள் யாவரும் ஒரே குலம்' 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்ற சங்கநாதம் முழங்கும்.

## 4. காணப் படாத கடவுள்

மக்கள் அறிவும் உணர்வும் பெற்று உலகத்தைப் பார்க்கத் தொடங்கிய காலத்தில் கடவுட் கொள்கை எழுந்தது.

காணப்படும் இவ் வுலகினை ஆக்கி, அழித்து நடாத்து கின்ற ஒரு முதற் பொருளை உணர்ந்தனர் மக்கள். அம் முதற் பொருள், தோற்றமும் ஈறும் இல்லாதது. பேராற்றலும் பேரருளும் உடையது என்றெல்லாம் திருந்திய அறிவின் துணைகொண்டு தெரிந்து தெளிந்தனர். கண்டதைக் கொண்டு காணாததை உணர்தல் அறிவின் இயற்கை. ஆற்றின் புதுநீர்ப் பெருக்கைக் கண்டபொழுது "தொலைவில் மழை பெய்தது" என்றும், கூரையின்மேற் புகையைக் கண்ட காலத்து, "வீட்டினுள் நெருப்புளது" என்றும் உணர்ந்து கூறுதல் மக்கள் இயல்பு. அதுபோல இவ்வுலகின் வியத்தகு அமைதிகளைக் கண்டு, இவைகளை இங்ஙனம் அமைத்த வனான பேரருளும் பேராற்றலும் உடைய முதல்வன் ஒருவன்

உளன் என உணர்தல் அறிவின் இயல்பு. இவ்வுலகின் நடப்பில் காணப்படும் ஒவ்வோர் ஒழுங்கும் முறை பிறழா நிகழ்ச்சியும் முதல்வனது அமைப்பன்றோ! இதனை மணிவாசகப் பெருமானது,

> "............... நாடொறும்
> அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு
> மதியில் தண்மை வைத்தோன் திண்திறல்
> தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
> வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
> காலின் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்
> நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
> மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்று
> எனைப்பல கோடி எனைப்பல பிறவும்
> அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன்......"

என வரும் அருள்மொழிகள் விளக்குகின்றன "சிசிரோ" என்ற உரோம அரசியல் ஞானி, "பொருள்களின் இயற்கை யமைப்பில், மனிதனது மனத்தின் அப்பாற்பட்டதும் ஆராயும் அறிவு புக முடியாததும் ஆகிய ஓர் இயல்பு இருக்கிறது. இத்தகைய இயல்பை ஆக்கித் தருவது மனிதனை விட மேம்பட்டதாதலின் கடவுளைத் தவிர அது வேறு எதுவாக இருக்க முடியும்?" என்று கடவுளுண்மையை மிக அழகாகச் சுட்டிக் காட்டுகின்றார். முத்தொழிற் படுகின்ற இவ்வுலகு காணப்படுகின்ற அறிவற்ற பொருள். எனவே, தானாக முத்தொழிலிற்பட இயலாது. ஆதலின் உலகத்தைத் தொழிற் படுத்துகின்ற தலைவன் ஒருவன் உண்டு. ஆதலால்தான் மெய்கண்ட தேவர் முதலிய பெருமக்கள், "காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுளைக் காண்க" என்று ஆணையிட்டனர்.

> "அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்
> தோற்றிய திதியே ஒடுங்கிய மலத்துளதாம்
> அந்தம் ஆதி என்மனார் புலவர்"

என்பது சிவஞானபோதம். இச் சூத்திரக் கருத்துரையில் "கடவுளை முதலாக உடைத்து இவ்வுலகம்" எனக் கூறினரேனும், காணப்பட்ட உலகைக் கொண்டே கடவுளுண்மை துணிய வேண்டுதல் நோக்கிச் சூத்திரத்தில் "தோற்றிய திதியே" என உலகத்தை முன்னரும் "ஒடுங்கி உளதாம்" எனக் கடவுளைப் பின்னரும் கூறினார்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்று திருவள்ளுவரும் ஓதுகின்றார்.

இக்குறளுக்கு, "காணப்பட்ட உலகத்தால் காணப் படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின், ஆதிபகவன் முதற்றே உலகு என உலகின்மேல் வைத்துக் கூறினார்" என்று பரிமேலழகர் எழுதிய உரையும் உணரத்தக்கது. இங்ஙனம் முதல்வன் உலகின் காரணனாக-நிற்கின்ற மாட்சிமையை அப்பர் பெருமான்,

"தானலாது உலகம் இல்லை"

"எல்லா உலகமும் ஆனாய் நீயே"

"உலகுக் கெல்லாம் வித்தகன் காண்"

என்றெல்லாம் கூறிக் காட்டுகின்றார்கள்.

## 5. கொற்றக் குடை தாழ்க

தமிழ் நாட்டின் வரலாற்றிலும் தமிழ் மொழியின் வரலாற்றிலும் தலைசிறந்தது சங்க காலம். தமிழிலக்கியங்கள் தோன்றி வளர்ந்தது இக்காலத்திலேயாம். சங்க இலக்கியங்கள் தமிழ் மக்களது வாழ்க்கையினின்று எழுந்தன. தமிழினத்தின் வரலாற்றையும், பண்பாட்டையும் அறிந்து கொள்ளத் துணையாய் இருப்பவை சங்க இலக்கியங்களேயாம். தமிழ் மக்கள் அகத்துறை, புறத்துறை ஆகிய இரு துறைகளிலும்

திறம்பட வாழ்ந்தனர். இவ் விரு துறை வாழ்வியல் மக்களிடத்தும் அன்புணர்ச்சியும், அருளுணர்ச்சியும், அற வுணர்ச்சியும் அமைந்து கிடந்தன. மக்கள், நெஞ்சந்தோய்ந்த கடவுட் பற்றும், சிந்தனையிற் சிறந்த வழிபாட்டுணர்ச்சியும், பக்தி உணர்ச்சியும் கொண்டிருந்தனர்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பான் தலைசிறந்த மன்னன். அவன் தென்குமரி நாட்டின் பஃறுளி ஆறு கடல் கொள்ளப்படுவதற்குமுன் இருந்தவன். அதாவது ஏறக்குறைய பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவன். இம் மன்னர் பெருமானைக் காரிகிழார் என்ற சிவநெறிச் செல்வர் பாடியுள்ளார். காரிகிழாரின் பாடல் செவியறிவுறூஉத் துறையில் அமைந்திருக்கிறது. இப்பாடல் வழுதியின் பண்புகளைத் தெளிவுபடக் கூறுகிறது. அதோடு அவனுக்குப் பல அறவுரைகளையும் எடுத்தியம்புகிறது. அவன் வேள்விகள் பல வேட்டவன்; மாற்றாரை அறப் போரால் வென்று மறக்கள வேள்வி புரிந்தோன்; வரையாது கொடுக்கும் வள்ளல். இத்தகு மன்னர் மன்னனுக்குப் புலவர் பெருமகனார் தந்த அறவுரை,

"யாருக்கும் தாழாத கொற்றக் குடை தாழ்க"

என்பது. இது அவரது ஆணை. இது புதினமாய்த் தோன்ற வில்லையா? மன்னனது குடை தாழ்க என்று சொல்வதா?

பிறவா யாக்கைப் பெரியோனாகிய முக்கட் செல்வரின் நகரை (கோயிலை) வலஞ் செய்யத் தாழட்டும் என்றுதான் புலவர் பாடுகின்றார். நகரைப்போல அகன்று பெரிதாய்ச் சிவபெருமானுக்குத் திருக்கோயில் அவ்வளவு பழைய காலத்திலேயே அமைந்திருந்தது என்று இதிலிருந்து தெரிகிறது. சங்க இலக்கியங்களில் திருக்கோயில்களை நகரம் என்றே குறிக்கப்பட்டுள்ளன.

**"கட்வுட் கடிநகர்"** என்று கற்றவர்கள் போற்றும் கலித் தொகை பேசுகிறது. மாலை நேரத்தில் தமது அருமைப்

புதல்வர்களைத் திருக்கோயில் வலஞ்செய்து வரச் செய்கின்ற பழக்கம் அக்காலத்தில் இருந்திருக்கிறது. தலைவி தனது மகனைச் சேடியோடு கடவுட் கடிநகர் வலஞ்செய்து வர அனுப்பிய செய்தியைக் **"கடவுட் கடிநகர்தோறு மிவனை வலங்கொளீஇ வாவெனச் சென்றாய்"** என்று மருதக்கலி எடுத்துரைக்கிறது. யாருக்கும் வணங்காத மன்னன் முழுமுதற் பொருளாம் சிவனுக்கே வணங்கும் இயல்பினன்.

செந்தண்மை பூண்டொழுகும் கடப்பாட்டினராய், நான்மறை ஓதி வாழ்த்தியல் வழங்கு அந்தணர்கள் முன்பு வணங்காமுடி வணங்கட்டும் என்று கூறுகின்றார்.

> "பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
> முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே"

என்பது காரிகிழாரின் வாய்மொழி, சங்க கால மக்களது வாழ்க்கையில் இயல்பிலேயே சமய வாழ்வு அமைந்திருந்தது. வாழ்க்கை வேறு, சமயம் வேறு என்று பகுத்துக்காணும் பொய்மைப் பண்பு பிற்காலத்தைச் சேர்ந்தது. இப்பாடல் தமிழினத்தார் மிகப் பழைய காலத்திலேயே சிவநெறிப் பற்றில் சிறந்து விளங்கி அகன்ற, பெரிய, பரந்த திருக் கோயில்கள் எடுத்து வலஞ்செய்து வாழ்த்தி வணங்கினர் என்பதையும், மெய்யுணர்வு பற்றிய அருமறை நூல்கள் விளங்கி இருந்தன என்பதையும் அருள்நெறி விளக்கஞ் செய்யும் அருளாளர்கள் பலர் வாழ்ந்தனர் என்பதையும் விளக்கி நிற்கின்றது.

## 6. எது உயர்ந்தது

இன்றைய உலகில் மக்களாட்சி வேட்கை எல்லோரிடத்திலும் இருக்கிறது. உலகில் பெரும்பாலான இடங்களிலும் மக்களாட்சியே நடைபெற்று வருகிறது. மக்களாட்சியில் மக்களுக்குள் உயர்வு தாழ்வு இருக்காது.

ஜனநாயகத் தத்துவத்தினுடைய அடிப்படை "மக்களை மக்களாக மதிப்பிடுதல்" என்று ஜான் ஆபிரகாம் லிங்கன் கூறுகின்றார். இது மறுக்க முடியாத தொன்று. மனம் படைத்த மக்களை அன்புணர்ச்சியின்றிப் பண்பாட்டின் நெறியறியாத நிலையிலே கேவலமாக நடத்துதல் கொடுமையிலுங் கொடுமை. ஜனநாயக வேட்கை இன்று எங்கும் பூரணமாக மலர்ந்துள்ளது.

ஜனநாயகத் தத்துவம் தமிழகத்திற்குப் புதியதல்ல. "ஒன்றே குலம்" என்று பல ஆயிர ஆண்டுகளுக்கு முன்னேயே தமிழின் கூறினான். சங்க காலத் தமிழகத்தில் பூரண ஜனநாயக உணர்ச்சி மலர்ந்திருந்தது.

"பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை இகழ்தல் அதனிலு மிலமே"

என்பது தமிழன் கண்ட ஜனநாயகம். ஜனநாயகத் தத்துவம் பூரண அன்பின் அடிப்படையில் தோன்றி வளர்ந்து வளம் பெற்றது. ஜனநாயகத் தத்துவத்தின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் அடிப்படை சமயம். ஜனநாயகத் தத்துவத்தின் தந்தைகளும் காவலர்களும் ஒருபொழுதும் சமய நெறிகளுக்கு மாறுபட்டார்களில்லை.

உண்மைச் சமய வாழ்வு அருகினமையினாலேயே மக்களிடையே இனவெறி தலைகாட்டியது-அதிகார்வெறி வீறிட்டெழுந்தது. இந்நிலை முதிர்ந்த போதுதான் ஜனநாயகக் கொள்கைக்கு உயிரூட்டி அதை நிலைநாட்டும் மனப் பான்மை உலகில் ஓங்கியது. ஆனால் சமயக் கொள்கைக்கு விரோதமாகவோ, அல்லது சமயத்தை அழிக்கும் எண்ணத் துடனோ ஜனநாயகம் தோன்றவில்லை ஜனநாயகத்தை வளர்ப்பதின் மூலம் சமயத்தையும் வளர்த்து உண்மைச் சமய வாழ்வை மக்களிடையே நிலவச் செய்யலாம் என்ற நம்பிக்கையோடு ஜனநாயகத் தத்துவம் தோற்றுவிக்கப் பட்டது என்று கூடச் சொல்லலாம். மனப் பிளவுபட்டுக்

கிடக்கும் சமுதாயத்தை ஒன்றுபடுத்தி எல்லோரும் இன்புற்று வாழப் பணி செய்வதிலே ஜனநாயகத்திலும் சமயக் கொள்கை சாலவும் உயர்ந்தது.

மக்களை மக்களாக மதிக்கச் சொல்லிக் கொடுப்பது ஜனநாயகம். மக்களைக் கடவுளாக மதித்து அன்பு செய்யக் கற்றுக் கொடுப்பது சமயம். தன்னோடு ஒப்பாக நினைப்பதிலும், தன்னிலும் உயர்ந்ததாக மதிப்பிடுதல் பெரிதும் நன்மை பயக்கும் என்பதற்கும் ஐயமுண்டோ?

"மக்களுக்குச் செய்யும் தொண்டு மகேசுவரனுக்குச் செய்யும் தொண்டு" என்பார் திருமூலர். வருவோர்களுக்கெல்லாம் உண்டி கொடுத்தோர், உடைகொடுத்தோர் இன்னும் பிற வேண்டுவன வெல்லாம் செய்தார்கள் சைவச் செல்வர்கள். இத்தகு தொண்டின் விளக்கங் கூறுவதே திருத்தொண்டர் புராணம் எனும் திரு நூல். "எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே" என்பது உண்மைச் சமய வாழ்வு வாழ்ந்த சான்றோரின் திருவுள்ளம். எனவே, மக்களை மக்களாக மதிக்கும் ஜனநாயகமா, மக்களைக் கடவுளாக மதித்து அன்பு செய்யச் சொல்லும் சமயமா, இவற்றுள் எது உயர்ந்தது?

## 7. அன்பும் அருளும்

மக்களை மக்களாக வாழ்விப்பது அன்பும் அருளு மேயாம். நாச சக்திகள் தலைகாட்டாத வண்ணம் தடைசெய்து இன்பத்தை வழங்குவது அன்பும் அருளுமேயாம். மக்களை நன்னெறியில் அழைத்துச் செல்வது அன்பும் அருளுமேயாம். இவ்விரு அருமை மிகு உணர்ச்சிகளை மக்கள் இழப்பராயின் நரகத்தின் நிரந்தர உரிமையாளர்களாகி விடுகின்றார்கள். "அருளும், அன்பும் நீக்கி நீங்கா நிரயம் கொள்பவர்" என்று புறநானூறு பேசுகின்றது. அத்தகையாரோடு இணங்கற்க

என்று ஆணையிடுகின்றது. தேவையை நிறைவு செய்து கொள்வதற்காகக்கூட இப் பண்புணர்ச்சிகளைக் கைவிட லாகாது. அங்ஙனம் கைவிடுபவர்கள் அறிவுடையவர் களல்லர் என்று தமிழ்மகள் கூறுகின்றாள். தலைவன் பொருள்வயிற் பிரியப் போகின்றான் என்ற செய்தியைக் கேட்ட தலைவி, தோழியிடம் அறம் பேசுகின்றாள். அருளையும் அன்பையும் துறந்து பொருளீட்டுதல் தமிழ்ப் பண்பாடல்ல, அறிவுடைமையுமல்ல.

> "அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
> புல்லார் புரள விடல்"

என்பது தமிழ்மறை. "இதனை அறிந்தும் தலைவர் பொருள் வயின் அகலுவாராயின், அவர் அறிவுடையவரே ஆகுக," என்று இகழ்ச்சிக் குறிப்பில் பேசுகின்றாள் தலைமகள்.

> "அருளுமன்பு நீக்கித் துணை துறந்து
> பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயின்
> உரவோ ருரவோ ராக"

என்பது பாடல். அருளும் அன்பும் தவழ்ந்த வாழ்க்கையே வாழ்க்கை என்று பேசும் தமிழ் நாகரிகத்தை என்னென்போம்!

உலகத் தொடர்பு நிறைந்த வாழ்க்கையில் எங்கும் அன்பைக் கண்டு, அன்பைச் செலுத்துவது அருள். தொடர் புடையார்மாட்டு எழும் பரிவுணர்ச்சி அன்பு. ஆனால், கடவுட் காட்சியில் கலந்த வாழ்க்கையில் வேறொரு துறை யாக அமைந்து விளக்கம் நல்குகிறது. அங்கு முழுமுதற் பொருள் உயிர்கள் மாட்டுக் காட்டும் பரிவுணர்ச்சி அருள். அவ் அருளைப் பெறுவதற்காக ஆண்டவன்பால் உயிர்கள் கொள்ளும் பரிவே அன்பு. அவ் அன்பும் அருளும் கலக்கின்ற பொழுது அறம் தோன்றுகிறது. இதனை,

"யாஅ மிரப்பவை பொருளும் பொன்னும் போகமும்
அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர் கடம்பின் ஒலிதாரோயே"

என்று பரிபாடல் விளக்குகிறது. **"உன்தன் வார் கழற்கு அன்பு எனக்கு நிரந்தரமாய் அருளாய் நின்னை ஏத்த முழுவதுமே"** என்பது மணிவாசகர் மணி மொழி. அருளின்றி அன்பில்லை; அன்பின்றி அருளில்லை. இவ்விரண்டு மின்றி அறம் இல்லை. எனவே, அருளும் அன்பும் கொண்டு அறம் பல செய்து வாழ முயல்வோமாக!

## 8. வள்ளுவரும் வாதவூரரும்

"ஒன்றென்றிரு தெய்வ முண்டென்றிரு" என்ற உண்மையை உள்ளவாறு உணர்த்தியது நமது தமிழ் நாடே யாகும்.

"தெய்வந் தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின்" என்று எடுத்துச் சொல்லிய நாடு நம் தமிழகமே யாகும். நேற்றைய பாரதியார்கூடப் "பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்" என்று பறைசாற்றினார். தமிழர்களின் கலைக் களஞ்சியங்களிலே, படித்தவர் போற்றும் பத்துப்பாட்டிலே, புலவர்கள் போற்றும் புறநானூற்றிலே கற்றோர் ஏத்தும் கலித்தொகையிலே, அறிஞர்கள் போற்றும் அகநானூற்றிலே, பண்புடையோர் போற்றும் பரிபாடலிலே, குவலயத்தார் கொண்டாடும் குறந்தொகையிலே, கடவுள் மணமும் சிவம் எனும் தேனும் தேங்கிநின்று ஆரா இன்பத்தைத் தருகின்றது. இத்தகைய தெய்வத் தமிழ் நாட்டிலே பிறந்த தலைசிறந்த உலக கவிகள்தான் நமது வள்ளுவரும் வாதவூரரும். அவர்கள் நிறைமொழி மாந்தர்கள். அவர்கள் வாய்மொழி மறை

மொழிகளாகும். மறைமட்டும் அன்று. அவர்களது நூல் சிறந்த இலக்கியமுமாகும்.

**அட்சன்** என்ற ஆங்கிலப் புலவர்; "மொழியின் வாயிலாக வாழ்க்கை முறையினை எடுத்துக்காட்டுவது இலக்கியமாகும்."* என்று கூறியுள்ளார். இந்த முறையில் இருபுலவர்களும் வாழும் வகையை வகைபடக் கூறியுள்ளார்கள். அவர்கள் தாம் கண்டதை, அப்படியே உள்ளதை உள்ள வாறே கூறியுள்ளார்கள். சிறந்த கருத்துக்கள் நிறைந்திருக் கின்றன. **விஸ்வகண்ட் மார்லி** என்ற பேராசிரியர் "இலக்கியம் மக்களுக்கு நல்லொழுக்கம் புகட்டுவதில் ஒரு சிறந்த கருவியாக விளங்குகிறது†" எனக் கூறியாங்கு **'திருக்குறளும் திருவாசகமும்' ஈடும் இணையு மற்றிருக்கின்றன.** இந்த நிலையில் இருபெரு மக்களது நூல்களும் சாலச் சிறந்தனவாகத் திகழ்கின்றன.

இருவரும் உலக மகாகவிகள். அவர்களது வாய் மொழிகள் உலகத்தவரால் போற்றப்பட்டுப் பிறமொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆனால் இன்றையத் தமிழகத்திலே வள்ளுவரை அறிந்திருப்பாரே அன்றி வாத வூரரை அறிந்திருக்க மாட்டார்கள். வள்ளுவரைக்கூட அவருடைய சுயரூபத்தில் பார்த்திருக்கமாட்டார்கள் என்றே சொல்லவேண்டும். வள்ளுவரை நாத்திகராக ஆக்கப் பெரிதும் முயல்கின்றனர். முதல் நான்கு அதிகாரங்கள் அவர் இயற்றியதல்ல என்று அறியாமையால் அரற்றுகின்றனர். வள்ளுவர் வாய்மொழியில் தொட்ட தொட்ட இடமெல்லாம் தெய்வ மணம் வீசுவதை அறியாமையின் காரணமாக அறியாமல் திகைத்து நிற்கின்றனர். ஆனால் இந்த அளவுக்கு

---

* Literature is thus fundamentally an expression of life through the medium of Language.

† Literature is one of the most powerful instruments for forming character.

வாதவூரரைப் பிடிக்கவும் இல்லை. அவரது அறிவுருவைச் சிதைக்கவும் இல்லை. "இங்கே தமிழ் மாணவன் புதைக்கப் பட்டுக் கிடக்கின்றான்" (Here lies a student of Tamil) என்று புதைகுழியில் பிறநாட்டுப் பெரியாராகிய போப் ஐயரை எழுதச் செய்தது திருவாசகமே யாகும். நோபில் பரிசு பெற்ற கவி ரவீந்திரநாத் தாகூருக்குத் 'தமிழ் படிக்க வேண்டும்' என்ற ஆசையை எழுப்பியதும் திருவாசகமே யாகும். வள்ளுவர் குறளும் வாதவூரரது வாசகமும் தமிழரின் தனிப் பெரும் வைப்பு; தமிழரின் கண்கள்.

வள்ளுவரும் வாதவூரரும் சமய நெறியில் ஒத்த கொள்கையினர். வள்ளுவரின் சமயம் பலப்படச் பேசப்படு கின்றது. தமிழரின் சமயம் **'சைவத் திருநெறி' என்பதை ஸர் ஜான் மார்ஷல், போப் ஐயர்** போன்ற மேனாட்டறிஞர்களுடைய ஆராய்ச்சியின் முடிபால் அறிந்துகொண்டமையாலும், சைவ நூற் கொள்கைகட்கு இணங்க முதற்கடவுளை 'மாதொரு பாகன்' என்னும் பொருட்பட 'ஆதிபகவன்' என்று கூறினமை யானும், சைவத்திரு நெறியின்கண் பேசப்படும் திருவடிப் பேற்றைப் பத்து குறள்களுள் ஏழு குறள்களில் வலியுறுத்தி யுள்ளமை யானும், சைவப் பெருமக்களை அழைப்பதுபோல ஆசிரியரை 'நாயனார்' என்று அழைக்கின்றமை யானும், அவரது திருவுரு சைவத் திருவேடப் பொலிவுடன் விளங்குகின்றமையானும் வள்ளுவர் சைவத்திருநெறியினர் என்றே நாம் கொள்ள வேண்டியிருக்கின்றது. வாதவூரரைப் பற்றி யாவருக்கும் இந்த விஷயத்தில் ஐயமே இல்லை. இனி அவர்களது வாய்மொழிகளைக் கொண்டு அவர்களைப் பார்ப்போம்.

வள்ளுவர் வாய்மையின் பயன் கடவுளைத் தொழுதல் என்று கூறினார்.

> "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
> நற்றா டொழாஅ ரெனின்."

என்பது திருக்குறள். வள்ளுவர் நயமான முறையில் கடவுளைத் தொழாவிடின் கல்விக்குப் பயனில்லை என்று கூறினார். வாதவூரர் இறைவனை வணங்காதவர்கள் 'அறிவில்லாதவர்கள்' என்று சொல்லுகின்றார்.

> "தறிசெறி களிறும் அஞ்சேன்
> தழல்விழி உழுவை அஞ்சேன்
> வெறிகமழ் சடையன் அப்பன்
> விண்ணவர் நண்ணா மாட்டாச்
> செறிதரு கழல்கள் ஏத்திச்
> சிறந்தினி திருக்க மாட்டா
> அறிவிலா தவரைக் கண்டால்
> அம்மநாம் அஞ்சு மாறே."

என்பது திருவாசகம்.

இறைவனது இணையடிகளைப் பற்றிப் பேசுதலே வினைத்துன்பத்திலிருந்து விடுபட வழி என்பதை வள்ளுவர்,

> "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

என்று கூறுகின்றார். இக்கருத்தையே மாணிக்கவாசகர்.

> "ஊழ் ஊழ் ஓங்கிய நங்கள்,
> இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்து"

என்று கூறிகின்றார். இறைவனது திருவருட்பெருக்கு இரு வினைகளாகிய பெரு மரங்களை வேருடன் பறித்தெறி கின்றது என்பது அடிகளின் கருத்து. வள்ளுவர் வினை இரண்டும் சேராது என்று அடக்கமும் அமைதியும் நிறைந்த முறையால் கூறுகின்றார். வாதவூரர் ஆண்மையோடு வீறுகொள் உணர்ச்சியோடு,

> "வல்வினையின் வாயில் பொடியட்டிப்
> பூவல்லி கொய்யாமோ?"

என்று அருளுகின்றார். பேச்சில் மட்டும்தானா? இல்லை. தம் பத்தியின் மேம்பாட்டால், தாம் வினையிலியாக ஆனதைத் தானே கூறியுள்ளார்.

> "சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
> கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
> வந்தனையுமம் மலர்க்கே ஆக்கி வாக்குன்
> மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
> வந்தனைஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
> மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
> தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
> தனிச்சுடரே இரண்டுமிலித் தமிய னேற்கே."

என்று அருளுகிறார் தாம் வல்வினையினின்றும் விடுபட்டதை.

வள்ளுவர் முதற்கடவுளைத் "தனக்குவமை இல்லாதான்" என்று கூறுகின்றார். இக்கருத்தை அடிகள்,

> "முன்னோன் காண்க முழுதோன் காண்க
> தன்நேர் இல்லோன் தானே காண்க"

என்று அழகாகக் கூறி விளக்குகின்றார்கள். சிவபெருமானது தனக்கு உவமை இல்லாத திறனை இளங்கோவடிகள், "விண்ணோர் அமுது உண்டுஞ் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சு உண்டு இருந்தருள் செய்குவாய்," என்றும், "பிறவா யாக்கைப் பெரியோன்" என்றும் கூறி விளக்குகின்றார்.

பிறவிப்பிணிக்கு மருந்து இறைவனடி சேர்தலே என்று வள்ளுவர் கூறுகின்றார்.

> "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவ னடிசேரா தார்."

என்பது திருக்குறள். இக்கருத்தை அடிகள்,

"பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க"

என்றும்,

"மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி"

என்றும்,

"பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்"

என்றும் அருளியுள்ளார்கள்.

வள்ளுவர் 'அந்தணர்' என்ற சொல்லை 'அருளாளார்' என்ற பொருள்பற்றித் துறவிகளுக்கு ஏற்றிச்சொல்லுகின்றார். இப்பொருளிலேயே அடிகளும் 'அந்தணர்' என்ற சொல்லைக் கையாண்டுள்ளார்.

"அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்."

என்பது குறள்.

"தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனாய் அறைகூறி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்கா ணம்மானாய்"

என்கிறார் வாதவூரர். எல்லா உயிர்களையும் கருணையின் மேலீட்டால் வலிய அழைத்து வீட்டினை நல்கும் பேரருளாளன் ஆண்டவன் என்பது அடிகளின் கருத்து.

அன்பில்லாத வாழ்க்கை பாலைநிலத்தின்கண் வற்றல் மரம் தளிர்த்தை ஒக்கும் என்றும் கூறுகின்றார் வள்ளுவர். வற்றல் மரமே தளிர்க்காது. அதுவும் பாலை நிலைத்தின்கண் எங்ஙனம் தளிர்க்க முடியும்? எனவே, வற்றல் மரம் பயனற்றது என்று கூறுகின்றார்.

"அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று."

என்பது திருக்குறள். இந்த 'வற்றல் மரத்தையே' அடிகளும்,

"கூடிக்கூடி உன்அடியார்
குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடிவாடி வழியற்றேன்
வற்றல் மரம்போல் நிற்பேனோ"

என்று ஆண்டவனிடம் முறையிடுகின்றார். பயனற்ற வற்றல் மரநிலையிலிருந்து தம்மை உய்விக்கத் தம் அகத்து உள்ளத்தை உருக்கிடும் அன்பினைத் தந்தருளுமாறு இறைஞ்சுகின்றார்.

"ஊடிஊடி உடையாயொடு
கலந்துள் ளுருகிப் பெருகிநெக்
காடிஆடி ஆனந்தம்
அதுவேஆக அருள்கலந்தே"

என்பது அடிகளின் அருண்மொழி.

இங்ஙனம் ஊனெலாம் நின்றுருக, தூய அன்புறு பக்தியுடன் வணங்க முன்னைத் தவம் இருக்க வேண்டும் என்பதை வள்ளுவர்,

"தவமுந் தவமுடையார்க் காகும்"

என்று கூறுகின்றார். இக்கருத்தை அடிகள், செறிதரு தவத்தின் பயனாகிய அருளின் மேல்வைத்து இறைவனை வணங்க அவன் அருள் வேண்டும் என்பதாக்கி,

"அவனரு ளாலே அவன்றாள் வணங்கி"

என்று கூறி விளக்குகின்றார்கள்.

தூய தவத்தால், அன்புறு பத்தியால் விரும்புவதை எல்லாம் பெறலாம் என்பது வள்ளுவர் கருத்து.

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்"

என்பது திருக்குறள். இக்கருத்தை அடிகள்,

*"பரந்துபல் ஆய்மலர் இட்டுமுட் டாதுஅடி யேஇறைஞ்சி*
*இரந்தஎல் லாம்எமக்கேபெற லாம்என்னும் அன்பர் உள்ளம்*
*கரந்துநில் லாக்கள்வ னேநின்தன் வார்கழற்கு அன்பு எனக்கு*
*நிரந்தர மாய்அரு ளாய்நின்னை ஏத்த முழுவதுமே"*

என்று மிக அழகாக அருளியுள்ளார்கள்.

தவத்தின் பயனால் 'நான்' என்னும் ஆணவமலத்தின் காரியமாகிய அகங்காரம் ஒழிய வேண்டும் என்பதும், அங்ஙனம் ஒழியப் பெற்றால் மன்னுயிர்கள் எல்லாம் தொழும் என்பதும் வள்ளுவர் கருத்து.

*"தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய*
*மன்னுயி ரெல்லாந் தொழும்"*

என்பது திருக்குறள். அடிகள் இக்கருத்தை,

*"நாம் ஒழிந்து சிவமானவா பாடித்*
*தெள்ளேணங் கொட்டாமோ?"*

என்றும் அருளியுள்ளார்கள். அதாவது சீவபோதம் (தற்போதம்) நீங்கித் திருவருளில் தோய்ந்து எல்லாவற்றையும் திருவருளாகவே பாவித்தல். இதனைக் குமரகுருபர அடிகளார், இலக்கண வாய்பாட்டில் வைத்து மிக அழகாக, "பின்னம் ஓர் மாத்திரை குறுகினோன் பின்" என்று கூறினார்கள்.

உண்மையான தவமும் பக்தியும் இல்லாமல் வேடத்தாலும் செயலாலும் பக்தியுடையார் போலப் பிறருக்குக் காட்டித் திரிபவர் பலர் உளர் என்பது வள்ளுவர் கருத்து.

*"மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி*
*மறைந்தொழுகும் மாந்தர் பலர்."*

என்பது திருக்குறள். இக்கருத்தை அடிகள் மிக அழகாகக் கூறி நம்மை மகிழ்விக்கின்றார். வள்ளுவர் நடிக்கின்றனர் என்று கூறி நிறுத்தினார். அடிகள் நடிப்பதோடன்றி, உண்மைத் தவத்தினுடைய பயனைப்பெற விரும்பி வினாவுகின்றார்கள் என்று கூறுகின்றார்.

"நாடகத்தால் உன்னடியார் போல்நடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்

என்பது அடிகளின் அருண்மொழி.

உலகப் பற்றும், வாதனைகளும் நீங்கப் பற்றற்ற பரம் பொருளைப் பற்றிக் கொள்ளவேண்டும் என்பது வள்ளுவர் கருத்து.

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றை
பற்றுக பற்று விடற்கு"

என்பது வள்ளுவர் வாக்கு. அடிகள் இக்கருத்தை,

"கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வு அறுப்பான் தொல்புகழே
பற்றிஇப் பாசத்தைப் பற்றற்றநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய்."

என்றும்,

"பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ!"

என்றும் அருளியிருப்பன அறிந்து இன்புறுத்தக்கன.

அல்லற்பிறவிக்குக் காரணம் ஆசை என்பதே பெருமக்களது கருத்து. "ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்" என்று அறிவுரை கூறுகின்றார் திருமூலர். அவாவே பிறப்புக்கு விதை என்பதை வள்ளுவர்,

கு.XV.13.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

என்பது திருக்குறள். இக்கருத்தை அடிகள்,

"......அவா வெள்ளக் கள்வனேனை
மாசற்ற மணிக்குன்றே எந்தாய் அந்தோ
என்னைநீ ஆட்கொண்ட வண்ணந் தானே"

என்று அருளியுள்ளார்கள்.

அல்லற் பிறவி நீங்கிப் பேரா இயற்கையைப் பெற வேண்டும் என்பதே வள்ளுவர் குறிக்கோள். இதனை ஆசிரியர்,

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்டா வரும்"

என்று கூறுகின்றார். இக்கருத்தையே அடிகள், தாம் எத்தகைய இன்ப வாழ்வையும் வேண்டாது, பிறப்பறுக்கும்படியாகவே இறைஞ்சுகின்றதாகக் கூறுகின்றார்.

"வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து
தம்மைஎல்லாம் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரம்முரலும்
தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான்
யானும் உன்னைப் பரவுவனே"

என்பது அடிகளின் அருண்மொழி.

அருளொடும் அன்பொடும் வாராத செல்வம் எவ்வளவு உயர்ந்ததாக இருப்பினும் கொள்ளுதல் கூடாது என்பது வள்ளுவர் கருத்து.

"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்"

என்பது திருக்குறள். ஆண்டவன் அடியாரைக் கருதிக் கொள்வது அருளாகும். அடியார் அவ்வருளைப் பெறக் கொள்வது அன்பாகும். இதனைத்தான் அடிகள் பல இடங் களில் விதந்து கூறியுள்ளார். இக்கருத்தை,

"உன்றன் வார்கழற்கு அன்பு எனக்கு
நிரந்தரமாய் அருளாய் நின்னைஏத்த முழுவதுமே"

என்று வேண்டுகிறார். இஃதன்றி வேறு எவ்வகை இன்பத்தையும் விரும்பவில்லை.

"கொள்ளேன் புரந்தரன்
மால்அயன் வாழ்வு குடிகெடினும்"

என்றும்,

"வானேயும் பெறில் வேண்டேன்"

என்றும்,

"வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம்
வேண்டேன் மண்ணும்விண்ணும்"

என்றும் கூறுகின்றார். மேலும், 'திருவருளால் நரகம் புக நேரினும் வருந்தேன்' என்றும் கூறுகிறார்.

"நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே
இருக்கப்பெறின்"

என்று கூறுகின்றார்.

அறிஞர்களால் உண்டு என்று பேசப்படுகின்ற கடவுள் மறுபிறப்பு, இருவினை முதலியன, இல்லை என்று சொல்லும் நாத்திகர்கள் வள்ளுவர் காலத்திலும் இருந்திருக்கிறார்கள் அவர்களை வள்ளுவர் 'பேய்' என்று கூறுகின்றார்.

"உலகத்தார் உண்டுஎன்பது இல்லென்பான், வையத்து
அலகையா வைக்கப் படும்"

என்பது திருக்குறள். இவ்வகையினரை வாதவூரர் 'மூர்க்கர்' என்றும், 'ஆணலாதவர்' என்றும், கூறுகிறார். நாத்திகர்களை,

"ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்"

என்று குறிக்கின்றார். அவர்களுடைய இணக்கம் தீயது என்பதை,

"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனை"

என்றும்,

"வாணிலாங் கண்கள் சோர
வாழ்த்திநின் றேத்த மாட்டா
ஆணலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே"

என்று கூறி விளக்குகின்றார்.

வானுலக வாழ்வினும் மேலாயதே வீட்டுலக வாழ்வு என்பது வள்ளுவர் கருத்தே இக்கருத்து சைவத் திருமுறை களிலும் சிறப்பாக அடிகளின் வாசகத்திலும் பரந்துகிடக் கின்றது.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"

என்று வானுலக வாழ்வையும்,

"யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்"

என்று வீட்டின்பத்தையும் குறிக்கின்றார் வள்ளுவர். 'யான்' என்ற அகப்பற்றும் 'எனது' என்ற புறப்பற்றும் அழிதலே

வீட்டினை எய்துதற்குரிய வழி என்று வள்ளுவர் குறிக்கின்றார். இக்கருத்தை அடிகள்,

"மேவும் உன்தன் அடியாருள்
விரும்பி யானும் மெய்ம்மையே
காவி சேரும் கயற்கண்ணாள்
பங்கா உன்தன் கருணையினால்
பாவி யேற்கும் உண்டாமோ
பரமா னந்தப் பழங்கடல் சேர்ந்(து)
ஆவி ஆக்கை யான்எனது என்(று)
யாதும் இன்றி அறிதலே"

என்று கூறி விளக்குகின்றார்.

இதுவரையில் வள்ளுவர் நூலின் முதல் இரண்டு பால் களைக் கொண்டு வாதவூரரது திருவாசகத்தைப் பார்த்தோம். இனி, வள்ளுவர் நூலின் இன்பத்துப் பாலையும் வாதவூரரது இன்பப் பெரு நூலாகிய திருக்கோவையாரையும் பார்ப்போம். வள்ளுவர் தமிழர் நாகரிகத்திற்கேற்ப அகனைந் திணைக்கண் பாற்பட்ட இன்பத்தைக் காமத்துப் பாலின்கண் விரித்துரைக்கின்றார். அடிகள் வாதவூரர் தமிழரின் உயர்ந்த நாகரிகத்தின் அம்சமாகிய பேரின்ப வாழ்வை அகத்துறை இலக்கணத்தில் வைத்து விளக்கிக் காட்டுகின்றார். இருப்பினும், இருவரிடையேயும் ஒத்த கருத்துகள் உண்டு என்பதை ஒரு குறளைக் கொண்டு கூறிவிட்டு முடித்துக் கொள்கிறோம்.

தலைமகனைப் பிரிந்த தலைமகள் பெரிதும் வருந்து கின்றாள். தலைவியின் துயரத்தைக் கண்ட தோழி, சிறிது நாழி மறக்கவேண்டும் என்று வற்புறுத்துகின்றாள். இதைக் கேட்ட தலைவி, "தலைவரை மறந்தால், நீத்தே விடவேண்டும். அப்படியல்லாது, இப்பொழுது நினைத்திருந்தால் மறுமைக் கண் அவரை எய்தி இன்புறலாம்; அதனால் மறக்க மாட்டேன்," என்று கூறுகின்றாள்.

*"இலங்கிழாய்! இன்று மறப்பின்என் தோள்மேல்*
*கலம்கழியும் காரிகை நீத்து"*

என்பது திருக்குறள். இக்கருத்தை அடிகள் அப்படியே ஆண்டவன்பால் வைத்துக் கூறியிருக்கும் பாடலைப் படித்துப் படித்து இன்புற வேண்டியிருக்கிறது.

*"குறப்பாவை நின்குழல் வேங்கையம்*
*போதொடு கோங்கம்விராய்*
*நறப்பா டலம்புனை வார்நினை*
*வார்தம் பிரான்புலியூர்*
*மறப்பான் அடுப்பதொர் தீவினை*
*வந்திடிற் சென்றுசென்று*
*பிறப்பான் அடுப்பினும் பின்னுந்துன்*
*னத்தகும் பெற்றியரே."*

என்ற பாடல் படிக்கின்ற பொழுதெல்லாம் இன்ப உணர்ச்சியை வாரிவாரி வழங்குகின்றது. ஒரு தரம் புலியூரை நினையும் வாய்ப்பைப் பெற்றவர்கள், மறக்கும்படியாக ஒரு தீவினை வந்து மூண்டாலும், பல பிறப்புக்களிற் பிறந்தாலும், பின்னும் சென்று சேரத் தகும் தன்மையையுடையவர் என்பது கருத்து.

இங்ஙனமாக, வள்ளுவரும் வாதவூரரும் கடவுள் ஒருவர் உண்டு; அவர் தனக்குவமையில்லாதவர்; அவரை வணங்குதலே மானிட வாழ்வின் பயன்; அன்பும் அருளுமே செல்வம்; மற்றச் செல்வங்கள் செல்வங்களன்று; பிறவி நீங்க வேண்டும்; வீட்டின்பமே சிறந்த இன்பம் என்று ஒத்த கருத்தினராக ஓதியுள்ள மெய்ம்மொழிகளை உள்ளவாறு உணர்ந்து பயன் பெறுதலே நமது கடமை.

## 9. நான் அறிவேன்

'நான் அறிவேன்' என்றவுடன் பயப்படுகிறீர்களா? 'காட்டிக் கொடுத்து விடுவேனோ' என்று கவலைப்படுகிறீர்களா? அப்படியெல்லாம் ஒன்றும் நேரிடாது; பயப்படாதீர்கள்; தைரியமாகக் கட்டுரையைப் படியுங்கள்.

'போதாமை' என்ற மனப் பண்பு பெரும்பாலான மக்களிடையே பரவியுள்ளது. 'போதும்' என்ற பண்பு ஒரு சிலரிடத்தில்தான் உள்ளது. 'போதும் என்ற மனமே பொன்செய்யும் மருந்து' என்பது ஏட்டளவில்தான்; செயலில் இல்லை. அதனாலன்றோ **எமர்சன்,** "போதுமென்ற மனத்தை எவ்வாறு அடைவது என்று காட்டுவதும், எவ்வாறு இன்னும் பெருக்கிக்கொள்வது என்ற எண்ணத்தை அழிப்பதுமே தூய பெருநெறி" என்றார்.

'வேண்டாமை என்னும் செருக்கு' என்றார் திருவள்ளுவரும். 'ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்' என்றார் திருமூலரும். 'போதும் என்று திருப்தியடைந்த பூரண மனந்தான் பூரண ஐசுவரியமாகும்,' என்றார் நபிகள் நாயகம். 'போதும் என்ற மனோபாவத்தோடு பறவைகளைப் போல வாழ வேண்டும்,' என்றார் மகாத்மா. ஆகவே, 'போதாமை' என்ற மனோநிலை எல்லோராலும் வெறுக்கப்படுகிறது. 'இன்னும் வேண்டும்' என்ற இப்பிணிக்கு மருந்து நீதியும் நடுவு நிலையுமே ஆகும்.

'போதாது' என்று சொல்லுகிறவர்களிற் சிலர் இயற்கையாகவே தேவையுள்ள நிலையில் இருப்பார்கள். அவர்கள் கடமைகளைச் செய்தும் பெறவேண்டியவற்றைப் பெறாது வருந்துவார்கள். 'உழைத்ததின் பயனைக் காணோமே' என்று கவலைப்படுவார்கள். அவர்கள் நிலை இரங்கத் தக்கதொன்றே யாம்.

பெரும்பாலோர் கடமையைச் செய்யமாட்டார்கள். செய்யவேண்டியவற்றைச் செய்யமாட்டார்கள். கடமையைச் செய்யாமலே உரிமையைப் பெற முயல்வார்கள். கடமை என்பதொன்று உண்டு என்பதையே மறந்துவிடுவார்கள். அத்தகையாருள் ஒருவர்தான், 'நான் அறிவேன்' என்றார். 'பெறவேண்டியவற்றின் பாக்கியை நான் அறிவேன்' என்று கூறுகின்றார். அவரது ஆசை தீராத ஆசையாக இருக்கிறது.

அன்பரின் ஆசை வெறுக்கத் தக்கது அல்ல; தீயது அல்ல; போற்றத் தக்கது; புகழத் தக்கது. அன்பரின் 'இன்னும் வேண்டும்' என்ற ஆசை பொன்னைப் பற்றியது அல்ல; பொருளைப் பற்றியது அல்ல. பேராவியற்கையைப் பற்றியது. இன்பத்துள் இன்பத்தைப் பற்றியது. அறவாழி அந்தணன் தாள் சேர்தலைப் பற்றியது. அன்பரின் விருப்பம் சற்றே நிறைவேறியது. ஆண்டவனைக் கண்டார்: கண்குளிரக் கண்டார். மாலமுதப் பெருங்கடலை மண்ணிலே கண்டார். பிறப்பிறப்பை நீக்கும் பெரு மருந்தைக் கண்டார். துன்பம் துடைக்கும் தூய சோதியைக் கண்டார். நெஞ்சத்தைக் கோயிலாகக் கொண்ட நிமலனைக் கண்டார். அகம் நெகக் கண்டார்; அன்புருகக் கண்டார். இன்பப் பெருவெள்ளத்தில் ஆழ்ந்தார். ஆனால் எல்லாம் சிறிது காலம். கண்ணால் கண்ட திரு உரு மறைந்தது. கண்ணால் கண்ட இறைவன் மறைந்தான். அன்பரைத் தனியே விட்டுச் சென்றான். இன்பத்தின் அனுபவம் இடையறவுப்பட்டது. பிரிவினால் வருந்துகின்றார் அன்பர்; புலம்புகின்றார். பிரிவுத் துன்பம் கொடிய துன்பம் அல்லவா? 'இனியார்ப் பிரிவு இன்னாது' என்பது பொய்யா மொழியல்லவா? பிரிவாற்றாமையால் திண்வரை உருளவும், தீயில் வீழ்கவும் செழுங்கடல் புகவும் எண்ணுகின்றார்.

> "உன்றன் வார்கழற்கு அன்பெனக்கு
> நிரந்தரமாய் அருளாய்"

என்று இரந்து வேண்டுகின்றார்.

திணையின் பாகமும் பிரியாமலிருக்க வேண்டுகின்றார். இந்த உரிமையைக் கேட்கின்றபொழுது அன்பர் தமது நிலையைச் சிந்தித்துப் பார்க்கின்றார். நீதியுணர்ச்சியோடு, நடுவு நிலைமை உள்ளத்தோடு சிந்தித்துப் பார்க்கின்றார். அறனறிந்து ஆன்றமைந்த அமைச்சரல்லவா அவர்? தெரிதலும் தேர்ந்து செயலும் வல்ல அமைச்சர் அல்லவா? சிந்தனையின் முடிவில் அவர் தம்மை உணர்ந்தார். தம் குறையை உணர்ந்தார். தமது குறையை,

"தண்மலரிட்டு முட்டா திறைஞ்சேன்"

"ஆமாறுன்திருவடிக்கே அகங்குழையேன்; அன்புருகேன்"

"விரையார்ந்த மலர்தூவேன்; வியந்தலறேன்
நயந்துருகேன்"

என்று சொல்லுகின்றார். 'இருப்பினும் திருவடி இன்பத்தைப் பெற விரும்புகிறேன். கடமையைச் செய்யாது உரிமையைப் பெற விரும்புகிறேன். என்னே அதிசயம்?' என்று சிந்திக் கின்றார் அன்பர்.

'எச்சம் அறிவேன் நான் எனக்கு இருக்கின்றதை அறியேன்' என்பது மாணிக்கவாசகர் வாக்கு.

"கடவுள் உண்டா? கடவுள் என்று ஒன்று இருந்தால் ஒருவர் துன்பத்தையும் மற்றவர் இன்பத்தையும் அனுமதிப் பானேன்? எத்துணையோ கோயில்களில் பூசைகள் நடந்தும் நாட்டைப் பஞ்சம் நலிப்பானேன்?" என்றெல்லாம் கேட்கின்ற அன்பர்களுக்கு அடிகளின் சிந்தனை பதில் கூறுகின்றது.

## 10. சேக்கிழார் நெறி

சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் வரலாற்றுக் காப்பியம், புராணிக காலத்துச் செல்வாக்கின் காரணமாகப் **"பெரிய புராணம்"** என்று பெயர் சூட்டப் பெற்றுள்ளது.

புராணம் என்ற சொல்லுக்குப் "பழைய வரலாறு" என்பது பொருள். ஆனால், காலப் போக்கில் உள்ளனவும், புனைந்து கூறவனவும் இணைந்த நிலையில் புராணங்கள் தோன்றலாயின. அதனால் காலப்போக்கில் புராணங்கள் மீது அறிஞருலகத்திற்கு இருந்த ஈடுபாடு குறைந்தது.

ஆனால், சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் மாக்கதை உண்மையான வரலாற்று நூல், பத்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழகத்தின் உளவியல், சமூகவியல், சமயவியல், அரசியல் ஆகியவற்றினைப் பெரிய புராணம் மூலம் தெளிவாக அறிய முடிகிறது. சேக்கிழார் சோழ நாட்டின் முதலமைச்சராக இருந்தவர். இவரின் அமைச்சுப்பணி சோழ அரசுக்கு எவ்வளவு பயன்பட்டதோ தெரியாது. ஆனால், திருத்தொண்டர் காப்பியத்துக்கு அடிப்படையாகவுள்ள வரலாற்றுத் தடயங்கள் காண்பதற்குப் பெரிதும் உதவியாக இருந்திருக்கவேண்டும். வரலாற்றுப் போக்கில் எந்த ஒரு கருத்தும் அல்லது பொருளும் தவற விடாமல் சாலைகள், ஊர்கள் - அவையிருந்த நிலை ஆகியன அனைத்தையும் நூல் புலப்படுத்துகிறது.

சேக்கிழார், தமது நூலின் விழுமிய கருத்தாகக் குறிக்கோளாகத் திருத்தொண்டையே எடுத்துக் கொண்டிருக்கிறார். அடியார்களானாலும், இறைவனானாலும் அவர்களுடைய தகுதி குறித்துப் போற்றப் பெற்றுள்ளதைவிட அவர்கள் இயற்றிய தொண்டு அல்லது பணி காரணமாகவே போற்றப் பெற்றுள்ளார்கள், வாழ்க்கை, தொண்டிற்குப் பயன் படும் பொழுதுதான் முழுமையடைகிறது; பொருளுடைய தாகிறது; பயனுடையதாகிறது. இதுவே பெரிய புராணத்தின் தத்துவம்.

இன்று சமூகத்தில் நிலவும் சில தீமைகள் பன்னெடு நாள்களாகத் தமிழகத்தில் நிலவிவரும் தீமைகளேயாம். அவற்றில் ஒன்று தீண்டாமை. தீண்டாமை நிலப்பிரபுத்துவ சமுதாயத்தை யொட்டி வளர்ந்த பண்ணையடிமைச்

சமுதாயத்தில் கால் கொள்கிறது. பண்ணையடிமைச் சமுதாயத்தில் நிலப்புரத்துவத்தைத் தொடர்ந்து சுதந்திர மின்றிக் கொத்தடிமை செய்யும் அடிமைச் சமுதாயம் தோன்றுகிறது; தோற்றுவிக்கப்படுகிறது; நிலைப்படுத்தப் படுகிறது. இங்ஙனம் கொத்தடிமைச் சமுதாயமாக்கப் பெற்ற உழவர்கள், உடல் உழைப்பாளர்கள் ஒதுக்கப் பெற்றனர். அவர்களுக்குச் சராசரி மனித உரிமைகள் கூட வழங்கப் பெறுவதில்லை. திருக்கோயில் வழிபாட்டுரிமையும் கூட மறுக்கப்பட்டது.

நிலப் பிரபுத்துவமும் சாதிமுறைகளும் கைகோத்து வளர்ந்தன. உயர் சாதியினர் நிலப் பிரபுக்களாயினர். நிலப் பிரபுக்கள் உயர் சாதியாயினர். ஒரோவழி உயர் சாதியினர் ஆகாவிடினும் சமாதான நிலையில் அடுத்த அடுத்த சாதியினர் என்ற தரத்தைப் பெற்றனர். இத்தகைய நிலப் பிரபுத்துவ பண்ணையடிமைச் சமுதாயத்தில்தான், தீண்டத் தகாதவர்களின் சமூகத்தில்தான் திருநாளைப் போவார் தோன்றுகிறார். திருநாளைப் போவார், தீண்டத்தகாதவர் களின் வழிபாட்டுரிமைக்காகப் போர்க்கொடி தூக்குகிறார். உயர் வேதியர் குலம் மறுக்கிறது. உயர் வேதியர் குலம், திருநாளைப் போவாரைத் தீயிலிட்டுப் பொசுக்குகிறது. ஆனால், ஆன்மீகத் தரத்தால், பத்திமையின் மேம்பாட்டால் தீயிலிடப் பெற்ற திருநாளைப் போவார் வெந்து மடியாமல் வெளியே வருகிறார். அவர்தம் ஆற்றல்கண்டு தில்லைவாழ் அந்தணர்கள் திருநாளைப் போவாரை "ஐயர்" என்று போற்றுகின்றனர் இது வரலாறு. சேக்கிழார் திருநாளைப் போவார் மூலம் மனித குலத்தில் தீண்டப்படாதவர்களின் உரிமைக்காகப் போராடுகிறார்.

பழந்தமிழகத்தில் தீண்டாமையைப் போலவே தமிழகத்தை வருத்திய தீமைகளில் சாதிவேற்றுமையும் ஒன்று. சேக்கிழார் தமது நூலில் சாதிப் பெயர்களை; குலப் பெயர் களை அப்படியே கையாள்கிறார். இது அன்று இருந்த நிலை. ஆனால், சேக்கிழார் இந்த சாதி வேற்றுமைகளுக்கு ஆட்பட்டி

ருந்த சமுதாயத்தைச் சாதி வேற்றுமையற்ற சமுதாயமாக்க முயல்கிறார்; மெள்ள சமுதாயத்தை நகர்த்துகிறார். சுந்தரருக்குக் கலப்புத் திருமணத்தைச் செய்து வைப்பதில் சிவபெருமான் ஈடுபட்ட வரலாற்றைச் சுவைப்படக் கூறுகின்றார். சுந்தரர், பிறப்பால் ஆதிசைவம்; வளர்ப்பால் மன்னர் குலம்; முதல் மணம் முடிந்தது, உருத்திர காரிகையர் குலம்; இரண்டாவது திருமணம் வேளாளர் குலம். இங்ஙனம் சாதிகள் கலப்பை, நயம்பட எந்தவிதமான கிளர்ச்சியுமின்றி அறநிலையிலேயே சேக்கிழார் பெரிய புராணத்தில் செய்து காட்டுகிறார். இங்ஙனம், ஒரு காலத்தில்–தமிழகத்தில் அமைதி யாகச் சாதி ஒழிப்பு இயக்கம் நடைபெற்றது; வெற்றியும் பெற்று விளங்கியது. ஆனால், தமிழகம் இத்தகைய வரலாற்று நிகழ்வை தொடர்ந்து கடைப்பிடிக்கவில்லை. இன்றைய தமிழகத்தில் சாதிகளைத் தவிர வேறு என்ன இருக்கிறது?

சேக்கிழார், திருஞானசம்பந்தர் – திருநீலகண்டயாழ்ப் பாணர், திருஞானசம்பந்தர்–திருநாவுக்கரசர், திருநாவுக்கரசர் அப்பூதியடிகள் ஆகியோர் உறவு நிலைகளை விளக்கும் இடங்கள் உணர்வைத் தொட்டு வளர்க்கக் கூடியன. திருப்புக லூரில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், முருகநாயனார் ஆகிய மூவரும் ஒன்று கூடுகின்றனர்; கூடிக் கலந்து உண்டு பேசி மகிழ்கின்றனர். சேக்கிழார் இதனை உடனுறைவின் பயன்பெற்றார் என்று அழகுறப் பேசுகிறார்.

சேக்கிழார் விலக்கிய தீண்டாமையும், நீக்கிய சாதி வேற்றுமைகளும் மீண்டும் தமிழகத்தை வருத்துவது சேக்கிழார் செந்நெறிக்கு உடன்பாடன்று. சாதிவேற்றுமை களற்ற சமுதாயம் காண்பதே சேக்கிழார் செந்நெறிக்குரிய பயன். காளத்தியப்பனைக் கண்ணப்பர் ஊனெலாம் நின்றுருகும் அன்பால் அருச்சித்த காட்சியைச் சேக்கிழார் என்பையும் உருக்கும் தமிழில் எடுத்துக் கூறுகிறார். இன்று எங்கே கண்ணப்பர்கள்! ஏன், கருவறை சாத்தப்பட்டது? கருவறை ஒரு குலத்தாருக்கே உடைமையானது எப்படி? இது சேக்கிழார் செந்நெறிக்கு அடுக்குமா? சாதாரணமான மக்கள்

வழிபாட்டு உரிமையை இழந்ததால்தானே பத்திமையை இழந்தனர்? ஞானத்தை இழந்தனர்? சாதாரண மக்களுக்குக் கடவுட் கோயில் கடமைகள் இல்லாமல் போனதால் தானே மதம் மாறினர்! மதம் மாறிக் கொண்டிருக்கின்றனர்! கடமை இல்லாத சமுதாயத்தில் உரிமை இருக்காது! உரிமையில்லாத சமுதாயத்தில் சுரண்டி வாழும் வர்க்கம்தானே வளரும்? இன்றைய திருக்கோயில்கள் இந்த நிலைக்குத் தள்ளப்பட்டு விடவில்லையா, என்ன? இந்த இழிவு நிலையிலிருந்து என்று மீள்வது? சேக்கிழார் செந்நெறி என்று உயிர்ப்புப் பெறும்? அருள் கூர்ந்து சிந்தனை செய்யுங்கள்! புறநூனூற்றுக் கவிஞன்.

*ஓரில் நெய்தல் கறங்க ஓரில்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்*
*புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்*
*பைதல் உண்கண் பனிவார் பறைப்பப்*
*படைந்தோன் மன்றஅப் பண்பிலாளன்*
*இன்னாது அம்மஇவ் வுலகம்*
*இனிய காண்க, இதன் இயல்புணர்ந் தோரே!*

(புறம் - 194)

என்று பாடினான். இயற்கை வழிப்பட்ட துன்பங்களைக் கூடக் கவிஞன் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை; இன்பதுன்பம் நிறைந்த இருவேறு நிலை வழிப்பட்ட சமுதாயத்தைக் கவிஞனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இச்சமுதாய அமைப்புக்குக் காரணம் படைப்பாளனாகவே இருந்தாலும் அவனைப் பண்பிலாதவன் என்று கவிஞன் ஏசுகிறான்! இன்னாதனவுள்ள உலகத்தை இனிய உலகாக அமைக்க வேண்டும் என்று உறுதி கொள்கிறான்; போர்க்குணத்தோடு ஆர்ப்பரிக்கிறான்; மற்றவர்களையும் அழைக்கிறான்.

'இன்னாதம்ம இவ்வுலகம்! இனிய காண்க!' இது கவிஞனின் ஆர்ப்பரிப்புக் குரல்! இந்த விழுமிய கருத்துத் தோன்றி ஆயிரம் ஆண்டுகள் கழித்தும் தமிழக வரலாற்றில்

மாற்றமில்லை! தமிழகத்தின் வரலாறு சுமந்ததையே சுமந்து கொண்டு நகர்ந்து கொண்டிருந்தது! சுந்தரர் அவிநாசிக்குச் செல்கிறார்! அங்கு ஒரு வீட்டில் அழுகுரல்! பிறிதொரு வீட்டில் மங்கல ஒலி! இவ்விரண்டையும் நோக்கும் சுந்தரர்,

*மறையோர் வாழும் அப்பதியின் மாடவீதி மருங்கணைவார்*
*நிறையும் செல்வத்து எதிர்மனைகள் இரண்டில்*
*நிகழ்மங்கல இயங்கள்*
*அறையும் ஒலி ஒன்றினில்; ஒன்றில் அழுகைஒலி*
*வந்தெழுதலும் ஆங்கு*
*உறையும் மறையோர்களை "இரண்டும் உடனே நிகழ்வது*
*என்?" என்றார்.*

(பெ.பு. வெள்ளானை-5)

என்று கேட்டதாகச் சேக்கிழார் பாடிக் காட்டுகிறார். அதனால், சேக்கிழார் துன்பமே இல்லாத ஒரு சமுதாயத்தைக் காண எண்ணி அம்முயற்சிக்குத் துணையாகவே காப்பியம் செய்தார். ஆனால், காப்பியத்தின் கருத்து, காலத்தை வென்று வளங்க முடியாமல் தமிழினம் சதி செய்து விட்டது இரங்கத் தக்க நிலை! இன்று இன்பமும் துன்பமும் இயற்கையில் நிறைந்த சமுதாயம் மட்டுமில்லை! துன்பம் செயற்கையிலும் உருவாக்கப்படுகிறது! சமுதாயம் நைந்து அவலநிலையை அடைந்து கொண்டிருக்கிறது. இதற்கு விடிவுகாலம் தோன்றுமா? சேக்கிழாரின் பெரியபுராணம் ஓதுதல் மட்டு மின்றி சேக்கிழாரின் நூற் கருத்துக்கள் வாழ்க்கையிற் செயற் பாட்டுக்கு என்றைக்குச் சேக்கிழாரின் ஆர்வலர்கள் முயலுகிறார்களோ அன்றே சேக்கிழார் நூல் தோன்றியதன் பயன் மானுடத்துக்குக் கிடைக்கும். அந்த நல்ல நாளை எதிர்பார்ப்பது இயல்பல்லவா? நல்ல நாள்கள் தானே வருவதன்று! நல்ல நாள் என்பது திருவருளும் சிந்தனையில் தோய்வும் அறிவறிந்த ஆள்வினையும் உடைய சான்றோரே நாட்களை நல்ல நாள்களாக்குகின்றனர். அத்தகைய நல்ல நாளை விரும்பித் தவம் செய்வோமாக! சேக்கிழார் செந்நெறி மலர்க!

சேக்கிழார் செந்நெறி மணக்கும் மலர் மலர்க! சேக்கிழார் செந்நெறியை எண்ணியும், சொல்லியும், கேட்டும், துணை நின்றும், தொண்டு செய்வோர் அனைவரும் வாழ்க! வளர்க!

## 11. கச்சியப்பர்

பன்னீராயிரம் பாடல்களைக் கொண்ட மிகப் பெரிய நூல் கச்சியப்ப சிவாசாரியார் அவர்களின் கந்தபுராணம். 'கந்தபுராணத்திற்கு எந்தப் புராணமும் ஈடில்லை' என்பது வழக்கு. வாழ்வியலின் பல நுட்பங்களைக் கொண்ட, ஒரு பெருநூல் அது. திருவள்ளுவர், கம்பர், திருமுறை பாடிய நாயன்மார்கள் ஆகியோரின் வாக்கியங்கள் பலவற்றைக் கச்சியப்பர் அப்படி அப்படியே பல இடங்களில் எடுத்துக் கையாண்டிருக்கிறார். இவ்வகையில் அவர் முன்னோர் சொல்லைப் பொன்னே போல் போற்றும் ஒரு சிறந்த காவிய ஆசிரியராக விளங்குகிறார்.

வழிபாட்டிற்காக வழிபாட்டுத் துறையில் காவியம் செய்கின்றவர்கள், நேரடியாகத் தாமே இறைவனின் திருவருளை அனுபவித்து அந்த அனுபவ உண்மைகளைக் காவியம் ஆக்கும் போதே அந்தக் காவியம் தனிச் சிறப்படைகின்றது. நமது கச்சியப்ப சிவாசாரியார் அத்தகைய அனுபவ ஞானம் பெற்ற பெரியார், சிவலிங்கத் திரு மேனியைத் தொட்டுத் தழுவிப் பூசனை செய்து இறையருட் பேற்றை-இறையின்பத்தை அனுபவிக்கும் நல்ல வாய்ப்பு அவருக்கு இருந்தது. எனவே அவரது பாடல்கள் வழி பாட்டிற்கு உகந்தனவாக இருப்பதில் வியப்பில்லை.

கச்சியப்ப சிவாசாரியாரின் பன்னீராயிரம் பாடல் களில் திருமுருகன் வழிபாடுதான் அடிப்படைக் கருத்தாக-மையக் கருத்தாக அமைந்திருக்கிறது.

திருத்தம், சீர்திருத்தம், புரட்சி என்ற சொற்கள் யாவும் பொருளால் மாறுபட்டனபோல் தோன்றும். ஆனால் காலத்திற்கேற்ப எழுந்த சொற்களேயன்றி கருத்தால் மாறுபாடு கற்பிக்கத்தக்கன அல்ல அவைகள். அதுபோலவே காவியம் காப்பியம் என்பனவெல்லாம் சமயச் சார்புடைய தொன்மை சான்ற வரலாறுகளுக்கு-இலக்கியங்களுக்குப் புராணம் என்று பெயர். இன்று புராணம் என்று சொல் சற்று கேவலமான பொருளில் பயன்படுத்தப் பெறுகிறது. எனினும், புராணம் என்ற பெயரை மறந்துவிட்டு நாம் கந்தபுராணத் திற்குள் நுழைந்தால் நல்ல சமுதாயச் செய்திகள் பலவற்றைப் பெறலாம்.

கடல்நீர் தண்ணீர்தான்-எனினும் அதை வாங்கி வையகத்திற்கு வழங்க வானம் இருப்பதுபோல தேங்கிக் கிடக்கின்ற இறையருளை வாங்கி நமக்கு வாரி வழங்க சிவாசாரியார்கள் இருக்கிறார்கள். அவ்வாறு இறையருளை வாங்கி வாரி வழங்குகின்றவர்கள் அதை ஏற்றுக் கொள் கின்றவர்களைப் பற்றிய-வாங்கிக் கொள்கின்றவர்களைப் பற்றிய திறமான அறிவு பெற்றிருக்க வேண்டும். அந்த அறிவு நமது கச்சியப்ப சிவாசாரியாரவர்கட்கு மிகுதியும் இருந்திருக்கிறது. அவருக்கு சமுதாயத்தைப் பற்றிய சிந்தனை எவ்வளவு இருந்திருக்கிறது என்பதற்கு அவரது கந்தபுராணம் தக்க சான்றாக விளங்குகிறது.

பிறப்பினால் கற்பிக்கப் பெறுகின்ற-நிலவுகின்ற சாதியுணர்வுகள் சமயநெறிக்கும் சமுதாய உணர்வுகளுக்கும் முரண்பட்டன என்ற கருத்து நீண்டநாள் வழக்கமாக இருந்து வருகின்றன. சமுதாய ஒழுங்கு மரபின் தலை மகனான நமது கச்சியப்ப சிவாசாரியார் தமது நூலில்,

*"சிறிய ரென்றுஞ்*
*சிலரைச் சிலர்மேல்*
*நெறிய ரென்றும்*
*நினைவது நீர்மையோ?*

இறுதியில் உயிர்யாவும்
ஒன்றே யென
அறிதல் வேண்டும் அஃ(து)
உண்மைய தாகுமே"

என்று பேசுகிறார். 'இறுதியில் உயிர்யாவும் ஒன்றே' என்ற உறுதிப்பாடு, "பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற வள்ளுவப் பெருந்தகையின் கருத்தைச் சிறந்ததொரு விளக்க மாக இல்லையா?

உலகியல் இன்ப துன்பங்களுக்குக் காரணம் என்ன என்பதை இன்று அறிஞர்களும் ஆராய்ச்சியாளர்களும் ஆய்வது போலவே, அன்று நமது கச்சியப்ப சிவாசாரியார் ஆராய்ந்திருக்கிறார். அவரவர் செய்த செயல்களால் தீமையும் நன்மையும் அவரவரை வந்தடைகின்றனவே யொழிய மற்றவர்களால் நமக்குத் தீமையும் நன்மையும் வருவதில்லை- பிறர்தர வருவனவுமல்ல என்கிறார் அதுமட்டுமா? அதற்கு ஆதாரமாக, இன்னொரு அருமையான கேள்வியையும் கேட்கிறார். அமுதம் இருக்கிறது. அந்த அமுதத்திற்குச் சுவை கொடுத்தவர் யார்? நஞ்சு இருக்கிறது. அதற்குத் தனிச்சுவை வழங்கியவர் யார்? என்று கேட்கிறார். தீதும் நன்றும் பிறர் தர வாரா- அவரவர் வினைவழி அவரவர் என்ற கருத்தை நமது கச்சியப்ப சிவாசாரியார் வலியுறுத்திப் பேசுகிறார்.

"தீங்குவந் தடைய மாறும்
நன்மைதான் சேரு மாறும்
தாங்கள்செய் வினையி னாலே
தத்தமக் காய வல்லால்
ஆங்கவை பிறரால் வாரா
அமுதம்நஞ் சிரண்டி னுக்கும்
ஓங்கிய சுவையின் பேதம்
உதவினார் சிலரு முண்டோ"

என்று கேட்கிறார்.
கு.XV.14.

ஆம். வாழ்க்கை ஒரு மருத்துவமனை-மக்களெல்லாம் நோயாளிகள். இறைவன் நோய் தணிக்கும் மருத்துவன். இதுதான் உண்மை. இந்த வாழ்க்கையிலே உணர்வுகளுக்கும், உணர்ச்சிகளுக்கும் நாம் இடம் கொடுக்கக் கூடாது.

இன்பமும் துன்பமும் உலகின் இயற்கை. எனவே இன்பம் வந்தபோது இனிதென மகிழ்வதோ, துன்பம் வந்த போது துளங்கிச் சோர்வதோ சரியான கொள்கையல்ல. ஆன்றோர் இந்த இருவகையுணர்வுகளுக்கும் இடங்கொடுக்க மாட்டார்கள் என்று பேசுகிறார்.

*"இன்பம தடைந்த காலை*
*இனிதென மகிழ்ச்சி யெய்தார்,*
*துன்பம துற்ற போது*
*துண்ணெனத் துளங்கிச் சோரார்*
*இன்பமும் துன்பந் தானும்*
*இவ்வுடற் கியைந்த வென்றே*
*முன்புறு தொடர்பை ஓரார்*
*முழுவது முணர்ந்த பேர்கள்"*

என்று அழகாகக் குறிப்பிடுகிறார். எனவே இன்பதுன்பங்களை நாம் அனுபவிக்கப் பழக வேண்டும். 'ஓடும் பொன்னும் ஒப்ப நோக்கும்' உள்ளத்திண்மை பெற வேண்டும்.

கச்சியப்ப சிவாசாரியாரின் போர்ப்படலப் பாடல்கள் போற்றிப் பாராட்டத்தக்கன. கச்சியப்ப சிவாசாரியார் போர் வரலாறு-போர் அனுபவம்-போர் நுட்பம் கைவரப் பெற்றவர் என்று கருதப்பெறத்தக்க வகையில் அந்தப் போர்ப்படலம் அமைந்திருக்கிறது.

போரில் சூரபதுமன் அழிக்கப் பெறவில்லை. உயிர்கள் உள்பொருள், இறைவனைப் போல, 'என்றும் உள்ள பொருள்' என்று ஆகிவிட்ட பிறகு அதை அழிப்பது எப்படி? எனவே, சூரபதுமன் அழிக்கப்பட்டான் என்பது தவறு. மேலும்,

சூரபதுமன் அறிவின் மேலோனாகவும், சிறந்த பக்தனாகவும் விளங்கியதாகப் பேசப்படுகிறது; நல்ல ஆற்றல் வாய்ந்தவன் என்று பேசப்படுகிறது. எனினும், ஆணவ மிகுதியால் அவன் தனது ஆற்றலை துஷ்பிரயோகம் செய்தான். அப்போது நமது திருமுருகன், எழுந்தருளி, சூரபதுமனை வென்று, அவனது ஆணவத்தை அடக்கி ஆட்கொண்டான். அவ்வளவு தானே தவிர சூரபதுமன் கொல்லப்பட்டதாகவோ, அழிக்கப்பட்ட தாகவோ கருதுவது தவறு.

அன்று வாழ்ந்த நமது சிவாசாரியார்கள் நமது கச்சியப்ப சிவாசாரியாரைப் போலவே தெளிவான தத்துவப் புலமை பெற்றிருந்தனர். சுகானுபவம் பெற்றிருந்தனர் அவற்றின் கூட்டுக் கலவையாகப் பல அருட்பாடல்களை வடித்துத் தந்திருக்கின்றனர்.

கந்தபுராணம் மிகச்சிறந்த பக்திக் காவியம். நமது கச்சியப்பர் நல்ல பாத்திரத்தைப் பற்றிப் பேசும்போதும் சரி, கெட்ட பாத்திரத்தைப் பற்றிப் பேசும்போதும் சரி; வாழ்க்கையின் குறை நிறைகளைப் பின்னிப் பிணைத்தே பேசினார். முருகனைப்பற்றிப் பேசும்போதும் சூரபதுமனைப் பற்றிப் பேசும்போதும் அப்படியேதான்.

சூரபதுமன் நமது முருகப்பெருமானைப் பற்றிப் பேசுகின்றபோது.

"சூழுதல் வேண்டும் தாள்கள்
 தொழுதிடல் வேண்டும் அங்கை
தாழுதல் வேண்டும் சென்னி
 துதித்திடல் வேண்டும் தாலும்
ஆழுதல் வேண்டும் தீமை
 அகன்றுநான் இவற்(கு)ஆ ளாகி
வாழுதல் வேண்டும்; நெஞ்சம்
 தடுத்தது மானம் ஒன்றே"

என்று குறிப்பிடுவதாகக் கச்சியப்பர் கூறுகிறார். ஆம்; திருமுருகனின் நிறைவையெல்லாம் சூரபதுமன் பாராட்டி விட்டு, 'மானம் ஒன்றுதான் இடையே நின்று தடுத்தது' என்றான் என்றால் அவனது உள்ளத்தை-பண்பை என்ன வென்று பாராட்டுவது?

இவ்வாறு பல்லாற்றனும் சமுதாயப்போக்குத் தழுவிய சமய காவியமான பக்திப் பனுவலை-கந்தபுராணத்தைத் தமிழ்ப் பெருமக்கள் அனைவரும் படித்துப் பயன்பெறுவார் களாக.

கச்சியப்பர் நெறி நம் நெறி-நம்மனோர் நெறி அந்நெறி பற்றியொழுகி நாம் இன்பமும் பயனும் பெறுவோமாக!

## 12. அருணகிரிநாதர்

சமயத்தை சமயவழிபட்ட தத்துவத்தை, அனுபவிப்ப வர்கள் - அனுபவிக்கப் பிறந்தவர்கள் மதச் சண்டைக்குப் போகமாட்டார்கள். இறைவன், சாதி, மதம், இனம், நாடு முதலியவற்றையெல்லாம் கடந்தவன், எனவேதான் மாணிக்க வாசகர், 'தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்ட வர்க்கும் இறைவா போற்றி!" என்று பாடினார். இறைவன் எங்கும் நிறைந்து பரவியிருக்கிறான். அவன் பல்வேறு நாட்டிலும் பல்வேறுப் பெயரால் பாடிப் பரவப்பெறுகிறான். அவ்வாறு பல்வேறு நாட்டிலும் பல்வேறு பெயரால் பாடிப் பரவப் பெறுகிற அந்த இறைவனுக்குத் தென்னாட்டிலே சிவன் என்று பெயர். தென்னாட்டவராகிய நாம் அவனைச் சிவன் என்ற பெயரால் அழைக்கிறோம். அவன் திருப்பெயர் களில் சண்டை சச்சரவில்லை. ஒரே குழந்தையை ஒரு வீட்டில் தாய் வேறு பெயர். தந்தை வேறு பெயர் சொல்லி அழைப்பதில்லையா? அவர்கள் இருவரும் வெவ்வேறு பெயர் சொல்லி அழைத்தாலும் அவர்கள் அழைப்பது அந்த ஒரே குழந்தையைத்தானே.

வாழ்க்கைக்கு வழிகாட்டுவோர் சிலர்; அந்தச் சிலரினும் வாழ்க்கை அனுபவத்தைப் பெறாமலேயே - அனுபவம் இல்லாமலேயே வழிகாட்ட வருபவர்கள் உண்டு. தித்திக்கும் செந்தமிழில், முருகனின் திருப்புகழ் பாடிய சந்தத் தமிழ் வித்தகர் அருணகிரியார் நிறைந்த அனுபவம் பெற்று வழிகாட்ட வந்தவர். அவர் 'அனுபவ நிறைவான' ஆசிரியர். வாழ்க்கைக் கடலில் வீழ்ந்து நீந்தி, அமிழ்ந்து, மிதந்து, மூச்சுத் திணறிக் கடைசியில் முத்தும் எடுத்துக் கொண்டு வந்தவர். ஆழக் குளித்து இறைவன் என்ற முத்தை எடுத்து வந்தவர்.

கடலுக்கும் வாழ்க்கைக்கும் நிறைந்த தொடர்பிருக் கிறது. கடலுக்கு ஆழம் தெரியாது - வாழ்க்கைக்கு எல்லை தெரியாது. கடலில் அலைகள் மோதும். வாழ்க்கையில் இன்ப துன்பங்கள் மோதும். கடலில் ஆழக்குளித்து முத்தெடுப் போரும் உண்டு. மீன் பிடிப்போரும் உண்டு, வெறுங்கை யோடு கரையேறுவோரும் உண்டு. வாழ்க்கையில் பல அனுபவங்களைப் பெறுவோரும் உண்டு. நைந்து நைந்து வாழ்வின் பயனை அனுபவிக்காமல் சாவோரும் உண்டு. அருணகிரியின் வாழ்க்கை ஓர் அலைகடலை ஒத்தது. அங்கு சிற்றலையும் உண்டு. பேரலையும் உண்டு. வாழ்க்கையில் சிற்றலையாகிய இன்பமும் பேரலையாகிய துன்பமும் உண்டு. அலை வரும் போது மிதந்தோ, மூழ்கியோ அதினின்று நாம் தப்பித்துக் கொள்வது போல, இன்ப துன்பங்களில் அமிழ்ந்து விடாமல் மிதக்க - அனுபவிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இன்பத்தை மதுவென்றோ, துன்பத்தை மருந்தென்றோ எண்ணி மயங்கவோ தயங்கவோ கூடாது. இரண்டையும் மருந்தென்று கருதி அனுபவிக்கப் பழக வேண்டும். அருண கிரியார் ஆழக் குளித்து இறைவன் என்ற முத்தை எடுத்தவர். கடலில் முத்தெடுப்பதுதான் சிறந்தது. வாழ்க்கையில் கடவுள் நம்பிக்கையோடு வாழ்வதுதான் சிறந்தது.

மணிக்கவாசகரைக் காட்டிலும் அருணகிரியாருக்குத் தான் வாழ்க்கை அனுபவம் மிகுதியும் உண்டு என்று நான்

கருதுகிறேன். அப்படிக் கருதவதில் தவறு ஏதும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இறைவனின் பெரிய நாடகத்தில் அருணகிரியார் ஒரு சிறந்த பாத்திரத்தை ஏற்றிருந்தார். வாழ்க்கையின் எல்லாக் கோணங்களையும் ஒழுங்காக– உயிருணர்ச்சிகளுக்குப் படும்படியாக – அவர் செய்த தவறு களை மற்றவர்கள் செய்யும்போது அவர்கள் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் வரும்படியாகச் சொல்லியிருக் கிறார். அருணகிரியின் பாடலுக்கும், மாணிக்கவாசகரின் பாடலுக்கும் தான் படிக்கின்றவர்களை அழ வைக்கும் சக்தியுண்டு.

அருணகிரியார் அழுது அழுது பாடினார்-நம்மையும் அழ வைக்கிறார். அவர் பாடிய காலத்தில் அழுது கொண்டே பாடினார். இன்று நாம் அவற்றைப் பாடும் போது அழு கிறோம். அன்று ஆழ்கடலில் மூழ்கி மூச்சடக்கி முத்தெடுத்த பெருமகன் அருணகிரியார் என்றோம். அப்படி அவர் முத்தெடுத்த முன்பு பாடியது அலங்காரம். முத்தெடுத்த பின்பு பாடியது அநுபூதி.

செய்முறைக் கல்வி தமிழரிடம் வளர்ந்திருந்த அளவிற்கு வேறு எவரிடமும் வளர்ந்திருந்ததாக நாம் அறிய முடியவில்லை. காட்சியிலேயே பாடஞ் சொல்லிக் கொடுக்கும் முறை தமிழனுக்குத்தான் மிகுதியும் உண்டு.

நடராசப் பெருமான் தெற்குப் புறமாகப் பார்த்து ஆடிக்கொண்டிருக்கிறார். அவர் ஏன் தெற்கு புறமாகப் பார்த்து ஆடிக்கொண்டிருக்கிறார் என்பதற்குப் பதில் கூறுவது போல் கூறுகிறார். “உடலுக்கும் உயிருக்கும் உண வாகத் தென்றலும் தென் தமிழும் தெற்கில்தானே உண்டு” என்று, அதுமட்டுமா? சொல்லுவதைக் கேட்பவர்களும் தமிழகத்திலேதானேயுண்டு.

நம் நாட்டுச் சிறுவர் சிறுமியர்களுக்கு அருச்சனைக்காசு எவ்வளவு என்று நாம் சொல்லிக் கொடுத்திருக்

கிறோமேயொழிய எந்தச் சாமி எந்தத் தத்துவம் உடையது என்பதைச் சொல்லிக் கொடுக்கவில்லை-சொல்லிக் கொடுப்பதுமில்லை.

முருகன் திருக்கோயிலை மலைமீது அமைத்த நமது தமிழர்கள் உயர்ந்த தத்துவத்தோடுதான் அமைத்திருக் கிறார்கள். வெளியே நாம் காணும் மலைப்புறத்தே குன்று இருக்கிறதே அது நமது அகத்திலே உள்ள குன்று. 'குண மெனும் குன்றேறி நின்றார்' என்றார் திருவள்ளுவர். திருக் கோவிலிலே முருகனைத் துறவுக் கோலத்தில் காண்கிறோம். இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியது பரி பூரணத்துவம் அடையும் போது மனிதன் துறவியாவான் என்பதுதான்.

ஆணவம் ஒரு பெருங்காயப் பாண்டம்போல; அது எப்போதும் மணம் வீசிக்கொண்டே இருக்கும். சில சமயங் களில் கொஞ்சம் அதிகமாக இருக்கும்.

விஞ்ஞான ஆசிரியர் வாய்ப்பாட்டை நம்பவில்லை யானால், மருந்துகளுக்கும், சோதனைக் குழாய்களுக்கும்தான் கேடே தவிர உரிய பயன் கிடைக்காமல் போகாது. அது போல, மக்கள் இறைவனை-திருவருளை நம்பவில்லை யென்றால், வாழ்வின் பெரும் பயன் இல்லாமற் போகும். இறைவனைப் பற்றிக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டே இருத்தல் கூடாது.

'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் சோதிக்க வேண்டாம்' என்கிறார் திருஞானசம்பந்தர். தொழுது தொழுது தேவர்களின் கைகள் சிவந்தன-பரவை வீட்டிற்குச் சுந்தரரின் தமிழ்ப் பாடல் கேட்க, நடந்து நடந்து சிவபெரு மானுக்குக் கால்கள் சிவந்தன என்பது வரலாறு. தமிழ்ப் பாடலைக் கேட்பதற்காக நடந்து நடந்து கால்கள் சிவந்த சிவபெருமானுக்கு இன்று தமிழில் வழிபட்டால் பிடிக்காமல் போகுமா?

வாழ்க்கை என்பது கடல் என்று முன்னமேயே குறிப்பிட்டோம். அந்த வாழ்க்கைக் கடலில் நீந்திக் கரையேற அருணகிரிக்கும், மாணிக்கவாசகருக்கும், இரண்டு புணைகள் கிடைத்தன. அருணகிரியார் மனத்திற்குத் தட்டிய ஊறி உருவெடுத்த திருவுருவம் முருகன்; மாணிக்கவாசகரின் மனத்திற்குத் தட்டிய ஊறி உருவெடுத்த திருவுருவம் சிவபெருமான்.

நாம் எதை நினைத்தாலும் ஒன்றியிருந்து நினைக்க வேண்டும். அருணகிரியாரின் ஞானம் வழிவழி ஞானம். அவர் காலத்தை மிக நன்றாகப் புரிந்து கொண்டவர் என்பது இன்னொரு சிறப்பு. அவர் காலத்தில் சந்த இசைத் தமிழுக்கு நல்ல வாய்ப்பும் வரவேற்பும் இருந்தது. எனவே, அவர் சந்தத் தமிழ் பாடினார்.

அருணகிரியார் புலன்களின் வழியே முருகனை அனுபவித்தார் - பொறிகளும் அனுபவிக்கும்படி செய்தார். புலன்களை-சிந்தையைத் திருத்தும் உணர்வைப் பெற வேண்டும். அதற்கு அருணகிரியாரின் பாடல்கள் பெரிதும் உதவுவன.

தொண்டு செய்தல், வழிபாட்டுப் பாடல்களைக் கனிவோடு பாடுதல், திருக்கோயில்களுக்குச் சென்று திருவுருவங்களை வழிபடுதல் முதலியன இன்றியமையாதன. 'தொண்டலாது உயிர்க்கு ஊதியமில்லை', என்பது நமது தமிழ் மரபு; "வெற்று நிழலுக்கும் உதவா உடம்பு" என்கிறார் அருணகிரிநாதர். தொண்டின் சிறப்பைப் பற்றியும் அதன் இன்றியமையாமையைப் பற்றியும் அவர் நிறையப் பாடியிருக் கிறார். "பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும்" நல்லதொரு குடி வாழ்க்கையை அவர் "நெய்யின் அளவேனும் பகிர்ந்து கொடுமின்கள்" என்று வலியுறுத்துகிறார். நாளும் கோளும் அடியாரை ஒன்றும் செய்ய முடியாது என்பதனை,

நாளென் செய்யும்? வினை
தானென் செய்யும்? எனை நாடி வந்த
கோளென் செய்யும் கொடுங்
கூற்றென் செய்யும்? குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும்
எனக்கு முன்னேவந்து தோன்றிடுனே

என்ற பாடல் மூலம் விளக்குகிறார். வாழும் சமுதாயத்திற்கு-மனித குலத்திற்கு வாழும் வழியை-நீண்ட கால இலட்சியத்தைக் கற்றுக் கொடுத்த ஞானி அருணகிரியார். அவர் பாடலைப் பாடித் திருவருள் இன்பம் பெறுவோமாக.

## 13. விவேகானந்தரின் அடிச்சுவட்டில்

### 1

மானுடத்தின் வரலாற்றில் பழமைப் பற்றாளர் களுக்கும் புதியன வேட்பாளர்களுக்கும் காலங்காலமாக மோதல் நடந்து வந்துள்ளன. ஒருசில சமயங்களில் பழமை வெற்றி பெற்றதுண்டு. ஆனால், புதுமையே தொடர்ந்து இயக்க நிலையில் வெற்றி பெற்று வருகிறது; வளர்ந்து வருகிறது. பழமை நைந்துபோன துணி போல உடுத்தப் பயன்படாது. புதுமை வாழ்க்கையை உயிர்ப்புடன் இயக்கும் தன்மையுடையது. மாணிக்கவாசகர் புதுமையை வரவேற்றுப் பாடியுள்ள பாடல் படிக்கத் தக்கது.

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!"

என்ற திருவாசக வரிகள் கவனத்துடன் படிக்கத்தக்கவை. கடவுள் பழம்பொருள்! கால எல்லைகளைக் கடந்த பழம்

பொருள்! ஆனால், அந்தப் பழம் பொருளே ஆன்மாக்களின் அனுபவத்தைக் குறிக்கோளாகக் கொண்டு ஆன்மாக்களுக்கு ஏற்றவகையில் ஆன்மாக்கள் வாழும் காலம், தேசம் ஆகிய சூழ்நிலைகளுக்கு ஏற்பவும் ஆன்மாக்களின் இயல்பான புத்துணர்வு, விருப்பார்வத்திற்கு ஏற்பவும் எதிர் வரும் காலங்களின் புதுமையாகவும் விளங்குகின்றது. இறைவன் மாறிவரும் காலம், தேசம், பழக்கவழக்கங்களுக்குள் கலந்து நின்று அவையேயாகி அருள்புரிகின்றார் என்பார் தாயுமானார்.

> "காலமொடு தேசவர்த்த மானம் ஆதி
> கலந்துநின்ற நிலைவாழி! கருணை வாழி"

என்பது தாயுமானார் வாக்கு.

> "தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா; இன்று
> தோன்றியநூல் எனும் எவையும் தீதாகா"
>
> (சிவப்பிரகாசம் 12)

என்ற சாத்திர நூல் கூறம்.

தமிழ் இலக்கண மரபு.

> "பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே" (நன்னூல் 462)

என்பதாகும். பழையன தாமே அழியும் என்றும் புதியன அந்த இடத்தைப் பிடிக்கும் என்றும் விளக்கப் பெறும் கருத்து ஒரு வரலாற்று உண்மையாகும். ஏன்? இறந்தது விலக்கலும் எதிரது போற்றலும் வாழ்வியல் நெறி ஆம்! காலத்தொடு கலந்து வாரா நெறிகளால் யாது பயன்?

## 2

இன்று எங்குப் பார்த்தாலும் வேற்றுமைகள் வலியுறுத்தப்படுகின்றன. முரண்பாடுகள் மோதல்களாகி விடு

கின்றன. உயர்வு தாழ்வுகளை நிலைப்படுத்தும் முயற்சிகளில் “பீடங்கள்” தீவிரமாக ஈடுபட்டுள்ளன. இன்றைய சூழ்நிலை பொதுவாக நன்றாக இல்லை! எந்த ஒரு நல்ல கொள்கைக்கும் எதிர்ப்பு! ஏன்? சமுதாய முரண்பாடுகள் பூதங்களாகக் காட்டப்படுகின்றன. இல்லை, இல்லை! முரண்பாடுகள் உருவாக்கப்படுகின்றன! இந்தச் சூழ்நிலையில்,

*சாதி ஒழிப்பு!*
*தீண்டாமை ஒழிப்பு!*
*சுரண்டல் முறை ஒழிப்பு!*
*ஆதிக்க முனைப்புக்கு எதிர்ப்பு!*

ஆகிய இன்னோரன்ன உயரிய கொள்கைகளைக் கூட மூர்க்கத்தனமாகத் தாக்குகின்றனர் பழமைவாதிகள்! அவர்கள் சாவா? வாழ்வா? என்ற போராட்டத்திற்குத் தயாராகி விட்டனர்.

கடவுள் பொது! கடவுள் மானுடத்தின் தந்தை! எழுந்தருளியுள்ள திருக்கோயில் மானுடத்தின் பொது வீடு! இதுதான் சமயம்! ஆனால், கடவுளுக்கே சாதிகளைக் கற்பித்துப் பேணுகின்றன மதபீடங்கள்! கடவுளை, கடவுள் திருமேனியைத் தொட, பூசனை செய்ய - அனுபவித்து அழக்கூட எல்லா மாந்தருக்கும் உரிமை இல்லை! கடை கோடி மனிதன் - கடைகோடி மனித சமுதாயத்தினர்த் தீண்டத்தகாதவர்களாகப் பலநூறு ஆண்டுகளாக வைக்கப் பட்டுள்ளனர். இந்த நிலை மாற வேண்டும் என்று எழுதினால், பேசினால் ‘பீடங்கள்’ எதிர்க்கின்றன.

இன்றைய உலகின் நிலை இதோ! இதயம் இருப்பின் எண்ணுங்கள்!

| | |
|---|---|
| *பட்டினி கிடப்போர்* | *50 கோடி* |
| *பிணிவாய்ப்பட்டோர்* | *150 கோடி* |
| *பஞ்சத்தில் தவிப்போர்* | *100 கோடி* |

வேலை வாய்ப்பு இல்லாதோர் 50 கோடி
எழுத்தறிவு இல்லாதோர் 81.4 கோடி

இத்தகு அவல நிலையில் - இந்த அவலச் சூழ்நிலையில் சமநிலை, சமவாய்ப்புச் சமுதாய அமைப்பு பற்றிப் பேசினால் ஆத்திரத்துடன் பழமைவாதச் சமூக அமைப்பு போராட முன்வருகின்றது. “தலைவிதி”த் தத்துவம், “கடவுளின் சித்தம்” பற்றிப் பேசித் திசை திருப்புகின்றனர். சமதர்ம சமுதாய அமைப்புக்குப் போராடுபவர்களை நாத்திகர் என்று வசைபாடுகின்றனர்.

கடவுள் ஒருவரே! மதங்கள் பலப்பல! இன்று மதங்கள் மானுடத்திற்கு நன்மை செய்யும் ஆற்றலை இழந்து விட்டன! ‘சொர்க்கம்’ என்ற நினைப்பில் நரகத்தையே சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்! இன்றைய மதம் “கடவுள் மத” மாக இல்லை. நம்முடைய மதங்கள் கடவுளை விழுங்கிச் செரிமானம் செய்து கொண்டு பல நூற்றாண்டுகள் உருண்டோடி விட்டன! இன்றைய மதங்களில் சடங்குகள், ஆசாரங்கள், முடை நாற்றம் வீசும் மூடத்தனமான பழக்கவழக்கங்கள் நிறைந்து விட்டன! மதமெனும் பேயே நடமாடுகிறது! அதனாலன்றோ, “வேதம் புதுமை செய்” என்றான் பாரதி. விவேகானந்தர். ஒரு புது மதமே தேவையென்றார்! இந்த உலகில் புதியமதம் காணப் பலர் முயன்றனர். கொழுத்த முதலாளித்துவம், கெட்டித்தன்மை வாய்ந்த மதபீடங்கள் - இவற்றுக்கு பிழைப்புக் காரணமாக துணை போகிய அராஜகத் தன்மை ஆகியவற்றால் இந்த உலகம் அல்லற்படுகிறது; அழிவை நோக்கிச் செல்கிறது! அழிவை நோக்கிச் செல்லும் இந்த உலகத்தைத் தடுத்து நிறுத்தியாக வேண்டும்.

ஆம்! இது உடனடியாகச் செய்ய வேண்டிய பணி! கல்லறைக்குப் போகவேண்டிய பழமை, மூர்க்கத்தனமாக

எதிர்க்கும்! உன்னைக் கொல்லலாம்! அஞ்சற்க! துணிவோடு நில்! கடந்தகால வரலாற்றைக் கூர்ந்து கவனித்துப்பார்!

எதிர்ப்புக்களைச் சந்தித்து உயிர் துறந்தவர்களே வெற்றி பெற்றுள்ளனர். அவர்களே இன்றும் வாழ்கின்றனர்.

உயிர்ப்புள்ளோர், உயிர்ப்புடன் வாழ்வை இயக்குவோர் எதிர்ப்புகளைக் கண்டு அஞ்சார்! உயிர்ப்புள்ள மனிதனுக்கு ஊக்கம் அதிகம்' ஆதலால் உயிர்ப்புடன் வாழ்! – இதுவே விவேகானந்தர் அறிவுரை.

## 3. கர்மபலன்

நமது நாட்டு மக்களில் பெரும்பாலோர் தலைமுறை தலைமுறையாக ஏழ்மையில் கிடந்து உழல்கின்றனர். பஞ்சத்திலும் பட்டினியிலும் செத்தோர் எண்ணிக்கை கணக்கில் அடங்காது. அதுமட்டுமா? போதிய நல்லுணவு இன்மையால் நாளும் செத்துக் கொண்டிருக்கும் மக்கள் ஏராளம்! பச்சிளங்குழந்தைகளின் சாவுகள் எழுதிக் காட்ட இயலாதன. ஒரு வீட்டில் வாழ்கிறார்கள். பக்கத்து வீட்டில் சாகிறார்கள், வயிற்றுக்கு வெறும் சோறு கிடைக்காமல் சாகிறார்கள். இந்தியாவின் இந்தத் துன்பியல் வரலாறு வளர்ந்து வருகிறது. கடவுள் அவதாரங்கள் நடந்தும் கூட இந்த நாட்டின் ஏழ்மையை அகற்ற முடியவில்லை! ஐயோ, பாவம். சிவபிரான் மண்ணுலகிற்கு வந்தபோது கூட ஏழைப்பிட்டு வாணிச்சியின் உதிர்ந்த பிட்டுதான் அவனுக்குக் கிடைத்தது. இது இந்த நாட்டின் தலைவிதி!

நாடு விடுதலை பெற்ற பிறகும் சராசரி இந்தியனுக்கு எல்லாம் கிடைக்கவில்லை. இல்லை, இல்லை! எதுவும் கிடைக்கவில்லை. இந்த நாட்டு மகக்ளில் சரிபாதிப் பேர் வறுமைக் கோட்டிற்குக் கீழ்தான்! ஏன் இந்த அவலம்? நமது மக்களுக்கு, ஏன் இந்த வறுமை? ஏழ்மை? என்று சிந்திக்கத் துணிவில்லை. ஏழ்மையும் இழிவையும் அவமானத்தையும்

தாங்கித் தாங்கிப் பழகிப்போய் விட்டனர்! போர்க்குணம் அறவே இல்லை, மழுங்கிப் போன மூளைகள்! இதற்குச் சராசரி மக்களா காரணம்? இல்லை! இந்துமத சாஸ்திரங்கள், புராணங்கள் ஓதும் கர்மபலன் நம்பிக்கையே காரணம்! அல்லற்படும் மக்கள் அவர்களுடைய ஏழ்மை முற்பிறப்பு களின் தொடர்ச்சி-பரிசு என்று இந்துமத போதகர்கள் மதக்குருமார்கள் சொல்லிச் சொல்லி நம்பவைத்து விட்டனர். இந்த மூடநம்பிக்கையிலிருந்து நமது நாட்டு மக்களை அருள் திரு விவேகானந்தர் மீட்க விரும்பினார்; அதற்காகப் போராடினார்! ஆனாலும் காரியம் நடக்கவில்லை!

1897 இல் கல்கத்தாவில் மார்வாடிகளின் அரவணைப்பில் வளரும் பசுப் பாதுகாப்பு சங்கத்தின் பிரசாரகரை நோக்கி விவேகானந்தர், "மத்திய இந்தியாவில் ஒன்பது லட்சம் மக்கள் பட்டினியால் சாகிறார்களே அவர்களைக் காப்பாற்றக் கூடாதா?" என்று கேட்கிறார். அதற்கு அந்தப் பசுப் பாதுகாப்பு சங்கப் பிரசாரகர் "பட்டினியில் சாவது கர்மாவின் விளைவு; பாபத்தின் பயன்" என்று கூறுகிறார். இதனைக் கேட்ட விவேகானந்தர் கோபப்படுகிறார்! உணர்ச்சிவசப்பட்டு "என்ன பொய்யான பேச்சுக்கள்! மனிதர்கள் கர்மபலனால் சாகிறார்கள் என்று கூறுகிறார்களே, இந்த நாடு அடியோடு நாசமாகிவிட்டது!" என்று கூறுகிறார்!

விவேகானந்தருக்குப் பிறகு ஒரு நூற்றாண்டு உருண்டோடி விட்டது. இப்போது இந்துமதத் தலைவர்கள் கர்மபலனை "ரேஷன்கார்டு" உவமை கூறி விளக்கி இதோபதேசம் செய்து கொண்டிருக்கின்றனர். எந்தாய் நாடே எப்போது விழிப்பாய்? உனக்கும் கர்மபலன் இருக்கிறதோ?

## 4. சாஸ்திரம் கற்பிக்க வேண்டும் – எப்போது?

நமது நாடு ஒரு வளரும் நாடு. ஆனால் நாடு முழுமையாக எப்போது வளரும்? நமது நாடு வளர என்ன தேவை? ஆலமரத்தின் ஒரு சிறு விதைக்குள் உயிர்ப்புச் சத்து

தான் - ஜீவ சத்து தான் பெரிய ஆலமரமாக வளர்கிறது. விதை பெரிய மரமாக வளர்ந்ததற்குக் காற்று, கதிரவன் தரும் சூடு, தண்ணீர் ஆகியவை துணையேயாம், வளர்ச்சி, வித்தின் உயிர்ப்பு. அதுபோல், நமது நாடு வளர வேண்டும். முதலில் நாம் வளர வேண்டும். நமக்கு நம்மிடத்தில் நம்பிக்கை வளர வேண்டும். துணிவு வேண்டும். புத்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும். நாம் வளராமல் நமது விதியை நாம் ஆளாமல் எப்படி நாட்டை ஆளுவது? வளர்ப்பது? இவை நடைபெறக் கூடும். இவையெல்லாம் மட்டும் போதா, நமது விலங்குகளை உடைத்து நம்மை மாமனிதராக்குகின்ற துறவு மனப்பான்மையும் வேண்டும். துறவு என்றால் உடனே காவித்துணியும் கமண்டலமும் மட்டும் ஏன் நினைவிற்கு வருகிறது? தன்னலத்தைத் துறத்தல், சமூகத்தை நேசித்தல், நாட்டை நேசித்தல், உயிர்க்குலத்தை நேசித்தல், உண்பித்து உண்ணுதல், உடுக்கச் செய்து உடுத்தல் இவைதான் உண்மையான துறவு. இந்தத் துறவு காலப்போக்கில் கோலங்களாகிக் குணங்கள் ஆகாமல் தேக்கமடைந்து விட்டன.

இந்திய சந்நியாசிகளுக்கு இன்றுள்ள அறைகூவல் மதங்கள் அல்ல. பாபர் மசூதியும் அல்ல. இராமர் கோயிலும் அல்ல. இன்று நமது நாட்டில் 70% மக்கள் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள். அறியாமையில் மூழ்கிக் கிடப்பவர்கள் 58.9% விழுக்காட்டு மக்கள் ஏழ்மையில் கிடந்து உழல்கின்றனர். நடமாடும் கோயில்கள் நலிந்து அழுகின்றன. சராசரி அறிவே இல்லாதவனுக்கு ஞானோபதேசம் செய்யப் போகிறீர்கள். இதோபதேசம்; முத்தியின் இன்பம் இன்று நமது நாட்டு மக்களுக்கு விளங்குமா? இலையைப் பொத்தலாக்கி விட்டு அறுசுவை உணவு படைப்பதாக உறுதி மொழி கூறுவது நியாயமா?

நமது நாடு இன்று அந்நிய உதவியை நம்பி வாழ்கிறது. இன்றைய இந்தியன் கடனிலே பிறந்து கடனிலே வளர்ந்து கடனோடு சாகிறான். இந்தியன் அடுத்த தலைமுறைக்கு

கடனையே மூலதனமாகத் தருகிறான். இது ஏன்? இந்தியாவில் மதச் சடங்குகள், அரசியல் ஆர்ப்பாட்டங்கள் சுக வாழ்க்கையின் தேவைகளில் 25% குறைந்தால் கூட மிகப்பெரிய மூலதனம் சேரும். எல்லாரும் ஒரு மணி நேரம் ஊர்வேலை, நாட்டுவேலை என்று ஒதுக்கிச் செய்தால் நாட்டில் வளர்ச்சிப் பணிகள் நாளும் நடக்கும்.

நமது வளர்ச்சி, நமது நாட்டின் வளர்ச்சி, அது நம்மாலே நடக்க வேண்டும் நாமே இந்தப் புவியை நடத்த வேண்டும். பொதுவில் நடத்த வேண்டும். நிற்பானேன்? பணியைத் தொடங்குமுன்னே வெற்றி தோல்விகளைக் கணக்கிட்டுக் கலங்குவானேன்? எந்த ஒரு பணியும் தொடக்கத்தில் எதிர்ப்புகளைச் சந்திக்கத்தான் வேண்டும் நமக்கு ஏற்படும் எதிர்ப்புக்களை நம்மை வளர்க்கும் உயிர்ப்புக் களாக ஏற்றுக் கொண்டு நடைபோட வேண்டும். எழுந்திரு புவியை நடத்த முற்படு! பொதுவில் நடத்த முற்படு! வேலை செய்! எப்போதும் வேலை செய்து கொண்டேயிரு! இன்றைய மனித வளம் வேலைகளில் முழுமூச்சாக நாட்டுப் பணியில் ஈடுபடும் நாளிலேயே இந்தியா வளரும்! வாழும்! இதுவே விவேகானந்தர் சென்ற பாதை! அவர் நடந்த பாதையில் நடை போடுவோமாக!

விவேகானந்தரின் அருள்வாக்கு இதோ! உங்கள் படிப்பு இந்தப் பரிதாபக் குரல்களின் தேவையை நிறை வேற்றுமா? நிச்சயம் நிறைவேற்றாது. மேலைநாட்டு விஞ்ஞானத்தைக் கொண்டு பூமியை நன்றாக உழுது உணவுப் பொருள்களை மிக அதிகமாக உற்பத்தி செய்யுங்கள். விஞ்ஞானத்தின் துணையுடன் உங்கள் சொந்த முயற்சியையும் இணைத்து வருவாய்க்குரிய புதிய வழிகளைக் கண்டு பிடியுங்கள்; பிறரிடம் அடிமை வேலை செய்து பொருள் ஈட்ட முயலாதீர்கள். தங்களுக்கு வேண்டிய உணவையும், உடையையும் தாங்களே ஈட்டிக் கொள்ளுமாறு அவர்களுக்கு நான் போதிக்கிறேன். உணவுக்காகவும் உடைக்காகவும்

கவலைப்பட்டுக் கவலைப்பட்டு இந்த நாடே இப்படிப்பட்ட, நாசத்திற்கு வந்துவிட்டது. இதை நீக்குவதற்கு என்ன வழியைத் தேடியிருக்கிறீர்கள்? உங்கள் சாஸ்திரங்களை யெல்லாம் கங்கையிலே வீசி எறியுங்கள். மக்களுக்கு அதிகமான உணவுப் பொருள்களையும் ஆடைகளையும் உற்பத்தி செய்ய கற்றுக் கொடுங்கள். அதன் பிறகு அவர்களுக்கு நேரமிருந்தால் சாஸ்திரங்களைக் கற்பியுங்கள்.

## 5. பேச்சும் செயலும்

தமிழ் நாடு பேச்சில் முன்னேறிய நாடு. தமிழர்கள் பேசுவதில் வல்லவர்கள். ஆண்டுதோறும் பல நூறு பேச்சாளர்கள் உருவாகி வளர்ந்து வருகின்றனர். நமது நாட்டில் நாள்தோறும் நூற்றுக்கணக்கான மேடைகள் நடை பெறுகின்றன. ஏன்? பேச்சே ஒரு தொழிலாகி விட்டது. பேச்சில் சொற்சிலம்பங்கள் இருக்கும்; தத்துவப் பொழிவுகள் விளங்கும்; புதுமை பொலியும்; புரட்சிக் கனல் வீசும். மூச்சு விடாமல் பேசுவார்கள். இப்படிப் பேச்சுக் கச்சேரி பல ஆண்டுகளாக நடைபெற்று வருகிறதே! நாட்டில் நடந்தது என்ன? அறியாமை நீங்கியதா? வறுமை நீங்கியதா? தீண்டாமை நீங்கியதா? இல்லை, சாதி வேற்றுமைகள்தான் நீங்கியதா? ஒன்றும் நடைபெறவில்லை. ஏன்?

சொல்லுதல் யார்க்கும் எளிது. செயல் யாவர்க்கும் அரியது என்று வள்ளுவம் அறிவுறுத்தியது. இதுவே உண்மை. சிலருக்குச் சொல்லத் தெரியும். சொல்வதற்குரிய அறிவு விளங்கும். ஆனால் அச்சொல்லின் பொருளைச் செயற் படுத்துவதில்லை. காய்க்காத மலர்கள் அழகாக இருக்கலாம்; மணக்கலாம் பசி தீருமா? மாந்தர் உலகின் முன்னேற்றம் பேச்சில் இல்லையே! செயலில் அல்லவா இருக்கிறது. வறுமையைப் பற்றி அம்மம்ம! எத்தனை பேச்சுக்கள்! பட்டி மன்றங்கள்! கவிதைகள்! ஆனால், நடந்தது என்ன? பேசிய வர்கள் இரண்டாவது ஊதியம் பெற்றார்கள்; வளர்ந்தார்கள்;

வாழ்கிறார்கள். ஆனால் மக்களின் வறுமை அகன்ற பாடில்லை. அறியாமை அகற்றும் கல்வியை இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்பே திருவள்ளுவர் உயர்த்திக் கூறினார். என்னாயிற்று? 18 உரைகள் எழுந்தனவேயன்றி எழுதப் படிக்க எல்லோரும் கற்கவில்லை; கற்பிப்பாரும் இல்லை. ஏன்? ஏன்? நாம் என்ன மூச்சு விடுவது செயலுக்காகவா? இல்லையே! உயிர் பிழைத்து வாழத்தானே மூச்சுவிடுகின்றோம்! இந்த நாட்டில் செயல் இல்லை! செயல் இல்லை! கடவுளைக் சுற்றி வருவர்; முணுமுணுப்பர், ஆனால் காரியங்களைக் கடமை களைச் சுற்றிவாரார்! போதும் போதும். எதிர்வரும் இருபத் தோராம் நூற்றாண்டிற்குள் நமது நாட்டைப் புதுக்கியாக வேண்டும். பேச்சு மேடைகள், பட்டிமன்றங்கள் அமைப்பது போல் செயற்களப் பணிமனைகள் அமைப்போம்! உழைப்போம்! இதுவே விவேகானந்தர் அடிச்சுவட்டில் செய்வதற்குரிய அடையாளம்.

“நீங்கள் பேசுவதில் மட்டும்தான் அறிவாளிகள். செயலைப் பொறுத்தவரையில் முட்டாள்கள்!” என்று அருளிய விவேகானந்தரின் வேதனை நிறைந்த குரலை எண்ணுங்கள்! பேச்சைக் குறையுங்கள் மூச்செல்லாம் முயற்சியாக வாழ்வோமாக!

## 6. நான் ஏன் சோஷலிஸ்டு?

‘சோஷலிஸம்’ – என்ற தத்துவம் மாமுனிவர் மார்க்சின் மூலதனம் என்ற நூல்வழி உலகத்திற்கு அறிமுகப்படுத்தப் பெற்றது. ஆனாலும் சோஷலிஸம் என்ற தத்துவக் கொள்கை அறிவியல் வடிவம் பெறாமல் கொள்கை வடிவில், பலநூறு ஆண்டுகளாகவே தமிழிலக்கியங்களில் இடம் பெற்றிருந்தது.

“எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லைமாதோ;”

என்று கம்பன் சோஷலிசத்தைக் கடந்த பொதுவுடைமைச் சமுதாய அமைப்பு நடைமுறையை அறிமுகப்படுத்து கின்றான். இராமன், மக்களிடம் "எதுவினை?" என்று கேட் பதன் மூலம் உழைப்பு வேலையைப் பற்றிய சிந்தனையைத் தூண்டுகின்றான். அருட்பிரகாச வள்ளலார்,

"வல்லார்க்கும் மாட்டார்க்கும் வாய்ப்பளிக்கும் வாய்ப்பே" என்று சோஷலிச தத்துவத்தை இலக்கண வடிவி லேயே அறிமுகப்படுத்துகின்றார். ஆயினும் வள்ளலாரின் பாடல் மிகுதியும் சமயத் துறையைச் சார்ந்தவர்களாலேயே பாடப்பெற்று வந்ததால் சோஷலிசச் சிந்தனை செயல் வடிவம் பெறவில்லை; புரட்சி தோன்றவில்லை. பக்திப்புனலில் வள்ளலாரின் புரட்சித் தீ அணைந்து விட்டது. இலக்கியச் சுவையில் கம்பனின் அரசியல் சிந்தனை அவியலாகி விட்டது.

எது சோஷலிசம்? சோஷலிசத்தைப் பற்றிய கருத்தில் கூடக் குழப்பம்! ஆம்! சோஷலிசமே சோறுபோடும்; துணி கொடுக்கும் என்று சொல்கின்றனர். இல்லை, இல்லை! சோஷலிசம் சோறு போடாது; சோறுபோடக் கூடாது. சோஷலிசம் மனிதனை மனிதனாக்கும்; அறிவுடைய வனாக்கும்; திறன்மிக்க தொழிலாளனாக்கும்; படைப்பாளி யாக்கும். அவ்வழி அவன் சோறு தேடிக் கொள்வான்.

உழைப்புக்கு வாய்ப்பு! எல்லாருக்கும் ஆற்றலுக்கேற்ற வேலை வாய்ப்பு! வேலைக்கேற்ற கூலி! உழைப்புக்கேற்ற கூலி! இதுவே சோஷலிசம்.

சோஷலிசம் என்ற சொல்லுக்கு நல்ல தமிழாக்கம் 'வாய்ப்பு' என்ற சொல்லாகும். வாய்ப்புக்கள் எல்லாருக்கும் பொது. சாதி, மதம், கட்சி பாராமல் எல்லாருக்கும் வேலை! எல்லாரும் உழைத்தலுக்கு ஏற்ற வாய்ப்பு. இது சமுதாய வளர்ச்சியின் – முன்னேற்றத்தின் முதற்படி. உழைப்பதன் மூலமே எல்லாரும் எல்லா நலன்களும் எய்தல் வேண்டும்.

ஆனால், மக்களின் வாங்கும் சக்தி, உலகச்சந்தை நிலவரம் ஆகியன அடிப்படையில் தான் செல்வம் பெருக இயலும். ஏன் படைப்பில் கூடப் படைப்பாளியின் - உழைப்பாளியின் உழைப்புத் திறன் குறைவின் காரணமாகப் படைப்புப் பொருள்கள் குறையலாம். தேவைக்குரியனவற்றைக் கூட உற்பத்தி செய்ய இயலாமல் போகலாம். இந்த மாதிரிச் சூழ் நிலைகளில் மக்களின் தேவைகள் நிறைவு செய்யப் பெறாது போதல் இயற்கை. ஆயினும் தொடர்ந்த உழைப்பின் மூலமும் சுரண்டல் முறையிலிருந்து செல்வத்தைப் பாதுகாப்பதன் மூலமும் மக்கள் தங்களுடைய தேவையைப் பெற முடியும் என்ற நம்பிக்கையை உறுதிப்படுத்திக் கொள்ள முடியும்.

சோஷலிசம் என்ற தத்துவம் அதன் அளவில் அது நிறைவான தத்துவம் அல்ல; கொள்கை அல்ல; கோட்பாடு அல்ல; ஆயினும், மனித குலத்தின் வறுமையை, ஏழ்மையை அகற்றும் பணியில் தொடக்கத்தில் சோஷலிசத்தைத் தவிர வேறு வழி இருப்பதாகவும் தெரியவில்லை. விவேகானந்தர் சோஷலிசத்தை விரும்பி ஏற்றுக் கொண்டார். அவர் அப்படி ஏற்றுக் கொண்டதற்குரிய காரணத்தை “நான் சோஷலிஸ்டாக இருப்பது அது ஒரு நிறைவுள்ள முறை என நான் நினைப்பதாலல்ல. ஆனால் முழுப்பட்டினியைவிட அரை வயிற்றுணவு மிக்கமேலானது” (விவேகானந்தர் அவரது சமூக-அரசியற் கருத்துக்கள். பக். 78) என்று விவேகானந்தர் அருளியுள்ளமையால் அறியலாம்.

ஆனால், இன்று சோஷலிசமே கேள்விக் குறியாக உள்ளது. ஏன்? சோஷலிச சமுதாய அமைப்பின் மூலம் உழைப்பாளர் கைக்கு ஆட்சி மாறியது. ஆட்சிக்கு வந்த உழைக்கும் வர்க்கம் உழைப்பைத் தவிர்த்தது. மெல்ல உழைப்பை மறந்தது. அதன் விளைவு சோஷலிச சமுதாய அமைப்பில் கண்ட நாடு, முதலாளித்துவ நாட்டில் இன்று இரக்க வேண்டியிருக்கிறது. மனித உலகம் தனக்குத்தானே தீமை இழைத்துக் கொள்கிறது! காப்பார் யார்?

## 7

இந்தியா இன்று ஒரு விநோதமான நாடாகத் திகழ்கிறது. பணப்புழக்கமும் நிறைய இருக்கிறது. அதே போழ்து பணப்புழக்கமே இல்லாத சிற்றூர்களும் உண்டு. பல நூறாயிரங் குடும்பங்களுக்கு இன்று பணப்பஞ்சம் இருக்கிறது. ஏன்? சில நிறுவனங்களும் கூடப் பணப் பற்றாக்குறையால் இடர்ப்படுகின்றன. நல்ல நோக்கமும் செயற்பாடும் இருந்தாலும் நிறைவேற்ற நிதி ஆதாரங்கள். இருப்பதில்லை; நிதி கிடைப்பதில்லை, நிதிப்பற்றாக்குறை என்பது ஒரு கடுமை யான பிரச்சனை. இந்தப் பணப்பற்றாக்குறை இயற்கை யானதா? அல்லது நிர்வாகக் கோளாற்றால் அமைந்ததா? பணப்பற்றாக்குறை. இயற்கையாக அமையாது. இயற்கையாக அமைவது ஏழ்மை. பணப்பற்றாக்குறை என்பது ஏழ்மையல்ல.

இந்தப் பணப்பற்றாக்குறையினால் இடர்ப்படும் நிறுவன நிர்வாகத்தில்கூட மனிதச் சிக்கல்களும் தோன்றும். செய்ய வேண்டியனவற்றைச் செய்ய இயலாது. சிலர் பணப்பற்றாக்குறைக்காகச் செலவைச் சிக்கனப்படுத்த எண்ணுவர். வரவுக்கேற்பச் செலவு செய்யும் குணம் இது. நல்ல குணம்தான். ஆனாலும் வளரும் நாட்டுக்கும் நிறுவனத் திற்கும் இந்தக் கொள்கை ஒத்துவராது. அதுமட்டும் அல்ல, வளர்ச்சியைக் கடுமையாகப் பாதிக்கும். அதனால்தான் திருவள்ளுவர், பொருளியலைக் கூறும் பொழுது,

> "இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
> வகுத்தலும் வல்ல தரசு"

என்று கூறினார்.

இயற்றல் என்றால், பொருள் வருதலுக்குரிய–பொருள் ஈட்டுதற்குரிய புதிய புதிய வாயில்களைக் காணுதல் என்பது கருத்து. அதாவது பொருள் ஈட்டத்துக்குரிய அறிவு, ஆற்றல், பொருள் ஈட்டுவதற்குரிய வாயில்கள், செல்வ உற்பத்திக் களங்கள் எல்லாம் இருந்தும் புதிய பொருள் வருவாய்க்குரிய

வாயில்களை உருவாக்காமல், பொருளை ஈட்டாமல் சிக்கனப்படுத்துவது நல்ல பழக்கமல்ல. நாள்தோறும் பொருள் வருவாய்க்குரிய புதிய முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். செயல் செய்து கொண்டே போனால் பொருளின் தேவை இருக்கத்தான் செய்யும். பொருளின் தேவையே மனிதனை, பொருள் இயற்றும் முயற்சியில் ஆற்றுப்படுத்தும். பொருள் இயற்ற எடுத்துக் கொள்ளும் முயற்சியில் வெற்றி கிடைக்கும். இதுவே சுவாமி விவேகானந்தரின் அறிவுரை.

"தொண்டுக்குப் பணம் ஒரு பிரச்சனை அல்ல. தொண்டினைத் தொடங்கு; தொடர்ந்து செய்; பொருள்கள் தாமே வரும்" என்றார் சுவாமி விவேகானந்தர்.

# 14. தமிழ்நெறியும் லெனினியமும்

## 1

தமிழினம் கல் தோன்றி மண் தோன்றக் காலத்தே தோன்றி வளர்ந்து வாழ்ந்துவரக் கூடியது. தமிழரின் தாய் மொழியாம் தமிழ், காலத்தால் மூத்தது; கருத்தாலும் மூத்தது. தமிழ் காலத்திற்குக் காலம் தேவையான இலக்கியங்களைப் பெற்றுச் செழித்து வளர்ந்த செம்மொழி. தமிழிலக்கிய உலகத்தில் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய காலத்திலிருந்து நமக்கு இலக்கியம் கிடைத்திருக்கிறது; சிந்தனை தெரிகிறது. அச்சிந்தனை உலகம் வளர்த்து வந்திருக்கின்ற வகையும் விளங்குகிறது. இன்று கிடைத்திருக்கின்ற தமிழிலக்கிய மரபில் முற்போக்குச் சிந்தனையே மேம்பட்டு விளங்குகிறது. இருபதாம் நூற்றாண்டில் நின்று வாழ்கின்ற நாம், இரண்டாம் நூற்றாண்டில் அல்லது ஏழாம் நூற்றாண்டில் இருபதாம் நூற்றாண்டின் தீவிரத்தை-அப்படியே அதே உருவத்தில் எதிர் பார்க்க முடியாது. வரலாற்றுப் பார்வையில் அப்படி எதிர் பார்க்கவும் கூடாது. ஆனால், அந்தக் கருத்துக்கள் தோன்றிய

காலத்தில் உலக மொழிகளில் நிலவிய கருத்துக்களைவிட தமிழ்க் கருத்துக்கள் முற்போக்காகவும், தீவிரமாகவும் இருந்திருக்கின்றன. தமிழ்ச் சிந்தனையின் அடிச்சுவடுகள், இன்று மனித குலத்தைக் கவர்ந்துள்ள மார்க்ஸீய சித்தாந்தத் துடன் அடிப்படையில் முரண்படவில்லை. மாறாக, மார்க்ஸீய சித்தாந்தத்தின் அடிப்படைக்கூறுகள் மார்க்ஸீயம் தோன்றுவதற்குப் பல்நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழிலக்கியத்தில் கால் கொண்டுள்ளன. மார்க்ஸீயத்தின் சிறந்த விரிவுரையாளனாக விளங்கி மார்க்ஸீயத்தை நடை முறைப்படுத்தி வெற்றி கண்ட மாமேதை லெனின் உடைய சிந்தனைகளோடு நமது சிந்தனைகளை இணைத்து ஆராய்வது நமது கடமை. இந்த நூற்றாண்டில் பிறந்து வாழும் ஒருவன் லெனினியத்தை அறியாமல் வாழ்வானானால் அவன் ஓர் அறியா மகனேயாவான். அவர் தம் வாழ்க்கையில் அது குறையே! காரணம், மனித இயலை விஞ்ஞான பூர்வமாக ஆராய்ந்து மனித சமுதாயத்தைப் பற்றி நிற்கின்ற துன்பங்களுக்கெல்லாம் காரணம் கண்டதோடல்லாமல் அவற்றிற்கொரு முடிவு கண்ட பெருமை லெனினியத்துக்கு உண்டு. நமது சமுதாயத்தில் வழிவழி வளர்ந்து வந்துள்ள சிந்தனைகளும்-லெனினியமும் கலந்து இணைந்த ஒரு வாழ்க்கைமுறை இன்றையத் தேவையாக இருக்கிறது. அத்தகைய வாழ்க்கைமுறை சாத்தியமாவதற்கு முன்னோடியாக நமது வழி வழி அந்த மரபுகளை லெனினியத்தோடு இணைத்துச் சிந்தனை செய்யவும், கற்கவும் வேண்டியது நமது கடமை. அந்த வகையில் இந்தக் கட்டுரை ஓர் எளிய முயற்சி.

மனிதன் இன்றியமையாது பெற வேண்டிய கருவி அறிவு. இந்த அறிவு மனிதனின் சிந்தனையில் அறிவுதோன்றி அவ்வழிக் கருத்துத் தோன்றி அவ்வழி உலகத்திற்கு விளக்கம் கிடைத்ததென்பர். இவ்வழியில் - மனிதனின் சிந்தனையை மூல முதலாகக் கொண்டே வாழ்க்கை முறைகளும் குணங் களும் தோன்றின என்பது இந்த அணியின் கருத்தாகும். இந்த

உலகத்தை மானுட சமுதாயத்தின் வாழ்க்கை முறைகளைக் காணப்பெறும் - பொருள்களை முதலாகக் கொண்டு ஆராயும் முறை உலக லெனினியமாகும் அஃதாவது மனிதனின் எண்ணம் - சிந்தனை அனைத்தும் உலகின் சார்பில், அவன் சார்ந்துள்ள பொருள்களை முதலாகக் கொண்டு தொடங்கு கிறது என்பதேயாகும். நமது இலக்கிய மரபும் லெனினியத்தின் வழிப்போக்கிலேயே அமைந்துள்ளது. தொல்காப்பியம் நிலவுலகத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்காகப் பிரித்தது. குறிஞ்சி, மலையும் மலையைச் சார்ந்த நிலமுமாகும். மருதம், கழனியும் கழனியைச் சார்ந்த நிலமு மாகும். நெய்தல் கடலும் கடலைச் சார்ந்த நிலமுமாகும். தொல்காப்பியம் இங்ஙனம் நிலத்தைப் பிரித்துக் கொண்ட பிறகு, அந்த நிலத்திற்கு இயைந்தவாறே மனிதனின் ஒழுக்கத்தையும் கண்டு வகுத்துக் கூறுகிறது. அதாவது, ஒழுக்கம் சார்ந்த நிலச்சார்பல்ல; நிலத்தினைச் சார்ந்த ஒழுக்கமேயாகும். அதாவது; மூலம் - சிந்தனையும் ஒழுக்கமு மல்ல; நிலத்தின் இயல்பேயாகும். ஏன்? தொல்காப்பியன் ஒருபடி வளர்ந்து வழிபடும் தெய்வத்தையும் கூட நிலத்தின் சார்பினதாக அமைத்தான். கடவுள் என்ற மூலத்திலிருந்து நிலம் தோன்றிற்று என்பதற்கு மாறாக நிலத்தின் இயல்பில் பெற்ற உணர்வுகளுக்கேற்பக் கடவுள் வழிபாடு தோன்றுவ தோடன்றி நிலத்திற்கு நிலம் மாறுபடுவதாகவும் அமைந்தது எண்ணத் தக்கது.

திருவள்ளுவரும் மனிதனின் அறிவு, அவனிடத்தில் தோன்றுவது போலத் தெரிகிறதே தவிர, அவனிடத்திலேயே மூலமாகத் தோன்றுவதில்லை என்று தெளிவாகக் கூறுகிறார். அது மட்டுமன்றி மனிதனின் அறிவு, அவன் சார்ந்திருக்கின்ற இனத்திலிருந்தே தோன்றுகிறது என்றும் கூறுகிறார்.

> **"மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு**
> **இனத்துள தாகும் அறிவு"**

என்பது வள்ளுவம். மனத்திலிருந்து அறிவு வருவது போலத் தோன்றுவது ஒரு மாயத் தோற்றமே. மனிதனின் அறிவு அவன் சார்ந்துள்ள இனத்தின் தொடர்பிலேயே தோன்று கிறது. இனம் என்ற சொல்லில் உலகப் பொருள்களும் அடங்கும். பொருளை முதலாகக் கொண்டு தோன்றும் அறிவே - ஒழுக்கமே உலகியல், என்ற லெனினியத்தின் கருத்து தமிழ் மரபு தழுவிய கருத்தேயாம்.

## 2

லெனினியம், எதையும் அறிவின் அடிப்படையில் எதார்த்த உணர்வோடு ஆராய்ந்து முடிவெடுப்பதாகும். இரண்டும் இரண்டும் நாலு என்ற விடை வருவதைப் போல எந்த ஒன்றையும் அறிவில் ஆராய்ந்து அனுபவரீதியாக முடிவெடுக்க வேண்டுமென்பது லெனினியத்தின் அடிப்படை விதி. லெனினியம், "விரிந்தும் பரந்தும் கிடக்கின்ற இந்த உலகம் இயற்கையானது" என்கிறது. இந்த உலகத்தைப் படைத்த - இந்த உலகத்திற்கு அப்பாற்பட்ட இன்னொரு சக்தி உண்டென்பதை நம்புவதில்லை; இல்லை, நம்ப மறுக்கிறது! அதோடு, "இந்த உலகம் ஒரு மாதிரியாக இல்லை; வேறுபட்டுக் கிடக்கிறது; முற்றிலும் முழுமைபெற்றுப் பக்குவமாக இல்லை. அது வளர்கிறது; மாறி வருகிறது; முற்றிலும் இன்பமாக இல்லை; துன்பக் கலப்பு இருக்கிறது. இந்தக் காரணங்களால் உலகம் இயற்கையேயாம்" என்பது லெனினியத்தின் தத்துவங்களுள் ஒன்று.

தமிழிலக்கிய மரபுகளைப் பொருத்தவரையில் இந்த உலகம் பற்றிய கருத்து ஒரு மாதிரியாக இல்லை. காலத்திற்குக் காலம் மாறுபடுகிறது. ஒரு நூலுக்குள்ளேயே கூட இரண்டு விதக் கருத்துக்கள் பேசப்படுகின்றன. உலகம் இறைவனால் படைக்கப் பெற்றது என்ற கருத்தும் உலவுகிறது; உலகம் இறைவனுடைய திருவருள் நோக்கால் மாயையில் தோன்றியது என்பாருமுளர். இறைவனே உலகம் என்றும், உலகமே

இறைவன் என்றும், பேசப்பட்டு இருக்கிறது. எது எப்படி யிருப்பினும் உயிர் வர்க்கங்கள் கடவுளால் படைக்கப் பட்டவையல்ல என்று தமிழ்ச் சமய மரபு அறுதியிட்டுக் கூறுகிறது. இங்ஙனம், தமிழிலக்கிய மரபில் பல குரல் உலகத்தைப் பற்றிய கருத்தில் ஒருமைப்பாடில்லாது போனாலும் உலகம் கடவுளால் படைக்கப்பட்டதன்று. உலகம் தானே தோன்றியது. இந்த உலகத்தின் இயக்க ஆற்றலைக் கடவுளாகவே கருதினார்கள் என்ற கருத்து லெனினியத் துக்குச் சார்பாக அமைந்திருக்கிறது. பொதுவாக இந்தக் கருத்தே வலிமை பெற்றும் வளர்ந்து வந்திருக்கிறது.

சங்கத் தமிழ் நூல் ஐங்குறுநூறு ஒரு சிறந்த இலக்கியம். ஐங்குறுநூற்றின் கடவுள் வாழ்த்து ஓர் இனிய பாடல். அந்தப் பாடல்,

> நீல மேனி வாலிழை பாகத்து
> ஒருவன் இருதாள் நிழற்கீழ்
> மூவகை உலகும் முகிழ்த்தன முறையே!

என்பது உலக உயிர்கள் பரிணாம வளர்ச்சிக்கு ஆணும் பெண்ணும் இயைந்த கூட்டு வாழ்க்கை இன்றியமையாதது. அவ்வழித் தோன்றும் உயிர்த் தோற்றமே இயற்கை. அஃதில்லாத பௌராணிகத் தோற்றங்கள் அறிவியலுக்கும் ஒத்தன அல்ல; இயற்கையோடும் இயைந்தனவாகா. அத்தகைய அநாகரிகப் படைப்புகள் பேதைமைத் தன்மையின் படைப்புகளேயாம். அதனால், உலகிற்குக் கடவுளைத் தந்தையாகக் கருதிய தமிழ், அவளை மங்கை மணாளனாகக் கண்டது. ஆனால் அந்தப் படைப்பு தத்துவப் படைப்பேயாம். பருவுடல் வழிப்பட்ட பால்படைப்புமன்று கூட்டுமன்று.

இதனை மேற்கூறிய "நீலமேனி" என்ற பாடலில் "தாள் நிழற்கீழ்" என்பதால் அவன் தாளாண்மையில் தோன்றிற்று உலகம் என்றும் கூறலாம். ஆயினும், ஆசிரியர் 'முகிழ்த்தன' என்று கூறுவதால் அவனுடைய தாளாண்மையால்

தோன்றிற்று என்று பொருள் கொள்ள முடியவில்லை. காரணம், 'முகிழ்த்தன' என்ற சொல் தன்வினைச் சொல்லே பிறவினை அன்று. ஆதலால் உலகம் இறைவனுடைய தண்ணளியின் நிழலில் தானே தோன்றிற்று என்று கொள்ளுதலே சிறப்புடைய பொருளாகும். உலகம், தானே தோன்றிற்று என்ற லெனினியத்தோடு இந்தக் கருத்து இசைந்திருக்கிறது. தமிழ் இலக்கண நூலுள் ஒன்றாகிய புறப்பொருள் வெண்பா மாலையும் இந்த அடிப்படையிலேயே உலகத் தோற்றத்தைப் பற்றிப் பேசுகிறது. அதாவது:

> "வையகம் போர்த்த வயங்கொலிநீர்–கையகலக்
> கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
> முன்தோன்றி மூத்த குடி"

என்பது பாடல். இந்தப் பாடல் மூலம், உலகம் நீர்ப்பரப்பாக முதலில் இருந்தது. பின்பு பரிணாம வளர்ச்சியில் கல் தோன்றிற்று. கல் கரைந்தும் உடைந்தும் மண் தோன்றுதற்கு முன்பு தமிழினம் தோன்றிற்று என்று விளங்குகிறது. 'கல் தோன்றி மண்தோன்றி' என்ற சொற்களின் மூலம் தானே தோன்றிற்று என்பதே பெறப்படுகிறது. 'தோன்றுதல்' என்ற சொல்லும் தன்வினைச் சொல்லேயாம்.

அப்பரடிகள் "இறைவன் உலகத்தைப் படைத்தான்" என்று ஒரேவழி கூறியிருந்தாலும், மிகுதியாக 'இறைவனே உலகம்' என்ற கருத்தும், உலகமே இறைவன் என்ற கருத்தும் தான் அப்பரடிகள் திருமுறையில் அதிகம் பயிலுகிறது. இறைவன் படைக்கப்பட்டவன் அல்லன். ஆதலால், உலகமே இறைவன் என்ற கருத்தால் உலகம் படைக்கப்பட்டதில்லை என்பதும் பெறப்படுகிறது. **"எல்லா உலகமும் ஆனான்"** என்றும், **"அனைத்துலகும் ஆனானை"** என்றும், **"உலகமெல்லாம் ஆயவனை"** என்றும், **"உலகானானை"** என்றும் அப்பரடிகள் அருளிச் செய்துள்ளார்கள். சிவநெறியில் சிவலிங்க வழிபாடே தொன்மை வழிபாடு. சிவலிங்க வழிபாட்டின் பரிணாம

வளர்ச்சி, இறைவன் உலகமாக இருக்கிறான் என்ற அடிப்படையிலேயே தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது. சிவலிங்கத் திருமேனியின் ‘பாணம்’ உலகத்தின் சின்னமேயாகும். இறைவன் உலகமாக இருக்கிறான் என்பதை விட அப்பரடிகள் ‘எல்லா உலகமும் இறைவனானான்” என்றே குறிப்பிடுகிறார். ஆனால், உலகத்தை இறைவனாகக் கருதி வழிபாடு தோன்றிற்றென்றும் பொருள் கொள்ள வழியிருக்கிறது. இங்ஙனம் ஆராய்ந்து பார்க்கும் பொழுது உலகம் பற்றிய கருத்தில் லெனினியத்திற்கும், தமிழிலக்கிய மரபிற்கும் மிகுதியும் முரண்பாடில்லை.

3

உலகம் படைக்கப் பட்டதன்று; இயற்கையானது என்ற செய்தியை முன்னால் ஆராய்ந்தோம். அந்த வகையில் லெனினியத்துக்கும் தமிழ் மரபுக்கும் முரண்பாடின்மையையும் கண்டோம். ஆயினும், இந்த உலகத்தின் இயக்கம்-மாறுதல்-வளர்ச்சி ஆகிய தொழிற்பாடுகளைப் பற்றி நாம் ஆராய வேண்டியதிருக்கிறது. இந்த உலகத்தின் தொழிற் பாட்டில் ஓர் ஒழுங்கும். முறை பிறழாத நிகழ்ச்சியும் இருப்பதைக் காண்கிறோம். இந்த ஒழுங்கு முறை உலகத்திற்கு எப்படிக் கிடைத்தது? அஃதும் இயற்கையா? உலகம் சடப்பொருளா? அல்லது உயிர்ப் பொருளா? அல்லது இரண்டும் கலந்த பொருளா? சடப்பொருளுக்கு மாறுதலும் வளர்ச்சியும் உண்டா? என்ற ஏராளமான வினாக்களுக்கு விடை காண்பதில் உலகிடை நிலவும் தத்துவங்கள் அனைத்தும் முரண்படுகின்றன. சிசிரோ என்ற பேரறிஞன், இந்த உலகத்தின் நிகழ்வு முறைகளில் மனிதனுடைய சக்திக்கு அப்பாற்பட்ட செயல்முறைகளைப் பார்க்கிறோம். உலகத்தின் நிகழ்வுகளில் ஒரு மாறா முறை வழிப்பட்ட நிகழ்ச்சியையும் (order) ஒழுங்கு பெறாத நிகழ்ச்சியையும் (Inconsistent) பார்க் கிறோம். நிச்சயமாக இவைகளுக்கு மனிதன் காரணமாக

இருக்க முடியாது. மனிதனை விட மேம்பட்டதொன்றாகத் தான் இருக்க வேண்டும். அது கடவுளையன்றி வேறு யாதாக இருத்தல் கூடும்? என்று கூறுகிறார்.

பகுத்தறிவு படைத்த மனிதனைவிட இயற்கை ஒரு வகையில் ஒழுங்காகவே இயங்குகிறது. அபூர்வமாகச் சில சந்தர்ப்பங்களில் இயற்கையின் சீற்றத்தால் துன்பங்கள் விளை யினும், பொதுவாக இயற்கை அழகாக இருக்கிறது. ஆக்கப் பாடுடையதாக இருக்கிறது; உயிரினங்கள் பலவற்றிற்கும் வாழ்வளிக்கிறது. இயற்கையின் எழில் தோற்றத்திலும் அதன் விளைவுகளை நுகர்தலிலும் உயிரினம் வாழ்ந்து கொண்டிருக் கிறது. நாட்காட்டிகள் கடிகாரங்கள் முதலியன வைத்தறியாத இயற்கையுலகம் காலந் தவறாது செயற்படுகிறது! கதிரொளி தெரிகிறது! மரங்கள் பூக்கின்றன; காய்க்கின்றன; கனி தரு கின்றன! இவை நிகழ்வதில் ஒரு குறிப்பிட்ட கால அமைப்பு முறையிருக்கிறது. இந்த முறைகளும் மாறுபடவில்லை. காலந் தாழ்த்தி அலுவல்கள் செய்யும். அதுவும் கடிகாரம் கட்டிய மனிதனைப் பார்க்கிறோம். ஆனால் ஞாலத்து நிகழ்வுகளில் காலத் தாழ்ச்சியில்லை. இத்தகைய வியத்தகு முறைகளுக்கு எது அடிப்படை? இயற்கையின் இயல்பா? உலகத்தின் உள்ளீடமா? அல்லது உலகத்திற்கு உயிர்ப்புத் தன்மை யுண்டா? அல்லது மனிதன் இயக்குகின்றானா? அல்லது கடவுள் இயக்குகின்றானா என்பதைத் தொடர்ந்து ஆராய்வோம்.

## 4

நம்முடைய ஆய்வில் மிகவும் சிக்கல் நிறைந்த பொருள் ஆன்மா. அதாவது உயிரைப் பற்றியதாகும். லெனினியம் உயிர் சம்பந்தப்பட்ட செய்தியில் நம்முடைய தமிழ் மரபோடு முரணி நிற்கிறது. உடலுக்கு அப்பாற்பட்ட உயிர் ஒன்று இல்லையென்பது லெனினியத்தின் கோட்பாடு. ஆனால் தமிழ்மரபு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக உயிர் என்ற தனிப்

பொருளை ஒத்துக் கொண்டே வந்திருக்கின்றது. இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய திருவள்ளுவர் உடம்பும் உயிரும் வெவ்வேறானது என்றே குறிப்பிடுகிறார். காதலன் – காதலி இடையே இருக்கும் உறவுக்கு உவமை கூற வந்த திருவள்ளுவர் உடம்பொடு உயிரிடை நட்பை உவமை காட்டினார்.

"உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு"

என்பது குறள், காதலன் - காதலி இவ்விருவரிடையே ஏற்படுகிற உறவுக்கு. உடம்புக்கும் உயிருக்கும் இருக்கும் நட்பை உவமையாகக் காட்டினார். இதிலிருந்து உடலும், உயிரும் வெவ்வேறு என்பது தெளிவாகிறது. அது போலவே,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு"

என்ற திருக்குறளும் உடம்பையும் உயிரையும் வேறு வேறாகக் காட்டுகிறது. ஆதலால் உடம்பே உயிரல்ல; உடம்பின் இயங்கு சக்தியும் உயிரல்ல. உடம்பில் தங்கியிருந்து பணிகளைச் செய்வது உயிர்.

உயிர்கள் நிலை பெற்றவை. உயிர்களுக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை. உயிர்களைக் கடவுள் படைக்கவும் இல்லை. உயிர்கள் என்றும் நிலைபேறான தன்மையுடையன என்பது தெளிவாகிறது. புறநானூற்றுக் கவிஞர்.

"மன்னா வுலகத்து மன்னுயிர்"

என்று பாராட்டுகிறார். திருவள்ளுவரும்,

"மன்னுயி ரோம்பி அருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை"

"தம்மில் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது"

என்று கூறியுள்ள குறள்களில் மன்னுயிர் என்றே குறிப்பிடு கிறார் மன்னுயிர் என்றால், நிலைபேறான தன்மையுடைய உயிர் என்றே பொருள்படும். ஆதலால், உயிர்கள் உடம்பைக் கருவியாகக் கொண்டே வாழ்ந்து கடமைகளைச் செய்கின்றன என்பது பெறப்படுகிறது. உடம்பு என்ற சொல்லிலும் "உடு" என்ற முதனிலைச் சொல் உயிர் எடுத்துக் கொண்ட உடையே உடம்பு என்பதைத் தெளிவாக விளக்குகிறது. உயிர் உடம்பினைக் கொண்டு தன்னுடைய மேம்பாட்டுக்குரிய கடமைகளை செய்கின்றது என்பதே தமிழ்க் கருத்து. உயிர் என்றும் உள்பொருள் என்றே தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் ஒரு முகமாகக் கூறுகின்றன. தாயுமானவரும்.

"என்றும் நீ அன்று நான்"

என்றார். அதாவது தோற்றத்தால் உயிரும் கடவுளும் ஒன்றற் கொன்று பிந்தியது மல்ல; காலத்தால் ஒத்த இயல்புள்ளவை என்று கூறுகிறார்.

ஆதலால் உயிர், என்றும் உள்பொருள். அதற்குப் பிறப்புமில்லை; மறைவுமில்லை என்பது தெளிவாகிறது. அந்த உயிர், கடவுளைப் போல கால எல்லைகளைக் கடந்தது. அந்த உயிர் உடலைக் கருவியாகக் கொண்டு இயங்குகிறதே தவிர உடலுக்கு உயிர்த் தன்மை இல்லை. உடலுக்கு உயிர்த்தன்மை உண்டெனக் கூறும் நெறி தமிழ் நெறியல்ல. உயிர் பிரிந்த வழி உடல் உயிர்ப்பின்றி - பேச்சின்றிப் பிணமாகக் கிடப்பதைப் பார்க்கிறோம். உடலே உயிராக இருக்குமாயின் இந்த அவல நிலை ஏன்? ஆதலால், உயிரை உள்பொருள் என்று ஒத்துக் கொண்டு அந்த அடிப்படையில் மேலும் லெனினியத்தை ஆராய்வோம். உயிரைப் பற்றிய தெளிவான முடிவு ஏற்பட்டாலே லெனினியத்தின் முழு வடிவத்தை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

## 5

உயிர் பற்றிய கொள்கையில் பௌத்த நெறி சற்று வளர்ந்த கொள்கையைக் கண்டது. அதாவது, இவ்வுடம்பின் வேறாய் எல்லாவற்றையும் அறிவதாகிய அறிவு உண்டு எனக் கொண்டு, அறிவை ஒத்துக் கொண்டது. ஆனால் உயிர் உண்டென்ற கொள்கை பௌத்தத்திற்கு இல்லை. அறிவு என்பது ஐம்பொறிகளுக்கும் புலப்படுவதில்லை. அறிவு, ஓர் அனுபவத்தின் மையம். "யான் இதனைக் கண்டறிந்தேன்" என்றும், "கேட்டறிந்தேன்" என்றும், "சுவைத்தறிந்தேன்" என்றும், "நுகர்ந்தறிந்தேன்" என்றும், "தொட்டறிந்தேன்" என்றும் கூறுவதனால், அறிவதை அனுபவமாகவும், அந்த அனுபவத்தை கொண்ட உயிர் ஒன்று தனியே உளது என்பது பெறப்படுகிறது. "யான்" என்றும் "எனது" என்றும் உரிமை கொண்டாடுவதே உயிர்தானே! "யாம் அறிவதில்லை. அறி வறிந்த மக்கட்பேறு அல்ல பிற" என்ற திருக்குறளில் "யாம்" என்று சுட்டிக்கொண்ட ஓர் உயிர்க்கு அறிவு என்ற அறிதற் கருவி துணை நின்று தொழிற்படுவதே பெறப்படுகிறது.

திருவள்ளுவர் தமது திருக்குறளில் அறிவை உடைமை யாகப் பேசுகிறார். "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்பது குறள். உடைமை என்றதனாலேயே உடையவன் ஒருவன் உண்டென்பது வெளிப்படையான உண்மை. உயிர்க் குரிய பண்பாகும். "நான் அறிந்தேன்" "என்னறிவு" என்னும் வழக்கில் "நான்" என்பதொரு பொருளும், அதனோடு ஒற்றுமைப்பட்ட அறிதற் பண்பும், உணரத்தக்கன. அறிவு, ஒரு பண்பேயன்றிப் பொருளாகாது. உடம்புடன் பொறிகளும் மனமுமே உயிர். "உயிரெனத் தனியே வேறொரு பொருளில்லை" என்பது பௌத்தம். உடல் உறக்கத்தில் கிடக்கும் பொழுது அறிவு விளங்குவதில்லை. உறக்கத்தின் போது அறிவு செயற்படுதலுமில்லை. ஏன்? பல சமயங்களில் அறியாமையோ என்று கருதக்கூடிய சில செயல்களும் நிகழ்கின்றன. உடலும் பொறிகளும் அவை தம் முன்

முரண்பட்டு, ஒன்று அறிந்ததைப் பிறிதொன்று அறியாது குழப்பத்தை விளைவிக்கின்றன. கண், ஒளியை அனுபவிக்கிறது.

ஆனால், அதே ஒளியைச் செவி அனுபவிப்பதில்லை. செவி, இசை ஒலியைக் கேட்டு அனுபவிக்கிறது. கண், அந்த ஒலியைக் கேட்டு அனுபவிப்பதில்லை. இந்தப் பொறிகள் நுகர்தலிலும் சரி, தமக்கு ஒதுக்கப்பட்ட களங்களிலும் சரி, ஒரு வழிபட்ட குறையுடைய அறிவையே பெற்று விளங்குகின்றன. பூரணத்துவம் இல்லை. உயிர், மனத்தினும் மாறுபட்டது. உயிர் ஒன்றே, இந்த ஐம்பொறிகளாலும் பெறும் இன்பத்தை முற்றிலும் முழுதுமாக ஈடுபட்டு அனுபவிக்கிறது ஒரு விளக்கு, தன்னைச் சூழ்ந்திருக்கின்ற பொருள்களைக் காட்டித் தன்னையும் காட்டிக் கொள்வது போலச் சித்தத்தையும், பிறிது உண்டாயவற்றையும் அறிவித்துத் தன்னையும் அறிவித்து நிற்கும் என்று கூறின், உருவங்கள் முதலிய பொருள்களையும் அவற்றைக் காட்டி நிற்கும் விளக்கையும் கண்டு நிற்கும் கண்போல சித்தத்தையும் விடயத்தால் அறியும் இந்திரியங்களையும் உணர்வான் ஒருவன் தனியே உண்டென்று அறிதல் வேண்டும்.

இன்னும் ஒருயிர் நெறியினர் (ஏகான்ம வாதிகள்) உயிரை பற்றி விசித்திரமாக விளக்கம் கூறுவர். "அறிவுடைய உயிர் ஒன்றே, உடம்புகள் தோறும் வேறு வேறாய்க் காணப்படுகின்றது" என்பது அவர்தம் கொள்கை. குடங்கள் தோறும் வேறு வேறாய்த் தோன்றும் திங்களின் வடிவு. அக்குடங்கள் உடைந்த வழி குடங்கள் தோறும் இருந்த திங்கள்தான் இல்லையாகித் திங்கள் ஒன்றுமே நிலைபெறுகிறது. அது போல, இவ்வுடம்புகளெல்லாம் போயவிடத்து, உயிர் ஒன்றேயாக இருக்கும் என்பதும் ஒரு கொள்கை. இந்தக் கருத்தும் உவமையும் நேரியதன்று. திங்களினிடத்துக் காணப்படும் ஒளி வடிவும், வட்ட வடிவும் அதன் நிழல்கள் எல்லாவற்றினும் காணப்படுதல் போல, ஒருயிரினிடத்துக்

காணப்படும் அறிவும் செயலும் ஏனைய உயிர்களிடத்தும் காணப்படுதல் வேண்டும். இங்ஙனமின்றி அவை, ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொன்றாகப் பல தரப்பட்டு நிகழக் காண்டலால், "உயிர் ஒன்றே" என்னும் முறை சிறிதும் பொருந்தாது. தண்ணீரின் அசைவால், தண்ணீரில் தெரியும் திங்களின் நிழலும் அசைவது போல் தோன்றினும் திங்களுக்கு அந்த அசைவில்லை. அதுபோல உடம்பின் வினைகளால் உயிருடம்பின் உள்ளிருக்கும் உயிர், துன்புறுதல் தோன்றினும் ஒன்றே யாய அவ்வுயிர்க்கும் இயற்கையில் அவ்வினைத் தொடக்கு இல்லை. ஆயின், இந்த உவமை பொருந்தாது. உயிரின் சேர்க்கையின்றி உடம்பு ஒரு வினை செய்ய இயலாது.

6

உயிரைப் பொருத்தவரையில் நமது நாட்டு உலகாயத வாதம் கூறுகின்ற கொள்கைகளும், லெனினியத்தின் கொள்கைகளும் உடன்பாடுடையன. அதாவது, உடலின் வேறாய் உயிர் என்ற ஒன்று இல்லையென்பதாகும். இங்ஙனம் அவர்கள் கூறுவதற்கு அடிப்படைக் காரணம் அல்லது அடிப்படையானது, "கண்ணால் காணக் கூடியன-மட்டுமே உண்மை. மற்றைய எல்லாம் பொய்" என்ற கோட்பாடாகும். ஆய்வுக்கு அடிப்படையான இந்த அடிப்படைக் கோட்பாட்டிலேயே தவறு இருக்கிறது. உலகம் பரந்து பட்டது. அனைத்துலகத்தையும் அல்லது அனைத்துலக இயல்பு களையும், ஒரு பொறியால் கண்டு அனுபவித்தல் அல்லது உணர்தல் என்பது அருமை. அது எளியதல்ல என்பது மட்டுமன்று, இயலாததுமாகும்.

அதோடு உலகிடை நிலவும் பல்வேறு பொருள் களுக்கும் ஓரியல்புமட்டும் உரிமையன்று; பல்வேறு இயல்பு களுண்டு. அப்பல்வேறு இயல்புகளையும் ஒரே நேரத்தில் – ஒரு பொறியால் அனுபவித்தல் இயலாது. அப்பொருளின்

பல்வேறு இயல்புகளில், பல்வேறு பொறிகளும் தனித்தனியே தன்னியல்புக் கேற்றவாறு கலந்து, ஒரே பொருளில் ஒன்றிக் கலந்து அனுபவிக்கும் பொழுதே, அனுபவம் தோன்றுகிறது; வாழ்க்கை சிறக்கிறது. இன்பத்திற்கும் இந்த இயல்பு உண்டு என்று, பெருமக்கள் கூறியுள்ளனர்.

> கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே உள

என்பது திருக்குறள்.

பெண் ஒரு பொருள்தான். ஆனால், வேறு வேறு இயல்பு பெண்ணுக்கு உண்டு. ஐம்பொறிகளும், தனித்தனியே அந்தப் பெண்ணின் ஓரியல்பைத்தான் அனுபவிக்க முடிகிறது. ஒரு பொறிக்கு ஓரியல்பு அனுபவத்திற்கு வாரமையின் அந்த இயல்பு இல்லையென்றோ, பொருளில்லை என்றோ கூறமுடியாது. ஏன்? அறிவையே கூட நேரடியாகக் காணமுடியாது. அறிவை, செயற்பாடுகளிலேயே காண முடியும், மணம் கண்ணால், பார்க்கக் கூடிய ஒன்றன்று. மூக்கால் நுகர்ந்து அனுபவிக்கக் கூடியதே. மணம், கண்ணால் பார்க்கக்கூடியதின்மையின் காரணமாக இல்லையென்று கூறமுடியாது ஏன்? உயிரியலில் இன்றியமையாத் தேவையாகிய காற்றே கண்ணின் காட்சிக்கு வருவதன்று. ஒரு பொருள் உள்பொருளா? இல்பொருளா? என்பதை ஒரு பொறியினைக் கொண்டு அளந்து கூறுதல் கூடாது.

ஐம்பொறிகளாலும் கண்டு ஆராய்ந்து, ஐம்புலன்களாலும் கண்டுணர்ந்து, அவைகளுக்கும் மேலாய அறிவாலும் ஆராய்ந்து முடிவெடுத்தலே ஏற்புடையதாகும். கட்புலனுக்கும் பருப் பொருள்கள் மட்டுமே காட்சிக்கு வரும், அடுத்து, வண்ணமும் ஒளியும் காட்சிக்கு வரும். சில மெய்ப்பாடுகளும் கட்புலனுக்கு வருதல் கூடும். நுண் பொருள்களும் பெரும்பாலான தன்மைகளும் அல்லது குணங்களும், உணர்வுகளும் கட்புலனுக்கு வாரா. ஆதலால்

கண்ணால் காண்பன மட்டுமே, உண்மையென்ற அடிப்படையே குறைவுடையதாகும்.

உலகாயத அடிப்படையில் உடலுக்கு வேறாக உயிரை நம்புவதில்லை. இந்த உடலுக்கு முந்தியதாகவோ, அல்லது பிந்தியதாகவோ யாதொன்றும் இல்லை. அதாவது உயிர் இல்லை என்பதே அவர்கள் கோட்பாடு, உயிரும், உடலும் ஒன்றே என்பது இக்கொள்கை. "ஐம்பூதக் கூட்டினாலாகிய (நிலம், நீர், தீ, வளி, ஆகாயம்) இந்த உடம்பு தோன்றும் பொழுதே, அந்தக் கூட்டின் விளைவாக, உடலுக்கு உணரும் சக்தியும், சிந்திக்கும் சக்தியும் கிடைக்கிறது. அந்த இயக்கத் திற்கு அறிவு உண்டு; உணர்வு உண்டு" என்பதே இக் கொள்கை. "இந்தப் பொருட்சார்பு வலிமை குறையும் பொழுது, அந்த ஆற்றலும் குறைந்து போகின்றது. பின் மரணம் வருகிறது" என்பதும் அக்கொள்கை, அதற்கு அவர்கள் எடுத்துக் காட்டும் உதாரணம் வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு ஆகியவற்றின் கூட்டு ஏற்படும் பொழுது ஏற்படும் சிவப்பு வண்ணம் போல இந்தப் பூதங்களின் கூட்டால் உணர்வு ஏற்படுகிறது என்பதே. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இவற்றின் கூட்டால் ஏற்படும் வண்ணம் நிலத்திற்கு நிலம், இனத்திற்கு இனம், மொழிக்கு மொழி வேறுபாடுடையதாக இருப்பதில்லை என்பதை உணராதது ஏனோ? வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பை குப்பன் கூட்டினாலும், குப்புசாமி சாஸ்திரி கூட்டினாலும், 'குவின்' கூட்டினாலும், 'குயின்டாங்' கூட்டினாலும் வண்ணம் ஒரு தன்மைத்தே. வேறுபாடுகள் இல்லை. அது போலவா, மனிதனின் சிந்தனை இருக்கிறது? உணர்வு இருக்கிறது? ஓரிடத்தில் பத்துப்பேர் இருந்து வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு போட்டால், வண்ணம் ஒன்றேயாம். ஆனால், அந்தப் பத்துப் பேரின் உணர்வு ஒன்றல்ல, அது மட்டுமின்றிக் காலத்திற்குக் காலம் இந்த வண்ணம் வேறுபட்டதாகவும் வரலாறு இல்லை. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பைக்

கூட்டக் கற்றுக் கொண்ட காலம் முதல், இன்று வரையில் வண்ணத்தில் வளர்ச்சியுமில்லை, மாறுதலுமில்லை, மனித வுயிர்கள் அப்படியா வாழ்ந்து கொண்டிருக்கின்றன? என்ற வினாவுக்கு இதுவரையில் விடை கிடைக்கவில்லை.

## 7

மேலும், உயிர்த் தொகுதிகளுக்கிடையில் எண்ணத் தொலையாத வேறுபாடுகள் இருக்கின்றன. நாம் இங்கு வேறுபாடுகள் என்று சொல்லும் பொழுது, இயற்கையில் உள்ள வேறுபாடுகளையே குறிக்கின்றோம். செயற்கை வேறு பாடுகளை யல்ல, ஆண் பெண் என்ற பால் வேற்றுமை இயற்கை. புழு-பூச்சி என்ற வேறுபாடு இயற்கை. பறவை-விலங்கு என்ற வேறுபாடு இயற்கை. மாடு-மரம் என்ற வேறு பாடு இயற்கை. இத்தகைய வேறுபாடுகளுக்கு அடிப்படை என்ன? மேலும் அறிவு, ஆற்றல் இவைகளில் வேறுபாடுகள் இருப்பதைக் காண்கிறோம். இந்த வேறுபாடுகளுக்குக் காரணம் என்ன? பிறந்த நாள்தொட்டு பெருநெறி பற்றி ஒழுகியவர்கள் துன்புறவும், சிறுமையே செய்தவர்கள் மகிழவும் காண்கின்றோம். இதற்குக் காரணம் என்ன?

இந்த வினாக்களுக்குச் சமயநெறியைச் சார்ந்தோர்கள் முற்பிறப்பின் புண்ணிய பாவத்தைக் காரணமாகக் காட்டு வார்கள். உலகாயத நெறியைச் சார்ந்தவர்கள் முற்பிறப்பு-பிற்பிறப்பு இவைகளை நம்புவது இல்லை. அங்ஙனம் கூறுவது சமயநெறியாளர்களின் மயக்கம் நிறைந்த செயல் என்றே கூறுகின்றனர். சமயிகளுடைய இந்தக் கூற்று, "முயற்கொம்பிலேறி ஆகாயப் பூவைப் பறித்தல்" என்ற கூற்றில் எவ்வளவு பைத்தியக்காரத்தனம் இருக்கிறதோ அவ்வளவு பைத்தியக் காரத்தனம் இதிலும் இருக்கிறது என்று குற்றம் சாட்டு கின்றனர். அவர்கள் திரும்பவும் கேட்கிறார்கள். "நமது கையில் ஐந்து விரல்கள் இருக்கின்றன. இந்த ஐந்து விரல்

களும் ஒரு மாதிரியாக இல்லை, ஒன்று நீண்டும் பிறிதொன்று குட்டையாகவும் நம்முள், வேறுபட்டிருக்கின்றன. இதற்குக் காரணம் என்ன? என்று இந்த வினாவுக்கு விடைசொல்வது மிகவும் சுலபம். ஐந்து விரல்களும் சடப்பொருள்கள். விரல் களுக்கு உயிர்ப்பில்லை, இயக்கினால் இயங்கும் தன்மையன. ஆனால் உயிரோ, உயிர்ப்பாற்றல் உடைய ஒரு பொருளாக இருக்கிறது. நாம் நீளம், அகலம், எடை போன்ற அளவு களாலாய வேறுபாடுகளைப் பற்றி அவ்வளவாகக் கவலைப் படவில்லை. இந்த வேற்றுமைகள், அவர்கள் கூறுவது போல இயற்கையாகவேயானாலும் ஆகட்டும். இங்கு நாம் உயிர்த் தொகுதிகளுக்கிடையே உள்ள வேற்றுமை யென்று எடுத்துக் கொண்டது. உயிர்ப்பாற்றல்–உணர்வில் அறிவில் துய்ப்பாற்றில் உள்ள வேறுபாடுகளேயாம் உயிர், தன்னிகரற்ற உயிர்ப் பாற்றல் உடையது. அதற்கொரு சான்று இதோ!

ஒன்றரை, ஒன்றரை, ஒன்றரை அடிப்பரப்பள வுள்ளதும் இருபத்தைந்து பவுண்டுக்குக் குறையாத எடை யுள்ளதுமான ஒரு பாராங்கல்லை ஒரு கட்டைவிரல் பரிணாமமேயுள்ள ஒரு வேர் கல்லித் தூக்கித் தள்ளுகிறது. நிச்சயம் உருவக்காட்சியில் பாராங்கல்லே பெரியது. வேரோ சிறியது. ஆனால், இந்த வேர் எப்படிக் கல்லைக் கெல்லித் தூக்குகிறது? இந்த உயிர்ப்பாற்றலும் கூட உயிர் வர்க்கத்தினிடையில் அளவில் கூடியும் குறைந்தும் இருப்பதைக் காண்கிறோம்.

புலிக்கும் புழுவுக்குமிடையில் உள்ள உயிராற்றல் தன்மை ஒரு மாதிரியானதல்ல; வேறுபட்டுக் கிடக்கிறது. அது போலவே, ஆணின் ஆற்றல்களும் நுகர்வுப் புலன்களும், உணர்வுகளும் பெண்ணின் இயல்புக்கு முரண்பட்டன. இம்முரண்பாடு இல்லையாயின் கவர்ச்சியுமில்லை; வாழ்க்கையுமில்லை. இந்த வேறுபாடுகளையும் வெறும் சுபாவம் என்று மட்டும் கூறமுடியுமா? என்பது ஆய்வுக் குரியது.

# 15. அருள்நெறி இயக்க வளர்ச்சி

தமிழகம் தெய்வ மணம் கமழும் திருநாடு. இறை மணம் கமழும் இன்பத் திருநாடு, அருமைத் தமிழும் அருள்நெறியும் இணைந்து வாழ்ந்த தமிழ்நாடு. இத்தகைய திருநாட்டில் இடைக்காலத்தில் சமயத்திற்கு எதிரிடையான கருத்துக்கள் பரவலாயின. கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற உலகாயத நெறி தலையெடுத்தது. கடவுள் ஏது, அது வெறும் கற்பனை, மனப் பிராந்தி, திருக்கோயில்கள் எதற்கு? என்பன போன்ற நச்சுக் கருத்துக்கள் நாட்டிலே நடமாடத் தொடங்கின. இது எதிர் முகாம்நிலை. உடன்பாட்டுத் துறையிலும் கூட சமய உணர்ச்சியும், அனுபவமும், நிகழ்ச்சிகளும் அகலமாக இருந்தனவேயொழிய ஆழமாக இல்லாது போயிற்று. வாழும் சமுதாயத்தோடு தொடர்பு கொள்ளத் தக்கதாக சமயம் உயிரூட்டத்தோடு இல்லை, இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு நாட்டில் தீய சக்திகள் வளரலாயிற்று. இதனை எண்ணி வருந்திய சில அன்பர்கள் சமய வளர்ச்சிக்கென ஒரு முறையான விரிந்த அளவில் ஒரு இயக்கத்தைக் கண்டு வேலை செய்ய வேண்டும் என்று எண்ணினர். திருவருளும் கூட்டுவித்தது. இந்த எண்ணத்திற்கு ஒரு புதிய வேகத்தைக் கொடுப்பதற்காகவே போலும் திராவிட கழகத்தலைவர் இராமசாமிப் பெரியார் அவர்கள் திருச்சியில் நடந்த தமது கழக மாநாட்டில் திருக்கோயில் திருவுருவங்களை உடைப்பதெனத் தீர்மானம் செய்தனர். முன்னைய எண்ணத்திற்கு இத் தீர்மானம் அதிக வலுவூட்டியது. இதன் பலனாக குன்றக்குடியில் 10-8-52-இல் நூற்றுக்கணக்கான அன்பர்கள் கூடினார்கள். அன்றே அருள்நெறித் திருக்கூட்டம் தொடங்கப் பெற்றது.

## வேலைத் திட்டம்

சமயக் கருத்துக்களைப் பரப்புவதை நோக்கமாகக் கொண்டு விரிந்த எல்லையில் கிராமங்கள், நகரங்கள்

வாரியாக கிளை நிறுவனங்கள் அமைத்துப் பிரசாரம் செய்தல், சமயக் கருத்துக்களை மக்கள் கொள்ளும் வகையில் சிறந்த முறையில் விளக்கிச் சொல்லுவது, உழவாரப் பணி செய்தும் இயன்ற சிறு பணிகளைச் செய்தும் சிறிய கோயில் களைக் காப்பாற்றுதல். ஊர்தோறும் கூட்டு வழிபாட்டு முறையினை வளர்த்தல், சமுதாய நலத்திற்குரிய பொதுநலத் திருப்பணிகளில் ஈடுபட்டு சமுதாயத்திற்கும் சமயத்திற்கும் நெருங்கிய சம்பந்தத்தை உண்டாக்க முயற்சித்தல் இவை களையே நோக்கமாகக் கொண்டு அருள்நெறித் திருக்கூட்டம் தொடங்கப் பெற்றது.

## எங்கும் எழுச்சி நிறைந்த காட்சி

செயலற்ற, உறங்கிக் கிடந்த சமய உலகத்திற்கு அருள்நெறித் திருக்கூட்டத்தின் தோற்றம் ஒரு புதிய எழுச்சியைத் தந்தது. தமிழகத்தின் மூலை முடுக்குகள் எல்லாம் அருள்நெறிச் செய்தி பரவியது. நாள்தோறும் சிற்றூர் முதல் பேரூர் வரையிலும் நூற்றுக்கணக்கான மேடைகள் போடப்பட்டன. ஆங்காங்கு அருள்நெறி அறிஞர்களும் ஊழியர்களும் சிறந்த முறையில் மக்கள் முன்னே சமயத்தை எடுத்து வைத்தனர். பத்துப் பன்னிரண்டு பேர்களுக்கு மேலே கூடாது இருந்த சமய பிரசார மேடைகள் மக்கள் வெள்ளத்தைக் காணத் தலைப்பட்டது. இயக்கம் எதிர்பார்த்த அளவுக்கு மேலாகவே சிற்றூர் முதல் மாவட்டம் வரையில் கோபுரம் என் உயர்ந்து வளர்ந்தது. ஏன்? கங்கைக் கரை சீமை முதல் கன்னியாகுமரி வரையிலும் இயக்கம் கால் கொண்டது. தமிழர்கள் வாழும் ஈழத்திலும், மலேயத்திலும் இயக்கம் இடம் பெற்று வளர்ந்தது. மற்ற எந்த இயக்கமும் காணமுடியாத அளவுக்கு ஒரு மகத்தான வெற்றியை-புகழை இயக்கம் அடைந்தது.

## வழிபாட்டு முறையில் வளர்ச்சி

திருக்கூட்டம் முக்கியமாக கருதிச் செய்த தொண்டு மக்களைத் திருக்கோயில் வழிபாட்டு முறைகளில் அழைத்துச்

செல்வதேயாகும். எங்கு பார்த்தாலும் கூட்டு வழிபாட்டு இயக்கங்கள் தொடங்கப் பெற்றன. இளைஞர்கள் முதல் பெரியோர்களும் ஆர்வம் நிறைந்த உள்ளத்துடன் ஆங்காங்கு வழிபாட்டு இயக்கத்தில் ஆர்வத்தோடு பங்கு கொண்டனர். அது மட்டுமன்றி ஈரோடு போன்ற நகரங்களில் உள்ள திருக் கூட்ட ஊழியர்கள் ஞாயிறு தோறும் அயல் இடங்களுக்குச் சென்று வழிபாட்டு வளர்ச்சியை மக்களிடையே வளர்க்கும் திருப்பணியில் தீவிரமாக ஈடுபட்டனர். ஆண்டுதோறும் கால்நடை யாத்திரையாகவும் பல ஆண்களும் பெண்களும் பல சிற்றூர்களுக்கும் பேரூர்களுக்கும் நடந்தே சென்று திருத்தல யாத்திரை செய்து கிராமங்களிலும் நகரங்களிலும் ஒரு பெரிய எழுச்சியை உண்டாக்கினர். எங்கும் திருவாசக விழாக்கள் எடுக்கப் பெற்றன. தமிழ்நாட்டில் ஆயிரக் கணக்கானவர்கள் திருக்கோயிலுக்குச் செல்லும் உணர்ச்சி யையும் திருவாசகம் படிக்கும் உணர்ச்சியையும் பெற்றனர் என்பது மிகையன்று. 1952-இல் மாத்திரம் திருவாசக சிவ புராணப் பிரதி மட்டும் கிட்டத்தட்ட ஒரு இலட்சம் பிரதி களுக்கு மேல் விற்பனையாயிருக்கிறது என்று சொன்னால் இயக்கத்தினுடைய எதிரொலி நாம் புரிந்து கொள்ளக் கூடியதேயாகும். இன்னும் ஆங்காங்கு நடைபெறுகின்ற கூட்டு வழிபாட்டு இயக்கங்களில் ஆயிரக்கணக்கான உறுப்பினர்கள் கலந்து கொண்டு பயன்பெறுகின்றனர்.

## திருக்கோயில் திருப்பணி

இங்ஙனம் வழிபாட்டுத் துறையில் ஆர்வத்தோடு வேலை செய்த இயக்கம் ஆங்காங்கு கவனிப்பாரற்றுக் கிடந்த திருக்கோயில்களின் மீது கவனம் செலுத்தியது. ஆங்காங்கு ஊழியர்கள் உழவாரப் பணியைச் செய்து, செடி கொடிகள் முளைத்து, அதன் மூலம் சிதைய இருந்த திருக்கோயில்களைக் காப்பாற்றினர். மதுரையில் இம்மையில் நன்மை தருவார் திருக்கோயிலில் ஆண்டுகள் பலவாகத் தூர்ந்து கிடந்த திருக்குளத்தைச் சுத்தம் செய்த திருப்பணி தமிழகம் மறக்க

முடியாததொன்று. நூற்றுக்கணக்கான படித்த இளைஞர்கள், பெரியவர்கள் தாங்களே தட்டும் மண்வெட்டியும் தாங்கி, சேறும் சகதியும் அள்ளிக் கொட்டிய காட்சி அரிமர்த்தன பாண்டியன் காலத்தில் வைகைக்கு அணை கோலிய காட்சி போலவே இருந்தது. இதனையொட்டி அத்திருக்கோயிலும் அருள்நெறித் தொண்டர் கழகத்தின் முயற்சியால் பல அன்பர்களின் பேருதவி கொண்டு சுற்றுப் பிரகாரங்கள் தளவரிசை முதலியன இடப்பெற்று சிலரே வந்து கொண்டிருந்த கோயில் இன்று பலர் வரும் திருக்கோயிலாக மாறியது. இது போலவே மாணிக்கவாசகப் பெருமான் அவதரித்த திருவாதவூர் திருத்தலத்திலும் நமது ஊழியர்கள் 1952-ஆம் ஆண்டில் உழவாரப் பணிசெய்து திருவாசக விழாவும் நடத்தினர். அந்த எழுச்சியின் பயனாக நமது இயக்க அன்பர்கள், ஊழியர்கள் முயற்சியால் அத்திருக்கோயிலுக்கு மின்விளக்கு அமைக்கப்பட்டது. அதிலிருந்து தொடர்ச்சியாக அக்கோயில் முழுமையும் திருப்பணியாகும் அளவுக்கு வளர்ந்தது. அது போலவே திருநாவுக்கரசு சுவாமிகள் பல ஆண்டுகள் தங்கி உழவாரப் பணி செய்த திருப்பூந்துருத்தி திருநாவுக்கரசர் திருமடம் கவனிப்பாரற்றுப் பாழாகத் தொடங்கிற்று. அங்கும் நமது ஊழியர்கள் உழவாரப் பணி தொடங்கி அத்திருமடத்தை (காலியிடத்தை) கூட்டித் துப்புரவு செய்து, அயறாது திருப்பணி செய்தனர். தமிழகத்தின் தனி சமயத் தலைவராக திருத்தொண்டின் நெறி வாழ வந்த திருநாவுக்கரசப் பெருமான் வாழ்ந்த இடமிருந்த கேவல நிலை எண்ணிப் பார்த்த ஒவ்வொரு வரையும் வேதனைக்குள்ளாக்கியது. அதிலும் எண்ணத்தின் இதயக் குமுறல் பயனையே தந்தது. தற்பொழுது அத்திருமடம் புதுப்பிக்கும் திருப்பணி நடந்து வருகிறது. ஒருநாள் இரவு பத்து மணியிருக்கும். கும்பகோணம் அரசலாற்றங்கரையில் தனியாக உட்கார்ந்திருந்தோம். சில இளைஞர்கள் அவ் வழியே வந்தனர். அவர்களை அழைத்துச் சில கேள்விகளைக் கேட்டுப் பேசியதன் மூலம் அவர்கள் அருள்நெறி

இயக்கத்தைப் பின்பிற்றுபவர்கள் என்பது புரிய வந்தது. அதுமட்டுமன்றி அங்கு அவர்கள் வசிக்கும் தெருவில் உள்ள பழுதடைந்த பிள்ளையார் கோயில் ஒன்றை இளைஞர் களாகச் சேர்ந்து களிமண்ணால் அடைப்புக்கள் அடைத்து அந்தக் கோயிலைப் பாதுகாத்து அவர்களே நாள்தோறும் முறை வைத்து வழிபாடு செய்யும் சேதியை அறிந்தோம். இந்த அளவுக்கு இளைஞர்களையும் அருள்நெறி இயக்கம் கவர்ச்சித்திருந்ததைக் கண்டு மிகவும் மகிழ்ந்தோம். அந்த இளைஞர்களுடைய வழிபாட்டுணர்ச்சியை ஊக்குவிக்கும் பொருட்டு அப்பழுதுற்ற கோயிலைத் தக்க அன்பர்களைக் கொண்டு புதிதாக திருப்பணி செய்து கும்பாபிடேகமும் நடத்தப் பெற்றது. சாத்தூர் தாலூகாவில் ஒருமுறை நாம் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்த பொழுது, ஒத்தையால் என்ற கிராமத்திற்குச் சென்றோம். அக்கிராமத்தில் ஒரு சர்ச்சைத் தவிர இந்துக்கள் வழிபாட்டிற்கு என்று ஆலயம் இல்லாதிருந்தது. இல்லை, இல்லை. ஒரு திருமால் ஆலயம் ஒன்று ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக புழக்கமன்னியில் பூட்டி செடி கொடிகள் முளைத்துச் சிதைந்து இருந்தது. அன்று மாலையே ஊழியர்கள் அந்தக் கோயிலுக்குள் நுழைந்து செடி கொடிகளை வெட்டி அப்புறப்படுத்தி சுத்தம் செய்தனர். அன்று முதன் முதலாக நாமே அந்தக் கோயிலுக்கு விளக்கேற்றி முதலில் வழிபாடு செய்தோம். அந்தக் கோயில் இப்பொழுது இயக்க ஆதரவாளர்களாலும் ஊழியர்களாலும் திருப்பணி செய்யப் பெற்று வருகின்றது. இயக்கத்தினுடைய திருப்பணிகளில் சில முக்கியமானவற்றையே நினைவு படுத்தினோம்.

## சமுதாயத் தொண்டு

இங்ஙனம் சமயத்துறையில் வேலை செய்த அருள் நெறித் திருக்கூட்டம் சமுதாயத்தை மறந்துவிடவில்லை. சமுதாயத்தை சரியான மனப்பாங்கில் அமைத்துக் கொண்டால்தான் சமயவேலை ஒழுங்காக நடைபெறும்

என்று ஊழியர்கள் நம்பினர். குறிப்பாக தீண்டாமை ஒழிப்பு வேலையில் நம்முடைய இயக்கம் செய்துள்ள வேலைகள் மிகச் சிறப்புடையன. நம்முடைய இயக்கத்து ஊழியர்கள் சேரி சேரியாகச் சென்று அவர்களிடையே சௌஜன்யமாகப் பழகி சேரிகளில் கூட்டுப் பிரார்த்தனை இயக்கங்களை நடத்தினர். அவர்களுடனேயே உடனிருந்து உண்டு சமத்துவத்தை நடைமுறையில் காட்டினர். சிவன்ராத்திரி, வைகுண்ட ஏகாதசி முதலிய சமய, திருநாட்களிலும், சுதந்திர தினம், குடியரசு தினம் முதலிய அரசியல் திருநாட்களிலும் ஊழியர்கள் சாலைகள் அமைத்தல், தண்ணீர் வரும் கால் வாய்களை வெட்டுதல் முதலிய சமுதாயத்திற்குப் பயன்படும் திருத் தொண்டுகளைச் செய்தனர் என்பது நினைவுறத் தக்கது. தமிழ் நாட்டில் வீசிய கொடும் புயலால் பாதிக்கப் பட்ட பிராந்தியத்து மக்களுக்கு தலைவர்களும் ஊழியர்களும் சென்று அறிவுரைகள் சொல்லி ஆறுதல் கூறி உணவுக்கு அரிசியும் உடைகளும் வழங்கினார்கள். அண்மையில் நடந்த முதுகுளத்தூர் கலவரத்தினால் பாதிக்கப்பட்ட பிராந்தியங்களுக்குச் சென்று சமாதான செய்தி தரும் தூது கோஷ்டியினராக இருபது ஊழியர்கள் கால்நடையாகவே சென்று ஆறுதல் கூறி சமாதான திருத்தொண்டு செய்தனர். பொதுவாக எந்தவிதமான சமுதாயத் தொண்டு என்றாலும் நம்முடைய இயக்கத்தினர்கள் முன்னின்று முழு மூச்சுடன் செய்வார்கள். அப்படிச் செய்வதிலே அவர்களுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி. விரிக்கிற் பெருகும் என்று அஞ்சி இந்த அளவில் நிறுத்திக் கொள்கிறோம்.

## திருப்பணி மன்றத்தின் தோற்றம்

பிரசார் முறைகளிலும் சமுதாய திருத்தொண்டு களிலும் வெற்றி நடைபோட்ட இயக்கம் ஆழமான நிர்மாண வேலைகளைச் செய்து சமுதாயத்திற்கும் சமயத்திற்கும்

ஆக்கம் தர வேண்டும் என்ற முடிவுக்கு வந்தது. அதற்கென 1955 ஜூன் மாதம் அருள்நெறி திருப்பணி மன்றத்தைக் கண்டோம். கல்வி வசதி செய்து கொடுத்தல், மருத்துவ வசதி செய்து கொடுத்தல், திக்கற்ற குழந்தைகளை வளர்த்தல், ஏழை மாணவர்களுக்குப் படிப்புக்குரிய வசதி செய்து கொடுத்தல் முதலிய நிர்மாண வேலைகள் செய்வதே திருப்பணி மன்றத்தின் நோக்கம். திருப்பணி மன்றம் தொடங்கி சற்றேறக் குறைய மூன்று வருடங்களேயாகின்றன. எனினும் அதனுடைய வளர்ச்சி நம்மவர்கள் பெருமைப் படத்தக்க அளவுக்கு உயர்ந்திருக்கிறது. இம்மன்றத்தின் சார்பில் திக்கற்ற குழந்தைகள் இல்லங்கள் மூன்று, அரிஜன் மாணவர் விடுதிகள் இரண்டு, ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஒன்று, ஆசிரியை பயிற்சிப் பள்ளி ஒன்று, உயர்தர ஆரம்பப்பாட சாலை நான்கு, ஆரம்பப் பாடசாலைகள் ஆறு ஆகிய நிறுவனங்கள் தற்பொழுது சீரிய முறையில் நடந்து வருகின்றன. மேலும் இராமநாதபுரம் மாவட்டத்தில் இரண்டு மருத்துவ நிலையங்களுக்கு வாடகையின்றி இடம் அமைத்துக் கொடுத்திருக்கின்றோம். கல்லூரி பயிலும் இளைஞர்கள் உதவிச் சம்பளம் பெறுகின்றனர். திருப்பணி மன்றத்தின் உதவி பெற்று இரண்டு இளைஞர்கள் கல்லூரிப் படிப்பு முடித்து வெளிவந்திருக்கின்றனர் என்பது நாம் அறிந்ததே.

## வெளியில் நடந்த அதிசயம்

இங்ஙனம் சமுதாய, சமயத் துறைகளில் மொழி உணர்ச்சியோடு நாம் செய்துவந்த நிர்மாண வேலை மக்கள் மன்றத்திலே ஒரு பெரிய மாறுதலை ஏற்படுத்தியது. ஏன்? நமக்கு கருத்திலே மாறுபட்ட இயக்கங்களாகிய திராவிட கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், பொதுவுடைமைக் கட்சி முதலிய இயக்கங்கள் கூட நம்முடைய வேலையைப் பார்த்து, அத்துறையில் நம்மோடு தொடர்பு கொள்ள முன்வந்தன. குறிப்பாக திராவிட கழகத் தலைவர் ஈ.வெ. இராமசாமிப் பெரியார் அவர்கள் நம்முடைய

வேலைமுறைகளையும் திட்டங்களையும் பார்த்துப் பரிவோடு நம்முடன் தொடர்பு வைத்துக் கொள்ள முன்வந்தார். இத்தொடர்பு சரியானதல்ல எனக்கருதி நம்மோடு தோளொடு தோள் கொடுத்து வேலை செய்த சில ஊழியர்கள் நம்மை விட்டுப் பிரிந்தனர். அங்ஙனம் அவர்கள் பிரிந்து சென்றது நமக்கு வருத்தத்தைத் தந்தாலும் அவர்கள் அங்ஙனம் பிரிந்து செல்கின்ற அளவுக்கு ஒன்றும் விபரீதமாக நடந்துவிடவில்லை என்பதை நாம் இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. கருத்து மாற்றம் உடையவர்களிடம் கலந்து பழகி, கருத்தைப் பறிமாறிக் கொள்ளுவதுதான் சிறந்த முறை என்று நாம் குறிப்பிட வேண்டிய அவசியம் இல்லை. நீண்ட நாட்களாக தூரத்திலே நின்று தெரிந்து கொண்டோ, தெரியாமலோ தன் மனத்தில் பட்டவாறெல்லாம் விமரிசனம் செய்து கொண்டிருந்த அவர்களைத் தற்பொழுது நம்முடைய வேலைத் திட்டங்களாலும், நம்முடைய சீரிய கருத்துக்களாலும் நம்பால் இழுத்து, காழ்ப்பின்றி நாம் சொல்லுவதைக் கேட்கின்ற அளவுக்குத் தயார் செய்திருக்கின்றோம். இதுவே தமிழகத்தில் அருள்நெறித் திருக்கூட்டத்தின் சிறந்த முயற்சி என்று சொன்னால் கூட தவறில்லை. இனிமேல் நாம் சொல்லுகின்றவற்றை அவர்கள் கேட்டு சிந்தித்து தெளிந்து பின்பற்றுவதற்குரிய காலம் வெகு தூரத்தில் இல்லை; வெகு சீக்கிரத்திலேயே இருக்கிறது என்று நம்புகின்றோம். காரணம், நம்முடைய இயக்கம் கால வெள்ளத்திலே இறந்து போகின்ற சாதாரண கருத்துக்களைத் தாங்கியது அல்ல என்றும் எப்பொழுதும் மாறுபடாத எல்லாம் வல்ல இறைவனின் திரு வருளைத் தாங்கி நிற்கின்ற இக்கருத்து இவ்வுலகில் மீண்டும் நிலவியே தீரும். இதற்கு எத்துணையும் ஐயம் இல்லை.

## பெருமைக்குரிய வளர்ச்சி

சற்றேறக் குறைய ஆறு ஆண்டுகள் தமிழ்நாட்டில் வேலை செய்த நமது இயக்கம் வேறு எந்த இயக்கத்திற்கும் இல்லாத அளவுக்கு மிகக் குறுகிய கால எல்லையில் நிறைந்த

வளர்ச்சியடைந்திருக்கிறது என்று எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. மிகச் சிறிய அளவில் தொடங்கிய இயக்கம் இன்று ஆசிய நாடுகள் முழுவதும் பரவி ஒரு பேரியக்கமாக மலர்ந்திருப்பதை எண்ணிப் பூரிப்படை கின்றோம். இந்த அளவுக்கு நமது இயக்கத்திற்குத் தோன்றாத் துணையாக இருந்து அருள்பாலித்த குன்றில் அமர்ந்துறையும் குமரப் பெருமான் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்து கின்றோம். இயக்கத்தின் வளர்ச்சியில் ஆதரவு காட்டிய அன்பர்களுக்கும் பொருள் வழங்கிய புரவலர்களுக்கும் அயறாது ஆர்வத்துடன் ஊழியம் செய்த ஊழியர்களுக்கும் நம்முடைய நன்றி கலந்த வாழ்த்து.

## 16. கோயில்களும் இளைஞர்களும்

நாம் அள்ளியுண்ணாமல் கடவுள் வந்து ஊட்டுவார் என்று கருதுகிற அறவீனமான கடவுள் நம்பிக்கை எனக்கில்லை; "கொடுக்கிற தெய்வம் கூரையைப் பொத்துக் கொண்டு கொடுக்கும்" என்ற பைத்தியக்காரத்தனமான கடவுள் நம்பிக்கை இடைக்காலத்தில் முளைத்ததுதான். நாம் உழைக்காமல், முயற்சி செய்யாமல் சோம்பேறியாக வாழ வேண்டும் என்பது இறைவனின் திருவுள்ளும் அல்ல - சாதாரணமான ஒரு தாய்கூடத் தன் குழந்தை தத்தித் தத்தி முயன்று நடை பழக வேண்டும் என்றுதான் விரும்புவாளே தவிர, அது சோம்பேறியாக இருக்க வேண்டும் என்று விரும்பமாட்டாள். உலகத்தில் ஒரு தாயே தன் குழந்தை சோம்பேறியாக இருக்கக் கூடாது என்று விரும்புகிறாள் என்றால் உலகின் தாயாக இருக்கிற கடவுள் தனது மக்கள் சோம்பேறியாக இருக்க வேண்டும் என்று கருதுவாரா? நாம் உழைத்து வாழ வேண்டும் என்பதற்காகவே கடவுள் நமக்குக் கைகளையும் கால்களையும் தந்திருக்கிறார். நிலத்தைத் தந்து

விதையைத் தந்து, நம் கையில் மண்வெட்டியையும் தந்து - நம்மை உலவவிட்டிருப்பதே நாம் சோம்பேறியாக இராமல் உழைத்து வாழவேண்டும் என்பதற்குத்தான்.

சில ஊர்களில் சிவன் கோயில் பாழடைந்து கிடப்பதைக் கண்டு மிகவும் வருந்துகிறேன். இந்து மதத்தையே புனர் நிர்மாணம் செய்ய வந்தவர்களாக கருதப் பெறுப வர்களின் கண்களில் பட்டும்கூட இந்தக் கோயில் மீதுள்ள காட்டை வெட்டி எடுப்பதில் கவனம் செலுத்தப் பெற வில்லை என்பது வருத்தத்திற்குரியதுதான். இப்படிப் பல்வேறிடங்களிலும் சிற்றூர்களில் நமது கோயில்கள் பல இடிந்து பாழடைந்து கிடக்கின்றன.

கோயில்கள் சமுதாயத்தின் பொதுச் சொத்து. இளைஞர்களுக்கு இளமையும், செயலார்வமும், அக்கறையும் இருந்தால் இப்படிப் பாழ்பட்டுக் கிடக்கின்ற கோயில்களைப் புதுப்பிக்க முன்வாருங்கள்! கோயில் இருந்து குடிமக்கள் இருந்தால்தான் சிறப்பு.

அன்று மூவேந்தர் காலத்திலும் நாட்டு மக்கள் எல்லோருக்கும் கல்வி பெறும் உரிமை இருந்ததாக இல்லை. எனவேதான் நம்மிடையே பரவலான அறிவுப் புரட்சியும் கருத்துப் புரட்சியும் ஏற்படவில்லை, பின், உயர்ந்த சாதிக் காரர்கள் என்போருக்கும் அவர்களுக்கு ஆதரவாக இருந்த வசதி படைத்தவர்களுக்குமே கல்வியுரிமை இருந்தது. இன்று நமது ஆட்சியில் அந்நிலை முழுக்க முழுக்க மாறி எல்லோரும் கல்வி பெறுவதற்கான வசதியும், வாய்ப்பும், உரிமையும் வழங்கப் பெற்றிருக்கிறது.

மனிதனின் இன்றியமையாத் தேவைகளை அரசாங்கமோ, சமுதாயமோ கொடுத்தாக வேண்டும். இறைவன் காற்றைப் படைத்து அளித்தார்; கவின்மிகும் மணமலரைப் படைத்தளித்தார்–கதிரவனின் ஒளியைப் படைத்தளித்தார். இவற்றை யாரும் வேலிபோட்டு மறைத்து

விட முடியாதபடி-எல்லோரும் துய்த்து மகிழத்தக்க வகையிலே படைத்துத் தந்தார். இவற்றை அவர் நேரே கொடுத்தார். அறிவு, சோறு துணி இவற்றை மனிதன் மூலம் மனிதனுக்குக் கொடுக்கலாம் என நினைத்தார். மனிதன் களங்கத்தை உண்டாக்கி விட்டான்; கறைப்படுத்திவிட்டான்.

விலங்குக்கும் மனிதனுக்கும் வேறுபாடு இருக்க வேண்டாமா? தின்னுவதில் யானை மனிதனை வென்று விட்டது; ஊர் சுற்றுவதில் காக்கையும் நாயும் மனிதனை வென்று விட்டன; இனப்பெருக்கம் செய்வதில் பன்றி மனிதனை வென்றுவிட்டது. எனவே, எந்த வகையில் மனிதன் உயர்ந்தவன்? சிந்தனையால்தான் மனிதன் சிறந்தவனாக உயர்ந்தவனாக வாழமுடியும். அந்தச் சிந்தனா சக்திக்குத் தடை விதிக்கலாமா?

இங்கு எல்லோருக்கும் படிப்புச் சொல்லிக் கொடுத்து விட்டால் அவர்கள் பரம்பரையாகச் செய்கிற தொழிலைச் செய்யாமல் விட்டுவிடுவார்கள் என்று சிலர் கூறுகிறார்கள் உழைப்புக்கும் உழைப்பவனுக்கும் மரியாதை கொடுக்காத வரை படித்தவர்கள் ஏதேனும் சிறு உத்தியோகமாக இருந்தாலும் உத்தியோகம் பார்க்க வேண்டும் என்றுதான் விரும்புவார்கள். யாராலே சமுதாயம் வளர்கிறது என்பதை உணர்ந்து அவர்களுக்குத் தகுதியும் மரியாதையும் கொடுத்தால் உழைப்பவர்கள் உழைப்பார்கள்.

நாட்டிலே அறிவுப் புரட்சியும், சிந்தனைப் புரட்சியும் உருவாகத் துணை செய்ய வேண்டிய ஆசிரியர்கள் தயவு செய்து தங்கள் தொழிலைத் தொழிலாகக் கருதாதீர்கள்; அதைத் தொண்டு என்று கருதிக் கொள்ள வேண்டும். ஆசிரியர்கள் மாணவர்களுக்கு ஒரு மணி நேரம் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்றால் அவர்கள் குறைந்தது நான்கு மணி நேரமாவது படித்து, நான்கு மணி நேரம் சிந்தித்து அதன் பிறகு எப்படிச் சொல்லிக் கொடுத்தால்

மாணவர்கள் புரிந்து கொள்வார்கள் என்பதை அறிந்து சொல்லிக் கொடுக்க வேண்டும். ஆசிரியர்களுக்கு அதிப்படியான பொறுப்பு இருக்கிறது. இன்றைய ஆசிரியர்களில் பெரும்பாலோருக்கு அது இல்லை. ஆசிரியர்கள் அறிவு வளர்ச்சிக்கான நல்ல-பயனுள்ள புத்தகங்களையே படிக்க வேண்டும். இன்றைக்கு ஆசிரியர்கள் கூட வெறும் பொழுது போக்குக் கதைகளையே படிக்கிறார்கள்.

இன்று வீண் பொழுது போக்குவதற்கு நமக்கு நேர மில்லை. இந்த நாட்டின் கடைசி ஏழைமகன் சோறும் துணியும் பெற்று வாழுகிறவரை சற்று அதிகமாகவே உழைக்க வேண்டிய பொறுப்பும் கடமையும் நமக்கு இருக்கிறது. அப்படியிருக்க, நாம் வீண் பொழுது போக்குவது கொடுமை யினும் கொடுமை.

'தன்பெண்டு தன்பிள்ளை சம்பாத்தியம் இவையுண்டு தானும் உண்டு' என்று கருதுகிற உள்ளம் கடுகு உள்ளம்; அது தன்னல உள்ளம். தெரு மக்கள் – ஊர் மக்களின் வாழ்க்கை நலனில் அக்கறை கொள்ளுகிற உள்ளம் துவரை உள்ளம்; அது பொதுநல உள்ளம். சாம்பாரில் கடுகு அதிகமாகப் போனால் சாம்பார் கசக்க ஆரம்பித்துவிடும். சாம்பாரில் பருப்பு அதிகரித்தால் சாம்பாருக்கு சுவை அதிகரிக்கும். எனவே தன்னலம் பெருகுவது கடுகு அதிகரிப்பது போல; பொதுநலம் பெருகுவது பருப்பு அதிகரிப்பது போல.

மற்றவர்களின் பேச்சுக்கும் கருத்துக்கும் நாம் மதிப்புக் கொடுக்க வேண்டும்; மற்றவர்கள் பேசுவதைக் கேட்கத்தான் நமக்குக் காது கொடுக்கப்பட்டிருக்கிறது. காதுக்குக் கீழேதான் வாய் இருக்கிறது. எனவே, முதலில் மற்றவர்கள் கருத்துக்கு மதிப்புக் கொடுத்துக் கேட்டு, அதன் பிறகுதான் நாம் பதில் சொல்ல வேண்டும் அப்படி நாம் மதிப்புக் கொடுப்பதுதான் ஜனநாயகம்.

அண்மையில் நான் நேருஜி அவர்களின் சொற் பொழிவு ஒன்றைப் படித்தேன்; அதைத் திரும்பத் திரும்பப் படித்து அனுபவித்தேன்.

"கருவிலேயே கிழடு தட்டிப் போனவர்களிடம் நீங்கள் எச்சரிக்கையாக இருங்கள்; கருவிலேயே கிழடு தட்டியவர்கள் என்றால் சுறுசுறுப்பு இல்லாமல் மந்தமாக வழவழ கொழ கொழ என்று இருப்பதுதான்; அத்தகையவர்கள் தீ வைப்ப வர்களைக் காட்டிலும் கொடியவர்கள்; வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்பது போல இளைஞர்கள் இருக்க வேண்டும்" என்ற நேருஜி அவர்களின் அறிவுரை சிந்தனைக் குரியது - வருங்கால பாரதத்தை உருவாக்கப் போகிற இளைஞர்களுக்கு மிகவும் இன்றியமையாதது.

இன்றையப் பள்ளிகளே, நாளைய பாரதத்தின் அடித்தளம்; ஆசிரியர்களே மாணவர்களை உருவாக்கும் சிற்பிகள், மாணவர்களே வருங்காலத் தலைவர்கள். ஒவ்வொரு மாணவரின் குறை நிறைகளையும் பண்பியல் களையும் கொண்ட 'சாதகங்கள்' ஆசிரியர்களிடம் இருக்க வேண்டும். சமுதாயம் வளர்வதற்குரிய கல்வியை மாணவர் களுக்குக் கொடுக்க வேண்டும்.

குழந்தைகள் சுறுசுறுப்பாக ஓடியாடி விளையாட வேண்டும்; அவ்வப்போது செய்ய வேண்டிய வேலைகளைக் காலத்தோடு ஒழுங்காகச் செய்ய வேண்டும். இன்று எல்லாருக்கும் எல்லாக் கதவுகளும் திறந்து விடப்பட்டிருக் கின்றன. யாரும் எந்த உத்தியோகத்திற்கும் வரலாம். எனவே இளைஞர்கள் எல்லோரும் நன்றாகப் படிக்க வேண்டும். அவர்கள் கெட்டப் பழக்கங்களைப் பழகிக் கொள்ளக் கூடாது; எல்லோரிடமும் அன்பாகவும் பண்பாகவும் பழகுங்கள். உங்கள் கால் கைகளுக்கு வேலை கொடுப்பது போல மூளைக்கும் வேலை கொடுங்கள்.

# 17. அன்புச் சமயம்

*(மலேசியா நாட்டில் முத்துமாரியம்மன் கோயிலில் 7-7-1982 அன்று ஆற்றிய உரை)*

போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்குமுரிய தலைவர் அவர்களே! பெரியோர்களே! நண்பர்களே! சகோதரர்களே! சகோதரிகளே! குழந்தைகளே! அனைவரையும் நான் காணவும், கண்டு கலந்து பேசி மகிழவும் வாய்ப்பளித்த அனைவருக்கும் எனது நன்றி; பாராட்டுக்கள்; வாழ்த்துக்கள்!

சாதாரணமாக உலகத்தில் ஒவ்வொரு உயிரும் தன்னைத் தற்காத்துக் கொள்ள முயற்சிப்பதுதான் அதனுடைய கடமை. ஒரு நல்ல பேருந்து ஓடுகிறது என்று சொன்னால், ஒரு நாய் கூடத் தன்னை எப்படியாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று விரைந்து சாலையை விட்டு விலகிவிடும். அதுபோல ஒவ்வொருவரும் தங்களைத் தற்காத்துக் கொள்ளுவார்கள். தங்களுடைய தவறுகளைச் சரியானவையென்று கூறுவதும், 'உங்களை விட என்னுடைய தவறுகள் மோசமானவையல்ல' என்பதெல்லாம் ஒவ்வொரு உயிருக்குமுள்ள தற்காப்பு உணர்ச்சியைக் காட்டும்.

போர் வீரர்கள் தற்காப்பு உணர்வை நன்றாக உணர்ந்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது. தமிழ் நாட்டில் திரைப்படம் பார்க்கிற பைத்தியம் கூட இருப்பதால், அதைப் பார்க்கிற பொழுது, அது ஒன்றும் தவறில்லை என்று மிக அருமையாகச் சொல்லுகிறார்கள். பொதுவாகவே நான் சொல்வதுண்டு. "உலக நாடுகளில் எங்காவது தோல்வி, தவறு, குற்றம் இருந்து இதற்கு ஏதாவது சமாதானம் சொல்ல வேண்டுமானால் நல்ல தமிழர்களாகப் பார்த்து அனுப்பினால் நல்ல சமாதானம் சொல்லுவார்கள்" அது நம்முடைய பழக்கம்.

ஆனால், என்னைப் பொறுத்த வரையில் வரவேற்புரை வழங்கிய நண்பர் சொன்னதைப் போல நான் யாரையும் கோபித்துக் கொள்ளத் தயாராக இல்லை. காரணம், உயிர்கள் பழக்கத்தின் வழிப்பட்டவை. அடிக்கடி இப்படிச் சொற் பொழிவுகளைக் கேட்டு பழகியிருந்தால் அவர்கட்கு இது ஆர்வமாக இருந்திருக்கும். படத்திற்குப் போக மாட்டார்கள். படம் அடிக்கடி பார்ப்பது, அது பார்த்துப் பழகினதால்; பார்க்காது போனால் என்னவோ போல ஒரு குறையாக இருக்கும். அதனால் படத்தின் மீது பற்றாகப் போவதற்கு படம் மட்டும் ஒரு காரணமல்ல. அதைப் பார்க்காது போனால் ஏதோ தூக்கம் வராதது போல ஒரு சூழல்-பழக்கத்திற்கு ஆளாக்கப்பட்டிருக்கிறது.

உதாரணம் ஒன்று சொன்னால் விளங்கும். நல்ல வேப்ப மரத்திலே புழுக்கள் வளருகின்றன. அவை வேப்பங் கொழுந்துகளைத் தின்று வளரும். நமக்குத் தெரியும் வேப்பங் கொழுந்து எப்படியிருக்கும் என்று! கசக்கும், அந்த வேப்பங் கொழுந்துகளைத் தின்றுதான் அந்தப் புழுக்கள் வளரு கின்றன. அந்தப் புழுக்களைப் பிடித்து, நல்ல இனிக்கின்ற கரும்பிலே கொண்டு போய் விட்டால், அந்தக் கரும்பு அந்தப் புழுக்களுக்கு பிடிக்காது; இனிக்காது. மிகவும் தொல்லையாக இருக்கும் காரணம்; அதற்குக் கசப்பைப் பழகிப் போனதின் காரணமாகக் கரும்பு கசக்கிறது; வேம்பு இனிக்கிறது என்று சொல்லுவார்கள். இந்த உயிர்கள் பழக்கத்தின் வழிப் பட்டவை இதை "உழுத சால்வழியே உழுதல்" என்பார்கள்.

சில மாடுகள் தானாகப் போகும். ஓர் இடத்திற்குத் தானாகத் திரும்ப வந்துவிடும். அதற்கு யாரும் வந்து 'பிரேக்' போட வேண்டாம். அது தானாக சாலையிலே மேலே போகும். சந்தைப் பேட்டைக்கு வண்டியைக் கட்டி வைத்து விட்டால் வண்டிக்காரர், தூங்கிவிடுவார். வண்டியோடு மாடுகள் போய் நின்றுவிடும். அதற்குக் காரணம், அது

பழக்கத்தின் வழிச் செல்லுகின்ற பழக்கம். அதுபோல, நல்ல பழக்கம் பழகுதல் என்பது ஒரு நல்ல கலை.

அது படத்தைத் தவிர வேறொன்றும் மகிழ்ச்சிக்கு, களிப்புக்கு இடமில்லை என்று செய்துவிட்டு, "இன்றைக்குப் படத்திற்குப் போகிறார்களே! அடிகளாரின் பேச்சுக்கு இல்லையே" என்று சொன்னால் சரியில்லை. அதற்கு, அடிக்கடி இந்தப்படம் வருகிற நாளெல்லாம் பார்த்து, ஒரு பேச்சுக்கு ஏற்பாடு செய்து, அதிலிருந்து திரும்பக் கொண்டு வந்து சோதனைப்படுத்தி நிறுத்த வேண்டும். அப்படிப் பழக்கப்படுத்தி விட்டால் இன்றைக்குப் படத்திற்குக் கூப்பிட்டால் கூட வரமாட்டார்கள். தொல்லை என்று சொல்லுவார்கள். எனவே பழக்கம்தான் பெரிய காரியம்.

ஆனால், இப்பொழுது நம்முடைய நாட்டிலே சாதாரண மக்களுக்குக் களிப்பு, மகிழ்ச்சிக்குப் பேசும் படத்தைத் தவிர வேறொன்றும் இல்லை. அதுவும் பெண்கள் பகுதி மிகவும் கடுமையான வழிகளிலே கவர்ச்சிக்கப்படுகிறது. அண்மையில் ஒரு திரைப்படக் கொட்டகையில் ஐநூறு பேர் இருக்கிற பொழுது அது தீப்பிடித்துக் கொண்டது. அதில் இறந்து போனவர்கள் கிட்டத்தட்ட ஒரு முந்நூறு பேர் பெண்கள்தான். அதாவது திரைப்படக் கொட்டகையிலே அதிகமான இடத்தைப் பிடிப்பவர்கள் இப்பொழுது பெண்கள்தான், என்பது நாம் அறிந்த வரலாறு; உலகறிந்த வரலாறு. அது என்ன காரணம் என்றே என்னால் கண்டு பிடிக்க முடியவில்லை.

ஒருக்கால், ஆடவர்கள் உழைப்பின் மேல் போவ தாலும், புறத்தே வேறு, வேறு துறைகளில் அவர்கட்குக் களிப்பும் மகிழ்ச்சியும் இருப்பதாலும், பெண்கள் வீட்டிற் குள்ளேயே இருப்பதால் இத்தகைய மனோபாவங்கள் இருக்கின்றனவா என்பதை சிந்திக்க வேண்டும்.

இப்பொழுது திரைப்படம் 8-45 மணிக்கு என்று சொல்லுகிறார்கள். அதற்கேற்றவாறு என்னுடைய பேச்சை முடிக்கலாம் என்று நினைக்கிறேன். ஒரு வகையில் உதவி செய்திருந்தால், அவரை எட்டுமணி வரை பேசவைத்து உங்களைப் போகாமல் இருக்கிறீர்களா என்று சோதிக்கலாம் என்று நினைத்திருந்தேன். அவர்தான் நீங்கள் திரைப்படத் திற்குப் போவது வரையறுக்கத் தக்கது என்றும், அதில் ஒன்றும் தவறில்லை என்றும் சொல்லிவிட்டார். இன்னும் தெளிவாகச் சொல்லப் போனால், அவரும் மிக விரைவில் முடித்துவிட்டு, அவர் தம் குழந்தைகளுடன் சென்று பார்க்கலாம் என்ற எண்ணமோ என்று தெரியவில்லை, அதனால் நான் அதிக நேரம் எடுத்துக் கொள்ளவில்லை.

அடுத்து, அவர் நல்ல நிர்வாகி, நல்ல அறங்காவலர், நல்ல தலைவர் என்பதற்கு நல்ல சான்று சொன்னார். எவ்வளவு முடியுமோ, அவ்வளவு செய்கிறோம் என்று சொன்னார். பொதுவாக, யாரும் மாட்டிக் கொள்ளக் கூடாது. மாட்டிக் கொண்டால் அது பெரிய பிரச்சனை. இந்த அறையிலே நிர்வாகக் குழு உறுப்பினர் இருக்கிறார். இன்னொரு நிர்வாகக் குழு உறுப்பினரும் இருக்கிறார். எனவே நாளைக்குப் போட்டி போட்டுக் கொண்டு கேள்விகள் கேட்பார்கள். அவர் யார் ஒருவரையும் மாட்டிக் கொள்ளாமல் செய்திருக்கிறார்.

பொதுவாக, எனக்கு இங்கே பேசுவதற்குரிய தலைப்பை இங்கேயே கொடுத்திருக்கிறார்கள். இரண்டு, மூன்று கேள்விகளையெல்லாம் தயாரித்து முன்பாகவே கொடுத்திருக்கிறார்கள். பொதுவாக, நம்முடைய சமயம் எது? சமயத்தின் பெயர் எது? என்று அடிக்கடி கேட்பார்கள். நம்முடைய சமயம் என்று சொன்னால், குறிப்பாகத் தனிப் பட்ட முறையில் இங்கே வாழ் வாழ்பவர்களைப் பார்த்தால், நாம் “சைவசமயம்” என்று கூறுவது தவறில்லை போலத் தெரிகிறது.

சைவமும், வைணவமும் சேர்ந்து வாழுகின்ற இடங்கள் இருக்குமானால் அந்தப் பகுதியிலே நாம் இந்து சமயம் என்று சொல்லலாம். வைணவமும், சைவமும் சேர்ந்து வாழ்கின்ற ஒரு கூட்டுப் பெயருக்கு இந்து சமயம் எனப் பெயர். இங்கே, நாம் பெரும்பான்மையோர் சைவர்களாக வாழ்கிறோம். திருநீறு அணிகிறார்கள். இந்தச் சமயத்திற்குச் "சைவம்" என்று எப்படிப் பெயர் வந்தது என்கிறார்கள். பொதுவாக ஒரு சமயத்திற்குப் பெயர், அதை தோற்றுவித்த கடவுளின் பெயர், அல்லது அந்தச் சமயம் எந்தக் கடவுளை, எந்தப் பெயரில் வழிபடுகிறதோ அதை வைத்து, அல்லது அந்தச் சமயத்தைத் தோற்றுவித்த ஆசிரியரின் பெயரை வைத்துதான் பெரும்பாலும் சமயங்களின் பெயர் வழங்கும்.

நம்முடைய சமயத்தைப் பொறுத்த வரையில் அதைத் தோற்றுவித்தவர்கள் கிடையாது. அது காலங் கடந்தது; பழமையானது. ஆசிரியர்கள் பலர் இதற்கு வந்தாலும் கூட, வளர்த்தவர்களே தவிர, அவர்கள் தோற்றுவித்தவர்கள் என்று சொல்லமுடியாது. நாம் வழிபடும் தெய்வத்தின் பெயர் சிவமாக, சிவபெருமானாக இருப்பதனால் சிவத்தை வழிபடுகிற சமயத்திற்கு அது எழுத்து விகாரமடைந்து 'சைவ சமயம்' என்று வந்தது. ஆக, சிவசமயமாக இருக்கிற சமயத்திற்குத் தான் சைவ சமயம் எனப் பெயர். சிவபெருமான் முழு முதற் கடவுள், அவரை வணங்குவது நம்முடைய கடமை. இப்பொழுது, நம்முடைய குழந்தைகள் பாடிய திருவாசகப் பாடலில் கூட, மூவருக்கும் அப்பாற்பட்ட தெய்வமாக-பரம் பொருளாக இருக்கிறான் என்கிறார்கள்.

இந்த சிவபெருமான் என்பவர் உலகத்திற்கு முதல்வனாகவும், எல்லார்க்கும் தலைவனாகவும் இருக்கிறார் என்பது நம்முடைய மரபு. ஆனால், பிற்காலத்தில் வந்த பழக்கங்களை வைத்து அவர்கள் கேட்டிருக்கிறார்கள். "சைவமாக இருப்பவர்கள் எல்லாம் புலால் உண்ணாமல் இருக்க வேண்டுமா?" என்று கேட்டிருக்கிறார்கள். பொது

வாகக் கடவுள் என்று சொன்னால், சமயம் என்று சொன்னால் 'அன்பு' என்று பொருள்.

> "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
> அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
> அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"

– என்று திருமூலர் சொல்லுவார்.

அன்பு இல்லாத ஒரு சமயம் இருக்கிறது என்று சொன்னால் அது நம்முடைய வயிறு தான் சுடுகாடு என்று சொல்லுமாம், மனிதர்கள் இறந்தால் சுடுகாடு எங்கோ மண்ணிலே, ஏதோ ஊருக்கு எல்லையிலே இருக்கிறது. ஆனால் விலங்குகள் இறந்தால் சுடுகாடு நம்முடைய வயிறுதான்.

நமக்கு நம்முடைய சமயம் அன்புச் சமயமாக இருப்பதாலே திருவள்ளுவர், "அன்பின் வழியது உயிர்நிலை" என்று கூறுகிறார். ஒருவருக்கு உயிர் இருக்கிறதா இல்லையா என்பதை எப்படிக் கண்டுபிடிப்பார்கள். டாக்டர் என்று சொன்னால் "ஸ்டெதாஸ் கோப்பை" வைத்துப் பார்ப்பார். ஏதாவது இருக்கிறதா? இல்லையா? என்று "போய் விட்டதா?" என்று நம்முடைய வீட்டிலே, நாட்டு வைத்தியரைக் கேட்டால் அவர் கையில் நாடி பிடித்துப் பார்ப்பார். பாட்டியைக் கேட்டால் காதைத் தொட்டு, கையைத் தொட்டுப் பார்த்து உயிர் இருக்கிறதா இல்லையா என்று கூறுவாள். சின்னக் குழந்தைகள் அல்லது பள்ளிக் கூடத்திலே படிக்கிறவர்களைக் கேட்டால் தன்னுடைய துணியின் வெள்ளை நூலை எடுத்து மூக்கில் வைத்து, அது ஆடுகிறதா, இல்லையா என்று பார்ப்பார்கள். அதாவது சுவாசம் இருக்கிறதா, இல்லையா, என்று பார்ப்பார்கள், ஆக, உயிர் இருக்கிறதா, இல்லையா, என்று பார்ப்பதற்கு இவைகளெல்லாம் நாட்டிலே அளவு கோல்கள். ஆனால் திருவள்ளுவர் என்ன

சொல்லி விட்டார்? இவைகள் எல்லாம் அளவு கோல்கள் இல்லை என்று சொல்லிவிட்டார். சில பிணம் வீட்டிலேயும் இருக்கும். சாப்பிடும்; நடக்கும். எல்லாம் செய்யும். ஆனாலும் பிணம் தான் என்கிறார். உயிர் இல்லை என்கிறார். உயிர் இருக்கிறது என்பதற்கு அடையாளம், அவர்களுடைய வாழ்க்கையிலே அன்பு சார்ந்த பழக்கங்கள் இருக்க வேண்டும்.

இந்த உயிர் எங்கே இருக்கிறது என்று கேட்டால் நிறையப் பேருக்குச் சொல்லத் தெரியாது. சொல்லத் தெரியாததினால் உயிரே இல்லை என்று சொல்லி விடுகிறார்கள். வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இவை மூன்றும் சேர்ந்தால் சிவப்பாக ஒரு நிறம் வருகிறதல்லவா? அதுபோல, இந்தப் பஞ்ச பூதங்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்தால், அது ஆடும்; பாடும்; ஓடும்; நடக்கும். அவ்வளவு தான்! உயிர் என்று ஒன்று இல்லை. எல்லாம் கற்பனை என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். ஆனால், அந்த வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு எல்லாம் சேர்ந்தால் ஒரே மாதிரி சிவப்பாக வருகிறதே, ஆனால், எல்லா உயிரும் ஒரே மாதிரி இல்லையே! அதனுடைய உயரம், நிறம், பேச்சு, நடை, உடை, பாவனை, குணம் இவற்றில் பேதங்கள் எத்தனை உண்டோ அத்தனை பேதங்களும் இருக்கின்றன. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பைக் கூட்டினால் நிறம் வருகிற மாதிரி என்று எப்படிச் சொல்ல முடியும்? ஆதலால், உயிர் உண்டு என்பது நம்முடைய நாட்டுக் கொள்கை.

ஆனால், உயிர் எங்கே இருக்கிறது? சில பேருக்குச் சோற்றிலே உயிர் வைத்திருப்பார்கள். அவன் சாப்பிட வில்லை என்று சொன்னால் இறந்து போய் விடுவான். ஆகவே பொழுது விடிந்து, பொழுது போனால் சாப்பாடு; சாப்பாடு. அவன் அதற்காகவே பிறந்திருக்கிற மாதிரி, தேடித் தேடி அலைந்து கொண்டிருப்பான். சோற்றிலே உயிர் இருக்கும். இன்னும் சில பேருக்கு உயிர் வேறு இடத்திலே

இருக்கும். ஒருவர் நல்ல பணம் சம்பாதித்து வங்கியிலே போட்டு வைத்திருப்பார். அந்த வங்கி திடீரென்று "திவால்" ஆகிவிட்டது. "திவால்" ஆகிவிட்டது என்றால் தெரியு மல்லவா? நொடிந்து போயிற்று. பெரிய இடத்தில் பணம் சேர்ந்தால் நொடிக்கும். நொடிக்க வைத்து விடுவார்கள். அது நொடிந்து போயிற்று. நொடிந்து போனவுடனே, இந்தப் பணம் போட்டிருந்த ஆளுக்கு, அந்த வங்கி நொடிந்து போனது என்ற செய்தியைப் பார்த்ததால் உடனே மூச்சு நின்று போயிற்று. அப்படியென்றால், அந்த ஆளுக்கு உயிர் எங்கே இருந்தது? பணத்திலே இருந்தது. எனவே, சிலருக்கு உயிர் சோற்றிலே இருக்கிறது; சிலருக்குப் பணத்திலே இருக்கிறது.

இன்னும் சிலர் இருக்கிறார்கள்? மிகவும் உயர்ந்த வர்கள். ஒரு நல்ல அரசர் தமிழ்நாட்டிலே ஆண்டார். பாண்டிய நாட்டை ஆண்டார். அவனுடைய நாட்டிலே ஒரு காலத்திலே ஒரு தவறு நடந்துவிட்டது. ஓர் ஆளை ஏன் என்று கேட்காமல் என்னவென்று கேட்காமல் கொன்று விட்டார். அந்த அரசன் கொன்ற உடனே, கொல்லப்பட்டவனின் மனைவி அரச மன்றத்திற்கு வந்து வழக்குத் தொடுத்தாள். "என் கணவன் தவறு செய்யாதவன்; அவனைக் கொன்று விட்டாயே" என்று வழக்குத் தொடுத்தாள். அரசனுக்கு உண்மை தெரிந்தது. தவறு செய்து விட்டோம் என்ற உண்மை தெரிந்தது. உண்மை தெரிந்தவுடன் அவன் அழவில்லை; புலம்பவில்லை; ஆத்திரப்படவில்லை. உண்மையில் தான் தவறு செய்து விட்டோம் என்று தெரிந்தவுடனே அவனுடைய உயிர் பிரிந்து விட்டது. அவன் அரியணையி லிருந்து அப்படியே கீழே விழுந்து விட்டான்; இறந்து விட்டான்! அப்படியென்றால், அவனுக்கு உயிர் எங்கே இருந்தது? நீதியில் இருந்தது. அரசே நீதியில் தங்கி இருந்தது. இப்பொழுதெல்லாம், அப்படியானால் 'என்ன செய்வது? நஷ்டஈடு வாங்கிக் கொள்ளுங்கள்; அதைச் செய்து

கொள்ளுங்கள்; இதைச் செய்து கொள்ளுங்கள்' என்பார்கள். ஆனால், அவன் தன்னுடைய உயிரையே கொடுத்து விட்டான். அந்த அரசனுக்கு உயிர், நீதியிலே இருந்தது.

அவனுடைய மனைவி, அரண்மனையில், அத்தாணி மண்டபத்தில் பாண்டியனுக்குப் பக்கத்திலே இருந்தாள். இவன் சுருண்டு கீழே விழுந்தவுடன், அவன் உயிர் பிரிந்தவுடனே, அவளும் கீழே விழுந்து இறந்து போனாள். அதிலே, யார் உயிர் முன்னே பிரிந்தது என்று சொல்ல முடியாத அளவுக்கு உயிர் பிரிந்தது என்று சொல்லுவார்கள். அது யார்? பாண்டிமாதேவி! பாண்டிய மன்னனுடைய மனைவி, கணவன் உயிர் பிரிவதற்கு முன்பாகவே, அவனுடைய உயிர் எங்கு செல்கிறது என்று தேடிச் செல்வாள் போல், உயிர் பிரிந்தது. அந்த அரசிக்கு உயிர் எங்கே இருந்தது? கணவன் பால் கொண்ட அன்பிலே, கற்பிலே உயிர் இருந்தது. இவைகளெல்லாம் உயிர் இருந்த இடங்கள். பாண்டியன் அரசவையிலே உயிரை வைத்திருந் தான். பாண்டியமாதேவி, கணவன் மாட்டுள்ள அன்பிலே, பற்றிலே உயிர் வைத்திருந்தாள்.

இப்படியெல்லாம் சொல்லிவிட்டு, நமக்கு உயிர் எங்கே இருக்கிறது என்று கண்டுபிடிக்க வேண்டும். நமக்கு உயிர் எங்கே இருக்கிறது என்றால், எங்கே இருக்கிறது என்று தெரியவில்லை என்று இழுக்கிறோம். திருவள்ளுவர் சொல்கிறார். "அன்பு காட்டுகிற பழக்கத்திலே, வழக்கத்திலே உயிரை வைத்துக்கொள். அன்பு காட்டுவதற்காகவே வாழு! உனக்கு அன்பு காட்ட முடியாமல் இடர்ப்பாடுகள் ஏற்படு கிறது என்றால், உயிரைத் துறக்கத் தயாராக இரு." அப்படிப் பட்ட சமயம் நம்முடைய சமயம்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்" அன்பு வேறு; கடவுள் வேறல்ல. அன்பே தான் கடவுள் என்று நம்முடைய நாட்டுச் சமயம் சொல்கிறது. எனவே, அன்புச்

சமயமாக இருப்பதாலே, அச்சமயம் உயிர்க் கொலைகளை வரவேற்பதில்லை. காலப் போக்கில், சைவ நெறியில் இருப்ப வர்கள், சித்தாந்த நெறியில், சிவநெறியில் இருப்பவர்கள் புலால் உண்பதில்லை என்ற பழக்கம் வந்தது. காலப் போக்கில் அதற்குப் பெயராக சைவ சமயம் என்று வந்து விட்டது. சைவ சமயத்தைச் சேர்ந்தவர்கள் புலால் உண்ப தில்லை. அப்படி இருப்பதுதான் மிகச் சிறப்பு. ஆனால், நாடு போகிற போக்கைப் பார்த்தால் சாத்தியமா என்று தோன்ற வில்லை. கூடிய வரை முயற்சி செய்து பாருங்கள்.

வாரத்திற்கு ஒருநாள் காய்கறி சாப்பிடுங்கள்; பின் இரண்டு நாளாக மாற்றுங்கள்; மூன்று நாளாக மாற்றுங்கள். இப்படிச் சிறிது சிறிதாக மாற்றுவது நல்லது. பொதுவாகவே நல்ல சத்தான உணவுகள் கிடைக்க, படிப்பதற்கு, எழுது வதற்கு, வேலை செய்வதற்கு எல்லாம் நல்ல காய்கறி, பழங்கள், உணவுகள், உதவி செய்வதைப் போல, மற்ற உணவுகள் உதவி செய்யாது. ஆகவே, சைவ சமயம் என்பதற்குப் புலால் உண்ணாமை என்பது ஒரு கொள்கை. ஒரு ஒழுகலாறு, அப்படி ஒழுகலாறு இருப்பதற்குக் காரணம் என்னவென்று சொன்னால் அது கடவுள் என்பதற்கு அன்பாக இருப்பார் என்பதுதான் காரணம். அது அவருக்கு இலக்கணம். உலகம் முழுவதும் அவருடைய உயிர் ஓவியமாக இருப்பதனாலே, அதை அவர் ஒரு கேள்வியாகக் கூடக் கேட்பார். இப்படியெல்லாம் நாம் விழாக்கள் செய்யும் பொழுது தென்னை மரத்திலே குருத்து வெட்டித் தோரணம் கட்டுகிறோம். அப்புறம் வாழை மரத்தை வெட்டிக் கட்டுகிறோம். அது கூடத் தவறுதான், அது நமக்கு அழகாக இருப்பதற்கு அவ்வாறு செய்கிறோம். நமக்கு அழகாக இருக்கிறது என்பதற்கு ஒரு குருத்து மட்டையை வெட்டினால், ஒரு குலை தேங்காய் போய்விட்டது. அது இந்தக் குரல்வளையைப் பிடித்து நசுக்குவது போல தான், அந்தத் தென்னங்குருத்தை வெட்டுவது.

பழைய காலத்திலே ஓர் அரசன் இருந்தான். அவன் வேட்டைக்குப் போனான். வேட்டைக்குப் போன பொழுது, அந்த மலையிலே, காட்டிலே ஒரு நல்ல முல்லைக் கொடி படர்ந்து இருந்தது. அது படர்ந்து பூக்கிறகாலம். அந்தக் கொடி படர்வதற்கு ஒரு கொம்பு இல்லாமல் தவித்தது. நன்றாகக் கொடி படர்ந்து நிற்கிறது. அது படர்வதற்கு ஒரு கொழு கொம்பு இல்லாமல் அரும்புகள் கட்டி, அது தத்தளித்துத் தவித்துக் கொண்டிருந்தது. அந்தக் கொடியிலே அரும்புகளும் சேர்த்துச் சுற்றியிருந்ததாலே அது வாய் திறந்து "எனக்கு ஒரு கொழுகொம்பு கொடுப்பார் இல்லையா" என்று கேட்பது போல இருந்ததாம். ஏனென்றால், முல்லை அரும்புகள் வெள்ளையாகத் தான் இருக்கும். ஆக, வரிசையாக முல்லை யரும்புகள் சுற்றியிருக்கின்றன. கொடி படரத் தவிக்கிறது. ஆகவே, அரசன் பார்க்கிறான். அரசன் பார்த்தவுடனே, உயிர் இரக்கத்தில் வெளிப்பட்டுத் தான் ஊர்ந்து வந்த தேரிலிருந்து இறங்கி, அந்தத் தேரையே அந்தக் கொடிக்குப் பக்கத்தில் நிறுத்தி, அந்தக் கொடியைத் தேரிலே படரவிட்டு வந்து விட்டான். அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். பாரி என்ற ஒரு அரசன் இருந்தான். அவன் முல்லைக்குத் தேர் கொடுத்தவன். அவ்வளவு செடி கொடிக்கும் கூட உயிர் உண்டு என்று உணர்ந்தது நம் நாடு. செடி, கொடிக்கு உயிர் உண்டு என்று கண்டுபிடித்தது யார் என்றால், உடனே சர் 'ஜகதீஸ் சந்திரபோஸ்' என்று சொல்வார்கள். ஆனால், பழைய காலத்திலேயே செடி, கொடிகளுக்கு உயிர் உண்டு என்று கண்டுபிடித்தது நம்முடைய சமயம்; இலக்கணம்; நம்முடைய மரபு.

எனவே, வாழை, தார் ஈன்று, அது இனிமேல் உயிர்ப்பாக வாழ வேண்டிய அவசியமில்லை என்றால் தான் வெட்டலாமே தவிர, நாம் குருத்துக் கன்றுகளையும், தார் ஈன்று அதனுடைய வாழ்க்கை முடியாத வாழை மரங்களையும் வெட்டிக் கட்டுவது என்பது ஒரு நல்ல

மரபல்ல. அதுவும் கிட்டத்தட்ட தேவை இல்லாத ஒரு உயிர்க் கொலை தான். ஆதலாலே, செடி, கொடிகளுக்கும் உயிர் உண்டு என்று நம்புவது அதுதான்.

வேடிக்கையாகப் பாரதி கேட்டான். உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். நம் நாட்டிலெல்லாம் அநாதைப் பிள்ளைகள் இருக்கிறார்கள். அநாதைப் பிள்ளைகளுக்கு விடுதிகள் கூட இருக்கின்றன. அநாதைப் பிள்ளைகள் இருப்பதைப் போல, எங்காவது அநாதைத் தென்னை மரங்கள் இருக்கின்றனவா? இல்லை! அநாதை மாமரம்? இல்லை. பார்த்தீர்களா? அநாதைத் தென்னை மரம் இல்லை; அநாதை மாமரம் இல்லை. ஆனால், அநாதைப் பிள்ளைகள் இருக்கிறார்கள். அப்படியென்றால், செடி, கொடிகள் நம்மைவிட வளர்ந்திருக்கா? இல்லையா? வளர்ந்திருக்கிறது! பாரதி கேட்டான் "வகைவகையாக நிற்கும் செடி, கொடி மரங்கள் யாது தொழில் செய்து பிழைத்தல் அறியா" வரிசை, வரிசையாகத் தென்னை மரத்தைப் பார்க்கிறோம்; வேலி போடுகிறோம் தண்ணீர் ஊற்றுகிறோம்; மரம் வைக்கிறோம்; பாதுகாக்கிறோம்; நாம் என்னென்ன வேலை செய்கிறோம். ஒருவரைக் கேட்டால் நான் 'காண்ட்ராக்டர்' என்கிறார். இன்னொருவர் நான் 'ஆசிரியர்' என்கிறார். இன்னொருவர் நான் 'மிலிட்டரியில்' இருக்கிறேன் என்கிறார். இப்படி ஒவ்வொருவரும் ஒரு வேலை செய்கிறார்கள்.

இரண்டு தென்னை மரங்களைப் பார்த்து "என்ன வேலை செய்கிறாய்?" என்றால், அது என்ன சொல்லும்? அதற்கு வேலை, கொடுக்கிற தண்ணீரை எடுத்துக் கொள்வது; அதைத் தனக்கு உணவாக ஏற்றுக் கொண்டு பாளை விடுவது; காய்ப்பது; ஏன் காய்க்கிறது? மக்களுக்காக, எந்தத் தென்னை மரத்திலாவது தேங்காய் பறித்தவுடன், பத்து, இருபது பேர் பக்கத்திலே நின்று கொண்டு, 'இப்படி நான்கைந்து

தேங்காய்களை ஈன்ற தென்னை மரமே! உனக்கு நன்றி" என்று சொல்வார்களா?

இப்பொழுது நிகழ்ச்சி நிரலில் போட்டிருக்கிறார்கள். "நன்றி கூறல்" நான் அரை மணி நேரம் பேசி விட்டுப் போனால் நன்றி சொல்வர்கள். "அடிகளார் அவர்களுக்கு நன்றி; சமக்காளம் விரித்தவர்களுக்கு நன்றி; ஒலி பெருக்கி அமைத்தவர்களுக்கு நன்றி,'' என்று சொல்லுவார்கள். தென்னை மரத்திற்குப் போய் நன்றி சொல்வதில்லை. காய்ப்பது என்பது அதனுடைய கடமை. காய்த்தவுடன் காய்களை உதிர்ப்பதும், வேண்டியவர்களுக்கும், தேவையான வர்களுக்கும் கொடுப்பது அதனுடைய கடமை. எனவே, தென்னை மரம் வளர்ந்தால் நிச்சயமாகப் பலன் தரும், என்ற உத்திரவாதம் இருக்கிறது. ஒரு மரத்தைக் கூட அநாதையாக விடாமல், 'கோர்ட்' வரை போய்ப் பாதுகாக்கிறோம்.

இந்த மனிதனை அப்படி வளர்த்தால் பாதுகாப்பார்கள் என்ற நம்பிக்கை யாருக்குமே இருப்பதில்லை. சில தாய்மார்களுக்குக் கூடத் தங்கள் பிள்ளைகள்மேல் நம்பிக்கை இருப்பதில்லை. அப்படியே வைத்துக் கொண்டு, சோறூட்டி, சீராட்டி பழகுகிறபொழுது "நீ பெரிய பிள்ளையாகி சம்பாதிக்கிற பொழுது எனக்குக் கொடுப்பாயா?" என்று கேட்கிறார்கள். "எனக்குக் கொடுப்பாயா?" என்று கேட்கிற சந்தேகம் ஏன் வருகிறது? 'கொடுக்கும்' என்று ஏன் நம்ப வில்லை! இன்னும் சில பேருக்குச் சிறு புத்தியாய் இருந்தால் "எனக்குக் கொடுப்பாயா? அப்பாவிற்குக் கொடுப்பாயா?" என்பார்கள். ஆகவே மனிதர்கள் பெரும்பாலும் சுயநலமாக ஒருவருக்கொருவர் அன்பு காட்டுவது, வளர்ப்பது என்பதெல்லாம் தவிர்க்க முடியாத ஒரு சுயநலத்தின் தேவையின் காரணமாகவே கூடுகிறார்கள். இந்தத் தேவைகளுக்கு அப்பாற்பட்டு அன்பாக இருப்பது என்பது என்னுடைய கடமை. உதவியாக இருப்பது என்பது என்னுடைய கடமை. இது என்னுடைய ஆன்மாவின்

இலட்சியம் என்று வாழ ஆரம்பித்தால் மனிதர்கள் உலகத்திலும் நிச்சயமாக நன்றாக இருக்கலாம்?

உலகத்திலே வேறு எங்கே பூட்டும், சாவியும் இருக்கிறது? மனிதன்தான் நிறைய பூட்டும் சாவியும் உற்பத்தி செய்கிறான். அரசின் சிறையில் சாவி காவலர் கையில் இருக்கிறது; நம் வீட்டைப் பூட்டின சாவி நம் கையில் இருக் கிறது. எப்படியும் பூட்டு பூட்டுத்தானே! சில பணக்காரர் களுடைய வீட்டில் வாயிலைப் பூட்டி விட்டுக் காவல்காரன் வெளியில் இருப்பான். நியாயமாகப் பார்த்தால், இரவில் அந்தக் காவல்காரன் கையிலே அவர்கள் சிறைக் கைதிதான்; வேறொன்றுமில்லை. ஏனென்றால், அவன் பூட்டைபூட்டி, சாவியைக் கையிலே வைத்துக் கொண்டிருப்பான். அவன் நாளைக்குப் புரட்சிகரமாக மாறி, 'உன்னை வெளியில் விடமாட்டேன்' என்று சொன்னாலும் சொன்னதுதான், கம்பன் இவ்வாறு கனவு கண்டான். "கள்வனும் இல்லை; காவல் செய்வாரும் இல்லை" என்று சொன்னான்.

அன்பாக இருப்பது இலட்சியம் என்று சொல்ல வேண்டும் இப்பொழுது, நமது அறங்காவலர்கள் எல்லாம் மிகவும் அன்பாக இருக்கிறார்கள். மிகவும் நெருக்கமாக இருக்கிறார்கள். இவர்கள் மூன்று பேரும் இவ்வளவு நெருக்கமாக இருப்பதை இன்னொரு நிர்வாகக் குழு உறுப்பினர் பார்த்தால் சும்மா இருப்பாரா? "என்ன! கோடி வேலுவிடம் இந்தத் தர்மலிங்கம் இவ்வளவு நெருக்கமாக இருக்கிறாரே! குமரன் ஏன் இவ்வளவு நெருக்கமாக இருக்கிறார்'' என்று ஆராய்ச்சி செய்வார். உடனே பக்கத்திலே இருப்பவர் சும்மா இருக்கமாட்டார். "ஏதாவது காரணம் இல்லாமல் இருக்குமா?" என்பார்? இப்படி நாம் அன்பாக இருப்பதென்பது ஒரு சுய நலம் என்ற மனப்போக்கு நாட்டிலே, மனித சமுதாயத்திலே வளர்ந்தாகிவிட்டது.

'சைவசமயம்' என்று சொன்னால் அது அன்புச் சமய. அதனால் 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பில்லை' என்றார்

எங்கே பார்த்தாலும் சைவ சமய வரலாற்றிலே பார்த்தால் "அன்பின் பிழிவு, அன்பின் நெகிழ்ச்சிதான்." ஒரு சிறிய கதை சொன்னால் அன்புக்கு எவ்வளவு அருமைப்பாடு என்பது தெரியும். திருப்பனந்தாள் என்று தமிழ்நாட்டிலே ஒரு திருத்தலம் இருக்கிறது. அந்தக் காலத்தில் ஆணோ, பெண்ணோ விரும்புகிறவர்கள் போய் பெருமானுக்குப் பூப் போட்டுக் கும்பிடலாம் என்பது பழங்கால விதிமுறை. இடைத்தரகர்கள் வருவதற்கு முன்பு இருந்த முறை. ஒரு அம்மையார் தினந்தோறும் வீட்டில் நல்ல பூவை எடுத்துத் தொடுத்துக் கொண்டு போய் ஒரு மாலை போட்டு சாத்தி விட்டு வணங்கிவிட்டு வருவார்கள். தடாதகைப் பிராட்டியார் என்று பெயர். ஒரு நாள் மாலை போடப் போகிற நேரம்! கடவுள் விளையாட நினைக்கிறார். கடவுள் நம்மோடு விளையாட ஆரம்பித்தால் நன்றாக விளையாடுவார். அவர் விளையாட வர வேண்டும். அவர் வருவதற்குத் தகுதியாக நாம் ஆகிவிட்டால், அதற்குப் பிறகு அவர் நம்முடன் நன்றாக விளையாடுவார்; போராடுவார்; சண்டைபோடுவார்; சாப்பிடுவார். எல்லாம் செய்வார். அவர் கற்பனைப் பொருள் அல்ல.

ஆனால், கடவுள் என்ன செய்வார்? சிறிது சோதித்துப் பார்ப்பார். இப்பொழுது நான் நினைத்தேனே! எட்டு மணி வரையில் உங்களைப் பேச வைத்துவிட்டு 8-45 மணி வரை கேட்க வைத்து நீங்கள் அலுவல்களுக்குப் போகிறீர்களா? இல்லையா? என்று நினைத்தேனல்லவா? அது போல, சிவபெருமான் என்ன செய்தார்? அந்த மாலையை எடுத்து சாத்தப் போகிற நேரம் பார்த்து இடுப்பிலிருந்த புடவையை நெகிழச் செய்கிறார். கையில் மாலையை எடுத்து சுவாமிக்குப் போட வேண்டும். புடவை இடுப்பில் நெகிழ்கிறது; அவிழ்கிறது. இப்பொழுது மாலையைப் போடுவதா? மாலையைக் கீழே வைத்துவிட்டு மானத்தை மறைக்க புடவையைக் கட்டுவதா? கேள்விக்குறி வந்தாயிற்று. ஒரு

வினாடிதான் இந்த சிந்தனை. தன்னிடத்திலே அளவுகடந்த நம்பிக்கையும், ஈடுபாடும் கொண்ட பக்தர்கள் வாழ்க்கையில் வினாக்கள் கேட்கப்பட்டால், பிரச்சனைகள் வந்தால், அதற்கு முடிவு காண்கிற பொறுப்பு கடவுள் எடுத்துக் கொள்வாரே தவிர இவர்களிடம் விடுவதில்லை. அதை எல்லா இடத்திலேயும் பார்க்கலாம்.

பிரச்சனைகளைக் கடவுளிடம் விட்டுவிட்டால், அவன் சுலபமாக முடிவு எடுத்து விடுவான். இப்பொழுது நமக்குக் கடவுளிடம் விட விருப்பம் கிடையாது. கடவுளிடம் பிரச்சனையை விடாமல் நாமாக எடுத்துக் கொண்டு போய், "நாமாக ஜோசியரிடம் கேட்டு, அவன் எட்டுக் குழப்பம் குழப்பி, பின் புத்தி சொல்வதற்காக அவனிடம் ஆலோசனை கேட்டு, எல்லாவற்றையும் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி. நம்மைப் பைத்தியக்காரனாக்கி விடுவான். பிரச்சனை என்றால், நீ கடவுள் நம்பிக்கை உடையவன் என்றால் நீ கடவுளிடம் விட்டுவிடு. உடனே இந்த அம்மையார் பார்த்தார்கள். கடவுள் நம்பிக்கை வந்தாகி விட்டது. கடவுள் பார்த்தார். புடவை கீழே விழுந்து விடக் கூடாது. மாலையைப் போடவில்லை என்றாலும் அந்த அம்மையார் வருந்துவார்கள் என்று சொல்லி, அந்தத் திருமேனி உருவம் உடனே குனிந்து, அந்த எக்கிய நிலையிலேயே மாலையைப் போடக் கூடிய அளவுக்கு அந்தத் திருமேனி குனிந்து கொடுத்தது. திருமேனி குனிந்து கொடுத்தவுடனே அந்த அம்மையார் எக்கிய நிலையிலேயே மாலையைப் போட்டு விட்டுத் தற்காத்துக் கொண்டார்கள்.

அப்படிக் குனிந்த சுவாமி நீண்ட நாள் நிமிரவே இல்லை. இந்தச் செய்தி சோழனுக்கு எட்டியது. சோழன் நாட்டிலே, சுவாமி இப்படிக் குனிந்திருக்கக் கூடாது என்று நிமிர்த்த முயன்றான். சங்கிலிபோட்டு யானையைக் கட்டி, குதிரையைக் கட்டி இழுத்து சுவாமியை நிமிர்த்த முயன்றான். சுவாமி நிமிரவில்லை. இந்தச் செய்தி இப்படியே பரவுகிறது.

திருக்கடவூர் என்ற ஊரிலே ஒருவர் இருந்தார். அவர் மிகவும் அன்பாக இருப்பவர். கடவுளிடத்திலும் மிகவும் அன்பாக இருப்பவர். அவருக்கு அந்தச் செய்தி கிடைத்த வுடன் 'நாம் போய்ப் பார்ப்போம்' என வந்தார். அவர் இந்த யானை, குதிரை எல்லாவற்றையும் அவிழ்க்கச் சொல்லி விட்டு, சங்கிலியெல்லாம் கழட்டச் சொன்னார். இரண்டு அல்லது மூன்று முழத்திலே தென்னை நாறினால் ஆன கயிறு எடுத்து, தனக்கும் அந்த சுவாமிக்குமாக முதுகிலே போட்டுக் கட்டி, அவர் மூச்சுப் பிடித்து இழுக்க முயன்றார். உடனே, சிவபெருமான் நினைத்தார் "ஐயோ! இந்தக் கயிறு முரட்டுக் கயிறாக இருக்கிறதே. இந்தக் கயிறு போட்டு இவன் இழுக்கிறானே; இவன் முதுகெலும்பிலும், முதுகிலும் உறுத்தி வலிக்குமே" என நினைத்தார். உடனே நிமிர்ந்தார். இறைவன் எதனால் குனிந்தார்? அன்பினால் குனிந்தார். அப்படி யென்றால், திரும்பவும் நிமிர வேண்டுமென்றால் அன்பினால் தான் நிமிர வேண்டும். கடவுள் அன்பாக இருப்பார் என்பதற்கு ஒரு உதாரணம் சொன்னேன். பணபலம், படை, குதிரை, யானை நிமிர்த்த முடியாத ஒன்றை ஒரு குங்கிலியக் கலையனாருடைய முதுகிலே கயிறு போட்டவுடன் அது நிமிர்கிறது என்றால், குங்கிலியக் கலையனாருடைய முதுகிலே கயிறு உறுத்துமே என்பதற்காக நிமிர்ந்தார். எனவே, பிரச்சனை என்றால் கடவுளிடம் விட்டுவிட வேண்டும்.

இப்பொழுது பாஞ்சாலியை எடுத்துக் கொள்ளுங்கள். துரியோதனன் அவையில் கொண்டு வந்து துகில் உரிகிறார்கள். அவன் துகில் உரிந்து கொண்டே வருகிறான்; புடவை குறைந்து கொண்டே இருக்கிறது. இவள் கத்திக் கொண்டே இருக்கிறாள். புடவையை நன்றாக இருக்கி தன் இடுப்பில் கட்டிப் பிடித்துக் கொண்டே கத்துகிறான், "கண்ணா, கண்ணா" என்று கத்துகிறாள். கடவுள் பார்த்தார். இனியும் அவளுக்கு நம்பிக்கை இருக்கிறது. தன்னால்

காப்பாற்றிக் கொள்ளமுடியும் என்று நினைக்கிறாள் ஒன்றை மறந்து விடாதீர்கள். நீங்கள் உங்கள் பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று நினைக்கிற வரையில் கடவுள் தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டே இருப்பார்; வரவே மாட்டார்; ஓர் உதவியும் செய்ய மாட்டார். நம்மால் முடியாது என்று ஒரு விண்ணப்பத்தைக் கொடுத்தால் கடவுள் வருவார். ஏனென்றால், தேவையில்லாமல் உங்கள் வாழ்க்கையில் குறுக்கிட்டுத் தொல்லைபடுத்தமாட்டார். அது ஒரு மிகவும் நடுநிலைமையான ஒரு நிலை, உயிர்களின் மன நிலை வளர்ச்சி அடைய வேண்டும் என்பதுதான்.

பாஞ்சாலி முதலில் கையை இடுப்பில் பிடித்துக் கொண்டே கத்திக் கொண்டிருந்தாள். "கண்ணா, கண்ணா" வென்று, கடைசிச் சுற்றுதான் மீதி. இனி நம்மால் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்று தெரிந்து கைகளைத் தலைமீது தூக்கி, "கண்ணா" வென்று கத்தியவுடனே புடவை நீண்டது. அதுதான் நாம் கோவிலுக்குப் போனால் கைகளைத் தலைமீது குவித்துக் கும்பிடுவது என்பது. அதன் பொருள் என்னவென்றால், 'என்னுடைய முயற்சியினால் என்னுடைய வாழ்க்கையை நடத்திக் கொள்ள முடியவில்லை. என்னுடைய பிரச்சனைகளைத் தீர்வு காண முடியவில்லை. கடவுளே நீ உதவி செய்' என்பதின் அடையாளம் தான் கைகளைத் தலைமீது தூக்கி வணங்குகிற பழக்கம்.

ஒரு கடற்கரைக்குப் போகிறோம். நீச்சல் குளத்திற்குப் போகிறோம். ஒருவன் நீந்திக் கொண்டிருக்கிறான். கை மேலே நீள்கிறது. கரையிலே நிற்கிற நாம் என்ன நினைப்போம்? நீந்துகிறான் என்று தான் நினைப்போம். அவன் உடலெல்லாம் தெரியாமல், கழுத்து வரை உள்ளே போய் கைமட்டும் மேலே தூக்கினால், நீந்தவில்லை போலிருக்கிறது. கீழே விழுந்து விட்டார். சரி கீழே இறங்கித் தூக்கு என்று சொல்லுவோம். அதுபோல, வாழ்க்கையில் அவிழ்ந்து விடுவோம் போல் இருக்கிறது. என்னைக் காப்பாற்ற வேண்டும் என்ற

உணர்வு என்றைக்குத் தோன்றி நம்முடைய கைகளைத் தலைமீது குவித்து வணங்கிக் கூப்பிடுகிறாமோ, அப்பொழுது இறைவன் ,வெளி வந்து உதவி செய்வான். அதுவரையில் செய்யக் கூடாது என்பதல்ல. அவரவர் முயற்சியும், அறிவும், திறமையும் பயன்பட்டு வருகிற பொழுது நாம் ஏன் வீணாக வரவேண்டும் என்றுதான் இறைவன் வருவதில்லை. அதனால்தான் "சிரங்கு விவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க" என்று மாணிக்கவாசகர் சொன்னார். எனவே கடவுள் நம்மிடத்திலே அன்பு மயமானவர்.

அவர் உன்னிடத்திலே கேட்பதெல்லாம் அன்புதான். நாம் தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழம் என்றெல்லாம் தருகிறோமே, அதை அன்போடு தருகிறோமா? சிலபேர் அன்பைத் தவிர மற்றதெல்லாம் கடவுளுக்குக் கொடுப் பார்கள். சூடம், தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழம் எல்லாம் தட்டிலே இருக்கிறது. தேங்காய் மூடி வரும்வரை காத்துக் கொண்டிருப்பார்கள். தவிர, அன்பைத் தரமாட்டேன் என்கிறார்கள். அது கூடாது. கடவுளுக்குத் தேவை நம்முடைய இதயபூர்வமான அன்புதான். அந்த அன்பிலே சிலர் "அப்பா" என்று கூப்பிடுவது தான் ஆசைப்படுகிறார் அவருக்கும், உனக்கும் உறவு வேண்டும் என்றுதான் ஆசைப் படுகிறார். அவரை நீ பயன்படுத்திக் கொள்ள வேண்டு மென்று தான் ஆசைப்படுகிறார். ஆனால், இப்பொழுது உபயம் என்று சொன்னால், ருபாய் ஆயிரம் அல்லது ஐநூறு கொடுத்தால் தான் என்று சொன்னால் நாம் கோயிலுக்கு உபயம் செய்துதான் கடவுளின் அன்பைப் பெறவேண்டு மென்பதில்லை. நீ ஒன்றுமே கொடுக்க வேண்டாம் நீ வந்து தூரத்திலே நின்று பார்த்துவிட்டு "அப்பா" என்று அன்பாகக் கும்பிட்டுப் போனால் கூட அவருக்கு மிகவும் திருப்தியாக இருக்கும். ஆகவே, காசு, பணத்தால், பொருளால் கடவுளின் அன்பைப் பெற நினைப்பது தவறு. கடவுள் என்ன 'லஞ்சம்' வாங்குகிறவரா என்ன? 'லஞ்சம்' வாங்கிக் கொண்டு அருள்

செய்கிறார் என்றால் கிடையாது. அது நாம் பழக்கத்தில் கொண்டு வருவது.

தாய் குழந்தைக்கு மிட்டாய் கொடுப்பாள். பின் சிறிது நேரம் கழித்து பாதி தின்று கொண்டிருக்கும் பொழுது, அப்புறம் குழந்தை சிறிது கிள்ளிக் கொடுக்கும் இதில் குழந்தையா தாய்க்கு மிட்டாய் கொடுக்கிறது என்று பொருள். அது ஒரு 'உபச்சாரம்' அவ்வளவு தான். அதுபோல உலகிலுள்ள எல்லாப் பொருளும் கடவுளுக்குச் சொந்தம். அவன் தான் உலகம். நீ அன்பினாலே, பெருமையினாலே, பாசத்தினாலே, கொடுக்கக் கூடியது தானே தவிர, அதற்கு இப்படித் தான் பழக்கம் என்றல்ல, நாம் தூய்மையான மனத்தோடு, நல்ல தூய அன்போடு கடவுளை வணங்குவது தான் சிறப்பான பொருள்.

பூவும், தண்ணீரும் போதுமானது. கோயிலில் பலபேர் வருவதினாலே, கடவுளை வழிபடுவதனாலே, ஒரு நல்ல விளக்குப் போட்டால் போதுமானது. அதனால், கோயிலில் நாம் எளிமையாக வழிபாடு செய்யலாம். நம்முடைய மக்கள், நம்முடைய வாழ்க்கையிலும் சரி, கோயில் நிகழ்ச்சிகளிலும் சரி, நிறையப் பணத்தை செலவழித்து விடுகிறோம். நம்முடைய வாழ்க்கைத் தேவைக்கு மேலே, செலவழித்து, பணம் இல்லாமல் கடைசியில் நாம் தொல்லைப்படுகிறோம். எனவே, வாழ்க்கைச் செலவுகளாக இருந்தாலும் சிக்கன மாகச் செய்ய வேண்டும். சமயச் சடங்குகளாக இருந்தாலும் சிக்கனமாகச் செய்ய வேண்டும். கடவுள் உலகத்தில் எந்தப் பொருளையும் எதிர்பார்த்துக் காப்பதில்லை. அவர் 'நீ வருவாயா' என்று எதிர்பார்க்கிறார், 'நீ கூப்பிடுவாயா' என்று எதிர்பார்க்கிறார். நீ அன்புடன் அழைப்பாயா என்று தான் எதிர்பார்க்கிறார். அதைத் தவிர வேறொன்றுமில்லை. அதனாலே, காசுகளை வைத்து, பணத்தை வைத்து, சடங்கு களின் ஆடம்பரங்களை வைத்து கடவுளை நாம் வழிபட

வேண்டுமென்பதில்லை. மற்ற ஒப்பனையெல்லாம் மனித னுடைய மகிழ்வுக்குத் தானே தவிர வேறொன்றுமில்லை.

நீங்கள் முத்து மாரியம்மனை வணங்குகிறீர்கள். காலையில் நான் முத்து மாரியம்மன் என்ற பெயரைப் பார்த்தவுடன், பாரதியின் முத்து மாரியம்மன் பாடல் ஒன்றை நினைத்துப் பார்த்தேன். பாரதி எப்படி நம்முடைய வாழ்க்கையிலே நிகழ வேண்டும் என்று கற்பனை செய்து காட்டுகிறான். நாள்தோறும் நாம் கவலையிலே இணைந்து, அழிந்து பாவியாக வாழ்கிறோம். நாள் முழுவதும் கவலைப் படுவது என்பது வாழ்க்கைக்கு மிகவும் பிடிக்காத ஒரு செயல். மரத்தைக் கரையான் பிடித்தால், எப்படி அழிந்து போகிறதோ, அதே போல, மனிதனைக் கவலை பிடித்தால் அழிந்து போகும். கவலையினால், ஆகக் கூடிய காரியம் ஒன்றுமே கிடையாது. வருவன வரும்; வராமல் போகப் போவதில்லை.

*"பரியினும் ஆகாவாம் பால்அல்ல உய்த்துச்*
*சொரியினும் போகா தம"– (குறள் – 376)*

என்றார் திருவள்ளுவர். நீ ஒன்றைக் கட்டிப்பிடித்துக் காப்பாற்றினாலும் உனக்கு உரியது அல்லாதது போகத்தான் போகிறது. நீ 'வரவேண்டாம். வரவேண்டாம்' என்று விரைந்து கதவைச் சாத்தினாலும் வருவது வந்தே சேரும். எனவே, நாளை என்ன நிகழப் போகிறது என்பதைப் பற்றி அலட்டிக் கொள்ளாதே. நிகழ் காலத்தை உறுதியாக நம்பு, அதில் பிடிவாதமாக இரு. சிறப்பாக வாழு. நேற்று நடந்தது நடந்து விட்டது. நாளை வரப்போவதும் வரத்தான் போகிறது. நாம் ஏன் கவலைப் படுவானேன்.

இந்த ஜோசியக்காரன், ராசிபலன் எல்லாம் நம்முடைய சமூகத்தை பலவீனப்படுத்துவன. நம்முடைய சமூகம் என்றைக்கு ராசிபலன் எல்லாம் படிக்காமல் தப்பித்துக் கொள்கிறதோ, அன்றைக்கு நீங்கள் நிச்சயமாக

வளர்வீர்கள்; வாழ்வீர்கள். காரணம், அது நம்முடைய வாழ்க்கையை அலைமோதவிட்டு விடுகிறது. எப்படி இருந்தாலும் நமக்கு ஒரு கடவுள் இருக்கிறார். அவரை நாம் நம்புகிறோம். நம்முடைய தன்னம்பிக்கை இருக்கிறது. கடவுள் நம்பிக்கையும், தன்னம்பிக்கையும் என்பது இரண்டு பெரிய இயந்திரங்கள்; பெரிய கருவிகள் என்பதை நாம் மறந்து விடக் கூடாது.

எனவே இந்த நம்பிக்கைகளோடு நீங்கள் வாழ வேண்டும். கவலை என்பதைச் சற்றும் அணுகவிடக் கூடாது. அது மனித உலகத்தையே அரித்துத் தின்கிற கொடிய பூச்சி, அதற்கு இடம் கொடுக்காதீர்கள். இறைவனிடத்திலே, உனக்கு நான் என்ன ஏவல் செய்ய வேண்டும் என்று கேட்டுப் பழகுங்கள். அவருக்கு உங்களால் இயன்ற சிறிய சிறிய பணிகளைச் செய்து, காசு இல்லாமல் பணம் இல்லாமல் நல்ல பணிகளைச் செய்து, நீங்கள் பணிவிடை செய்து வாழ வேண்டும். எந்தத் தொழிலாக இருந்தாலும், இறைவனுடைய கருணையினால், அது நல்ல தொழில் என்று உணர வேண்டும். நமக்கு இருப்பதிலே திருப்தி இல்லாமல், இல்லாதவைகளைப் பற்றிக் கவலைப்பட்டாலே கவலை தோன்றிவிடும். நமக்கு இப்பொழுது கிடைப்பது கஞ்சிதான் என்று சொன்னாலும், இந்தக் கஞ்சியை விட சிறந்த அமுதம் வேறொன்றுமில்லை என்று கருதிச் சாப்பிட்டால், அது அமுதமாக மாறிவிடும். அமுதமே கிடைத்து விடுகிறது. இந்த அமுதத்தைவிட அந்த அமுதம் சிறப்பானது என்று எண்ணிச் சாப்பிட்டால் சாப்பிட்டது நஞ்சாக மாறிவிடும். எனவே, மனிதனுக்குத் தன்னம்பிக்கையும், தன்னிறைவும், போதும் என்ற மனப்போக்குகளும் தேவையானவை.

எதிர்காலத்தைப் பற்றி நன்கு திட்டமிட வேண்டும். எல்லாவற்றிற்கும் நம்முடைய சக்திதான் அடிப்படையாக இருக்கிறது. அறிவு, ஆற்றல் படைத்ததாக உலகத்தில் பார்க்கலாம். சிலர் அறிவு உடையவர்களாக இருப்பார்கள்.

ஆனால், ஆற்றல் இல்லாதவர்களாக இருப்பார்கள். சிலருக்கு அன்பு இருக்கும். ஆனால் அன்பை நெறிப்படுத்தி பயன்படுத்தத் தெரியாமல் இருப்பார்கள். நன்கு அன்புடன் இருப்பார்கள். ஆனால், அவர்களால் ஒரு பயனும் இருக்காது. காரணம், அவர்களுடைய அன்பைச் செயல்படுத்துகிற ஆற்றல் இல்லை. சிலருக்கு நல்ல அறிவு இருக்கும். ஆனால், அவர்களால், அறிவை செயல்பாட்டிற்குக் கொண்டு வர முடியாது. நன்கு நிறையப் படித்திருப்பார்கள். நல்ல ஞானம் இருக்கும் ஆனால் செயல்பாடு இருக்காது. எவ்வளவு உயர்ந்த தத்துவமானாலும் அதற்குச் செயல் உருவம் வேண்டும். சிலருக்கு ஒழுக்கம் இருக்கும். அது கூட ஆற்றலாக மாறாது.

கண்ணகிக்கு என்ன சிறப்பு? பூம்புகாரிலே அவள் கற்புடையவள் தான். தெய்வத்தைக் கூட வணங்க மாட்டேன் என்று சொல்லிக் கொண்டு இருந்தாள். நோன்பு நோற்றாள். ஆனால், அங்கே அவளுடைய கற்பு ஆற்றலாக உருவாக்கப் படவில்லை. கனவாகக் கடந்து கொண்டிருந்தது. ஆனால், பாண்டிய நாட்டிற்குச் சென்றவுடன் மதுரையில் அந்தக் கற்பு ஆற்றலாக உருவாக்கப்படுகிறது. ஓர் அரசையே அறைகூவல் கேட்குமளவிற்கு, ஒரு நாட்டையே எரிக்கிற அளவிற்கு அவளுக்கு ஆற்றல் பிறந்திருக்கிறது என்று சொன்னால், கற்பு ஆற்றலாக உருவாக்கப் பட்டிருக்கிறது; மாதவியினுடைய கற்பு ஆற்றலாக உருப்பெறவில்லை; பாண்டியமாதேவியின் கற்பு ஆற்றலாக உருப்பெறவில்லை. எனவே, கற்பானாலும் சரி ஒழுக்கமானாலும் சரி, அறிவானாலும் சரி, அன்பா னாலும் சரி, அது ஆற்றலாக உருப்பெற வேண்டும். ஆற்றல் என்பதுதான் ஆதாரம்; சக்தி அதைப் பாரதி சொல்லுவான், எல்லாவற்றிற்கும் ஆதாரம் சக்திதான் என்று.

ஆக நம்பிக்கை என்பது வாழ்க்கைக்கு இன்றியமை யாதது. நாளைய வாழ்க்கை நிச்சயமாக நம்முடையது என்று நம்புங்கள். நாளை நிச்சயமாக நாம் எடுத்த காரியம் நடைபெறும் என்ற நம்பிக்கை இருக்க வேண்டும். தேர்வில்

வெற்றி பெறுவோம் என நம்பிப்போய் உட்கார்ந்து எழுதினால் தெரியாத வினாவுக்குக் கூட விடை கிடைக்கும். "தவறி விடுவோமா? தவறி விடுவோமா?" என்று பயந்து கொண்டே இருந்தால், படித்தது கூட மறந்துவிடும். எனவே, வாழ்க்கையில் தன்னம்பிக்கை தேவை. "நான் இதைச் செய்வேன்; செய்யக்கூடும்; செய்ய முடியும்" என்ற தன்னம்பிக்கையோடு வளர வேண்டும்; வாழ வேண்டும்.

எனவே, சைவ சமயம் என்பது ஆற்றல் மிக்க சமயம், அது ஒரு காலத்திலும் கொத்தடிமைப்பட்டதே கிடையாது.

"நாமார்க்கும் குடியல்லோம்
நமனை யஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம்
நடலை யல்லோம்
ஏமாப்போம்; பிணியறியோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை"

என்று அப்பரடிகள் பாடினார். பாட்டை பார்த்தால் பீடு நடை போடுகிற பாட்டாக இருக்கும். ஆனால், அது விபூதி பூசிய துறவி பாடின பாட்டு. அந்தத் துறவி, பெரிய அரசியல் புரட்சியும் அருளியல் புரட்சியும் செய்தவர்.

"நாமார்க்கும் குடியல்லோம்; நமனையஞ்சோம்" என்கிறார். சிலபேர் செத்துவிட்டால் கூடப் பரவாயில்லை. செத்து விடுவோமா என்று பயந்து கொண்டே செத்துப் போய் விடுவார்கள். எவ்வளவு முறைதான் ஒருவர் சாவது? சிலபேர் நடை பிணம் போல் நடப்பார்கள். உற்சாகமே இருக்காது; ஊக்கமே இருக்காது; கிளர்ச்சியே இருக்காது. 'என்னவோ இருக்கிறேன்' என்பார்கள். அது கூடாது.

'நடலையல்லோம்; ஏமாப்போம்; பிணியறியோம். இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்று சொன்னார்கள். இந்த அருமையான சைவசமயத்தை நீங்கள் வாழ்க்கையாக

ஏற்றுக் கொள்ளுங்கள். புலால் உண்பதைத் தவிர்ப்பதைக் கூடுமானவரை முயற்சி செய்யுங்கள். நம்முடைய வாழ்க்கையில் அன்பு சார்ந்த பழக்க வழக்கங்கள் இருக்க வேண்டும்; நாம் மற்றவர்களிடம் அன்பு காட்டுவதோடு, மற்றவர்களும் நம்மிடம் அன்பு காட்டுகிற அளவுக்கு நாமும் எளிமையாக இருக்க வேண்டும். மனித உயிரிடம் மட்டுமின்றி, மற்ற உயிர்களிடமும் அன்பு காட்ட வேண்டும். நம்முடைய வாழ்க்கையின் செயல்பாடுகள் கண்டிப்பாக மற்றவர் களுக்குப் பயன்பட வேண்டும். நம்முடைய அன்பையும், அறிவையும் நாம் ஆற்றலாக உருவாக்க வேண்டும். கடவுளை நம்புகிற பொழுது முழுமையாக நம்ப வேண்டும். கடவுள் நம் பிரச்சனைகளுக்குத் துணை நிற்பார் என்று நாம் உறுதியாக நம்பினால் கடவுள் கண்டிப்பாகத் துணை நிற்பார். வாழ்க்கையில் கவலை என்பது எந்த இடத்திலும், எந்தக் கோணத்திலும் இருக்கக் கூடாது. "நாளை நமக்கு உரியது" என்ற நம்பிக்கையுடன் செயலாற்றுங்கள். உங்களுடைய வாழ்க்கையில் அன்பு மிளிரட்டும். அதன் மூலம் நீங்களும் வாழ்ந்து, மற்றவர்களையும் வாழ வையுங்கள். வாழுங்கள் என்று கூறி வாழ்த்தி விடைபெறுகிறேன்.

# 3

# பொதுவியல் கட்டுரைகள்

## 1. தமிழ்

இன்றைய உலக வரலாற்றில் மொழி இன்றியமையாத ஓர் இடத்தைப் பெற்றிருக்கிறது. நம்முடைய நாட்டில் பலர் மொழியைப் பற்றி அதிக அக்கறை எடுத்துக் கொள்ளாமல், மொழியைப் பற்றிப் பேசுவது, எண்ணுவது, மொழி உரிமையைக் கேட்பது குற்றம் என்று கருதுகிற காலத்தில் நாம் வாழ்கிறோம்! இந்தத் தலைமுறையில் தமிழர்களாகிய நமக்குச் சில இன்றியமையாத கடமைகள் இருக்கின்றன என்பதை நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும்.

ஒரு மனிதன் ஓடுகிறான்; நடக்கிறான்; உழைக்கிறான்; முயற்சி செய்கிறான். இதற்கு அவனுக்கு இரண்டு கால்கள் அவசியமாகத் தேவை. நல்ல மாளிகைக் கட்டி சுவர்கள் எழுப்பி அதற்கு முன்னே பெரிய பூங்கா என்று பெயரிட்டிருக்கிறார்கள். அந்தப் பூங்கா பூங்காவாக இருக்க வேண்டுமென்றால், அங்கே செடிகள் தேவை. உயர்ந்த மலர்ச் செடிகளாயினும் அதற்கு வேலி தேவை. அது போலவே, மாபெரும் கோபுர அமைப்புடைய கோயிலாயினும் அங்கு மூர்த்தி இருந்தால்தான் சிறப்பு. பூங்காவிற்கு வேலியும், ஆலயத்திற்கு மூர்த்தியும் எப்படி இன்றியமையாதவையோ அதுபோல மனித சமுதாயத்திற்கு மொழி இன்றியமையாத ஒன்று என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

சிலர் பரந்த நோக்கத்தில் மொழி என்பது கருத்தைத் தெரிவிக்கத்தானே? அது ஏந்த மொழியாக இருந்தால் என்ன? மொழியை வைத்து வாதாடக் கூடாது என்று சொல்லுகிறார்கள். மொழி கருத்தைத் தெரிவிக்கும் சாதனம் என்பதைவிட மொழிதான் கருத்தையே உருவாக்கத் துணை செய்வதால் மொழி விழியைப்போல் போற்றப்பட வேண்டும் என்றுதான் சொல்லவேண்டும்.

வழி வழியாக வளர்ந்திருக்கின்ற தமிழ்ச் சமுதா யத்தைப் பார்க்கின்றபோது, அதனுடைய இலக்கியச் சிறப்பு, மற்ற எல்லாச் சிறப்புக்களையும் பார்க்கும்போது, மொழி சமுதாயத்தின் ஊற்றுக்கண்கள்போல இருந்து வருகிறது.

இரண்டு கால்களும் இடைக்காலத் தமிழகத்தில் நொண்டியாகப் போய்விட்டன.

ஒரு கால் தாய்மை உலகம். இன்னுமொரு கால் தாய் மொழி. இந்தத் தாய்மை உலகத்தை இடைக் காலத்தில் அடிமையாக்கினோம்.

அதுபோலவே, தாய்மொழி ஆட்சி மொழியாகாமல் வேற்று மொழி ஆட்சியில் இருந்தது. ஆட்சியில் தமிழ் இல்லை. இசையரங்கிலும் தமிழ் இல்லை. ஆலயத்திலும் தமிழ் இல்லை. இப்போதுதான் கொஞ்சம் கொஞ்சம் போராடி ஆட்சிமொழி பயிற்சிமொழி என்று சொல்லுகிறோம்.

கோயில் வழிபாட்டை எடுத்துக் கொண்டால் தமிழிலும் வழிபடும் உரிமை வேண்டும் என்றுதான் கூறுகிறோம்.

இந்த எண்ணங்களைப் பார்க்கும்போது என்னுடைய வழிவழிப் பரம்பரையினர் நினைக்கின்றார்கள். எனக்கு இரண்டு மொழிகளும் கண்கள் போலத் தேவையானவை. சமய உலகம் மொழிச் சிக்கலுக்குள் சிக்கக் கூடாது என்ற கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

ஓரளவு மனித குலத்திற்குப் பரந்த பண்பாடு தேவை தான். ஆனாலும் தற்கொலை செய்துகொள்ளுகிற அளவிற்குப் பரந்த பண்பாடு இருப்பது நமக்கு நல்லதல்ல.

கவிஞர்கள் புலவர்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

தனி மனிதனுக்கு ஊறு வரும்போது அவன் பொறுமை காட்ட வேண்டியது இன்றியமையாத ஒன்று. தனி மனிதனுக்குக் கேடு வரும்பொழுது அமைதியாக இருப்பது தேவையான குணங்களில் ஒன்று. ஆனால் நாட்டிற்கும், இனத்திற்கும் ஊறு வரும்பொழுது பொறுமையோடு இருக்க வேண்டும் என்றால் வாழ்ந்த பரம்பரை வீழ்ந்து போகும்.

என்னை ஒருவன் இழிவுபடுத்தினால் பொறுமையாக இருக்க முடியும்; அது பண்பாடும்கூட.

ஆனால் என் மொழியை, மொழிவழி நாகரீகத்தைப் பழித்துப் பேசும்போது பொறுமையாக இருந்தால் மான மற்றவன் என்றுதான் பொருள்.

இது சமய உலகத்திற்குக்கூட இன்றியமையாத ஒன்று என்று வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

அந்தச் சமயம்-அந்தச் சிந்தனை வழியாகப் பிறக்கின்றது அனுபவ வாழ்க்கை.

அறிவைத் தொட்டு உணர்வைத் தொட்டுத் தாய்மொழி ஆணை புரிவதுபோல் இன்னுமொன்று துணை செய்ய முடியாது.

பொதுவாக ஆங்கிலத்தைப் பயில இந்தியைப் பயில ஆசிரியர்கள் தேவையில்லை. ஆனால் தமிழைப் பயில வேண்டுமானால் இலக்கண முறையோடு படிக்கவேண்டு மென்றால் ஆசிரியர் தேவைதான்.

ஆனால் தமிழ் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள், பேசட்டுமே தெரிந்தவர்கள், கவிதைகளைக் கேட்டால் எழுச்சி பெறுகிறார்கள்! அவர்களுக்கு எழுதப் படிக்கத்

தெரியாது என்றாலும் இன எழுச்சிக்கும் தாய்மொழி இன்றி யமையாதது.

தமிழ் காலத்தால் மூத்ததாக, இந்த வையம் கையசைத்த காலத்திலேயே பையப் புலவர் நாவில் தவழ்ந்து பழகியது என்பார் கவிஞர்.

அந்தக் கவிஞனின் கருத்து இன்றியமையாத ஒன்று. உலகத்தின் பல்வேறு இலக்கியங்களை-வரலாறுகளை ஆராய்ந்து பார்க்கும்போது, மற்ற இனங்கள் மொழிவழிப் பட்ட காலத்திற்கு முன்பே தமிழ் வளர்ந்திருந்தது.

இதற்குச் சான்றாகச் சொல்ல வேண்டுமானால் தமிழுக்கு உள்ள இனிமையும் எளிமையும் உலகத்தில் வேறு எம்மொழிக்கும் இல்லை என்று கூறலாம். இந்த இனிமையும் எளிமையும் தமிழுக்கு எப்படி வந்து சேர்ந்தது?

இதனோடு தகுதியாக வைத்து எண்ணக்கூடிய பழமை யுடையதாக வட மொழியைச் சொல்வார்கள். அதற்குக்கூட இல்லாத ஓர் எளிமை, இனிமை தமிழுக்கு எப்படி வந்து சேர்ந்தது என்று பார்க்கவேண்டும்.

கண்ணை மூடிக்கொண்டு பண்டு தொட்டே தமிழுக்கு இனிமையும் எளிமையும் இருந்தது என்று சொல்லத் தயாராக இல்லை. பல்லாயிரம் ஆண்டுகளாகக் கவிஞர்கள், புலவர்கள், நாவில் பழகி பழகித் தமிழ் இனிய, எளிய மொழியாக உருவாகியிருக்கிறது. அதனால்தான் தமிழுக்கென்று இனிமை யிருக்கிறது. தமிழ் காலத்தால் மட்டுமல்ல கருத்தாலும் மூத்ததாக இருக்கிறது என்பதை மறந்துவிடக்கூடாது. மனிதனுடைய குறைகளைப் பார்த்து அவனைத் திருத்திப் பக்குவப்படுத்தத் தேவையான அளவில் தமிழ் வளர்ந்திருக் கிறது. மனித மனத்தைப் பக்குவப்படுத்தும் திறன் அதற்கு உண்டு. தமிழனிடத்திலே ஒரு பெருங்குறை உண்டு. சீக்கிரமாக ரசிப்பான். ஆனால் சீக்கிரமாகச் செயல்பட மாட்டான். கவிதைகளை நன்றாகக் கேட்பார்கள்; மிக நன்றாக

இருக்கிறது என்று கையொலி எழுப்புவார்கள். ஆனால் மார்பைக் காட்டு என்றபொழுது பலர் பின்னே போகிற நிலையைப் பார்க்கலாம்.

அறிவு ஊட்டும் தமிழ்; அறிவுக்கப்பால் உணர்வை யூட்டுகிற தமிழ்; செயல்படுத்தத் தூண்டும் தமிழ் என்று தமிழை முத்தமிழாக, இயல், இசை, நாடகத்தமிழ் என்று பிரித்தார்கள்.

இவற்றை நாம் நமது உரிமையாக்கிக் கொள்ள வேண்டும்.

தமிழகத்தில் இருக்கின்ற ஒரே குறை தமிழர்கள் எதையும் சீக்கிரம் ரசித்துத் தலையசைத்துக் கேட்பார்கள். ஆனாலும் அடுத்த நிமிஷத்தில் செயல்படுத்த வரும்பொழுது, அவனுடைய தன்னலம், சுயநலம் குறுக்கே நின்றுவிடும் என்பது அவனுடைய சமுதாயத்திற்குப் பெரும் கேடாக இருக்கிறது என்பதைத் தொடர்ந்து சரித்திரத்தில் பார்க்கிறோம்.

நமக்குத் தேவை இலக்கியத்தை ரசிப்பது மட்டும் அல்ல. எந்த ஒரு வரலாறு ஆயினும், எந்த ஒரு கவிதையா யினும், அதைச் செயல்படுத்த முடிகிறதா என்று தமிழர்கள் பார்க்க வேண்டும்.

தமிழர்களுக்குத் தங்களுக்கென ஒரு மரபு இருக்கிறது என்பதை மறந்துவிடுகிறார்கள்.

எது வந்தாலும் கடைவீதியில் கொள்முதல் செய்வதில் இவர்களைவிடச் சிறந்தவர்கள் யாரும் இருக்க முடியாது. வெகு சீக்கிரமாகக் கொள்முதல் செய்வார்கள்.

அதிலும் ஒரு பெருங்குறை என்னவென்று சொன்னால், தமிழர்கள் எப்பொழுதும் சீக்கிரமாக அடிமைப் படமாட்டார்கள்; நிச்சயமாகப் போர் செய்வார்கள். ஆனால் கொல்லைப் புறங்களின் வழியாக, சாளரங்கள் வழியாக வருகிற சதி இருக்கிறதே, அது அப்பாவித் தமிழர்களுக்குத்

தெரியாது. வந்ததற்குப் பின்னே போய்விட்டுப் போகிறது; பரவாயில்லை என்று பச்சாதாபம் பேசுவார்கள்.

இதனால் தமிழர்கள் தங்கள் சொந்த மொழிக்காகப் போராடவேண்டி இருக்கிறது.

நம்முடைய தமிழ் காலத்தாலும் கருத்தாலும் மூத்தது என்று இருக்கின்ற உணர்வை நாம் பெருக்கவேண்டும். இவைகள் எல்லாவற்றையும் நாம் நீண்டகால நினைவில் வைத்துக் கொண்டு செல்வதால் பயனில்லை.

இன்றைக்குத் தமிழ் வளர்கிறதா என்று பார்க்க வேண்டும். இன்று தமிழ் ஆர்வம் பொங்கித் ததும்புகிறது. கங்கையைப்போல் காவிரியைப்போல் பொங்கித் ததும்பு கிறது என்று சொல்கிறார்கள். உண்மையில் நடைமுறையில் அப்படியிருக்கிறதா? உண்மையிலேயே தமிழ் ஆர்வம் கங்கையைப் போல்-காவிரியைப்போல் பொங்கித் ததும்பி வழிந்தோடுகிறதா? அப்படி ஓடுவதாக நான் கருதவில்லை. தமிழர் தமிழரைப் பார்த்தால் தமிழில் பேசுவது குற்றம் என்று கருதுகின்றனர். தமிழில் கோயில்களில் வழிபாடு செய்ய வேண்டியது என்ன அவசியம்? வடமொழியில் செய்யலாம் என்று பெருமையாகக் கருதுகிறவர்கள் இருக்கிறார்கள்.

இன்றைக்குத் தமிழ் ஒரே ஒரு துறையில்தான் வளர்ந்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள்.

அதுவும் பேசும் படத்துறையில் வளர்ந்திருக்கிறது என்று சொல்கிறார்கள்.

கலை, வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருக்கலாம். ஆனால் கலையே வாழ்க்கையாகிவிடுமா என்று தோன்று கிறது.

கலை தேவைதான், வேண்டாம் என்று சொல்ல வில்லை. அடிமைப்பட்டு நொந்து, செத்துக்கொண்டிருக்கிற சமுதாயத்தின் வாழ்க்கை முழுவதும் கலையாக்கி

விடுவோமேயானால், அதில் மகிழ்ந்து கடமைகளை மறந்து விடுவோம் என்று எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன்.

கலை வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருக்கலாம். ஆனால் தமிழகம் இந்தத் துறையில்தான் முன்னணியில் வந்திருக்கிறது. சில பொழுது படிக்க, சில பொழுதில் தூக்கி எறியக் கூடிய கதைகளை, புத்தகங்களை எழுதுவதிலேயே நாம் ஈடுபட்டிருக்கிறோம்.

இதைவிட்டு இன்று தமிழுக்கு என்ன தேவை என்பதைத் தமிழ்ப் பெருமக்கள் எண்ணிப் பார்க்க வேண்டும்.

உலக அரங்கிலே வானவெளிக்குச் செல்லுகிற காலத்தில் நாம் வாழ்கிறோம். வானவெளியில் சென்று அண்ட உலகத்தைச் சுற்றிவரலாம் என்ற காலத்தில் வாழ்கிற நாம், இந்தக் காலத்தில் இந்த நாட்டில் தாய்மொழியில் அறிவியலைச் சொல்லிக் கொடுக்கலாமா கூடாதா? என்ற ஆராய்ச்சியில் இருப்பதைப் பார்க்கும்போது வெட்கமாக இருக்கிறது! வேதனையாகவும் இருக்கிறது.

இன்றைக்கு ரஷ்யப் பேரறிஞன் வானவெளிக்குச் செல்கிறான். அமெரிக்க அறிஞன் வானவெளியைச் சுற்றி வருகிறான்.

இந்தக் காலத்தில்-இந்த நூற்றாண்டில் தமிழ் இளைஞர்கள் படிக்கின்ற கல்லூரிகளில் தமிழில் அறிவியலைப் போதிப்பதுபற்றி இன்னமும் சிந்தித்துப் பேசிக் கொண்டிருக்கிறோம் என்றால் அது வேதனைக்குரியதாகவே இருக்கிறது.

நாம் கங்கைக் கரையிலிருந்து நீர் எடுத்துவந்த பரம்பரை என்பது உண்மைதான். ஆனால் இந்த நூற்றாண்டில் அவைகள் சில பொழுது படித்து எழுச்சி பெறப் பயன்படும்.

ஆனால், நம்முடைய நாட்டில் தமிழ் வளர்ச்சி என்றால் அறிவியல் மொழி, பொருளியல் மொழியாகவும், தொழிலியல் மொழியாகவும் ஆக்க முயற்சி செய்யவேண்டும்.

தமிழில் தொழிலியல், பொருளியல் நூல்கள் தேவை. நீண்ட நாட்களாக சக உறவைப்பற்றி-ஒப்புரவைப்பற்றி பேசுகிற நாட்டிலே, நேருக்கு நேர் ஒருவருக்கொருவர் முரண் பட்டுப் பேசுகின்ற காட்சிகளையும் தமிழனைத் தமிழன் இழிவு படுத்துகின்ற காட்சியையும் பார்க்கிறோம்.

இவைகளைப் பார்க்கும்போது நம்முடைய இலக்கியங்கள் நம்மால் சீரணிக்கப்படவில்லை என்று தோன்றுகிறது.

தவிர, குடும்பங்களில் வயது வந்தவர்களுக்கு இலக்கியப் பயிற்சி இன்று கிடையாது.

இந்த நாட்டில் மிகச் சிறந்த பொதுமறையாக விளங்கும் திருக்குறள்கூட மூன்றரைக்கோடி தமிழர்களில் இன்னும் இரண்டு கோடி மக்களுக்கு அறிமுகம் செய்யப்படவில்லையென்றால் அது என்னுடைய பொதுமறை என்று சொல்லித் தைரியமாக பவனி வருகின்ற நாட்களை உருவாக்கவில்லையென்றால் நம்முடைய இலக்கிய முயற்சிகள் எல்லாம் எங்கு சென்று முடியும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

தமிழர்கள் என்றால் அவர்களுக்கென ஒரு நூல் இருக்கிறது, அது வாழ்க்கை நூல். திருக்குறள் என்று சொல்லி, மூன்றரைக் கோடி தமிழர்களில் ஒரு கோடித் தமிழரைப் பாமரர் என்று ஒதுக்கிவிட்டால்கூட இரண்டு கோடித் தமிழர் களாவது படிக்கவேண்டும்.

ஒன்றாக இருக்க வேண்டும் என்ற விருப்பம் தேசத்தலைவர்கள் பலருக்கு இருக்கிறது. ஆனாலும் இந்தியா ஒன்றே என்பதை உருவாக்க வேண்டும் என்று ஆசைப்பட்டால், அப்படி விரும்புகிற அரசியல் தலைவர்களுக்கு ஒரு யோசனை சொல்லத் தோன்றுகிறது.

> ஒரு மொழியைப் பொது மொழி ஆக்குவதன் மூலம் இந்திய தேசத்தின் ஒற்றுமையைக் காப்பாற்ற முடியாது. இந்த நாட்டிலே எல்லா மொழியினர்க்கும், எல்லா மதத்தினருக்கும் ஏற்றதாக ஒரு தேசிய நூல் இருக்கிறது.

அதுதான் திருக்குறள் என்று சொல்லவேண்டும். அந்த நூலை இந்தியப் பேரரசு இந்தியாவின் தேசிய நூலாக ஏற்றுக் கொள்ளவேண்டும்.

எப்படி தேசத்திற்கென ஒரு தேசியக் கொடியும், தேசத்திற்கென ஒரு தேசிய பண்ணையும், தேசிய மொழியும் தேவையோ அதுபோல ஒரு தேசிய நூல் தேவை என்று கார்லைல் என்ற பேரறிஞர் சொல்கிறார். இந்தியாவுக்குத் தேசிய மொழி வேண்டும் என்று முயன்று கொண்டிருக்கும் பேரரசு இந்தியாவிற்குத் தேசிய நூல் வேண்டும் என்று விரும்பித் திருக்குறளை ஏற்றுக் கொண்டால், இந்த நாட்டில் திருக்குறள் வழிப்பட்ட எண்ணம், சிந்தனை வாழ்க்கை வளரும். அதன் வழியாக இந்தியாவின் ஒற்றுமையை வளர்க்க முடியும்.

இநதியாவின் தேசிய நூலாக இருக்கும் தகுதி படைத்த ஒரே நூல் திருக்குறள்தான்.

இக் கருத்துக்களை எண்ணத்தில் வைத்துச் சொல்லும் போது, திருக்குறள் தமிழ் மக்களிடையே அறிமுகம் செய்யப் படவில்லையென்றால் நம் முயற்சி வெற்றி பெறாது. தமிழ்ப் பெருமக்கள் தாங்கள் தமிழர்கள் என்று எண்ணுவதற்கு அடையாளமாக ஒவ்வொருவர் வீட்டிலும் திருக்குறள் இலக்கியப் பயிற்சி குடும்பப் பயிற்சியாக மலர வேண்டும். அதன் வழிப்பட்ட எண்ணமுறைகள், வாழ்க்கை முறைகள் வளரவேண்டும்.

தமிழர்கள் என்றால் ஒரு குடும்பம் என்றுதான் பெயர். அந்த நோக்கத்தில்தான் 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்று பாடினான். ஆனால் அவனோடு பிறந்து வாழ்கிற தன்னைச் சார்ந்த ஒரு தமிழனிடத்தில் கூட கருத்து முரண் பாடு வந்துவிட்டால் காழ்ப்பாக மாற்றிக் கொள்கிற கேட்டை மாற்ற நாம் முயற்சி செய்ய வேண்டும். அந்த எண்ணத்தைப் பார்க்கும்போது, தமிழன் இன்று போதுமான அளவு

வளரவில்லை. அவன் திசைமாறிப் போகிற போக்கை மாற்ற முயற்சிக்கவேண்டும்.

இன்றைக்குத் தமிழ் போதுமான அளவு வளரவில்லை. அறிவியல், பொருளியல், தொழிலியல் மொழியாகத் தமிழ் வளரவேண்டும்.

'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழில் பெயர்த்தல் வேண்டும்' என்று பாரதி சொன்னான். அன்றைக்கொரு காலத்தில் தத்துவத்தில், அறத்துறையில் தமிழ் சிறந்திருந்தது. அதைப் படித்துப் பயன் பெறுவதற்குப் பல மேல்நாட்டு அறிஞர்கள் வந்தார்கள். இதுபோல் இன்னும் 50 ஆண்டுகள் கழித்துத் தமிழினை ஒரு விஞ்ஞான, அறிவியல், தொழிலியல் மொழியாக ஆக்க வேண்டும் என்ற அளவுக்கு இந்த நூற்றாண்டிற்கு ஏற்றவாறு தமிழை வளர்க்க வேண்டும், காலத்திற்கு ஏற்றவாறு தொண்டு செய்தால்தான் மொழி வளர முடியும்; அப்படியில்லையென்றால் மொழி காலப்போக்கில் சீரழிந்துவிடும்.

இந்த நூற்றாண்டுக்குத் தேவையான அளவிற்குத் தமிழ் வளர்க்கப்படவில்லை. அதற்கான முயற்சி இல்லை. எங்கோ ஓர் இரண்டு முயற்சிகள் நடைபெறுகின்றன.

இதைப் பார்க்கும்போது, இந்த மொழியை உலகத் தோடு உலகமாக வளர்ப்பதற்குரிய முறைகளில் திட்டமிட்டு முயற்சியெடுக்க வேண்டும். அப்போதுதான் தமிழ் எதிர் காலத்தில் வளரும்.

அப்படிப் பார்க்கும்போது நம்முடைய தமிழ் காலத்தாலும் கருத்தாலும் மூத்ததாக இருந்தாலும்கூட இந்தத் தலைமுறையினர்க்கு வேண்டிய சாதனைகளைச் செய்வதற்கு முயற்சிக்க வேண்டும் என்று சொல்ல ஆசைப்படுகிறேன்.

மொழிவழி மக்களை ஒன்றுபடுத்த முடியும். அந்த முயற்சிகளை நாம் உருவாக்கி அதன் மூலமாக நம்முடைய

நாடு, நம்முடைய மொழி, நம்முடைய இனம் என்ற கட்டுப்பாட்டை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

தமிழ் மக்களுக்கு இலக்கியப் பயிற்சி வேண்டும். ஊர்தோறும் நூலகங்கள் பெருகவேண்டும். தமிழனிடம் கேட்டால் என்னுடைய நூல், வாழ்க்கை முறை திருக்குறள் என்று சொல்லவேண்டும். என்னுடைய மொழி இன்னது என்னுடைய சமயம் இன்னது என்று சொல்லி ஒரு குறிப்பிட்ட பயிற்சி கொடுக்கவேண்டும்.

தமிழ்த் தாய்க்குத் திருக்குறளும், இளங்கோ அடிகளின் நெஞ்சையள்ளும் சிலம்பும், தொல்காப்பியரின் ஒல்காப் பெரும் புகழ் தொல்காப்பியமும், குண்டலகேசியும், மணி மேகலையும் போன்ற பல பழம்பெரும் அணிகளை அணிவித்து நாம் மகிழ்ச்சியில் திளைக்கின்றோம்.

தமிழ் அன்னை அணிந்துள்ள அணிகள் யாவும் பெருஞ் சிறப்புடையனவே. ஆனாலும் இவைகளை எல்லாம் இந்த நூற்றாண்டில் செய்திருக்கிறோமா? இப்படிக் கேட்பதைவிட ஒரு சிறு உதாரணம் சொல்லுகின்றேன்.

ஒரு தாய் இருக்கிறாள். வயது மூத்த தாய். அந்தத் தாயின் அருமை மகன் அரசியல் அலுவலகத்திலிருக்கிறார். ஒரு நாள் அந்த மகனிடத்தில் அந்தத் தாய் கேட்கிறாள். "தம்பி! நீ வளர்ந்துவிட்டாய். கை நிறைய சம்பாதிக்கிறாய். ஆனாலும், நான் போட்டுக் கொண்டிருக்கிற நகைகள் எல்லாம் உன் அப்பா போட்டதுதானே? நீ ஒன்றும் செய்து போடவில்லையே" என்று கேட்கிறாள்.

> இன்று தமிழ்த்தாய் போட்டிருக்கிற அணிகளைப் பார்த்தால் பழைய சிலப்பதிகாரம், பழைய குண்டல கேசி, பழைய குறள், பழைய மணிமேகலையாக இருக்கின்றன. இதைப் பார்த்து தமிழ்த்தாய் இன்றைக்கு, தமிழ் மக்களே, நான் இன்று அணிந்துள்ள அணிகள் யாவும் உங்கள் அப்பன், பாட்டன்,

முப்பாட்டன் ஆகியோர் வழங்கியன. நீங்கள் எனக்குப் புதிதாக என்ன செய்கிறீர்கள் என்று கேட்டால் நாம் என்ன பதில் கூறமுடியும்?

## 2. தமிழின் மேன்மை

தமிழ் என்று சொல்லுந்தோறும் நினையுந்தோறும் இன்பப் புது மது பெருக்கெடுத்து ஓடுகின்றது. ஆம். தமிழே இனிமை; இனிமையே தமிழ். தமிழே அழகு; அழகே தமிழ். "தமிழ் என்பது சிவம், இனிமை" என்றது பேரிசைச் சூத்திரம். சொல்லினும், கேட்கினும், சிந்தை நிறைக்கத் தோன்றும் இன்ப நல்லியல் நோக்கித் தமிழ் என்று அறைந்தனர் சொல்லறிஞர். அமிழ்தென்பதே தமிழாயிற்று என்பது சொல்லாராய்ச்சியாளர் முடிபு. "என்று முள இனிய தென் தமிழ்" என்று களிகூரப் பாடுகின்றார் கம்பர். தேன் தமிழ் என்பது தென் தமிழாயிருக்கவேண்டும் என்பதைத் தமிழ் இன்பம் நுகர்ந்தவர்கள் சொல்லுவார்கள். "தேனுறத் தமிழும்" என்றது கல்லாடம். "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவ தெங்குங் காணோம்" என்று பாரதியார் பாராட்டுகின்றார். "தேமதுரத் தமிழோசை" என்றும் கூறுகின்றார். "பாலொடு தேன் பழம் இவைகள் உண்ண இனித்திடுமால், ஏல நினைத்தாலும் இனிப்பாய் தமிழ்த் தாயே" என்றார் மற்றொரு புலவர். அழகுடை நங்கையைத் "தமிழ் தழீஇய சாயலவர்" என்று பேசுகின்றது சிந்தாமணி.

### தமிழின் தொன்மை

தமிழின் தொன்மையைப் பற்றி என்ன சொல்லுவோம். உலகின் ஆதிமொழிகள் ஐந்தனுள் ஒன்றாக நமது அருமைத் தமிழ் விளங்குகின்றது. இன்று இவ்வுலகில் வழங்கும் மொழிகள் 7500 வரையுள. இம் மொழிகளெல்லாம் ஓர் அடி மரத்தினின்றும் கவர் விட்டுக் கிளைத்த கொம்பர்களை

ஒத்தன. மொழிகள் எல்லாவற்றையும் ஆராயுமிடத்து அவைகள் எல்லாம் சில இனங்களில் அடங்குகின்றன. அவ்வினங்களும் பின்பு ஒரு தனிமொழியினின்றும் பிரிந்தனவாகக் காணப்படுகின்றன. அத் தனிமொழி எதுவென நீண்ட காலம் ஆராயப்பட்டது. இன்று மேல்நாட்டு அறிஞர்கள் செய்துள்ள ஆராய்ச்சிகளை ஒருங்கு வைத்து நோக்குவோமாயின் தமிழ் மொழியே அம்மொழி என்று பெறப்படும்.

இங்ஙனம் கூறுவது பேராசையால் அல்ல. பழந் தமிழ் மக்களது நகரங்களாகக் கருதப்படும் மொகஞ்சதாரோ, ஹரப்பா முதலிய நகரங்களில் தமிழ் வழங்கிற்று. மதுரை, திருநெல்வேலிப் பக்கங்களில் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட சவச் சமாதிகள் தோண்டிக் கண்டு பிடிக்கப் பட்டன. அவைகளிற் சிந்து வெளியில் வெளியான புதை பொருள்களில் காணப்பட்டவை போன்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. ஐதராபாத்தில் தோண்டிக் கண்டு பிடிக்கப்பட்ட சமாதிகளில் கண்டெடுக்கப்பட்ட மட் பாண்டங்களிலும் அவ்வகை எழுத்துக்கள் காணப்பட்டன. இலங்கையிலே கேகாலை என்னுமிடத்தில் உள்ள மலை ஒன்றிலும் அவ்வகை எழுத்துப் பொறிக்கப்பட்டிருக்கின்றது.

இவைகளை யெல்லாம் ஒருங்கு வைத்து ஆராயுமிடத்து இமயமலை முதல் இலங்கைவரையில் ஒரு மொழியே ஒரு காலத்தில் வழங்கிற்று என்பதும் அமொழி தமிழ் மொழியே என்பதும் தெரிய வருகிறது. மேலும், மக்கள் இனத்தின் தோற்றமே தமிழகத்தில்தான் என்று வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர். இற்றைக்கு இருபதாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பழைய நாகரிகமாகக் கருதப்படும் **“லெமூரியா கண்டம்”** தமிழ் நாகரிகத்தில் சிறந்து இருந்தது என்பது வரலாறு. நமது நினைவெல்லைக்கும் வரலாற்று அறிவுக்கும் எட்டியவரை தமிழ் வரலாற்றில் நமக்குத் தோன்றும் காலம் கி.மு. 30,000 ஆகும். இக் காலத்தில் தமிழ் மொழி பண்பட்ட முறையில் சங்கங்களின் மூலம் வளர்க்கப்பட்டது.

## தமிழ்ச் சங்கங்கள்

இறையனார் களவியலை ,நக்கீரர் வகுத்த உரையுடன் நாம் படிக்கும் பொழுது நாம் தலை, இடை, கடைச் சங்கங்களைப் பற்றித்தான் அறிகிறோம். ஆனால் சங்க இலக்கியங்களையும், சங்க காலத்திற்குப் பிற்பட்ட இலக்கியங் களையும் படிக்கும்பொழுது சங்கங்களுக்கு முந்தியும் பிந்தியும் தமிழ்நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் நடைபெற்றதற்குச் சான்றுகள் நிறைய இருக்கின்றன. தமிழச் சங்கங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் நடைபெற்று வந்துள்ளன. நமது வரலாற்று அறிவுக்கு எட்டிய முதல் தமிழ்ச் சங்கம் கி.மு. 30,000 முதல் 16,500 வரை நடந்ததாகும். இது பஃறுளி ஆற்றுத் தென்மதுரைத் தமிழ்ச் சங்கமாகும். இச்சங்கம் நடைபெற்றதற்குச் சான்று பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடிய புறப்பாட்டாகும்.

"செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

என்பன புறப்பாட்டு அடிகளாகும். வயிரியர் என்றது முத்தமிழ் வல்லாரைக் குறிக்கும் ஒரு பழஞ் சொல்லாகும். பின்னர் கி.மு. 16,000 முதல் 14,550 வரை 1,450 ஆண்டுகள் நமது மகேந்திர மலைத் தமிழ்ச் சங்கம். இது போலவே தமிழ்ச் சங்கங்கள் பல இருந்து தமிழை வளர்த்துள்ளன. பஃறுளி யாற்றுத் தென்மதுரைத் தமிழ்ச்சங்கம், கரந்தைத் தமிழ்ச் சங்கம் வரை பதினான்கு சங்கங்களின் பணிகள் நமது அறிவுள்ளத்திற்குத் தெரிகின்றன. நாம் தெரிந்துள்ள தலை, இடை, கடைச் சங்கங்கள் முறையே ஆறு, எட்டு, பத்து என்ற எண் முறையில் அமைகின்றன. ஆனால் நாம் இன்று இன்பம் பெறுவது கடைச் சங்கத்தினாலேயாம்.

இன்று நம்மிடையே நிலவுகின்ற இலக்கியங்கள் பெரும்பான்மையும் கடைச் சங்கத்தைச் சார்ந்தனவேயாம். தமிழ்ச் சங்கங்கள் இக்காலத்துப் பல்கலைக் கழகங்களைப் போன்றன. மாணவர்கள் இருக்க, படுக்க, உண்ண, உடுக்க முதலிய எல்லா வசதிகளையும் பெற்று வந்தார்கள். அதாவது அவை குருகுல வாசம் (Residential University) எனப்பட்ட சங்கங்களாக இருந்தன. இச் சங்கங்களில் சீனா, காந்தாரம், எகிப்து, பாபிலோனியா, அக்கேடியா, அமெரியா, பாரசீகம், இலங்கை முதலிய இடங்களிலிருந்தும் மாணவர்கள் படித்துச் சென்றுள்ளனர் என்று தெரிகிறது. நாலந்தா, தக்க சீலம் முதலிய ஆரிய நாட்டுப் பல்கலைக் கழகங்கள் ஏற்படுவதற்குப் பன்னூறாயிரம் ஆண்டுகளுக்கும் முன்னரே, தமிழ்நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் நடைபெற்று வந்தன என்பதற்கு வடநாட்டு நூல்களிலேயே ஆதாரங்கள் உள்ளன. சங்கம் என்ற சொல் தமிழ்ச்சொல் அன்று. அதனால் தமிழ்ச் சங்கம் என்பதற்குச் சரியான சொல்கிடையாது. ஆதலால் வடநாட்டு நாலந்தா, தக்கசீலம் முதலிய சங்கங்களைப் பார்த்துத்தான் தமிழ்ச் சங்கங்கள் தோன்றின என்று கூறுகிறவர்களும் இருக்கிறார்கள்.

**"கதநபம" என்னும் அவைந் தெழுத்தும், எல்லா உயிரோடும் செல்லுமார் முதலே. "சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே", "அவை ஔ எனும் ஒன்றலங் கடையே"** என்றிருக்க வேண்டிய தொல்காப்பியச் சூத்திரம், பிழைபட்ட முறையில் இரண்டு சூத்திரங்களாகப் பிரிக்கப்பட்டு "அ, ஐ, ஔ எனும் மூன்றலங் கடையே" என்று பதிப்பிக்கப்பட்டுள்ளதேயாம். இன்னோ ரன்ன கருத்துக்களைக் கொண்டு தமிழ் மிக மிகத் தொன்மையான மொழி என்பதையும் முன்மொழி என்பதையும் துணிந்து கூறமுடிகின்றது. தலைமையாய் அமைந்த தனி இயற்பிதா மொழி என்பது பேரிசைச் சூத்திரம். காலத்தில் முதுமொழியாயினும் ஆற்றலில், வளத்தில், இன்பத்தில், இளய தமிழாகவே–கன்னித் தமிழாகவே விளங்குகின்றது. முன்னைப்

பழமைக்குப் பழமையாயும் பின்னைப் புதுமைக்குப் புதுமை யாயும் இலங்குகின்றது இன்பத் தமிழ்.

தமிழில் புது இன்பப் புது மது வெள்ளம் பொங்கி வழிந்துகொண்டே இருக்கிறது உலகறிந்த உண்மை. இன்றும் தமிழ் மக்களிடையே தமிழ் ஆர்வமும் தமிழ் அன்பும் பெருகி வருகிறது என்பதை நாம் மறுக்கவில்லை-மறுக்கவும் முடியாது. ஆனால் ஒன்று மாத்திரம் சொல்லுவோம். தமிழின் தரம் குறைந்து கொண்டே வருகிற தென்பதுதான் அது. இதை யாரும் மறுக்கமாட்டார்கள் என்று நம்புகிறோம். ஏனைய எம் மொழிகளையும்விடத் தமிழில் கவிதை வளம் அதிகம். தமிழ்க் கவிதைகளில் சொல்லாற்றல், யானை நடந்து போவது மாதிரி இருக்கும். இன்பச்சுவை அமுதொழுக்கை நிகர்த்திருக்கும். கற்பனைச்சுவை மல்கியிருக்கும். தமிழ்க்கவி மிக மிக உயர்ந்தது. "கவியாக உருவம் எடுக்கும் பொழுது தமிழைப் பார்த்தால் அதன் நுணுக்கமும், நயமும் கிரேக்க மொழிக்கும் இல்லை என்று சொல்லவேண்டும். அப்படிச் சொல்லுவது மிகைகூறும் படாடோபம் அல்ல" என்று **டாக்டர் வின்சலோ** என்ற அறிஞர் கூறுகின்றார்.

இன்று தமிழ் நாட்டில் ஒரு புதுநோய் பரவி வருகிறது. அதுதான் வசன கவிதை என்பது. யாப்பு இலக்கணம் கைக்குள் அடங்காமற்போய் வசனத்தை ஆசிரியர்கள் கையாண்டால் அது கவிதையாகிவிட முடியாது. இந்த வசன கவிதை முயற்சி தமிழ்க் கவிதை உலகிற்கே இழிவைத் தேடித் தந்துவிடும் என்பதில் ஐயமில்லை. வசனம் வளம் பெற்றது நக்கீரர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், சேனாவரையர் போன்ற உரையாசிரியர்களாலேயாம். இவர்களுக்கு முன் உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் என்ற பகுதியில் தகடூர் யாத்திரை, பெருந் தேவனார் பாரதம் முதலிய நூல் களில் வசனம் காணப்பெறுகின்றது. தமிழில் சாசனக் கல் வெட்டுக்களிலும் வசனமே கையாளப்பட்டு வந்திருக்கின்றது.

பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப்பின் தமிழ்நாட்டில் எவ்வித ஞான வளர்ச்சியும் இல்லாமல் போலிப் புலமையும், வரட்டு ஜம்பமுமே தலை தூக்கி நின்றன. இந்தச் சீர்கேடான நிலை நீங்க ஒரு மறுமலர்ச்சி தேவைப்பட்டது. இம் மறுமலர்ச்சி 150 ஆண்டுகட்கு முன் நமது நாட்டில் அடி எடுத்து வைத்த ஆங்கிலேயர்களால் தோன்றிற்று என்று சொன்னால் மிகையாகாது. ஆங்கிலேய அதிகார வர்க்கத்துடன் கையில் விவிலிய நூலுடன் பல பாதிரிமார்களும் வந்தார்கள். அவர்கள் தமிழ் மக்களிடையே, விவிலிய நூல்களின் கொள்கைகளைப் பரப்புவதற்காகத் தமிழில் மொழி பெயர்த்தார்கள். இக்காலத்திலேயே இராமாயண, பாரத வசனங்கள் எழுந்தன. இக்காலத்திலிருந்த யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர் அவர்கள், தமிழில் எளிமையும், நயமும், பொருள் வளமும் சிறந்த அநேக வசனநூல்கள் எழுதினார்கள். நாளடைவில் ஒரு புல்லுருவி தோன்றிற்று. அதுதான் பிறமொழிச் சொற்கள் வசனத்தில் விரவி வந்தமையாகும்.

இன்று தனித் தமிழைப் பரப்புகிற பத்திரிகைகள் ஒன்றிரண்டுதான் நாட்டில் உள்ளன. பெரும்பாலான பத்திரிகைகள் கலப்பு மொழியிலேயே வெளிவருகின்றன. வழக்கிலும் கூடப் பிறமொழிச் சொற்கள் மிக அதிகமாகப் பெருகிவிட்டன. இச்செயலால் "தமிழுக்கு எப்பொழுதும் தனித்து இயங்கும் ஆற்றல் உண்டு" என்று கால்டுவெல் போன்ற மேல்நாட்டு அறிஞர்கள் சொன்ன தன்மையை இழக்கும்படி நேரிடலாம். தனித் தமிழ் நடையை நாட்டிலே வளர்க்கப் பாடுபடுகின்ற "தமிழ் நாடு" போன்ற இதழ்கள் தமிழ் மக்களுடைய முழு ஆதரவைப் பெறவேண்டும். எனவே, இனி நாம் நமது முன்னோர்களைப் போலவே தமிழை வளர்க்கவேண்டும். நமது முன்னோர்களின் தமிழ் அன்பு மிக மிகச் சிறந்தது என்பதை நினைவூட்டிக் கொண்டால் நமக்கும் உணர்ச்சி பிறக்கலாம்.

# 3. தமிழிசை

## இசையின் பெருமை

இசை இன்பம் தருவது. ஒருங்கே பொறி புலன்களுக்கு இன்பந் தருகின்ற பெருமை இசைக்குண்டு. "இசை" என்னுஞ் சொல்லுக்கு "வயப்படுத்துவது" "இசைவிப்பது" என்பது பொருள். மரஞ் செடி கொடிகள் முதலிய ஓரறிவு உயிர்கள் முதல் ஆறறிவு படைத்த மக்கள் வரையில் எல்லா உயிர் களையும் வசப்படுத்துகின்ற ஆற்றல் இசைக்குண்டு. உயிரற்ற கல், மண், நீர், காற்று முதலிய சடப் பொருள்களையும் பாடுகின்றவர்களின் எண்ணத்தோடு இசைத்து இயங்கச் செய்கின்ற ஆற்றல் இசைக்குண்டு. உணர்ச்சியற்றவர்களுக்கும் உணர்ச்சியை ஊட்டுகின்ற பேராற்றல் இசைக்குண்டு; கன்னெஞ்சையும் கசியச் செய்கின்ற திறன் இசைக்குண்டு; நல்லுணர்வை நல்குகின்ற திறன் இசைக்குண்டு; குழைந்த உள்ளத்தைத் தருகின்ற திறனும் இசைக்குண்டு.

## தமிழகமும் இசையும்

தமிழ் மக்களது வாழ்க்கையிலே இசை ஒன்றியிருந்தது. இருக்கிறது. தமிழ் வளர்த்த சங்கங்களிலே இசை பயிலுகின்ற இடம் தனியே இருந்தது. அத்தகைய இடத்தை "இசைச் சூழல்" என்று குறிக்கின்றார் வாதவூரடிகள். தமிழே "முத்தமிழ்" என்றுதான் பேசப்பெறுகின்றது. தமிழ்ச் சமுதாயத்தில் குழந்தைப் பருவமுதல் இறுதிக்காலம் ஈறாக இசை தோய்ந்திருக்கின்றது. பிள்ளைப் பருவத்தில் பிள்ளை களுக்கு மகிழ்ச்சியூட்டி உறங்க வைக்க "ஊசற் பாட்டுக்கள்" பாடப் பெற்றன; அப் பாட்டுக்கள் ஊசல்வரி என்று சங்க இலக்கியங்களில் பேசப் பெற்றுள்ளன. இன்னும் விளையாடுங் காலத்தில் பாடுகின்ற பாட்டுக்கள் "கந்துகவரி" முதலியன. "மங்கல வாழ்த்துப் பாடல்", "செருப்பறை"

"வள்ளைப் பாட்டு" முதலிய பாவினங்களும் சங்க காலத்தில் பயின்றன. இவையல்லாமல் ஆறுகள், கடற் கரைகள் முதலியவற்றின் இயற்கையின் எழிலின்பத்தில் ஈடுபட்டுப் பாடிய பாடல்கள் "ஆற்றுவரி", "கானல்வரி" முதலியனவாம். தெய்வத்தைப் பரவும் பாட்டுக்கள் "தேவபாணி" எனப்படும். சங்க நூல்களில் "பரிபாடல்" என்பதும் ஒன்று. அது முற்றும் இசைப் பாட்டினாலேயே ஆனது. "பரிபாட்டு" என்பது ஒருவகையான இசைப் பாட்டுக்குப் பெயர். இவ்வாறு பண்டைத் தமிழ் மக்கள் எந்நிலையிலும் இசைப்பாடல்களில் மனந்தோய்ந்து மகிழ்ந்திருக்கிறார்கள். தற்பொழுதும் தமிழ் நாட்டிலே எந்தத் தொழிலிலும் இசையைப் பயன்படுத்திக் களைப்புத் தெரியாத நிலையில் வேலையை முடிக்கின்றனர். அவை "ஏற்றப் பாட்டு, உழவுப்பாட்டு" முதலியனவாம்.

"பாடலோர்த்தும் நாடகம் நயந்தும்" என்று 'பட்டினப் பாலை'யில் வருகின்ற தொடர் பண்டைத் தமிழ் மக்களது வாழ்க்கையில் இசை தோய்ந்திருந்தது என்பதற்கு எடுத்துக் காட்டாகும். தமிழ்மொழி முத்தமிழாகவே இயங்கிற்று என்பதை முதலில் சொன்னோம். தமிழிலக்கண ஆசிரியர் அகத்திய முனிவர் முத்தமிழுக்கும் இலக்கணம் செய்தார். சிகண்டியார் என்னும் புலவர் "இசை நுணுக்கம்" என்று ஒரு இசைத் தமிழ் நூல் செய்தார். இளங்கோவடிகள் முத்தமிழ்க் காப்பியமாகச் சிலப்பதிகாரத்தைச் செய்தார். "பழுதற்ற முத் தமிழ்ப் பாடல்" என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதி காரத்தைப் புகழ்கின்றார். அடியார்க்கு நல்லாரும் இசைத் தமிழின் இயல்புகளை நன்கு அறிந்தவர். இங்ஙனமெல்லாம் இசைநலம் பண்டைக் காலத்தில் மிகவும் சிறந்திருந்ததென்றே தெரிகின்றது. கண்ணகனார், கண்ணனாகனார், கேசவனார், நன்னாகனார், நல்லச்சுதனார், நாகனார், பித்தாமத்தர், பெட்டகனார் முதலிய பெருமக்கள் பலரும் இசைத் தமிழ்ச் செல்வார்களாக விளங்கினர்; இவர்களெல்லாம் பரிபாடலுக்கு இசை வகுத்தவர்களாவர்.

## தமிழிசையின் அவசியம்

இசை உயிர், பாடல் உடல். உயிரின்றி உடல் இயங்காது; உடல் இன்றேல் உயிருக்கும் இயக்கம் இல்லை, பயனுமில்லை. எனவே, பாடுகின்ற பாடல்களின் பொருளை உணர்கின்ற நிலை வருகிற பொழுதே இசைக் கலையின் பயனை அனுபவிக்கச் சாதாரண மக்களிலிருந்து பெரியவர்கள்வரை முடியும். மேலும் வாழ்க்கையை வளப் படுத்தத்தானே கலைகள்? வெறும் இசை, கேட்கச் சிறிது நேரம் இன்பமாக இருக்குமே யொழிய வளம் பயப்பதில்லை. நல்ல கருத்துள்ள பாடல்களை இசையுடன் பாடுகின்ற பொழுது, கேட்பதனால் நல்ல உணர்ச்சியையும், மெய்ப் பாட்டையும் அடைய முடிகிறது; உண்மை இன்பத்தையும் அனுபவிக்க இயலுகிறது. எனவே, தமிழிசைதான் இந்த நாட்டிற்குத் தேவையென்று நிச்சயமாக நம்புகிறோம். இந்த நம்பிக்கை வேற்று மொழியின்கண் உள்ள வெறுப்பினால் அல்ல என்பதையும் உணர்த்த ஆசைப்படுகின்றோம்.

## சமயமும் இசையும்

தமிழ் மக்கள் சமயத்துறையில் இசையைப் பெரிதும் போற்றினர்; இறைவனையே ஏழிசையாகவும், இசையின் பயனாகவும் கண்டு வழிபட்டனர். ஆண்டவனை அகங் குளிர்ந்த உள்ளத்துடன் இசையொன்றப் பாடுகின்ற பண்பு தமிழ் மக்களுக்கே உரியது. ஆண்டவன் தமிழோடு இசை கேட்கின்ற பெரு விருப்பினனாக விளங்குகின்றான் என்றே அவர்கள் உணர்ந்து ஓதினர். ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் முதலிய சமயப் பெருமக்கள் இசை கலந்த பாடல்களைப் பாடிப் பரமனை மகிழ்வித்ததோடு மக்களிடையேயும் பக்தி உணர்ச்சியைப் பரப்பினர். இசையின்கண் எழுந்த வேட்கை யினால் மதுரை ஆலவாயண்ணல் யாழ்ப்பாணருக்குத் திருமுகங் கொடுத்தார். அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய ஆனாய நாயனார் ஏழிசையைக் குழலில் ஊதிப்

பேரின்பப் பெருநிலை பெற்றார். இசையினால் இறைவனை ஏத்துதலாற் பெறும் பயனை **"அளப்பில கீதஞ் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே"** என்று அநுபூதிச் செல்வர் சொல்லு கின்றார். பிற்காலத்தில் தமிழிசை சமயத்தின் அரவணைப்பி லேயே வளர்ந்தது; இன்றும் தமிழிசை நிலவுவது இசைநலத்தோடு அமைந்த தேவாரப் பதிகங்களால்தான்.

## பண்ணிசை

முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்திலே இசைக் கருவிகளைப்பற்றிப் பேசுகின்ற பொழுது "மிடற்றுப் பாடல்" என்று ஒன்று குறிக்கின்றார். இது வாய்ப்பாட்டைக் குறிக்கும். இங்ஙனம் இசைக் கருவிகளோடு "மிடற்றையும்" சேர்த்துச் சொன்ன பெருமை தமிழருக்கே உரியது. "மிடற்றுப் பாடல்" என்பதற்குச் சிலப்பதிகார அரும்பதவுரை யாசிரியர், "மூலா தாரந் தொடங்கிய மூச்சைக் காலாற் கிளப்பிக் கருத்தால் இயக்கி ஒன்றெனத் தாக்கி இரண்டெனப் பகுத்து பண்ணீர்மைகளைப் பிறப்பிக்கப்பட்ட பாடலியலுக்கு அமைந்த மிடற்றுப் பாடல்" என்று விளக்குகின்றார். ஓசையோடு இசைந்து செல்லுங் கருத்தின் இயக்கம் இதில் நினைவாய் எடுத்துக் காட்டப் பெறுகின்றது. முதலில் எழுந்த ஓசை, பின் இசையும் பண்ணும் என்று இரண்டு வகையாக இசைக்கப்படுவதனால் இவ்வுரையில் இரண்டெனப் பகுத்துக் கூறினார். இசை பண் உருவங்கொள்ளும்போது "பண்கள்" எனவும், "திறங்கள்" எனவும் பாகுபாடு கொள்ளப் படும். அவற்றுள் ஏழு நரம்புகளும் நிறைந்தது பண்; அதற்குக் குறைந்த நரம்புகள் அமைந்தது திறம். திறங்கள் பண்களுக்கு இனமானவை. ஒளியில் ஏழுவகையான நிறங்களிலிருந்து இயங்குதல்போல ஒலிகளும் ஏழுவகைகளாக இயங்கி வெளியிற் காரியங்களை நிறைவேற்றுகின்றன. அவ்வேழு வகை ஒலிப்பிரிவுகளே இங்கு ஏழு நரம்புகள் எனப்பட்டன. நிலங்களுக்கும், காலங்களுக்கும் எனப் பண்களை முறைப்

படுத்தியும் வைத்திருக்கின்றனர். சிறப்பாகக் காலை நேரத்துக்கு மருதப் பண்ணும், மாலை நேரத்துக்குச் செவ்வழிப் பண்ணும் உரியதாகும். பண்ணிசையின் ஆக்கத் திற்குத் தேவார ஆசிரியர்கள் மூவரும் செய்த தொண்டு மிகவும் போற்றுதற்குரியது. தேவாரத் திருமுறைகளில் பண்கள் பேசப் பெற்றுள்ளன. அதாவது பகற்பண், இராப்பண், பொதுப்பண் என்று இந்தப் பண்களுக்குரிய கட்டளை பேதங்களையும் திருமுறை கண்ட புராணம் எடுத்துச் சொல்லியுள்ளது. கட்டளை என்பது எதைக் குறிக்கும் என்பதுபற்றி மாறுபட்ட கருத்துக்கள் பல உலவு கின்றன. பெரும்பாலும் கட்டளை என்பது இசையினுடைய கலையைப் பற்றியதாகத்தான் இருக்கவேண்டும் என்று எண்ணுகின்றோம் திருமுறைகண்ட முறைப்படி பண்களையும் அவ்வவற்றிற்குரிய கட்டளைகளையும் பதிகங்களையும் தெளிவுற எழுதி வெளியிடுவது அவசியமாகும்.

## நாம் செய்ய வேண்டுவன

தமிழிசை வளர்ச்சியுற நல்ல கீர்த்தனைகள் வேண்டும். அக் கீர்த்தனைகள் பொருட் செறிவும் இசைப் பொருத்தமும் பெற்றிருத்தல் வேண்டும். இத்தகைய கீர்த்தனைகளின் பெருக்கிற்குச் 'சாகித்ய கர்த்தாக்கள்' இசைப் புலமையும் தேர்ச்சியும் பெறவேண்டும். தமிழ்ப் புலவர்களும் இசை நுணுக்கங்களைக் கற்று முத்தமிழ் வளர்ச்சிக்குப் பணி செய்யவேண்டும்.

## தொகுப்புரை

இசைக்கலை வாழ்க்கையிலே தோய்ந்து விளங்குகின்ற பெருமை படைத்ததென்பதையும், தமிழ் மக்களது வாழ்க்கையில் கருக்குழி முதல் சவக்குழி வரையில் இசை கலந்திருக்கிறது என்பதையும் தமிழ் மக்கள், கலைகள் அனைத்தையும் இறைவழிபாட்டிலேயே ஈடுபடுத்தி மகிழ்ந்தனர் என்பதையும்

சங்க காலத்திலே தமிழிசைக் கென்றே நூல்கள் இருந்தன என்பதையும், இசை வளர்ச்சியில் மூவர் செய்த தொண்டு மதிப்பிற்குரியது என்பதையும், பண்ணிசையின் கருவூலமாகத் தேவாரங்கள் விளங்குகின்றன என்பதையும், தமிழிசையின் வளர்ச்சிக்கு இயற்றமிழும் இசைத்தமிழும் ஒருங்கே பயின்றவர்களின் தொகை பெருக வேண்டும் என்பதையும் நினைவுபடுத்துகிறோம்.

## 4. தமிழக எல்லை

தமிழ்ப் பெருங்குடியினர் ஒரு காலத்தில் இந்தியா முழுவதும் வாழ்ந்தனர். வரலாற்று அறிஞர்களால் சிறந்த நாகரிக காலமெனப் பாராட்டப்படுகின்ற சிந்துவெளி நாகரிகம் தமிழர் நாகரிகம்; அன்றியும் தமிழக மன்னர்கள் இமயத்தில் கொடி உயர்த்தி ஆண்டனர். வங்கத்தில் தமிழ் அரசர்கள் இருந்து "சேரமரபினர்" என்ற பெயரில் ஆட்சி செலுத்தி இருக்கின்றனர். இராசேந்திர சோழன் கங்கை வெளியிலும் தனது ஆட்சியைச் செலுத்தினான். தமிழக மன்னர்கள் காலத்தில் தமிழ் நாட்டின் எல்லையாக வடக்கே இமயமும் தெற்கே ஈழமும் இருந்திருக்கிறது.

அதற்குப் பிற்காலத்தில் தமிழகத்தின் வட எல்லை வடவேங்கடம். "வடவேங்கடந் தென்குமரி, ஆயிடைத் தமிழ்கூறு நல் உலகத்து" எனப் பனம்பாரனார் கூறுகின்றார். "வேங்கடங் குமரி தீம் புனற் பௌவமென்றிந் நான்கெல்லை தமிழது வழக்கே" என்று சிகண்டியாரும் கூறுகிறார். நமது தேசியக் கவிஞர் பாரதியாரும்,

*"நீலத் திரைக்கடலோரத்திலே நின்று*
*நித்தந் தவஞ்செய் குமரிஎல்லை—வட*
*மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்*
*மண்டிக் கிடக்குந் தமிழ் நாடு"*

என்று பாடி இருக்கிறார். நெல்லூர், காளத்தி முதலிய இடங்களில் கிடைத்த சிற்றரசர்தம் கல்வெட்டுக்களில் இரண்டாம் இராசேந்திரன் பேரரசனாகக் குறிக்கப் பெற்றுள்ளான். இப்படித் தமிழர் ஆட்சியுடன் பரவி இருந்தது, ஒரு காலத்தில். இடைக்காலத்தில் தமிழர்கள் வளமும், உணர்வும் குன்றித் தேய்ந்துகொண்டே வந்தார்கள். ஆதலால் தான் ஆந்திரர்கள், தமிழருக்கே உரிய சென்னைக்கும் ஆசைகாட்டி வீணான உரிமை பாராட்டினர் போலும்! தமிழர்கள் அனைவரும் ஒன்றுபட்டு நின்று வடவேங்கடம் முதல் தென்குமரி வரையில் உள்ள விரிந்த தமிழகத்தைப் பெறவேண்டும். தமிழர்களது நியாயமான உரிமையை இன்றைய அரசாங்கம் தயங்காது தர வேண்டும்.

## 5. இலக்கியம்

அரசியலுக்கு இலக்கியத் தொடர்பு உண்டா? அரசியலுக்கல்ல - சமுதாயத்திற்கு. அன்றாட வாழ்விற்கு இலக்கியம் தேவையா என்ற நிலைக்கு மக்கள் வந்திருக்கிறார்கள். வீட்டுக்கு வேலி தேவை; ஆனால் வேலியே வீடாகி விடாது-விடக்கூடாது. சமுதாயத்தைக் காப்பாற்றத் திருடாதே என்று அறம் சொல்லுகின்றன; மீறித் திருடினால் பிடிப்பதுதான் அரசியல்.

இன்று நம் நாட்டில் நோக்கும் திசையெல்லாம் அரசியல்தான். நம் நாட்டில் நிறையக் கொடிகளைப் பறக்க விடுகிறார்களே தவிர இலக்கியப் பண்ணைகள் பெருகி யிருக்கின்றனவா? எத்தனை எத்தனை கட்சிக் கொடிகள்!

மேலும், இங்கு திரைப்படக் கொட்டகைகள் பெருகிய அளவிற்கு-சிற்றுண்டிசாலை பெருகிய அளவிற்குப் புத்தக சாலைகள் பெருகி இருக்கின்றனவா? இல்லையே. இருக்கின்ற புத்தகசாலைகளிலும் தரமான புத்தகங்களைப் பார்க்கின் றோமா? தரமான புத்தகங்களை மக்கள் படிக்கிறார்களா?

கடைத்தெருவில் சென்று பாருங்கள். கீழ்த் தரமான உணர்ச்சியைக் கிளறிவிடும் புத்தகங்கள்தாமே பெரும்பாலும் விற்கின்றன.

மனிதனுக்கு மனிதன் உறவு கொண்டாடுவதற்குத்தான் மொழி: இலக்கியமும் அதற்குத்தான். பலதரப்பட்ட பண்பாடு உடையவர்கள்-உணர்வுடையவர்கள் ஒன்றுபட்டு வாழ வழி செய்யத்தான் இலக்கியம் இருக்கிறது. குறைகள் மறைந்து ஒழிந்து ஒற்றுமை ஏற்படுவதுதான் மக்களாட்சியின் அடிப்படை. ஆனால் அந்த அடிப்படை மறைந்து இன்று பிரிவுகளும், குறைகளுமே எண்ணப் பெறுகின்றன. இலக்கியங்களின் மூலமாக நாம் விரும்பும் சமுதாயத்தைக் காட்டவேண்டும். திருக்குறள் ஒப்புயர்வற்ற சிறந்த இலக்கியம். சமுதாயத்தின் புதிய எழுச்சிகளுக்கெல்லாம் வள்ளுவத்தில் நாம் உரை காணவேண்டும்.

> "யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்
> வானோர்க்கு உயர்ந்த உலகம்புகும்"

என்கிறது வள்ளுவம். இதற்கு, யான் என்ற அகப்பற்றையும் எனது என்ற புறப் பற்றையும் விட்டொழிக்க வேண்டும் என்றே உரை காணப்பட்டிருக்கிறது. யான் எனது என்ற உணர்வுகளை நாம் விட்டொழித்து விட்டால் வாழ்க்கையில் சுவை ஏது? எனவே, வாழ்க்கையில் இன்பங்காண, சுவைகாண யான் எனது என்ற உணர்வு இன்றியமையாதது. ஆனால், யான் எனது என்ற உணர்வினால் பிறக்கின்ற செருக்கு - ஆணவம் வெறுத்து ஒதுக்கத்தக்கது.

சமய இலக்கியங்களும் சமுதாயத்தைவிட்டு விலகியவை அல்ல. கோவில்களும் திருமடங்களும் சமுதாயத்தின் ஜீவனாக இருந்து வந்திருக்கின்றன. சமய நிலையங்களுக்குப் பொன்னும் பொருளும் குவிய ஆரம்பித்த பிறகு அவற்றை ஆதிக்கம் செலுத்த விரும்பிய சில ஆதிக்கக் காரர்கள் தங்கள் ஆதிக்கத்தில் யாரும் குறுக்கிடாமல்

தடுத்துக் காத்துக்கொள்ள விரும்பினார்கள். அதை யொட்டியே சமயம் சமுதாயத்தை விட்டு விலகியது. **"குறை விலாது உயிர்கள் வாழ்க"** என்றார் அப்பரடிகள், **"நாமார்க்கும் குடியல்லோம்"** என்று ஏழாம் நூற்றாண்டிலேயே முதன் முதலாக சுதந்திர முழக்கம் செய்தார் அப்பரடிகள். இன்று இந்தக் கொள்கைகளையெல்லாம் நாம் சமுதாயக் கண்ணோட்டத்தோடு பார்க்கிறோமா? வெறும் பாராயணப் பாட்டாகத்தானே வைத்துக் கொண்டிருக்கிறோம்.

நமது இலக்கிய மரபு அன்பு மரபு; உலக இலக்கியங்களுக்கெல்லாம் தாயாக விளங்கும் தனிப்பெரும் மரபு. இடித்தோ இணக்கியோ, மனித சமுதாயத்தை முன்னோக்கி இழுத்துச் செல்ல எழுந்தவைதாம் நமது இலக்கியங்கள்.

நாடு முழுவதும் இலக்கிய பரம்பரையை - இலக்கியச் சிந்தனைகளை உருவாக்கினால் நிச்சயமாக-எளிதாக தேசீய ஒருமைப்பாட்டை உருவாக்கிவிட முடியும். இதற்கு அரசியலின் பெயரால் தனித்தனிக் குழுக்கள் தேவையில்லை. கங்கை கரையிலிருந்து காவிரிக்கரை வரையிலே நமது இலக்கியச் சிந்தனைகள் வளர்ந்துவிட்டால் "எல்லோரும் மனிதர்கள்" என்ற வள்ளுவத்தின் வாழ்க்கை நெறியைப் பரப்பிவிட்டால் எல்லோரும் ஒரே குலமாக வாழமுடியும்.

நம் நாடும் இனமும் வளராமற் போனதற்குக் காரணம் ஒன்றையொன்று அழிக்கும் மனப்பான்மை இருந்ததுதான். எதுவும் எதையும் அழிக்காது; எதுவும் எதனாலும் அழியாது என்ற நம்பிக்கை எல்லா மக்கள் மனத்திலும் வேரூன்ற வேண்டும். மொழியால் மாறுபட்டாலும், மதத்தால் வேறுபட்டாலும் அன்பின் மூலமாக ஒருமைப்பாட்டை உண்டாக்கிவிட முடியும்; தேசீய ஒருமைப்பாடு உயிரினும் மெல்லியது. அதைக் காப்பது நமது பிறப்புரிமை.

இலக்கியம் மனித குலத்தின் ஊற்றுக்கண் போன்றது. அதற்கு ஏற்ப அரசியல் உருவாகின்றது. வள்ளுவம் ஒப்பற்ற உலகப் பேரிலக்கியம் என்கிறோம். தமிழ் நாட்டில் உள்ள மூன்றரைக் கோடித் தமிழர்களில் எத்தனை பேருக்குத் திருக்குறள் தெரியும்? எனக்கும் உலகுக்கும் இன்றைக்கு இருக்கும் தொடர்பு போல அன்றைக்கு வள்ளுவருக்கும் உலகுக்கும் தொடர்பில்லை. இன்று உலகம் என்னை நெருங்கி விட்டது. பழைய காலத்தில் ஆத்திரப்பட்டால், பகைமை கொண்டால் ஒருவரையொருவர் தாக்கிக் கொள்ள ஈட்டி மட்டுமே அவர்கள் கையில் இருந்தது. ஈட்டி எட்டின மட்டுமே குத்தும். ஈட்டிக்கு எட்டாமற் போனால் ஆபத் தில்லை; அதன் பிறகு சில அடி தொலையில் இருப்பவனைச் சுட்டொழிக்கத் துப்பாக்கி கண்டுபிடிக்கப்பட்டது. அது சற்றுத் தொலைவில் இருந்தவனையும் சுட்டது. இன்றோ, அணுகுண்டுக் காலம். ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கின்றவர்களையும் ஏவுகணைகளின் மூலம் அழித்துவிடக் கூடிய கொடுமையான கருவிகள் கையில் உள்ள காலம். அதனால் அன்றைய மனிதனின் ஆத்திரத் திற்கும் ஆபத்திற்கும் இடையே இடைவெளி இருந்தது. இன்றோ ஆத்திரத்தின் நிழலாகவே ஆபத்து இருக்கிறது. இந்த உண்மையை இலக்கியக் கர்த்தாக்கள் நன்றாக உணர வேண்டும். இன்றைய மக்கட் சமுதாயத்திற்குத் தேவை யானதை அவர்கள் உருவாக்கித் தரவேண்டும். கிணற்றில் ஊறுகின்ற தண்ணீரை வெளிக் கொணர்ந்து அதைப் பலரும் உண்ணத் தருவதுதான் இலக்கியம்; கிணற்றிலே தண்ணீரைக் கொண்டுபோய் ஊற்றுவதல்ல.

வறுமை மிகவும் கொடுமையானதுதான். ஆனால் வறுமைக்கு மருந்து - பணம் என்று பலர் கருதிக்கொண்டி ருக்கிறார்கள். இந்தக் கருத்துச் சரியானதல்ல. உழைப்பும் உழைப்புக்கு அடிப்படையான முயற்சியும்தான் வறுமையைப் போக்கும் அருமருந்து. இலக்கியக் கர்த்தாக்கள்

இத்தகைய எண்ணத்தை மக்கள் மனத்திலே உண்டாக்கப் பாடுபடவேண்டும்.

பழைய தடத்திலேயே இலக்கியக் கர்த்தாக்கள் வழி நடக்கக்கூடாது. பொய்யைப் பொய் என்று சொன்னாலும் பலர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இருந்தாலும் இலக்கிய கர்த்தாக்கள் அதைப் பொய்யென்று துணிந்து சொல்லத்தான் வேண்டும்.

நாய் நன்றியுள்ளது என்கிறார்களே, அது எப்படி உண்மையாக இருக்க முடியும்? நாய் நன்றியுள்ள பிராணியாக இருந்தால் அது தன் இனத்தினிடம் அல்லவா நன்றியாக இருக்கவேண்டும். அப்படி இருக்கிறதா? ஒரு முதலாளி அவன் தன்னிடம் வேலை பார்த்த மனிதனைப் பார்த்து, அவனைவிடத் தனது நாய் நன்றியுள்ளது என்றான். இதை வைத்துக்கொண்டு நாமும் நாய் நன்றியுடையது, என்று பாடஞ் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இது நியாயமா?

நாம் சொல்லவேண்டிய கருத்துக்களை இலக்கிய ரீதி யாகச்சொன்னால் எதிர்க்கின்றவர்கள் இருக்க மாட்டார்கள். வள்ளுவர் கண்ட சமுதாயத்தையும் கம்பர் கண்ட சமுதாயத்தையும் நாம் மக்களுக்கு எடுத்து விளக்கிக் காட்டவேண்டும்.

"நாம் அன்று தமிழர், இன்று இந்தியர்; அடுத்த தலை முறையில் உலகத்தவர்'' என்றுதான் வரும். மனித வாழ்க்கையை ஒழுங்குபடுத்த - பரிபூரணமாகச் செய்ய இலக்கியம் பயன்படுமாறு செய்யவேண்டும். உணவுப் பஞ்சம் உடைப் பஞ்சத்தைத் தீர்க்கவேண்டும் என்றாலும் மனிதன் வாழத் தகுதியுடையவனாக ஆக இலக்கியம் அவசியமாகும்.

இன்று தேசீய ஒருமைப்பாட்டுக்குக் குழு அமைத்திருக் கிறார்கள். இந்திய ஒருமைப்பாட்டுக்குத் திருக்குறளை இந்திய அரசாங்கம் தேசீய நூலாக ஏற்றுக் கொள்ளவேண்டும். ஒரு மொழியால் தேசீய ஒருமைப்பாட்டை ஏற்படுத்த முடியாது.

இந்த ஒரு நூலால் முடியும் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒருமை மூலமாகத்தான் ஒற்றுமை வரும் என்று நினைத்தால், அது தவறு. மனிதனை நேசிக்கத்தான் வாழ்க்கை இருக்கிறது என்பதை உணரச் செய்துவிட்டால் தேசீய ஒருமைப்பாடு பற்றி கற்றுக்கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படுமா? தேசீய ஒருமைப்பாடுதான் நம் உயிர் நிலை. அதைக் காப்பாற்ற வேண்டியது நமது கடமை. இதை நிறைவேற்ற யார் யாருக்கு எந்தெந்த வைத்தியம் செய்ய வேண்டுமோ அந்தந்த வைத்தியம் செய்ய வேண்டும். எல்லோருக்கும் ஒரே மாதிரிப் பத்தியம் என்று எதிர்த்துப் பேசுகிறவர்கள் நாவை அடக்கி விடுவதால் இலட்சியம் நிறைவேறாது; இங்கு இருப்பவர்களுக்குள் அன்பை ஏற்படுத்த வேண்டும்.

ஒருமைப்பாட்டுக்கு இலக்கிய உணர்ச்சியும், இலக்கியச் சிந்தனையும் மிகவும் தேவை.

பாரதியையும், வள்ளுவரையும் இரண்டு கண்களாக இணைத்து நாட்டு மக்களுக்குச் சொல்லவேண்டும்.

சமுதாயத்தின் ஊற்றுக் கண், மொழி, ஒருவருக் கொருவர் அன்பை உண்டு பண்ணவே மொழி இருக்கிறது; மோதிக்கொள்வதற்காக அல்ல. திருக்குறளைத் தேசிய இலக்கியமாக இந்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டு, அனைவரும் அதன்படி நடக்கச் செய்தால் நிச்சயம் தேசீய ஒருமைப்பாடு ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை.

## 6. தமிழிலக்கியம் காட்டும் நெறி

தமிழ் தன்னேரிலாத தனிமொழி. தொன்மை நலஞ் செறிந்த செம்மொழி. புதுமை நலம் பல பூத்துப் பொலியும் பொதுமொழி. பழமையும் புதுமையும் கலந்து களிநடம் பயிலும் ஒரேமொழி. கடவுட் சார்பு பெற்று, காலத்தொடு படாத கன்னித் தமிழாகக் காட்சியளிக்கும் ஒரு தனிமொழி.

இன்பத் தமிழில் இலக்கியங்கள் நிறைய உண்டு. தமிழ் வளர்த்த சங்கங்களுக்கு முன்னும் பின்னும் தமிழ்ப் பெருமக்களின் உணர்வுத் திறனிலிருந்து உருவெடுத்த இலக்கியங்கள் பல. தமிழகத்தில் தோன்றிய இலக்கியங்கள் பல கிடைக்கவில்லை. அவ்வப்பொழுது எழுந்த கடல் கோள்களால் பல இலக்கியங்கள் கொள்ளப்பட்டன. தமிழர் பெட்புறப் பேணாத காரணத்தால் கறையான்கள், ஒரு சிலவற்றைச் சுவைகண்டழித்தன. எனினும், நல்லூழின் காரணத்தால் ஒருசில இலக்கியங்கள் எஞ்சியுள்ளன. தமிழ் மொழியில் பல நல்ல இலக்கியங்கள் இருந்தன-இருந்து கொண்டிருக்கின்றன: வளர்ந்து கொண்டுமிருக்கின்றன.

## எது இலக்கியம்?

அன்றாட வாழ்க்கை அல்லல் நிறைந்த வாழ்க்கை-துன்பச் சுழல் கவ்விடும் இடும்பையே நிறைந்த வாழ்க்கை. இல்வாழ்க்கையில் பல்வேறு சமயங்களில் தளர்வு தலை காட்டும். தளர்வாலும், துன்பத்தின் சூழலாலும், இன்பத்தின் நிலைக்களனாய வாழ்க்கை, வெறுப்பு நிறைந்ததாக மாறிவிடும். வெறுப்புணர்ச்சியின் காரணமாக நேர்மை என்ற நேர்கோட்டிலே, செம்மை நலஞ்சிறந்த செந்நெறியிலே, செல்லவேண்டிய மக்கள் வழிதவறிச் செல்ல நேரிடும். அப்பொழுது, நல்ல நினைவையும்-அறிவையும் உணர்வையும் ஊட்டித் தளர்ச்சியை நீக்கி நேர்மை பொருந்திய நெறியிலே அழைத்துச் செல்லும் திறனுடையனவே நல்ல இலக்கியங்கள். நல்லனவே எண்ணும், புலனழுக்கற்ற அந்தணாளர்களின் உணர்ச்சிகளே நல்ல இலக்கியங்கள். நல்லெண்ணங்களின் தொகுப்பே இலக்கியம் என்று கூறுவர் எமர்சன். மக்களுக்கு நல்லொழுக்கத்தைக் கற்றுக்கொடுத்து வாழ்வாங்கு வாழச் சொல்லிக் கொடுப்பதே நல்ல இலக்கியத்திற்குரிய சான்று. இலட்சியம் நிறைந்த வாழ்க்கை நெறியில் அழைத்துச் செல்லும் ஒப்பற்ற தொண்டைத் திறம்படச் செய்வதே

பேரிலக்கியமெனக் கருதினர் தமிழ் மக்கள். அதனால்தான் தமிழர்கள், "இலக்கியம்" என்ற சொல்லை "இலக்கு" என்ற சொல்லிலிருந்து தொடங்கி வளர்த்துள்ளார்கள்.

## தமிழிலக்கியம் காட்டும் நெறி

மக்கள் அனைவரும் ஒரே குலம் என்று பரந்து பட்ட எண்ணம் தமிழினத்திற்கே யுரிய தனித்த இயல்பு. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற உயர்ந்த நாகரிகம் தமிழர் நாகரிகம். இத்தகு புனித நாகரிக வாழ்க்கையினின்றும் தமிழர் நழுவினர். அதிலும் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று கூறி, "மகவெனப் பல்லுயிரையும் ஒக்கவே பார்க்கும்" பண்பினை நல்கும் சமயத்தின் பேரால் காலப்போக்கில் குறுகிய பல சாதிப் பிரிவுணர்ச்சிகளையும் வகுப்பு வாத வுணர்ச்சிகளையும் கற்பித்துக் கொண்டனர். சமய நெறிக்குச் சாதிப்புன்மை உடன்பட்டதல்ல. மக்களினம் அனைத்தும் ஓரினம். அந்த இனத்தில் தமிழர் ஒரு குலம் என்ற பேருண்மையை வலியுறுத்துகின்றன தமிழ் இலக்கியங்கள்.

"பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே"

என்று கூறி, உயர்வு தாழ்வுப் புன்மைகளைப் புறக்கணிக்கிறது தமிழிலக்கியம். தமிழிலக்கியம் காட்டுகின்ற மற்றொரு பண்புநெறி இன்னாதன செய்தாருக்கும் இனியனவே செய்த லாம். "கேளிர் போலப் பயின்றோர் நஞ்சு கொடுப்பினும், உண்பர் நனி நாகரிகர்" என்று பேசுகிறது தமிழ் இலக்கியம். இப்பண்பாட்டினைத்தான் நமது திருவள்ளுவர்,

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்று கூறி விளக்குகின்றார். உலகம் ஒன்றையே சார்ந்திருக் கிறது; அந்தச் சார்பு பற்றியே நிலைபெற்றும் இருக்கிறது. அந்த

ஒன்றுதான் பண்பாடு. பண்பாடற்ற நிலையில் மக்கள் வாழும் உலகு இருப்பதைவிட அழிவதே நல்லது என்பது திருவள்ளுவர் கருத்து.

> "பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
> மண்புக்கு மாய்வது மன்"

என்பது திருக்குறள். இங்ஙனம் தமிழிலக்கியங்கள், பரந்து பட்ட-விரிந்த நோக்கத்தையும், ஒப்புரவுப் பண்பையும் வளர்த்து மக்களினத்தை அமைதியும் இன்பமும் நிறைந்த-பண்பாட்டிற் சிறந்த பெருவாழ்வு வாழத் துணை செய்து நிற்கின்றன.

## இலக்கியமும், கடவுள் நெறியும்

தமிழ்ப் பெருமக்களது அறிவு, உணர்ச்சி, தெளிவு முதலியன குறைவறப் பொருந்திய வாழ்க்கையின் அனுபவத் தினின்று எழுந்தது கடவுள் கொள்கை. தமிழ்க் குடியினர், மிகப் பழங்காலந்தொட்டே, நெஞ்சந் தோய்ந்த சமய வாழ்க்கை வாழ்ந்து, கடவுள் வழிபாட்டில் ஈடுபட்டிருக் கின்றனர். தாம் கண்ட கலைகள் அனைத்தையும் (இசை, கூத்து, ஓவியம், சிற்பம், இலக்கியம்) கடவுள் நெறியின் சார்பில் நின்று, வளர்த்து, வளம் படுத்தி, இறையருட் பணிக்கே பயன் படுத்தினர். தமிழிலக்கியங்கள் அனைத்திலும், கடவுள் நெறியும், வழிபாட்டுணர்ச்சியும் உயிர் நிலையாக அமைந்து கிடக்கின்றன. பழங்காலத் தமிழ்ப் பெருமக்கள் நகரமனைய பெருங்கோயில்களை மூவா முதற் பொருளுக்கு எடுத்திருக்கின்றனர். ஏறக்குறைய இற்றைக்குப் பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே, கடல் கொண்ட தென்குமரி நாட்டிலே நகர மனைய திருக்கோயில் இருந்ததாகத் தெரிகிறது. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பானைக் 'காரி கிழார்' என்னும் தமிழ்ப் புலவர் பாடுகின்றார். தமது பாடலின் மூலம்.

அம்மன்னனுக்கு நல்லுணர்வு கொளுத்துகின்றார். "யாருக்கும் தாழாத கொற்றக்குடை தாழ்க!" என்று கூறுகின்றார். ஆம். "மன்னவர்க்கெல்லாம் மன்னவனாக, பிறவா யாக்கைப் பெரியோனாக விளங்கும் முக்கட் செல்வரின் திருக்கோயிலை வலம் வருவதற்காகக் கொற்றக்குடை தாழ்க" என்று செவியறிவுறுத்துகின்றார்.

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே"

என்பன புறநானூற்று அடிகள். திருக்கோயில்கள் நகர மென்று நவிலப் பெறுகின்ற அளவுக்குப் பரந்து-விரிந்து-அகன்றதாக அமைந்திருக்கின்றன. கற்றவர்கள் போற்றும் கலித்தொகையிலும் "கடவுட் கடி நகர்" என்று திருக்கோயில்கள் பேசப் பெற்றுள்ளன. கடவுள் நெறியும், வழிபாட்டுணர்ச்சியும் நல்ல தெளிவினின்று உருவாகும் உயர்ந்த நெறிகள். அதனால்தான் முத்தமிழ்க் காப்பியத்தை ஆக்கித் தந்த இளங்கோவடிகள் "தெய்வந் தெளிமின்" என்று அறவுரை கூறி நம்மையெல்லாம் அருள் நெறியிலே ஆற்றுப்படுத்துகின்றார்.

## இன்றைய நிலை

இன்று தமிழன்பும், தமிழார்வமும் மக்களிடையே அரும்பி மலர்ந்திருக்கின்றது. ஆனால் பழந்தமிழ்க் கொள்கைக்கு முரண்பட்ட நிலையில் ஒரு சாரார் தமிழை வளர்க்க-தமிழர் நிலையை உயர்த்தப் பாடுபடுகின்றனர். தமிழ் வேறு, சமய நெறி வேறு என்று கருதுகின்றனர். வாழ்க்கை வேறு, சமய நெறி வேறு என எண்ணுகின்றனர். தமிழருக்கே உரிய சமய நெறியினையும் பிறருடையது எனத் தவறாகக் கருதுகின்றனர். தமிழினத்தின் குருதியிலே கலந்து படிந்திருக்கின்ற சமயப் பண்பினை வேண்டாதன என்று கருதுகின்றனர். புலவர் பெருமக்களது இலக்கியங்களை யெல்லாம்-தமதறிவின் திறத்திலேயே நின்று-ஒவ்வாமை

கண்டு இழித்துப் பேசுகின்றனர். திருவள்ளுவரது திருக்குறளிலுங்கூட முழுவதும் கொள்ளத் தக்கதில்லை, அதிலும் வேண்டாதன உண்டு என்று சொல்லுகின்ற அளவுக்கு ஒரு சில தமிழர்கள் வந்து விட்டதை என்னென்று கூறுவது? இதுவா தமிழன் நிலை? இந்த நிலை வளருமானால் தமிழ் வளருமா? தமிழினம் தலைநிமிர்ந்துதான் வாழ முடியுமா? "நல்ல புத்தகத்தை அழித்தல் கொடுமையிலுங் கொடுமை" என்று மகாகவி மில்டன் கூறுகின்றான். எனவே, பண்டைத் தமிழிலக்கியங்களைப் பாங்குறப் படித்து-வாழ்க்கையில் அமைத்துக் கொள்ளவேண்டியது தமிழரின் தலையாய கடமை.

## 7. பாரியும் பரமனும்

தமிழகம் வள்ளல் தன்மை நிறைந்த நாடு. சாதலின் இன்னாதது கொடாது வாழ்வது என்பது தமிழினம் கண்ட முடிபு. தமிழகத்தில் பல வள்ளல்கள் வாழ்ந்தனர். பாரி ஒரு தலைசிறந்த வள்ளல். கொடை மடம் பட்ட வள்ளல். நற்றமிழ் நவில்வோரால் பாராட்டப் பெற்ற வள்ளல். அவன் இன்னார், இனியர் என்றெல்லாம் பாராது பொதுமையான நோக்குடனேயே பொருள் வழங்குகின்றவன். உயிர் அனைத்தும் அவனுக்கு ஒன்று. செடி கொடிக்கும் உயிர் உண்டு என்று இன்று விஞ்ஞானி சொல்லுகின்றான். அன்றே பாரி இதனை உணர்ந்திருந்தான். முல்லைக்குத் தேர் நிறுத்திய வள்ளலல்லவா? "பாத்திரம் அறிந்து பிச்சை இடு" என்பது பழமொழி. ஆனால் இந்தப் பழமொழி பாரிக்கு இல்லை. பாரி எல்லோருக்கும்-மடவருக்கும் மெல்லியருக்குங்கூட வாரி வழங்குவான். அப்படிக் கொடுத்தலையே, தனது கடப்பாடாகவும் உடையவன். இந்த அரிய பண்பாட்டைப் பாராட்ட நினைத்த கபிலருக்குப் பாரியினுடைய

வள்ளன்மைக்கு உவமை சொல்ல உலகில் யாரும் எந்தச் செயலும் ஏற்றதாய்த் தோன்றவில்லை. அவர் பரமனை எண்ணுகின்றார். இவ்வுலகில் எத்தனையோ நறுமண மலர்கள் உண்டு. அப்படியிருக்க சூடத்தகாத மலரும், நல்லன வென்றும் தீயனவென்றும் இரண்டிலும் வைத்தெண்ணப் படாததுமான எருக்கம் பூவை இறைவன் சூடினான். எருக்கம் பூவாயினும் ஒருவன் நெஞ்சந் தோய்ந்த அன்புணர்ச்சியுடன் கொடுப்பானாயின் கடவுள் அதை ஏற்றுக்கொள்கிறார். இறைவனுக்குகந்த எண்வகை மலர்களில் எருக்கம் பூவும் ஒன்று **"விரைசார்ந் தழியாத புல்லெருக்கஞ் சூடிக்கொண்டாய்"** என்று வாட்போக்கிக் கலம்பகம் பேசும். பரமனுடைய இந்தப் பண்பைப் பாரியினுடைய வள்ளன்மைக்கு உவமையாகக் காட்டுகின்றார் பொய்யா நாவிற் கபிலர். அறிவில்லாதவர்களும், புல்லிய குணமுடையாரும் பாரியை நம்பி, மதித்து அவ்னிடம் பொருள் பெறவேண்டுமென்ற ஆசையோடு சென்றால் பொருளைப் பெற்று இன்பவாழ்வு நடத்தலாம். அதுபோலவே, மக்கள் இறைவனிடத்து நம்பிக்கைகொண்டு, பொய்ம்மையாயவெல்லாம் போக்கிப் பேரருள் செய்வான் என்று உறுதியான எண்ணத்தோடு, நெஞ்சந் தோய்ந்த அன்போடு சென்றால் அவனருள் பெற்று வாழலாம் என்ற உண்மையை உணர்த்துகின்றார். இறைவழிபாடு உள்ளத்தைப் பொறுத்ததே யொழியப் பொருள்களைப் பற்றியதல்ல என்ற பேருண்மையை மறத்தல் கூடாது.

> *"நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்*
> *புல்லிலை யெருக்க மாயினு முடையவ்வ*
> *கடவுள் பேணே மென்னா வாங்கு*
> *மடவர் மெல்லியர் செல்லினும்*
> *கடவன் பாரி கைவண் மையே"*

## 8. பிறர் நலம் பேணுதல்!

சங்க இலக்கியங்கள் மக்கள் வாழ்க்கையையே அடிப்படையாகக்கொண்டு எழுந்தன. அவைகளுள் நல்ல பேரறங்கள் பேசப் பெறுகின்றன. அறிஞர்கள் மனிதனைச் 'சமுதாயப் பிராணி' என்று சொல்லுகின்றார்கள். அதாவது அவன் பிறருக்காக வாழ்கிறான்; பிறரோடு கலந்து வாழக் கடமைப்பட்டவன் என்று சொல்லுகிறார்கள். இங்ஙனம் பிறருக்கென்றே வாழ்ந்த பெருமை தமிழ்ச் சமுதாயத்திற்கு உண்டு. தமிழன் என்றுமே தன்னைப் பற்றிக் கருதியதில்லை. **"பிறருக்கென முயல்வார் உண்மையானே உலகம் உண்டு"** என்று தமிழ் மன்னன் பேசுகின்றான். **"தனக்கென வாழாப் பிறர்க் குரியாளன்"** என்று அகநானூறு கூறுகின்றது. பிறருக்கு நன்மை செய்வதிலே தீமை வரினும் ஏற்றுக்கொண்டு நன்மையே செய்கின்ற பண்பாட்டைத்தானே திருவள்ளுவர், "மருந்து மரம்" என்ற உவமையால் விளக்குகின்றார்.

இந்த அருமையான, பிறர் நலம் பேணுகின்ற பண்பாட்டிற் சிறந்தவன் **தேர்வண் மலையன்** என்ற வீரத் திருமகன். அவனை **வடம வண்ணக்கண் பெருஞ் சாத்தனார்** என்ற புலவர் பாராட்ட நினைத்தார்; பாராட்டினார். புலவரது பாராட்டுரையிலே உவமை ஒன்று அழகு பெறு கிறது. தேர்வண் மலையன் தனது முயற்சியால் - புயவலியால் திரட்டிய பொருளை எல்லாம் யாவர்க்கும் வழங்குகின்றான். தனது பொருளைத் தான் நுகரவில்லை–அனுபவிக்கவில்லை–அனுபவிக்க அவன் ஆசைப்பட்டதும் இல்லை. அவனது சிந்தனை பிறரது வாழ்க்கையில் அவன் விரும்பியது அவனைச் சாதாரண மகிழ்ச்சியால் ஆழ்த்துகின்ற நறவு. இதனை எண்ணுகிறார் புலவர்.

தேர்வண் மலையனது பண்பாட்டை விளக்கிக் கூற உவமையைத் தேடுகின்றார். அவரது கூர்த்த அறிவு-நீண்ட நாள் அனுபவ உணர்ச்சி எருதினை நினைவூட்டியது.

ஆம்! விளைநிலம் உழுது, எருவைக்கொட்டிக் கொடுத்து, நல்ல உணவுப் பொருளை-விளைவித்துக் கொடுப்பது எருதுதானே? எருதின் உழைப்பால் உலகம் உண்ணுகின்ற உணவைப் பெறுகிறது. இங்ஙனம் உலகுக்கு உணவு கொடுக்கின்ற எருது, மக்களால் கழிக்கப்பெற்ற-பயனற்ற வைக்கோலைத் தின்று வாழ்கின்றது. அந்த வைக்கோலைத் தின்பதுங்கூட மறுபடியும் உணவு விளைவுத் தொழிலில் ஈடுபட்டு உலகத்தவருக்கு உதவி செய்ய வேண்டுமே என்ற எண்ணத்தினால்தான். இதனைப் புலவர் எண்ணுகின்றார்-பாடுகின்றார்.

> "உழுத நோன்பக டழிதின் றாங்கு
> நல்லமிழ் தாகநீ நயந்துண்ணு நறவே"

என்று உளங் குளிரப் பாராட்டுகின்றார்.

இந்தப் பாட்டினைப் படிக்கும்போது தமிழ்நாட்டுத் திருக்கோயில்களின் நினைவு நமக்கு வரும். அங்கு நந்திக்குத் (காளை வடிவம்) தனிச்சிறப்பு வழங்கப்பட்டிருப்பதன் உண்மை புலனாகும்.

சமய வாழ்க்கை பிறர் நலம் பேணுகின்ற வாழ்க்கை. வெறுப்புணர்ச்சி இல்லாத-பூசலற்ற நிலையிலே வாழச் சொல்லியது சமயம். ஆண்டவனை வணங்கப் போகும் ஆலயம் சொல்லித் தரும் பாடம் **'பிறருக்காக வாழ்க'** என்பதே ஆம். திருக்கோயிலிலே முதலிலே எருதுதான் காட்சி யளிக்கிறது. அந்தக் காட்சி சொல்லும் அறவுரை தலையாய அறவுரை. "ஏ, மனிதனே! நீ மனிதன் என்று மார் தட்டாதே. பகுத்தறிவாளன் என்று பறை சாற்றாதே; பெருமிதங் கொள்ளாதே! இந்த எருதினுடைய-பிறர் நலங் கருதுகின்ற, உழைக்கின்ற, உள்ளத்தை முதலில் பெறுவாயாக! அந்த உள்ளம் உனக்கு வந்து விட்டதானால் சமய வாழ்க்கையில்-இறைவனோடு தொடர்பு கொள்ளும் இன்ப வாழ்க்கையில் நுழைகின்றாய்!" என்று திருக்கோயில் சாற்றுகின்றது.

கு.XV.31.

அதனாலன்றோ சமயப் பெருமக்கள், எருதையே ஊர்தி யாகவும், கொடியாகவும் அமைத்தனர்.

இங்ஙனம் பிறர் நலமே சொன்ன சமயத்திலும் எங்ஙனமோ சாதிச் சண்டைகள் நுழைந்துவிட்டன! உயர்வு தாழ்வு மனப்பான்மைகள் உட்புகுந்து விட்டன!! தன்னலப் பேராசையும்கூடக் குடியேறிவிட்டது!! இந்த உணர்ச்சிகள் சமய வாழ்க்கைக்குப் புறம்பானவை. மனித நாகரிகத்திற்கு நஞ்சு. இவையனைத்தும் அழிந்தொழியப் பெறுதல் வேண்டும். பெருஞ்சாத்தனார் காட்டுகின்ற பேரறநெறியிலே, தமிழ்ப் பெருமக்கள் கண்ட சமய வாழ்க்கை வற்புறுத்துகின்ற, **"பிறர் நலம் பேணுகின்ற பேரறம்"** மலர்க! வாழ்க!! வளர்க!!

## 9. ஒழுக்க நூல்

யாரும் எதையும் எதற்காகவும் அழிக்க வேண்டிய தில்லை. கொஞ்சம் மாற்றிக்கொள்ள முடியுமா என்று பார்க்கலாம்; உலகில் தோன்றிய எதுவும் அழிந்துபடுவ தில்லை; ஒன்று பிறிதொன்றாக வடிவெடுக்கும் என்பதுதான் உண்மை; குப்பை உரமாகிறது; விதை மரமாகிறது. இதனால் குப்பையும், விதையும் அழிந்துபட்டதாகவா கருதுவது? எனவே, தமிழுக்கும் தமிழருக்கும் இப்போது ஏற்பட்டிருக்கிற அச்சம் தேவையில்லை.

மொழி வெறுமனே ஒருவர் கருத்தை மற்றவர்க்குத் தெரிவிக்க உதவும் ஒரு கருவிதான் என்று கூறுகின்ற கூற்றை நாம் ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை.

காக்கை கரையவில்லையா? கன்று கதறவில்லையா? குயில் கூவவில்லையா? ஆந்தை அலறவில்லையா? இவற்றிடையே மொழி இல்லை என்பது உண்மைதான். ஆனால் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாமல் தவிக்கிறோமா? இல்லையே. எனவே மொழியோடு, மொழியை ஒட்டிய நாகரிகம் இல்லையானால் மொழியே

கூட வேண்டியதில்லை என்று கூறுவதில் ஏதும் தவறில்லை. மொழி ஊற்றுக்கண் போன்றது; மனித சமுதாயத்தின்-சமுதாய நாகரிகத்தின் ஊற்றுக்கண், அந்த ஊற்றுக்கண் அடைபட்டு விட்டால் மனித சமுதாயம் காட்டுமிராண்டியாகிவிடும்; செயலற்றதாகிவிடும் - வேட்கை தணிக்கும் நீரில்லாத ஊருணியாகிவிடும்.

வாழும் சமுதாயத்திற்குத் தாய்மொழி மிகமிக இன்றியமையாதது; தாயில்லாத பிள்ளை சவலை ஆவது போலவே, தாய்மொழி இல்லாத சமுதாயம் சவலையாகிப் போகும்.

பொதுவாக எத்தனை மொழிகளை வேண்டுமானாலும் கற்றுக்கொள்ளலாம். அதில் தவறில்லை குழந்தைக்குத் தாய்ப்பால் வலு ஊட்டும்; சிறந்த உணவும்கூட. எனினும் புட்டிப்பால் அத்துணைச் சிறப்புடையதா? இல்லையே அதுபோலவே, தாய்மொழியைத் தாய்ப்பால் என்றால், பிறமொழிகளைப் புட்டிப்பால் என்று குறிப்பிடலாம்.

உலக நூல்கள் - அறிவியல் நூல்கள் யாவற்றையும் கற்கத்தான் வேண்டும்; கற்கவில்லையாயினும், செவிவழிச் செய்திகளாகக் கேட்டறியலாம். இதைத்தான் 'கற்றிலனாயினும் கேட்க' என்றார் வள்ளுவப் பெருந்தகை. இவ்வழிப் பார்க்கும்போது, கல்லாதவர்களும் கேட்டுப் புரிந்துகொள்ள - அதைப்பற்றி எண்ண சிந்திக்கத் தாய்மொழியைப்போல் வேறு எந்த மொழி பயன்பட முடியும்?

இன்றையச் சமுதாயச் சூழலில் எத்துணை எத்துணையோ வேறுபாடுகள் - வேற்றுமைகள். இருப்பினும், தமிழை - தமிழின் வாழ்வை, தமிழின் நலத்தை மையப்புள்ளியாக வைத்துக்கொண்டு நாம் வேறுபாடுகளை மறந்து ஒருமைப்பாட்டுணர்வால் ஒன்றுபட்டு வாழமுற்பட வேண்டும். வேறுபாடுகளுக்கு இடங்கொடுத்து, அவற்றால்

சிலரிடமிருந்தோ, சமுதாயத்திலிருந்தோ விலகி வாழுகிறவன் விலங்காகிப் போகிறான். வேறுபாட்டிலும்கூட விழுமிய ஒருமைப்பாட்டை உண்டாக்கி வாழத் தெரிந்தவன்தான் உயர்ந்த மனிதனாகிறான்.

உலகத்தை – மனித குலத்தை ஒருமைப்படுத்தத்தான் மொழியே யொழிய வேறுபாட்டுணர்வுகளை உண்டாக்கி, அவற்றால் சண்டை போட்டுப் பிரிந்து வாழ்வதற்கல்ல. உலக மனித குலத்தை ஒருமைப்படுத்த எழுந்த மொழியை வேறுபாட்டுணர்வுகளுக்கு வித்திட – வேறுபாட்டுணர்வுகளை வளர்க்கப் பயன்படுத்துவது நல்லதல்ல. அது மொழி வழி நாகரிகமல்ல. 'சமஸ்கிருதம்' என்பதற்குச் செய்யப் பட்டது என்பதுதான் பொருள். தமிழ் அப்படியன்று. அது இயற்கைமொழி. தானே வளர்ந்த மொழி – அது வாழ்க்கை மொழி – தமிழுக்கு இனிமையுமிருக்கிறது – எளிமையுமிருக் கிறது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக செஞ்சொற் புலவர்கள் பல்லாயிரவர் நாவிலே தவழ்ந்து தவழ்ந்து அந்த இனிமையையும் எளிமையையும் அது பெற்றுத் திகழ்கின்றது. தமிழுக்கு இலட்சியமிருக்கிறது.

திருக்குறள் மொழியால் தமிழ்நூல். அது கருத்து வழி உலகப் பெருநூலாக விளங்குகிறது. எப்படி வாழவேண்டும் என்பதற்கு இலக்கணம் செய்தார் வள்ளுவப் பெருந்தகை.

> "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்
> தெய்வத்துள் வைக்கப் படும்"

என்றார். மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே இப்படி வாழ வேண்டும் என்று கூறிய மொழி எவ்வளவு மூத்தமொழி? வள்ளுவப் பெருந்தகை, ஒழுக்கத்திற்கே ஒரு புது விளக்கம் தந்தவர். ஒழுக்கம் என்பது காலத்துக்குக் காலம், நாட்டுக்கு நாடு, இடத்துக்கு இடம் மாறுபட்டுத் தெரிகிறது. ஆனால் நிலையான பொதுவான ஓர் உயர்ந்த ஒழுக்கத்தை வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்'-ஒழுக்கம் என்றார். ஆம். பலவற்றையும் ஒருவன் கற்றிருந்தாலும் கூடப் பத்துப் பேரோடு கூடி வாழத் தெரியாதவன் அறிவில்லாதவனே என்கிறார். பத்து மனிதர்களோடு கூடிவாழத் தெரிந்தாலே அது பெரிய ஒழுக்கம் என்கிறார்.

இந்த நாட்டுச் சராசரி மனிதனுக்கும் சென்று எட்டுகிற அளவில் எளிமையாகவும் மிகச் சுருக்கமாகவும் ஒன்றே முக்காலடியில் வள்ளுவர் திருக்குறளைச் செய்தார். திருக்குறளின் மையம் மனிதகுலம் ஒரே குலம் என்பதுதான். திருவள்ளுவருக்குப்பின் இன்றையச் சூழ்நிலையில் - ஒருவரையொருவர் விழுங்கி ஏப்பமிட்டு விடுவார்களோ என்ற அச்சத்தினால் ஒருகுலம்-ஒருலகம் என்று பேசுவதில் என்ன வியப்பு இருக்கிறது? மூட்டைப்பூச்சி மொய்க்கின்ற கட்டிலில் படுத்துக் கொண்டு மூட்டைப் பூச்சிகளின் தொல்லையால் விழித்திருப்பது ஏகாதசி விரதமாகுமா? இன்று ஒருமைப்பாடு ஒரு குலம் பேசுவது அப்படிப்பட்டது தான். வள்ளுவரோ அச்சத்தின் அடிப்படையில், மனிதகுல ஒருமைப்பாட்டைப் பேசவில்லை-அவர் அன்பின் அடிப்படையில், நட்பின் அடிப்படையில் ஒருமைப்பாடு பேசினார். திருவள்ளுவருக்கு முன்பிருந்த நூல்கள் மதத்தைக் கடவுளை - சாதியைக் குறிப்பிடவில்லை. திருவள்ளுவர், தமிழன் என்று கூட இல்லை, உலகை நோக்கியே பேசினார். உலக மனிதனுக்கே பேசினார்.

அன்பின் வழியது உயிர்நிலை-பிறப்பு, ஒக்கும் எல்லா உயிர்க்கும் என்பன போன்ற விழுமிய கருத்துக்களால் வள்ளுவர் அனைத்துலக மனிதனுக்கே பேசியவராகிறார்.

அன்பு என்றால் என்ன என்ற கேள்வியை நாமே கேட்டுப் பார்ப்போம். அன்புக்கு ஒரு வடிவம் கொடுக்க முடியுமா? வள்ளுவர் அன்புக்கு வடிவம் கொடுத்தார்.

இன்னொருவர் துன்பங்கண்டு இரங்கி கண்ணீர் விடுவதுதான் அன்பு என்கிறார்.

"அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்கண்
புன்கணீர் பூசல் தரும்"

என்றார். எவ்வளவு அருமையான விளக்கம். தென்னையும் வாழையும் மற்றவர்களுக்கென்றே வாழ்வதுபோல மனிதனும் மற்றவர்களுக்கென்றே வாழ்வானானால் பலர் அவனுக்கு உறவாக வருவார்கள்.

உலகின் தொண்டின் நெறி மறைந்திருந்த காலத்தில்-தொண்டின் நெறியை மக்கள் மறந்திருந்த காலத்தில் தொண்டின் நெறியை நினைவுபடுத்த சேக்கிழார் பெருமான் அவதரித்தார். வடவர்கள் நாகரிகம் தமிழகத்தில் கால்கோள் செய்துவிடுமோ என்று பலர் அச்சமுற்று வாழ்ந்த காலத்தில் வடவர் நாகரிகம் தமிழகத்தில் பரவாமல் தடுத்துக் காக்கக் கம்பர் தோன்றினார். அதுபோல, இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பு ஒழுக்கத்திற்கு இழுக்கு நேர்ந்த காலத்தில் ஒழுக்கத்தை நிலைநிறுத்திப் புதிய தெம்பை ஊட்ட வள்ளுவர் தோன்றினார்.

நேற்றிருந்த ஒரே பெரும் ஒழுக்க நூல் திருக்குறள். இன்றிருக்கும் ஒரே பெரிய ஒழுக்கநூல் அதுதான். நாளை, ஏன் இனி வருங்காலத்தில் இருக்கப்போகும் ஒரே பெரிய ஒழுக்க நூலும் அதுதான். எனவே, வள்ளுவத்தை வாழ்க்கை நூலாக நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும். ஒரு சிந்தனைக் குழு அமைத்து வள்ளுவத்தை-வள்ளுவத்தில் உள்ள மனோ தத்துவக் கருத்துக்களை ஆராய வேண்டும். வள்ளுவர் காலத்திற்குமுன் அடித்தவன் புகழே பேசப் பெற்றது. இன்றோ அணைத்தவன் புகழ்தான் பாராட்டப் பெறுகிறது.

இன்று பழமைக்கும் புதுமைக்கும் இடையே ஒரு பெரும் போராட்டம் நிகழ்ந்து வருகிறது. பழையன யாவும் பழையனவே என்பார் ஒரு சாரார். புதுமை யாவுமே

ஏற்புடையனவல்ல என்பார் ஒரு சாரார். எது பழைமை எது புதுமை என்பதிலே இருவருக்குமே திட்ட வட்டமான கருத்தில்லை. திருக்குறள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியது என்பதால் இன்று அது பழையதாகிவிடுமா? அது புதுமைக்குப் புதுமையாகப் போற்றப் பெறும் தனிச் சிறப்பு வாய்ந்ததாக விளங்குகிறதே. இன்றே முளைத்ததாயினும் ஒன்று தேவையற்றதாகி விடும்போது அதைப் பழைமை என்று கூறி ஒதுக்கி விடுவதிலே தவறில்லை. இக்கருத்தோடு நாம் திருக்குறளை அணுகினால் அது பழையதாகுமா? பழைமை என்று அதனை ஒதுக்க முடியுமா? புதுமை பழமையைச் சீரழிப்பதாக இருக்கக்கூடாது. அது பழமைக்குச் செழிப்பூட்டுவதாக இருக்கவேண்டும்.

## 10. குறள் மணம் கமழவேண்டும்

தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தோன்றி இன்றும் வழக்கில் உள்ளது-போற்றிப் பாராட்டப் பெறுகிறது என்பது திருக்குறளுக்குரிய சிறப்பாகும். இந்நூல் உண்மையிலேயே சிறப்புடையதா? அல்லது காக்கைக்கும் தன் குஞ்சு பொன்குஞ்சு என்ற பழமொழியின்படி நாம் அதைச் சிறப்பிக்கிறோமா என்பதை ஆராயவேண்டும்.

திருக்குறளின் கருத்து கால எல்லைக்கு உட்பட்டதல்ல. காலங்கடந்த தத்துவங்களையுடையது அந்நூல். திருக்குறள் சாதி, இன, மொழி, நாடு வரையறைகளைக் கடந்து உலகம் தழீஇய பொது நூல். அது மனித குலத்தின் நீதிநூல்.

வள்ளுவத்தில் அதிசயங்கள் அற்புதங்கள் கிடையாது. அன்று வள்ளுவர் சொன்னதை நாம் இன்று கையாள முடியவில்லையென்றால், அது நூலின் பிழையன்று; நாம் மனிதத் தன்மையிலிருந்து மனிதப் பண்பிலிருந்து நெடுந்தூரம் விலகிச் சென்றிருப்பதே காரணமாகும். கல்விக்கும் வாழ்க்கைக்கும்

இன்றுள்ள உறவு அமாவாசைக்கும் அப்துல்காதருக்கும் உள்ள உறவைப்போல் இருக்கிறது. நமது வாழ்க்கைப் போக்கில் வள்ளுவத்தின் நிழல் படியவில்லை. மனிதர்களின் வாழ்க்கையை அகத்தாலும் புறத்தாலும் வளப்படுத்துவதே கல்வி. சராசரி மனிதனால் நடைபயிலக்கூடிய அறநெறியே கூறினார் அவர். வாழ்க்கை முறைபற்றிச் சமுதாயத்தின் சாதாரண படியில் உள்ள சராசரி மனிதனுக்குச் சொல்ல விரும்பிய அளவில் சுருக்கமாக-தனித் தனியே எளிய முறையில் கூறினார்.

வாழ்க்கையில் பல்வேறு அனுபவங்களையும் அவர் பேசுகின்றார். அனைத்தும் அனுபவித்த ஒருவர் கூறுவது போலவே பேசுகிறார். திருக்குறளே அனுபவ விளக்கமாகக் காட்சியளிக்கிறார். திருவள்ளுவர் சமுதாயத்தின் பல்வேறிடங்கட்கும் சென்று பல்வேறு தரப்பினரையும் பார்த்து - நாட்டில் பலர் பேசிய - வழக்கில் இருந்த பல்வேறு செய்திகளையும் கருத்துக்களையும்கூட நினைவில் வைத்துக் கொண்டு நூல் செய்திருக்கிறார். மிகச் சிறந்த பொற்கொல்லர் போல, வள்ளுவர் சொற்களுக்கு மெருகேற்றியிருக்கிறார். அவர் ஒரு கைவந்த சொல்தச்சராகவே விளங்குகிறார்.

இன்று, அள்ளித் தெளித்ததெல்லாம் கோலம் என்பது போல, பலர் வாழ்க்கை நடத்துகின்றனர். வரலாற்றைப் படிப்பதிலே நாம் அவ்வளவு அக்கறை காட்ட வேண்டிய தில்லை. நாம் ஒரு புதிய வரலாற்றை உருவாக்க முயற்சிக்க வேண்டும். நமக்கு முன் வாழ்ந்தவர்கள் செய்த தவறுகளை நாமும் செய்து வீழ்ச்சியடையக் கூடாது.

தொடக்கத்தில் மனிதன் கண்களால்தான் பேசியிருக் கிறான். உள் உணர்வுகளுக்குத் தக்கபடி கண் ஆடும். மனிதன் கண்களைக் கட்டுப்படுத்தி வாழ முடியாது. இதனால்தான், இறைத்தோற்றத்தில்கூட அப்பரடிகள் முதன் முதலில் குனிந்த புருவத்தைப்பற்றிப் பேசுகிறார்.

வள்ளுவர் காலத்தில் நம் மக்களில் பலர் எண்ண - சிந்திக்க விரும்பாமலேயே வாழ்ந்தார்கள். எனவே வள்ளுவர், எண்ணவேண்டும் - சிந்திக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். எண்ணிச் சிந்தித்துச் செயற்படுவதன் மூலம் உலகத்தை வெற்றி பெறமுடியும்.

புறத்துறையில் புரட்சி செய்தவர்கள் ஏராளம்; ஆனால் அகப்புரட்சி செய்தவர்கள் மிகச் சிலரேயாவர். அந்த அகப் புரட்சியும்கூட ஆற்றொழுக்காக இல்லாமல் இடையிடையே தடைப்பட்டுத் தளர்வுற்று வந்திருக்கிறது. மனிதன் அக வளர்ச்சியில் தேய்ந்து கொண்டே வந்திருக்கிறான்: மனிதன் வாழத்தானே புதிய புதிய சாதனங்கள் எல்லாம் என்பதை அவன் எண்ணிப் பார்க்கக்கூட மறந்துவிட்டான்.

குடிப்பிறப்புச் சிறப்பு மனிதனுக்கு இன்றியமையாதது. திருவள்ளுவர், அப்பரடிகள் ஆகியோரின் குடிப்பிறப்புச் சிறப்பு இன்று நம்மிடம் இருக்கிறதா?

> 'நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
> குலத்தின்கண் ஐயப் படும்'

என்று வீட்டுக்குள்ளே அடங்கிக் கிடப்பவனைப் பார்த்து - குடும்ப வாழ்க்கையின் செழுமை யில்லாதிருப்பவனைப் பார்த்துப் பேசினார்.

'உலகத்தோடு ஒத்து வாழு; ஒதுங்கி வாழாதே' என்று பேசுகிறார் திருவள்ளுவர். நீ சென்று குடியேறிய நாட்டை உன் நாடாக எண்ணிப் போற்று; அதனை உன் நாடாகவே ஆக்கிக்கொள். அந்நாட்டை உன் நாடாக ஆக்கிக்கொள்ள அந்நாட்டு மொழிகளையெல்லாம் கற்றுக்கொள் என்கிறார். உலகத்தை உன்னிடத்தே இழுக்க முயற்சிக்காதே. உலகம் தங்கும் இடத்தில் நீ தங்கிவிடு என்கிறார். வள்ளுவம் அருமை யானதொரு வாழ்க்கை இலக்கியம்.

இன்று உலகச் சந்தையில் அந்நியர் கருத்துக்கள் வந்து மலிந்து கிடக்கின்றன. அவற்றின் தோற்றத்தையோ, கவர்ச்சியையோ கண்டு ஏமாறாமல், மெய்ப்பொருளைக் கண்டு பயன் பெறவேண்டும்.

> 'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு'

என்றும்,

> 'எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பதறிவு'

என்றும் குறிப்பிடுகிறார் திருவள்ளுவர்.

இலட்சம் செங்கல் கொட்டிக் கிடந்தாலும் அது கட்டிடமாவதில்லை; அவற்றை அடுக்கிச் சந்து பதிந்துதான் சுவரை எழுப்பவேண்டும். உடைந்த செங்கல்லையும் முழுச் செங்கல்லையும் இணைத்து இடைவெளி ஏற்பட்ட இடத்தில் முழுச் செங்கல்லையும்கூட உடைத்துப் போட்டுச் சந்து நிரப்புவதுபோல, மனிதனும் தனது சொந்த மதிப்பையும் சுகத்தையும் குறைத்துக்கொண்டாவது சமுதாயச் சுவரை எழுப்ப முற்படவேண்டும். உடைந்த செங்கல்லையும் முழுச் செங்கல்லையும் இணைத்துச் சுவரை எழுப்புபவர் கொத்தனார்; சமுதாயத்தில் உள்ள வலிமையுடையவனையும் வலிமையற்றவனையும் இணைத்து ஒருசேர அழைத்துச் செல்லுபவரே சமுதாயத் தலைவராவார்.

சோஷியல் (Social) என்ற ஆங்கிலப் பதமே விருப்பு வெறுப்புக்களைக் கடந்து உள்ளம் ஒன்றியப் பழகும் பண்பைக் குறிப்பது. இதைத்தான் திருவள்ளுவர் 'ஒப்புரவு' என்று குறிப்பிடுகிறார். மற்றவர்களோடு சேர்ந்து பழகும் போது அப்படிச் சேர்ந்து பழகுவதனால் ஏதேனும் கேடுகள் விளையுமானாலும் அவற்றையும் பொறுமையோடு ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று அவர் வலியுறுத்துகிறார். 'ஒத்தது

அறிவான் உயிர் வாழ்வான்' என்கிறார் வள்ளுவர். ஒத்தது அறிதல் என்பதற்குப் பொருள் மற்றவர்களுக்கும் ஒத்ததறிந்து என்பதேயாகும். அப்படி மற்றவர்க்கும் ஒத்ததறிந்து வாழ்பவனே உயிர் வாழ்பவன்.

பழகிய நண்பரிடத்துக் குற்றம் கண்டவிடத்தும் பொறுத்துக்கொள் என்கிறார் திருவள்ளுவர். மனிதனையும் மாமனிதனையும் இணைத்துச் சமுதாயக் கட்டடத்தை எழுப்ப இந்தப் பொறுமைப் பண்பு இன்றியமையாதது.

சமயம் கடவுள் நம்பிக்கை ஆகியவற்றில் மிகத் தெளிவான கருத்துடையவர் திருவள்ளுவர். வீடுபற்றி அவர் பேசிய அளவிற்கு வேறு யாரும் பேசியதில்லை.

> 'புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
> துச்சில் இருந்த உயிர்க்கு'

என்ற குறட்பாவின் மூலம் திருவள்ளுவர் வீடுபேற்றின் மேன்மையை விளக்கியிருக்கிறார்.

நாகரிகம் என்பதற்கே புதியதொரு விளக்கம் தந்தவர் திருவள்ளுவர். நண்பர் ஒருவர் நஞ்சு கலந்த பாலைக் கொடுத்தாலும் அதை வாங்கிக் குடித்துவிடு – நஞ்சு கலந்தது என்று நினைக்காமல் குடித்துவிடு என்று கூறுகிறார். நஞ்சு கலந்தது என்று நாம் நினைத்தால் நமது முகத்தில் மரணக்குறி படரும்; நஞ்சு கலந்தது என்பதை நாம் அறிந்துகொண்டோம் என்பதை அந்த நஞ்சு வைத்த நண்பர் உணர்ந்தால் அவர் வருந்துவார். அந்த வருத்தத்தைக்கூட அவருக்குக் கொடுக்கக் கூடாது என்கிறார். நஞ்சு என்று நினைக்காமல் குடித்தால் அது நம்மைக் கொன்றுவிடாது; நஞ்சையும் மாற்றும் வல்லமை தூய செங்குருதிக்கு உண்டு. சாக்ரடீசுக்கு நஞ்சு கொடுத்தார்கள். அவர் நஞ்சு என்று தெரிந்து–நஞ்சைச் சாப்பிடுகிறோம் என்று அறிந்து அதைச் சாப்பிட்டார்; செத்துப் போனார். அப்பரடிகளுக்கும் நஞ்சு கொடுக்கப் பட்டது. அந்த நஞ்சை அப்பரடிகள் உண்டும் சாகவில்லை.

'பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்று நயத்தக்க நாகரிகம் பேசிய வள்ளுவர் பிறந்தநாடு அன்றோ நமது நாடு? எனவே நஞ்சினையும் உண்டு வாழ்ந்தார் நமது ஞானத் தலைவர் அப்பரடிகள்.

மனிதன் ஒரு சொரி சிரங்கு பிடித்தவன் போல; அரிப்பு ஏற்பட்டபோது சொரிந்து கொள்வான்; சொரியும் போது. சுகமாக இருக்கும். பின்னர் எரிச்சல் ஏற்படும். அவ்வாறு எரியெடுத்ததும் இனிமேல் சொரியக்கூடாது என்று தனக்குள் எண்ணிக் கொள்வான். பின்னர் ஊரல் ஏற்படும்போது அதை மறந்து சொரிய ஆரம்பித்துவிடுவான். அது போலவே பலர் அன்பு, அருள் என்று படிக்கும்போது அன்பும் அருளும் காக்க்வேண்டும் என்று எண்ணிக் கொள்வார்கள்; அடுத்த நேரமே அவற்றை மறந்து விடுவார்கள். இத்தகைய பண்பு, வாழும் மனித சமுதாயத் திற்கு நல்லதல்ல. நாம் கற்கவேண்டும்; கற்ற நெறியில் நிற்க வேண்டும். வாழ்க்கையில் வழுக்கலும், இழுக்கமும் ஏற்படும்போது ஊன்றுகோல் போல நின்று உதவுவது திருக்குறள். வீட்டிலும், நாட்டிலும் குறள் மணம் கமழ வேண்டும்; குறள் வாழ்வு மிளிர வேண்டும்.

விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டுக் கிடந்தது நமது பாரத தேசம். இந்த நாட்டு மக்கள் ஊமையராய்... செவிடர் களாய்... உணர்வின்றி நெடுமரம்போல் வாழ்ந்தார்கள். ஆதிக்கக்காரர்களும் சவாரி செய்வதற்கு இலாயக்காகக் கூனிக் குறுகி வாழ்ந்தார்கள். வாழ்க்கையில் வளம் இல்லை. ஆனால், வறண்ட வேதாந்தங்கள் உண்டு. மண்ணகத்து வாழ்வுபற்றிய அறிவு சூன்யம்; ஆனால் விண்ணகத்தைப் பற்றி ஆயிரமாயிரம் கற்பனைகள், எண்ணற்ற சமயங்கள். ஆனால் கிராமத்தில் அருளாட்சி இல்லை. அகத்திலும் புறத்திலும் இருளாட்சி செய்த காலம். இருள்கடிந்து

எழுகின்ற ஞாயிறென பாரத சமுதாயத்தில் அண்ணல் காந்தியடிகள் தோன்றினார். அடிமைகளாக வாழ்ந்த நமக்குச் சுதந்திரம் வாங்கித் தந்தார். இல்லை-சுதந்திரமாக வாழவும் கற்றுக் கொடுத்தார். இந்நாடு சுதந்திரம் பெற்றது. நாமிருக்கும் நாடு நமதாயிற்று. நமக்காக நாமே ஆட்சி செய்யும் குடியாட்சியும் மலர்ந்தது. ஆயிரமாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து புகழ்பெற்ற சுதந்திர பாரதநாட்டின் குடிமக்களாக நாம் வாழ்வது முன்னைத் தவத்தின் விளைவே.

நாடு சுதந்திரம் பெற்றுவிட்டது. ஆனால், அந்நிய விளைவுகளை-அவற்றின் அடிச்சுவடுகளை அழித்து-மாற்றியமைத்துப் புதிய சமுதாயத்தை அமைக்கும் பெருங் கடமை நம் முன்னே நிற்கிறது. பிறர் வாழ்வதற் கென்றே நாம் பிரித்து வைக்கப் பெற்றோம். ஒளிவிளக்கில் விழும் விட்டில் பூச்சிகளைப்போல, நம்மையே அழித் தொழிக்கக்கூடிய சாதி, இன, மத வேற்றுமைகளை ஏதோ புனிதமானவை யெனக் கருதிப் போற்றி வளர்த்து வந்திருக்கிறோம். சுதந்திர பாரத சமுதாயம் ஒரு குடும்பம். அக் குடும்பத்தில் பலமொழி பேசுவோர் உண்டு-பல்வேறு நாகரிக முடையோர் உண்டு. எனினும், வேற்றுமைகளைக் கடந்து- மறந்து விழுமிய ஒருமைப்பாடு கண்டுவாழும் ஒரு குடும்பமேயாம். இதற்கு மாறான உணர்வுகள் நாட்டிற்கும் நல்லதல்ல- நமக்கும் நல்லதல்ல.

உலகப் பெரும்போரின்போது சர்ச்சில் 'வெற்றி! வெற்றி!' என்ற குரல் வழியே அந்நாட்டு மக்களை எழுச்சியும் புத்துணர்வும் பெறச் செய்து வெற்றி பெற்றான். இன்று நம்முடைய நாட்டிற்குத் தேவைப்படுகின்ற இன்றியமையா உணர்வும், 'ஒன்றே குலம்-வளர்க ஒருமைப்பாடு' என்பனவே யாகும். வீட்டிலும் வீதியிலும் நாம் அன்றாட வாழ்க்கையில் கொண்டொழுகும் "ஒருமைப்பாட்டுணர்வே" தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்க உதவும். ஊராட்சி மன்றங்களில் பொறுப்பேற்றிருக்கும் நண்பர்கள் தங்களுடைய கிராமச்

சமுதாயத்தை அன்பியல் தழுவிய-உறவோடு கலந்த ஒரு குடும்பமாக ஆக்குவதில் முயற்சித்து வெற்றிபெறுதல் வேண்டும்.

தேசிய ஒருமைப்பாட்டின் அடித்தளம் கிராமச் சமுதாய அமைப்பிலேயே இருக்கிறது.

இந்தியா என்றால் கிராமம்; இந்திய நாட்டின் இதயம் கிராமங்கள். இந்திய நாட்டின் எண்பது விழுக்காடு மக்கள் கிராமங்களிலேயே வாழ்கின்றார்கள். அவர்களிற் பெரும் பாலோர் வேளாண்குடி மக்கள். அவர்களால் உண்பிக்கப் பெறுவோர் பலர். ஆனால் அவர்கள் வாழ்க்கையில் முன்னிருந்த நிலைதான். இதை எண்ணிப் பார்க்கவும் நெஞ்சம் குமுறு கிறது. உழைப்பவர் வாழ்க்கையில் சோர்வு; உழைக்காத வர்கள் நகரங்களில் “வெளிச்சம் போட்டு” வாழ்ந்து கொண்டிருந்தார்கள். சாதி ரீதியான ஆதிக்கம்-சமுதாயத்தை அட்டைபோல் உறிஞ்சி அலைக்கழிக்கச் செய்யும் நிலப் பிரபுத்துவமுறை ஆகியவைகளால் வலிவும் வனப்பும் வளமும் இழந்துபோன கிராம வாழ்க்கைக்குப் புத்துயி ரூட்டியது நாம் பெற்ற சுதந்திரம். வேளாண்குடி மக்கள் உழைப்பில் நியாயமான பங்குபெற வழிசெய்தது ஏன்? அண்ணல் காந்தியடிகள் சொன்னதுபோல, உழவர்களுக்கு உழும் நிலத்தில் உரிமை கிடைக்கும் வண்ணம் நிலச் சீர்திருத்தத்தைக் கொணர்ந்து, இத்தகு புதிய சாதனைகள் விவசாயிகளிடத்தில் எழுச்சியைத் தந்திருக்கின்றன- தன்னம்பிக்கையைத் தந்திருக்கின்றன-உற்பத்தியைப் பெருக்கி யிருக்கின்றன.

நமக்குத் தெய்வசாநித்யம் தெரியுமோ தெரியாதோ, ஆனால் எண்ணற்ற தெய்வங்களைப்பற்றி நமக்குத் தெரியும் ஆனால், பாரினில் வாழ்ந்திட மட்டும் கற்கமாட்டோம். நமது பாட்டன் பூட்டன்கள் ஏடெடுத்தடுக்கிப் பூசித்தனர். ஏடு கிடைக்காதவன் ஆயுத பூசையின் பெயரால் மண்வெட்டியும்

கலப்பையும் வைத்துக் கும்பிட்டான். எத்தனை பூசை போட்டும் அந்தக் கலைமகள் தேவியின் கருணா கடாட்சம் இந்த நாட்டில் இல்லை. அறிவிலே தெளிவில்லை, ஆற்றலிலே உறுதியில்லை. வெந்ததைத் தின்றார்கள்; விதிவந்தபோது செத்தார்கள். "மரணமிலாப் பெருவாழ்வு" என்று சித்தர் சொன்னது ஏட்டில் இருந்தது. படித்த பண்டிதர்கள் பதவுரையும் பொழிப்புரையும் சொன்னார்கள். எனினும் பாரினில் அந்த வாழ்க்கை-"மரணமிலாப் பெருவாழ்வு" இல்லை. சுதந்திரம் வந்தது. தேடித் திரிந்தாலும் கிடைக்காத கல்வி சமுதாயத்தையே தேடி வந்தது. கவிஞன் பாரதி,

> "வீடுதோறும் கலையின் விளக்கம்
> வீதிதோறும் இரண்டொரு பள்ளி"

என்று முழங்கினான். அம்முழக்கம் சுதந்திர ஆட்சியில் நடைபெறுகிறது. இன்று "தமிழகமெங்கும் கல்வி" என்பதே பேச்சு. "ஒரு பள்ளியைத் திறப்பவன் ஒன்பது சிறைச் சாலையை மூடுகிறான்" என்பது பழமொழி. மேலும், "கல்வி ஆயிரங்காலத்துப் பயிர்" என்பதும் பழமொழி. இன்றைய தமிழகத்தின் கல்வித்துறை மறுமலர்ச்சி எதிர்காலத் தமிழகத்தின் ஏற்றத்திற்கு ஏற்ற அறிகுறியாகும். ஊராட்சி மன்றங்கள் கல்வி நிலையப் பொறுப்பை மேற்கொண்டிருக் கின்றன. வளரும் பயிருக்கு வான்மழைபோல வளரும் குழந்தைக்குக் கல்வி மன்றத்தின் தலைவர்கள் உறுப்பினர்கள் கல்வித்துறையில் இன்னும் அதிக ஈடுபாடு கொள்ள வேண்டும். மேதைத் தன்மைக்குச் சாதியும், அதிர்ஷ்டமும் வேண்டும் என்பது பத்தாம் பசலிக் கொள்கை; இன்று நாம் முயன்றால் நம் கிராமத்தில் எண்ணற்ற மேதைகளை உருவாக்க முடியும். ஆதலால் ஊராட்சி மன்றங்கள் எல்லோருக்கும் கல்வி-எப்படியாவது கல்வி-வையத்துள் வாழ்வாங்கு வாழக் கற்றுக்கொடுக்கும் கல்வியளிக்கும் பொறுப்பை மேற்கொள்ளவேண்டும்.

குழந்தைகள் மட்டும் கற்றால் போதாது. இன்று வாழும் "வளர்ந்தவர்"களுக்கும் கூடக் கருத்துப் புரட்சி தேவைப்படுகிறது. அடிமைக்கால உணர்வுகள், ஆதிக்க எண்ணங்கள் தன்னலநாட்டம் இவற்றிலிருந்து நம்மிற் பலர் இன்னும் விடுதலை பெறவில்லை. வளர்ந்துவரும் சமுதாயத்திற்கு ஏற்றவாறு இணைந்துவாழ நாம் அனைவருமே நம்மைத் தகுதிப்படுத்திக் கொள்ளவேண்டியிருக்கிறது. ஆதலால் கிராமத்தில் வாழும் நெறிகாட்ட "வள்ளுவர்" எத்துறையிலும் எப்பொழுதும் எதிலும் "அஹிம்சை" என்ற காந்தியத் தத்துவம் ஆகியவற்றைப்பற்றிக் கேட்க-சிந்திக்க வாய்ப்புக்களை உண்டாக்கவேண்டும்.

சுதந்திரத்திற்கு முன்னர் இந்த நாட்டில் வாழ்ந்த மக்களின் சராசரி வயது சற்றேறக்குறைய 26 தான். வேத மந்திரங்கள் முழங்க, ஜாதகம் கணித்துப் புரோகிதர்களால் "நூறாண்டு வாழ்க" என்று வாழ்த்தப் பெற்றவனும்கூட 26 வயதில்தான் செத்தான். ஆனால் அவன் கவலைப்படவில்லை. வழக்கம்போல விதி முடிந்தது என்று நினைத்து அமர்ந்திருப்பான். அவனுக்குத் தெரியுமா நாம் சுகாதாரக் குறைவாக வாழ்கிறோம் என்று? கங்கையும் காவிரியும் அவனுடைய தத்துவத்தின்படி தீர்த்தங்கள் தாம். ஆனால் ஆற்றின் கரையோரங்களையே அவன் மலங்கழிக்கும் இடமாகக் கொண்டு மாசுபடுத்துவதைப்பற்றி அவன் எண்ணிப் பார்த்ததில்லை. காலரா, பிளேக் வந்தால் காளியைக் கும்பிடுவான். ஐயகோ! பாவம் சுதந்திரத்திற்குப் பிறகு, காலரா, பிளேக் முதலியன எங்கோ ஓடி ஒளிந்துவிட்டன. ஊராட்சி மன்றங்கள் கிராமத்தின் சுகாதாரத்தைப் பேணுவதில் கண்ணுங் கருத்துமாக இருத்தல் வேண்டும். நோயற்ற வாழ்க்கையும், நிறைந்த வாழ்நாளும் போற்றுதற்குரியன. அதனால், வீட்டையும், வீதியையும் தூய்மையாக வைத்துக் கொள்ள கிராம மக்களைப் பழக்குதல்வேண்டும். அதனாலன்றோ பாரதி,

*"சந்தித் தெருப்பெருக்கும்*
*சாத்திரம் கற்போம்"*

என்றான். மேலும் வாழ்க்கைக்குத் தேவையான-சத்துள்ள இயற்கை உணவுகளை நமது கிராம மக்கள் எண்ணிப் பார்த்து உண்பதில்லை. வெறும் அரிசிச் சோறு, மனித வாழ்க்கைக்கே மாபெரும் பகையான புளி, மிளகாய் இவற்றில் மூழ்குகிறார்கள். ஆங்கிலேயன் அதிலும் கெட்டிக் காரன் ஆனான். உடலுக்கு இதந்தரும் நம்முடைய மிளகை வாங்கிக்கொண்டு, எரியூட்டும் மிளகாய் தந்தான். நாமோ மிளகாய் சட்னி அபாரம் என்போம்! பொருந்தா உணவுப் பழக்கத்தைத் தவிர்க்க மக்கட்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். கைக்குத்தலரிசி, நல்ல காய்கறிகள், பால், தயிர் இவைகளை உண்டு உடல் நலத்தோடு உங்கள் கிராமத்து மக்கள் வாழும்படி செய்ய வேண்டும்.

கிராம மக்கள் நிலையான பொருள் வளமும் சீரான வாழ்வும்பெற ஊராட்சி மன்றங்கள் ஊக்கமூட்டி வழி நடத்தவேண்டும்.

கிராமச் சமுதாயத்தில் பெரும்பான்மையோராக இருக்கும் விவசாயிகள் துணைத் தொழில் இன்றிப் போதிய வருவாய் பெறமுடியாது. ஆதலால் ஜப்பான் தேசத்தைப் போல, கிராமத்தின் ஒவ்வொரு வீடும் தொழிலகங்களாக வளர்ந்து காட்சியளிக்க வேண்டும். மேலும் வேளாண்மைத் துறையிலும் புதிய வழித்துறைகளைக் கையாண்டு திருந்திய முறையில் சாகுபடி செய்து, உயர்ந்த அளவு விளைச்சலைக் காணத் தூண்டவேண்டும். கிராமத்தின் தேவைகள் அனைத்தையும் அந்தக் கிராமமே உற்பத்தி செய்யும் அள விற்குக் கிராமம் வளர்ச்சியடைய வேண்டும். தன்னிறைவு இல்லாத கிராமத்தின் செல்வம் நகர்வாழ் மக்களால் சூறையாடப்படும். ஆதலால் ஊராட்சி மன்றங்களால் தமது கிராமத்திற்கேற்றவாறு திட்டங்களைக் கண்டு செயல்படுத்தி

மூன்றாவது ஐந்தாண்டுத்திட்ட கால எல்லைக்குள் தன்னிறைவு உள்ள கிராமமாக்குதல் வேண்டும்.

கிராமத்தில் தேங்கிக்கிடக்கும் மனித சக்தியை வெளிப் படுத்திச் செயல்படுத்தும் ஆற்றல் கூட்டுறவு இயக்கத்திற்கு உண்டு. சுதந்திர பாரத சமுதாயக் குடும்பத்தின் இலட்சியம் சோஷலிச சமுதாய அமைப்பு. அந்த இலட்சியத்தை அடைய நம்முடைய இரண்டு நேர்ப்பாட்டைகள்: (1) கிராம ராஜ்ய மாகிய பஞ்சாயத்தும் (2) கூட்டுறவுமாகும். பிரிந்து கிடக்கும் மனித சக்திகளைக் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் ஒன்றுபடுத்த முடியும். கூட்டுறவால் நாட்டுயர்வு ஏற்படும். ஆதலால் கிராமத்தின் எல்லா முயற்சிகளையும் வேளாண்மை முதல் வாணிபம்வரை கூட்டுறவு முறையிலே செய்ய முயற்சிப்பது நல்லது. கூட்டுறவின் மூலமே சுரண்டுபவன், சுரண்டப்படுபவன் என்ற இரண்டு சாதிகளை ஒழிக்க முடியும். அம்மட்டுமல்ல-எதிலும் எப்படியாவது இலாபம் எடுத்தாக வேண்டும் என்ற வடிகட்டிய பிற் போக்குணர்விலிருந்து சமுதாயத்தைப் பேணிக்காப்பாற்றவும் முடியும். கூட்டுறவின் மூலம் "நமக்காக எல்லோரும் எல்லோருக்குமாக நாம்" என்ற உயர்ந்த வாழ்க்கை முறை உருவாகும்-உறவு கலந்த பந்தபாசம் பல்வேறு குடும்பங் களுக்குள் ஊடுருவி வளரும்.

மக்களாட்சி முறை இருபதாம் நூற்றாண்டின் இணை யற்ற கொள்கை. உலகம் முழுவதிலும் மனிதன் இந்த சுதந்திரத்திற்காகப் போராடிப் போராடி இந்த உரிமையைப் பெற்றிருக்கிறான். அப்படிப் பெற்றது ஆளுவதற்கோ, ஆதிக்கத் திற்கோ அல்ல. சுதந்திர நாட்டில் ஆளும் இனம் ஆளப்படும் இனம் என்ற வேறுபாட்டிற்கு இடமே இல்லை. ஆட்சிமுறை என்பது நல்வாழ்விற்கு உரிய நடைமுறை அமைப்பேயன்றி ஆதிக்கத்திற்காக அன்று. சுதந்திர நாட்டில் நாட்டின் குடியரசுத் தலைவரிலிருந்து கிராமத்தின் ஆட்சித் தலைவர் வரை அனைவரும் சமுதாயத் தொண்டர்கள்-காவலர்கள்

என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. ஆதலால் ஊராட்சி மன்றங்களில் பொறுப்பேற்றிருக்கின்ற நாம் நல்லெண்ணத் திற்கும், நம்பிக்கைக்கும் உரிய குடியாட்சி முறையை உருவாக்க முயற்சிக்க வேண்டும்.

## 11. வள்ளுவர் வழி

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதர்கள் தோன்றி வளர்ந்து வாழ்ந்து வருகின்றார்கள். ஐந்து வயதுப் பையனுக்கும் ஐம்பது வயது முதியவருக்கும் வித்தியாசம் இருக்கிறது. ஐந்து வயதான சமுதாயத்திற்கும் 501 வயதான சமுதாயத்திற்கும் வேறுபாடு காணப்பெறுகிறது. உலகில் எந்த விலங்கினங் களுக்கும் இல்லாத பெருஞ்சிறப்பு, பெருமை மனித சமுதாயத்திற்கு உண்டு. காரணம் மனித சமுதாயத்திற்கு வரலாறு இருக்கிறது. புலிக்கும் புறாவுக்கும், காக்கைக்கும் கரடிக்கும் குருவிக்கும் கோட்டானுக்கும் வரலாறு இல்லை.

மனிதகுல வரலாற்று மையமாக லௌகீக-உலகாயத எண்ணங்கள்தாம் உணர்ச்சி பெறுகின்றன, என்னைப் பொறுத்த வரையில் உணர்ச்சிகளை உண்டாக்குவதற்குக் கருத்துப் புரட்சியே சரியான சாதனம், கருவி என்று கருது கின்றேன். கருத்துப் புரட்சிதான் மனித வாழ்க்கையின் கேந்திரமாக மையமாக இருப்பது. சில சமயங்களில் கருத்தின் பேரால் அந்தக் கருத்தைச் சொன்ன ஆட்கள் பெருமை பெறுவார்கள்; இன்னும் சில சமயங்களில் ஆட்களின் பேரால் அந்த ஆட்கள் சொன்ன கருத்துச் சிறப்பு பெறும். எனினும், எப்போதுமே மையமாக ஆட்சி பெறுவது கருத்துதான்.

நம் நாட்டைப் பொறுத்த வரையில் கருத்தை மறந்து விட்டு ஆளை விமர்சிப்பது, ஆளுக்குப் பெருமை செய்வது ஒருவகை. ஆளை மறந்துவிட்டுக் கருத்தை விமரிசிப்பது, கருத்துக்குச் சிறப்புக் கொடுப்பது இன்னொருவகை. ஆள்

வழிச் சிந்திப்பதைவிடக் கருத்துவழிச் சிந்திப்பதுதான் சிறந்தது. கருத்து வழி மனிதர்களைச் சிந்திக்கப் பழக்கி விட்டால், காலப்போக்கில் எந்தக் கருத்து நல்ல கருத்தோ அந்தக் கருத்து மக்கள் மனத்தில் தேங்கி நிலைபெற்றுவிடும். எனவே, ஆத்மாவைக் கருத்துவழிச் சிந்திக்கச் செய்ய வேண்டும் என்றே நாம் எண்ணி முயற்சி செய்கின்றோம். இதைத்தான் சமயமும் வலியுறுத்துகின்றது. பொதுவாக எவர் பேசினார் என்பதுதான் முக்கியம். வாய்ப்பும் வசதியும் இருக்குமானால் கருத்தைச் சொல்லும் மனிதரைப் பாராட்டலாம். மனிதரைப் பாராட்டுவது என்றால் படம் திறந்தோ, நினைவுச் சின்னம் எழுப்பியோ, விழா நடத்திப் பூசனை செய்வதோ அல்ல. அவர் சொன்ன வெளியிட்ட அருமையான கருத்துக்களை வாழ்க்கையில் ஏற்றி நடைமுறைக்குக் கொண்டுவருவதுதான்.

திருவள்ளுவர் ஒரு கருத்துப் புரட்சிக்காரர். அவர் காண விரும்பிய சமுதாயம் கருத்து வழிபட்ட சமுதாயம். அவர் சமுதாயத்தைப் பார்த்த முறை வேறு. வளர்ந்து வருகிற தமிழ்ச் சமுதாயத்திற்கு வாழ்க்கை நூல் செய்தார் அவர். வள்ளுவர் என்பதை வள்ளும் என்றே நாம் குறிப்பிட விரும்புகின்றோம். காரணம், கருத்து வழிச் சிந்தனை வேண்டும் என்பதையே நாம் வற்புறுத்துகின்றோம். வள்ளுவத்தில் கவிதை நயம் இல்லை, கற்பனை இல்லை; பொய் இல்லை, புனைந்துரை இல்லை. வள்ளுவத்தின் மையக் கருத்து வாழ்க்கை, வாழ்க்கை, வாழ்க்கை.

நமது நாட்டைப் பொறுத்தவரையிலே, கொள்ளிடக் கரையிலே கிடக்கின்ற மணலைக்கூட எண்ணிவிடலாம் போலிருக்கிறது. குவிந்து கிடக்கின்ற சாதிகளை எண்ண முடியாது. சாதி என்பது நம்மைப் பிடித்து ஆட்டி அலைக் கழித்துக்கொண்டு வருகிற ஒரு தொத்து நோய். வள்ளுவமோ, சாதி வேறுபாடற்ற-ஒருகுல் சமுதாயத்தைக் காண

விரும்பியது. எனவேதான் அது, “பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்களுக்கும்” என்று பேசுகின்றது.

சாதீய முறைக்குச் சமயம் ஆதரவு தரவில்லை. “ஒன்றே குலம்” என்பது திருமந்திரம், “சாதிகுலம் பிறப்பென்னும் சுழிபட்டுத் தடுமாறும் ஆதமிலி நாயகனை” என்று பேசுகிறது மாணிக்கவாசகம். “சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்” என்கிறது அப்பர் தேவாரம். சமய ரீதியாகச் சாதிகள் உற்பத்தியாக வில்லை-சாதீய முறைக்குச் சமயம் ஆதரவு தரவில்லை என்பதற்கு இதைவிட என்ன வேண்டும்.

சாதீய முறை முதலாளித்துவ முறை. முதலாளித்துவவாதிகள் தங்கள் சுரண்டலுக்கும் சுகபோகங்களுக்கும் ஆபத்து ஏற்பட்டு விடாமல் தடுத்துக் காத்துக் கொள்ளவே சாதீய முறைகளை உருவாக்கி அதற்கு ஆதரவும் கொடுத்து வருகின்றார்கள். சாதீய முறையை உருவாக்கிய அந்த முதலாளித்துவ சுரண்டல்காரர்கள் தங்கள் கொள்கையை உறுதிப்படுத்தச் சமயத்தை-மதத்தைத் துணைக்கழைத்துக் கொண்டார்கள். மன்னன் ஆணை என்றால் ஏற்றுக் கொள்ளத் தயங்குகிறவர்களும் மகேசுவரன் கட்டளை என்றால் மறுக்காமல் ஒத்துக்கொள்வார்கள். இதை வைத்தே முதலாளித்துவ வாதிகள் சமயத்திற்கும் சாதீய முறைக்கும் முடிச்சு போட்டார்கள். அவ்வளவுதான். எனவே, சாதீய முறை நமது சமயத்திற்கு முற்றிலும் முரண்பட்டது.

மனித குலத்தை ஒருகுலமாக்குவதுதான் வள்ளுவத்தின் தலையாய கொள்கை. மனிதனை மனிதன் அடித்துப் பிடித்துச் சுரண்டி வாழக்கூடாது; மனிதனை மனிதன் மதிக்க வேண்டும் என்ற கொள்கை வள்ளுவத்தில் வலியுறுத்தப் பெறுகிறது.

அன்பு அன்பு என்று நாம் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பேசி வருகின்றோம். எனினும் அன்பைப்

பலர் பார்த்ததே இல்லை-பலருக்குத் தெரியாது. எங்கள் மாவட்டங்களில் மண்ணிலும் ஈரமில்லை-மக்கள் மனத்திலும் ஈரமில்லை. நஞ்சையும் புஞ்சையும் நல்வளம் கொழிக்கின்ற மண்ணில் ஈரமிருக்கிறது. ஆனால் மண்ணில் ஈரமிருக்கிற அளவிற்கு மக்கள் மனத்திலே ஈரமிருப்பதாகத் தெரியவில்லை. ஒருவருக்கு என்னதான் செல்வமிருப்பினும், செல்வாக்கு சுகவாழ்வு கிடைத்திருப்பினும் அன்பு இல்லை என்றால் என்ன பயன்?

> "அன்புடையர் எல்லாம் உடையர்; அன்பிலார்
> என்னுடைய ரேனும் இலர்"

என்கிறது வள்ளுவம். "அன்பின் வழியது உயிர்நிலை" என்று வலியுறுத்துகிறது, அது. நமது சமயக் கொள்கையும் அதுதான். நமது சமயத்தின் மையக் கொள்கை எவரிடத்திலும் எப்போதும் அன்பாயிரு என்பது தானே.

நமக்கு வாழ்க்கையிலே பெரும் வரட்சி இருக்கிறது. அந்த வரட்சியைப் போக்கி வாழ்வை வளமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை. அதற்கான முயற்சி பலரிடம் இல்லை. நான் வேடிக்கையாகக் கூறுவதுண்டு. "மடங்களிலே மட்டும்தான் முன்பு சந்நியாசிகள் இருந்தார்கள். இப்போது வீடுகளிலும் பலர் சந்நியாசிகளாக ஆகிவருகிறார்கள்" என்றும், உழைக்க வேண்டும் என்ற ஆர்வமில்லை - முயற்சி இல்லை. பசித்தால் உண்பதும், தூக்கம் வந்தால் தூங்குவது மாகவேதான் பலர் வாழ்கின்றனர்.

மனிதன் உழைக்கப் பிறந்தவன்; அவனது இலட்சியம் உழைப்பு. அந்த உழைப்பால் பெறுகின்ற உவகை - இன்பம் - மகிழ்ச்சி, அவ்வளவுதான்-உழைப்பையும் உழைப்பால் பெறுகின்ற இன்பத்தையும் சமயம் வெறுக்கவில்லை.

நமக்கு முயற்சி தேவை-புதிய நம்பிக்கை தேவை. பலர் ஏழையாக பாமரராக வாழ்வதும், சிலர் அவர்களது உழைப்பை உறிஞ்சி-சுரண்டிச் சுகவாழ்வு வாழ்வதும் விதி-

அவரவர் தலையெழுத்து என்பது சரியானதல்ல. அது பழைய பத்தாம் பசலிக்கொள்கை. அந்தப் பழையக் கொள்கையை நாம் விட்டொழிக்க வேண்டும்.

"தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்"

என்றுதான் வள்ளுவம் பேசுகின்றது. நமது மதத்தைப் பொறுத்தவரையில், "மனிதன் முயற்சி செய்யவேண்டும்-உழைக்க வேண்டும்" என்றுதான் வற்புறுத்துகிறது. யாரும் யாரையும் சுரண்டி வாழ்வதை மதம் அனுமதிக்கவில்லை.

இன்று, "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து. உள்ளதைக்கொண்டே திருப்தியாக இரு" என்ற பழமொழிகள் மக்களின் ஆசைகளையும், முயற்சிகளையும் அருகச் செய்வனவாக உள்ளன. பலரிடம் ஆசையும் இல்லை-ஆவல் நிறைந்த வாழ்க்கையுமில்லை. ஆசைப்படாதே என்றால் இன்னொருத்தருடைய சொத்துக்கும் ஆசைப் படாதே என்பதுதான் பொருளே தவிர, நீ வாழ ஆசைப் படாதே-உன் வாழ்வில் வளமை கூட்ட விரும்பாதே என்பது கருத்தல்ல. ஏழைகளின் வாழ்வை உறிஞ்சிச் சுரண்டி வாழும் ஒரு பணக்காரனை - சுரண்டல்காரனைப் பார்த்து இன்னும் மற்றவர் வாழ்வை-வளத்தைச் சுரண்டி வாழ ஆசைப்படாதே, சுரண்டியது போதும் என்று திருப்தியோடு இரு என்பதாக மற்றவர் கூறியதுதான். ஆனால் இன்று நைந்து நலிவுற்று, வாழுகின்ற பல்லாயிரக்கணக்கான ஏழை மக்களின் ஆசையை ஒடுக்கி, அவர்களின் முயற்சியை ஒழித்து, தங்கள் சுரண்டல் தொழிலை தொடர்ந்து நடத்திவர-தங்களைப் பாதுகாத்துக்கொள்ளப் பயன்படுத்தும் பழமொழியாக ஆகிவிட்டது. "போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து" என்பது. அப்பாவியான ஏழையும் இதையே நம்பிக்கொண்டு, "நமக்குக் கிடைத்திருப்பது போதும்" என்று முயற்சியின்றியே வாழத்தலைப்பட்டு விட்டான்.

இன்று நம்மிலே பலருக்கு, அடுத்தவன் அவன் வாழ்வில் என்ன தப்பு பண்ணுகிறான் என்பதுதான் தெரிகிறதே தவிர, அடுத்தவனுக்கு என்ன நட்டம் ஏற்பட்டிருக்கிறது என்பது தெரிவதில்லை. நாலுபேர் கூடுகிற இடத்தில் நாம் எதை எண்ணிச் சிந்தித்து பேசுகிறோமோ, அதுதான் பெரும்பாலும் நடைமுறைக்கு வருகிறது. எனவே, அவ்வாறு நாலுபேர் கூடுகிற இடத்தில் நாம் நல்லன வற்றையே எண்ணி, நல்லனவற்றையே சிந்தித்து, நல்லன வற்றையே பேசவேண்டும்.

மனிதன் வயிராற உண்ணவேண்டும்; அதே நேரத்தில் கிடைத்ததை உண்டுவாழத் தன்னைத் தயார்செய்து கொள்ள வேண்டும். சுவையுணவுதான் பிடிக்கும் என்று பேசக்கூடாது. சுவையுணவுகளைப் பற்றிச் சமய இலக்கியங்களிலும் பேசப் படுகின்றன. ஆனால், சுவையுணவுபற்றிப் பிடிவாதம் பிடிக்க லாமா? மருந்துக்கு குடிக்கலாம் என்றால், குடியிலேயே மயங்கிக் கிடப்பதா? காதல், வாழ்வுக்கு நன்மை பயப்பது என்றால், பரத்தையர் வழிபட்டு மயங்கிக் கிடப்பதா?

திருவள்ளுவர் காணவிரும்பிய சமுதாயம் "ஒப்புயர் வற்ற சமுதாயம்"-உலகப் பொதுமை காக்கும் சமுதாயம். குடிகாரனைக்கூட மன்னித்துவிடலாம்-சமுதாயத்தைச் சுரண்டி வாழ்பவனை மன்னிக்கவே முடியாது. தனித்தனி ஒழுக்கத்தைவிடச் சமுதாய ஒழுக்கம் சிறந்தது என்றுதான் வள்ளுவர் பேசுகிறார். "தான் இன்பத்தை அடையாமல் அடைய விரும்பாமல் செயல் முடித்தல் ஒன்றினையே விரும்புகிறவன் தன் சுற்றத்தவரின் துன்பத்தை நீக்கி, அதனைத் தாங்கிக் கொள்ளுகின்ற தூண்போலாவான்" என்றார் வள்ளுவர். இன்று, "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற ஒருலக-ஒரே குல சமுதாயம் காணும் முயற்சியில் மனித சமுதாயம் ஈடுபட்டிருக்கிறது. எனவே, மனித சமுதாயத்தில், மனித குலத்தில் யாருக்கும் துன்பம்

ஏற்படாமல் காக்க-துன்பம் துடைப்பதும், நமது கடமை என்று ஒவ்வொருவரும் எண்ணவேண்டும்.

நாம் நம்மை வள்ளுவன் சாதி என்று சொல்லிக் கொள்ளவே விரும்புகின்றோம். பழமையையும், புதுமையையும் இணைத்து ஒரு பாலம் கட்டவே நாம் ஆசைப்படுகின்றோம். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு தோன்றிய வள்ளுவர், நாடுவாழ நல்லபல கருத்துக்களைத் தந்தார். எனவே அவர் கருத்தின் வழித் தாயாகவும், தந்தையாகவும் விளங்குகிறார்.

## 12. மேதை வள்ளுவனும் போதி மாதவனும்

வள்ளுவரும் புத்தரும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் பிறந்தவர்கள். இந்த நாடு எப்படி இருக்கவேண்டும்? சமுதாயம் எப்படி இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு வள்ளுவர் எழுதிய நூல்தான் திருக்குறள். இப்பெரு நூல் நம் நாட்டில் இருக்கின்ற பெருமை நமக்குண்டு. அது தவிர நம்முடைய பண்பாட்டிலே, நடைமுறையிலே திருக்குறள் வாழ்வு மலரவில்லை.

புத்தர் சொன்னதையே வள்ளுவரும் சொல்கிறார். பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்றார் வள்ளுவர். இதை நாம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஆனாலும், சாதி, விடாமல் நம்மைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. அது புத்துயிர் பெற்றிருக்கிறதே தவிர குறையவில்லை. இருபதாம் நூற்றாண்டில் கூட சாதி இருந்தால்தான் சமூகங்கள் வளர முடியும் என்று கூறுகிற கட்சிகளும் இருக்கின்றன. சாதி முறையினால் தமிழர்கள் எவ்வளவு ஏமாந்து போனார்கள் என்று பார்க்கவேண்டும். பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்றார் வள்ளுவர், அதற்கு முன்னே சங்ககாலப் புலவர்கள் 'யாதும் ஊரே,

யாவரும் கேளிர்' என்றனர். "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்றார் திருமூலர். ஆனாலும்கூட மூன்றரைக் கோடித் தமிழர்கள் உள்ள இந்த நாட்டில் பத்தொன்பதாயிரத்துச் சொச்சம் சாதிகள் இருக்கின்றன. வடக்கே, புத்தர் சாதி உணர்ச்சியை எதிர்த்தார். சாதிகள் கூடாது; உயிர்கள் அனைத்தும் சமம் என்றார். இதையே திருவள்ளுவர் பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்றார்.

புத்தர் "அன்பாக இரு" என்றார். அன்பு என்ற வார்த்தையின் ஆழம் ரொம்ப அற்புதமானது. இந்த சாதி முறைகள் இருக்கின்றனவே, அவை ஏதோ சாஸ்திர ரீதியாகக் கடவுளால் அமைக்கப்பட்டதாகக் கூறிச் சிலர் புனிதத் தன்மை கற்பிக்கிறார்கள். ஆனால் சாதிமுறைகளில் புனிதத் தன்மைகளே கிடையாது. சாதிமுறைக்கும் கடவுளுக்கும் எத்தகைய தொடர்பும் கிடையாது.

இன்று இங்கே, தெருவழியே திருவள்ளுவர் நடக்கிறார் என்று வைத்துக்கொள்வோம் அவருக்கு எதிரில் ஓர் ஆணழகன் வருகிறான். அந்த ஆள் கடலையையும் மற்ற வற்றையும் கையில் வைத்துக்கொண்டு கொரித்துக் கொண்டே வருகிறான். அந்த ஆள் பெட்டிக் கடையில் கடலை வாங்கியபோது ஒரு சின்னஞ்சிறு குழந்தை, வாழப் பிறந்தும் வாழ முடியாமல் ஏங்கித் தவிக்கும் குழந்தை, "ஐயா பிச்சை" என்று கேட்கிறது. அந்த ஆணழகன் சாஸ்திர தத்துவங்களைக் கரைத்துக் குடித்த ஆள். அந்தக் குழந்தையின் கதறலைக் கண்டு கொஞ்சமும் அதற்குக் கொடுக்காமல் "சீ; தரித்திரம்" என்று அஷ்டோத்திரம் செய்துகொண்டிருக் கிறார். இந்தக் காட்சியைத் திருவள்ளுவர் பார்த்தால், பார்த்துவிட்டு அந்த ஆணழகனைத் திருவள்ளுவர் கேட்பார்; "உனக்கு உயிர் இருக்கிறதா?" என்று.

"என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? நான் நடக்கிறேன்; உடை உடுத்திக் கொண்டிருக்கிறேன்; சிரிக்கிறேன்;

சாப்பிடுகிறேன். என்னைப் பார்த்து உயிர் இருக்கிறதா என்று கேட்கிறீர்களே?" என்பான் அவன். திருவள்ளுவர் உடனே, "இவை எல்லாம் உன் உடம்புக்கு உயிர் இருக்கிறது என்பதைத்தான் காட்டுகின்றன. ஆனால் உன் உயிருக்கு உயிர் இருக்கிறதா? உயிருக்கு அன்பு என்ற உயிர் இருந்தால் நீ இரக்கப்படுவாய். இன்னொருவன் துன்பத்தைக் கண்டு இரங்குவது "அறிவினாலாவதுண்டோ?" என்பார்.

நொண்டியின் துயரமும், குஷ்டரோகியின் துயரமும் தான் புத்தரின் துறவுக்குக் காரணமாக இருந்தன. பிறர் துன்பத்தைக் கண்டு கண்டு கவலைப்பட்டவர்கள் இந்தப் பெரியவர்கள். புத்தர், இராமலிங்கர், திருவள்ளுவர் ஆகியோர் இந்த வழிவந்தவர்கள். புத்தர் தமிழ்நாட்டுச் சூழ் நிலையில் பிறந்து வளர்ந்தவர் அல்லர். ஆனாலும் தமிழ் நாட்டில் ஓர் அற உணர்ச்சி – அன்பு உணர்ச்சி புத்தர் காலத் திற்கு முன்பே அரும்பிவிட்டது. இருந்தாலும் வளர முடி யாமல் இருந்தது. "உயிர்களிடத்தில் அன்புகாட்டு; கருணை காட்டு; அதுவே ஒழுக்கம், கடவுள் நெறி என்ற கொள்கை. அதுவேதான் வள்ளுவர் கொள்கை. ஆனால் நடைமுறையில் என்ன பார்க்கிறோம்? கடவுள் நம்பிக்கை, மத நம்பிக்கை மனிதனிடத்தில் செல்வாக்குப் பெற்றன. காலப் போக்கில் பணரீதியாக ஆதிபத்தியம் செய்ய நினைத்தவர்கள் கடவுளை, மதத்தை தங்களுக்கு ஏகபோகமாக ஆக்கிக் கொண்டார்கள் அதனால் பணக்காரன் புண்ணியம் செய்தவன்; ஏழை பாவம் செய்தவன். அது அவனவன் தலை விதி என்று சொல்லத் தொடங்கினார்கள். இதனால் நாட்டில் மதத்தின் பெயரால் தப்பும் தவறும் ஏராளமாக நடக்கத் தொடங்கிவிட்டன. இன்று நாம் சோஷலிச சமுதாயம் காண விரும்புகிறோம். திருடனும் காவற்காரனும் இல்லாத சமுதாயத்தைக் காண விரும்புகிறோம்.

நம் நாட்டில் இன்று கணக்கெடுத்துப் பாருங்கள். திருவள்ளுவரைப் பற்றித் தமிழ்நாட்டில் நல்ல விளம்பரம் செய்கிறார்கள்.

தமிழர் வீடுகளைக் கணக்கெடுத்துக்கொண்டு எத்தனை வீடுகளில் திருக்குறள் இருக்கிறதென்று கணக்கெடுத்துப் பாருங்கள். ஒவ்வொரு வீட்டிலும் நான்கு பூட்டுக்கள் இருக்கும். ஏனெனில் மனிதன் அவநம்பிக்கையில், சந்தேகத்தில் வாழ்கிறான். ஒருவனையொருவன் நம்பி வாழவில்லை. இதுதான் திருவள்ளுவர் பிறந்த நாடு என்று சொல்லுகிறோம். இந்த நாட்டில் கள்வரும் இல்லை; காவல் செய்வாரும் இல்லை என்ற நிலை இல்லை.

மதம் மனிதனிடத்து நம்பிக்கையை, அன்பு நெகிழ்ச்சியை ஊட்டுவதுதான். ஆனால் நம் நாட்டுக் கொள்கையில் பணநாயகம் பெருகியது. ஆகவே வீடுகளில் குறள் புகுவதற்குப் பதில், தேவாரம், திருவாசகம் புகுவதற்குப் பதில் பூட்டுக்கள் நுழைந்தன. பூட்டுக்களாலும் காப்பாற்ற முடியாத போது போலீஸ்காரர்களைச் சிருஷ்டிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்த நிலையில் நாட்டின் பண்பாடு சிதறிவிடுகின்றது. களவு காவல் பெரிய தத்துவம். மனிதன் முதலில் வந்தானா? காவற்காரன் முதலில் வந்தானா? மனித சமுதாயத்தில் காவற்காரன் முதலிலும் மனிதன் பிறகும் வந்தனர். பணக்காரன், பிறருக்குத் தேவைப் படுவதை அவன் ஒருவனே சுரண்டி வைத்திருக்கிறான். ஒரு நேரத்தில் பல ஆயிரக்கணக்கானவர்களுக்குத் தேவையானதை அவர்களே தேக்கி வைத்துக் கொள்கிறார்கள்.

அதை, வயிற்றுப் பசியால் வாடுகிறவன் பார்க்கிறான். பசி மனிதனை மிருகம் ஆக்கிவிடுகிறது. மனித சமுதாயத்தில் பசி என்றால் கோபம்வரும் என்பதைத் திருவள்ளுவர் ஒப்புக் கொள்கிறார். பசிக்கிறது என்று ஒருவன் கேட்கும்போது சாப்பிட்ட கையைக்கூட உதறாதவரைக் கையை மடக்கிக் கொண்டு குத்துகிறார் திருவள்ளுவர். குத்துகிற இடம் முகவாய்க்கட்டை.

> "ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
> கூன்கையர் அல்லா தவர்க்கு"

ஆகவே, முதல் திருடன் சேமித்தவன். இரண்டாவது திருடன்தான் திருடன். இதைத்தான் காந்தியடிகள் சொன்னார். தனக்குத் தேவையானது தவிர சேமித்து வைத்திருக்கிறவனும் திருடன்தான் என்றார் காந்தியடிகள். நமக்கு அறிவும் பண்பாடும் வந்துவிட்டதால் சமவாய்ப்புச் சமுதாயத்தை உருவாக்கவும் எல்லோருக்கும் உடுக்க உடை உண்ண உணவு கொடுக்கவும் வேண்டும். அப்படிப்பட்ட சமுதாயத்தை உருவாக்கவேண்டும் என்றால், "இல்லை இல்லை இது தர்மத்திற்கு ஆபத்து" என்று புதுக்குரல் கொடுக்கிறார்கள். மூன்றும் மூன்றும் ஆறு பேரும் வாழ்ந்தால் நாடு வாழ்ந்துவிடுமா? கடவுள் தர்மம் ஆகியவற்றின், பெயரால் பணக்கார உணர்ச்சியை ஏகபோக உணர்ச்சியை உருவாக்கும் முயற்சி மதத்திற்கு விரோதமானது. மனிதனை மனிதனாக வாழவைப்பதுதான் மதம். வள்ளுவர், புத்தர், இராமலிங்கர் வழியில் செல்லும் நாம். சிறுவர்கள் இளமையில் கல்வி பெறவேண்டும். அதுதான் கடவுள் நெறி; பண்பாடு என்று கூறுகிறோம். வள்ளுவரும் புத்தரும் உலகத்தை நேசி; அன்பு காட்டு. அதுவே மனித தர்மம் என்றார்கள். அந்தக் கொள்கைகையை வீடு வீடாகப் பரப்பவேண்டாமா? அந்தக் கொள்கை வீடு வீடாகப் பரவினால் வக்கீல்களுக்கு நாட்டில் செல்வாக்கு இருக்குமா? அல்லது சினிமாக்களுக்குத்தான் செல்வாக்கு இருக்குமா? புத்தர் வள்ளுவர் கொள்கைகளைத் தமிழகம் என்று உணர்கிறதோ அன்றுதான் நாடு வளரும்.

இந்தத் தலைமுறையில்தான் நாம் பெரும் புரட்சி செய்திருக்கிறோம். கடந்த தலைமுறைவரை படிப்பிற்கும் கூட சாதி தேவைப்பட்டது. கொஞ்சநாள் பணம் தேவைப்பட்டது. சாதியின் காரணமாகவே சிலர் கெட்டிக்காரர்களாகவே பிறக்கிறார்களாம். ஆனால், குடும்பச் சூழ்நிலைதான் படிப்புக்குக் காரணம். நம்மவர்கள் வீட்டிலே படிப்புக்குரிய சூழ்நிலை இல்லாமல் போய்விட்டது. பாரம்பரியமாகத் தாய்

தகப்பனார் படிக்காதவர்கள். அவர்களிடம் பையன் எப்படிப் படிக்கிறான் என்று கேட்டால் "எப்படியோ பையன் கஷ்டப்பட்டுப் பள்ளிக் கூடத்திற்குப் போய்வருகிறான்" என்பார்கள். பள்ளியிலிருந்து பையன் வீடு வந்ததும் மாட்டைப் பிடித்துக் கட்டு என்று உத்தரவு வரும். குழந்தைகள் படிக்கும் சூழ்நிலை இன்னமும் உருவாகவில்லை. அந்தச் சூழ்நிலையை உருவாக்கி விட்டால் தமிழ் சமுதாயம் கல்வி பெற்றுவிடும். அதைக் கருத்தில் கொண்டுதான் கல்வியை முதலில் பொதுச் சொத்தாக்கியிருக்கிறோம். செல்வத்தைப் பொதுவுடமை யாக்குவது பிறகுதான். இப்போது மனிதனின் அறிவுக் கண்ணைத் திறந்துவிடுகிற தலைமுறையில் வாழ்கிறோம்.

வள்ளுவர் தலைசிறந்த கவிஞர். நம் காலத்துக் குழந்தைகள் தலைவர்களாக வரும்போது, வழக்கு மன்றங்களின் எண்ணிக்கை, பீடிக் கடைகளின் எண்ணிக்கை குறையும். அதற்கு வள்ளுவர், புத்தரின் கொள்கைகள் பரவ வேண்டும் என்று வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறோம். அன்றுதான் நாடு சிறக்கும். நாமும் சிறந்து வாழ்வோம்.

தமிழக மக்களுக்குத் தமிழன் என்ற உணர்ச்சி வரவேண்டும். ஒருவரையொருவர் பார்க்கும்போது சாதியை மறந்துவிட்டுத் தமிழன்; தமிழ்ச்சாதி என்று பார்க்கவேண்டும். தமிழர்களை ஒன்றுபடுத்தும் உணர்ச்சி என்று ஏற்படு கின்றதோ, தமிழன் பெருமை பெற்றால் அது தன் பெருமை என்ற உணர்ச்சி என்று ஏற்படுகின்றதோ அன்றுதான் நாம் பெருமை பெறுவோம்; வாழ்வோம்; அதற்கு இளைஞர்கள் தகுதி பெறவேண்டும். வள்ளுவரும் புத்தரும் இந்நாட்டில் சாதி வேற்றுமைகளை ஒழித்து ஒருகுலமாக்கியவர்கள். அப்படியே வாழவேண்டும் என்று இந்தத் தலைமுறையில் நினைக்கிற நாம் அந்தக் கொள்கைகளை நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும்.

# 13. வள்ளுவர் நெறி

அறிவைப் பற்றிய பேச்சு திருக்குறளில் நிறைய உண்டு. அறிவு மிகமிக இன்றியமையாதது என்பதைத் திருவள்ளுவர் ஒத்துக் கொள்கிறார் என்பதும் உண்மை. ஆனால் ஒன்றை மிகுந்து வற்புறுத்தும்போது அவர் அன்பைத்தான் வலியுறுத்துகின்றார். அன்பிற்குத்தான் ஆக்கமும், ஊக்கமும், ஆற்றலும் கொடுக்கின்றார். திருக்குறளை அறநூல் என்று போற்றுகிறார்களே தவிர அறிவு நூல் என்று யாரும் கூறியதில்லை, கூறுவதுமில்லை. திருக்குறளை இவ்வாறு அறநூல் என்று கூறுகின்ற அளவினாலேயே அது அன்பு நெறியை வற்புறுத்துகின்ற ஒரு பெருநூல் என்று தெளிந்து உணரலாம்.

திருவள்ளுவர் அறிவை ஒத்துக் கொள்ளுகின்றார்; அறிவு அற்றம் காக்கும் கருவி என்கின்றார். அன்பைப் பற்றி அவர் பேசும்பொழுது அதனை ஒரு கருவி என்று கூறாமல் உயிர்த் தொடர்பாக - நெகிழ்ச்சியாக - உணர்ச்சியாகக் குறிப்பிடுகின்றார். உயிர்த் தொடர்புடைய ஒரு பண்பாடு என்பதைத் திருவள்ளுவரே ஒத்துக் கொள்ளுகின்றார்.

திருவள்ளுவர் தமது நூலை முப்பால்களாக - அறம் பொருள் இன்பம் என்று மூன்று பிரிவுகளாக அருளியிருக் கிறார். இந்த முப்பால்களிலும் பேசப்பெற்ற பெருமை அன்பு நெறிக்குண்டு என்பதை நாம் நன்றாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அறத்துப் பாலிலே முழுக்க முழுக்க அன்பு பற்றிப் பேசுகின்றார் - பொருட்பாலிலே பேசுகின்றார் - இன்பத்துப் பாலிலே முழுக்க முழுக்க அன்பு பற்றிப் பேசுகின்றார். இவ்வாறு முப்பால்களிலும் பேசப்பெறுகிற ஒரு பெருநெறி உண்டென்றால் அது அன்பு நெறிதான் என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. இனி அறிவு நெறி பொருட்பாலில் மட்டுமே - அதுவும் அரசனைப் பற்றிப் பேசும்பொழுது - அரசியலைப் பற்றிப் பேசும் பொழுது

குறிப்பிடப் பெறுகிறது. அறத்துப் பாலில் 'மெய்யுணர்வு' அதிகாரத்தில் மட்டும் ஓரளவு வற்புறுத்தப் பெறுகிறது.

*"எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பது அறிவு"*

என்பது திருக்குறள். இங்கு வற்புறுத்தப் பெறும் இந்த அறிவிலும்கூட அன்பினால் விளைந்த ஞானத்தைச் சொல்லு கிறாரே தவிர அந்த ஞானத்தை மறுக்கின்ற அறிவைப் பற்றிப் பேசவில்லை. எனவே முப்பால்களிலும் வலியுறுத்தப்பெற்ற அன்பு நெறியில்தான் திருவள்ளுவருக்கு அதிக ஈடுபாடு இருந்திருக்க முடியும் என்ற நம்பிக்கை நமக்கு இருக்கின்றது.

அடுத்து, திருக்குறள் உலக சமுதாயத்திற்காக – மக்கள் குலத்தின் வாழ்வுக்காக எழுந்தது என்ற அடிப்படைக் கருத்து எதிர்க்கட்சி நண்பர்களுக்கு உடன்பாடுடையதாக இருக்கு மானால் இந்த உலக சமுதாயத்தைப் பின்னிப் பிணைத்து இணைத்து வாழ்விக்கின்ற நெறியாகத் திருவள்ளுவர் அன்பு நெறியைத்தான் மேற்கொண்டிருக்கிறார் – கையாளுகிறார் என்பதை மறுக்க மாட்டார்கள், 'அன்பின் வழியது உயிர் நிலை' என்று திருவள்ளுவர் பேசுகின்றார். என்போடும் நரம் போடும் தசையோடும் நாம் இந்த உலகில் பிறந்து நடமாடு கின்ற பயன்கூட அன்பு காட்டுவதற்குத்தான் என்று திருவள்ளுவர் மிக அழகாக வலியுறுத்துகின்றார்.

*"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு*
*என்புதோல் போர்த்த உடம்பு"*

என்கிறார். 'நீ என்பு தோல் போர்த்த உடம்பாக இருக்கிறாய்' என்கின்றார். 'அறிவு இல்லாவிட்டால் நீ என்பு தோல் போர்த்த உடம்பாவாய்' என்று அவர் கூறவில்லை. அன்பினாலே உயிர்தங்கி வாழாது போனால் அது என்பு தோல் உடம்பாகி விடுகிறது என்கின்றார். 'மிருகக்காட்சி

சாலையில் காட்சிப் பொருளாக வைக்கப்படவேண்டிய கூடு ஆகிவிடுவாய்' என்று எச்சரிக்கின்றார்.

அடுத்து, உலகில் நிலவுகின்ற சண்டைகள், சச்சரவுகள், விவாதங்கள் ஆகியவற்றிற்கெல்லாம் பெரிதும் அடிப்படைக் காரணமாக இருப்பது அறிவுதான் என்று கூறுவதிலே தவறிருக்க முடியாது. மனிதன், அறிவினாலே சட்டப்படி எனக்குச் சொந்தம் என்று சொல்லுகின்றான். இன்னும் பல்வேறு காரணங்களை - நியாயங்களைக் காட்டிச் சொந்தம் கொண்டாடுகின்றான். இத்தகைய உணர்வுகளை யெல்லாம் அடித்துத் தொலைக்கவேண்டும் என்று சொன்னால் அது அன்பினாலேதான் முடியும் என்பது திருவள்ளுவர் கருத்து.

'அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"

என்பது திருக்குறள். எல்லாம் தமக்குரியர் என்று சொல்லு கின்ற உணர்வு எங்கே தோன்றுகிறது? அன்பின்மையில் தானே 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' அன்புடை யவன் தன்னைத் தன் உடைமையைத் தன் வாழ்க்கையை உலக மக்கள் குலத்தின் ஆக்கத்திற்காகக் கொடுப்பான் என்பதுபோல அன்பினைப் பெரிதுபடுத்திக் கூறுகின்றார் திருவள்ளுவர்.

அடுத்து,

"அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று"

என்கிறார் திருவள்ளுவர். அன்பில்லையானால் வாழ்க்கை பாழாகிவிடும் என்பது இதன் கருத்து. இதுபோல், அறிவைப்பற்றி சொல்லும்போது, அறிவில்லையானால் உன் வாழ்க்கை பாழ்பட்டுப் போகும் - குட்டிச்சுவராகிவிடும் என்று சொல்லவில்லை. அறிவு வேண்டும் என்றார்.

கு.XV.௨௩.

ஆனாலும், அன்பை முறைப்படுத்துவதற்கு அறிவு துணை செய்யலாம் என்றார். அதே நேரத்தில் அன்பில்லாத உயிர் வாழ்க்கை பாலைவனத்தில் பட்டமரம் தளித்தாற் போன்றது என்கின்றார். பாலைவனத்திலே தளிர்க்குமா? இன்னும் அதற்கு மேலே போய் கடுமையாக எச்சரிக்கின்றார் திருவள்ளுவர்.

> "என்பி லதனை வெயில்போலக் காயுமே
> அன்பி லதனை அறம்"

என்கின்றார் திருவள்ளுவர். ஆம். அறக்கடவுள் சுடும் என்கின்றார். யாரை? அன்பில்லாதவர்களை! எப்படி? என்பில்லாத புழுக்களை வெயில் சுட்டு வருத்துவது போல! இப்படிக் கூறுகின்ற வள்ளுவர், 'அறிவில்லாதவர்களை, அறக் கடவுள் சுடும்' என்று சொல்லவில்லை அறிவில்லாதவன் தன்னைத் தானே கெடுத்துக் கொள்வான் என்பதுபோல வேண்டுமானால் பேசியிருக்கலாம். அப்படி, அன்பில்லாத வனை அறக்கடவுள் சுடும் என்று சொல்லுகின்ற பொழுது, சுடும் என்ற அச்சத்தினைக் காரணங் காட்டியாவது இந்த வையத்தை அன்பு வழியிலே அழைத்துச் செல்லவேண்டும் என்ற விருப்பம் திருவள்ளுவருக்கு இருந்தது என்று நாம் உணர்ந்து கொள்ளலாம்.

இனி குடும்ப வாழ்க்கைக்குப் பொருளாதாரம் எவ்வளவு இன்றியமையாத ஒன்று என்பது அனைவருக்கும் தெரியும். பொருளை ஈட்ட அறிவு துணை செய்கிறது என்ற செய்தியும் அனைவருக்கும் தெரிந்த ஒன்று. ஆனாலும்கூடத் திருவள்ளுவர் குடும்ப வாழ்க்கைக்கு மூலப் பொருளாக-முதற் பொருளாக இன்றியமையாததாக அன்பையும் அறனையுமே வற்புறுத்துகின்றார்.

> "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது"

என்பது திருக்குறள்.

அடுத்து, இல்வாழ்வு மேற்கொண்டுள்ள ஒத்த மனமுடைய மணமக்கட்கு அன்பு வேண்டும்-அறம் வேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துகின்றார். மறந்துங்கூட அவர் அறிவை வலியுறுத்தவில்லை-அறிவு இன்றியமையாத தேவை என்ற கருத்திலே வேறுபாடு இல்லை. ஆனாலும்கூட,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது"

என்றே திருவள்ளுவர் வலியுறுத்துகின்றார். அறிவின் முயற்சியிலே பொருளீட்டுகிறார்கள்-அறிவின் முயற்சியாலே என்னென்னவோ செய்கிறார்கள். ஆனாலும் திருவள்ளுவர் இதனையும்கூட ஒப்புக்கொள்ளவில்லை.

"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்"

என்று குறிப்பிடுகின்றார் 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தில், அன்போடு வாராத பொருளை நீ வைத்துக் கொள்ளாதே-இழந்துவிடு என்றே, சொல்லுகின்றார்கள். பொருட்பாலிலும்கூட அவர் அன்பு நெறியையே வலியுறுத்து கின்றார்.

அடுத்து, அரச இயல்பு கூறவந்த திருவள்ளுவர்,

"எண்பதத்தால் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தால் தானே கெடும்"

என்று கூறுகின்றார். எண்பதத்தான் என்பது அன்பினாலேயே வருகின்ற இனிய தண்ணளி, தொடர்ந்து,

"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு"

என்கின்றார் திருவள்ளுவர். ஆம் குடிகளைத் தழுவிப் போ! தழுவிக் கோலோச்சு என்று கூறுகிறார். வெறும் அறிவால்

மட்டும் விவாதம் பண்ணிக்கொண்டிருக்கிற எந்த மன்னனும் நாட்டு மக்களைத் தழுவிப் போக முடியாது, தரணியாளும் மன்னனிடத்துக் குடிமக்கள் எதிர்பார்ப்பது தலையளிதான். குடை எப்படி வெயிலின் வெப்பத்திலிருந்து மனிதனைக் காப்பாற்றுகிறதோ, அப்படியே அரசனுடைய தண்ணளி- அரசனுடைய அன்புக் கருணை, இந்த நாட்டு மக்களைத் துன்பங்களினின்றும் துயரங்களினின்றும் காப்பாற்ற வேண்டும் என்பதற்காகவே மன்னனிடத்தே குடை இருக்கிறது.

> "துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்
> அளியின்மை வாழும் உயிர்க்கு"

என்கின்றார் திருவள்ளுவர். இந்த விரிந்த உலகம், வான்மழை பொய்த்தால் வறண்டு விடுவதுபோல, மன்னனுடைய தண்ணளி இல்லாத போனால் அந்த மன்னனின் ஆட்சியின் கீழ் உள்ள நாடு கெட்டுப்போய் விடும் என்கிறார். இங்கும் திருவள்ளுவர் அன்பு நெறியைத்தான் வலியுறுத்துகின்றார்.

அடுத்து,

> "படைகுடி, கூழ்அமைச்சு, நட்புஅரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு"

என்கின்றார் திருவள்ளுவர். இவற்றில் அறன் ஒன்றைத் தவிர ஏனைய ஐந்தும் அன்பின் வழிபட்டவை தாமே! பொதுவாக ஓர் அரசனிடத்திலே படைகளுக்கு அளவு கடந்த அன்பும் பற்றும் இருந்தால்தான் அந்த அரசனுக்காக அவர்கள் போர்க்களத்தில் நின்று போராடி உயிர் துறப்பார்கள். அவர் களுக்கு மன்னனிடத்து அன்பும் பாசமும் இல்லையானால், அவர்கள் போர்க்களத்திற்குப் போவதுபோலப் போய் வேறெங்காவது தூங்கிவிட்டு முகாமை மாற்றானுக்குக் கொடுத்துவிட்டும் வந்துவிடுவார்கள். அரசன் என்றும்

படைகள் என்றும் வேற்றுமை பாராட்டாத உறவு கலந்த வாழ்க்கை முறை தேவை.

அடுத்து, நட்பு உலகம். நட்பும் அன்பினால் பெறக்கூடிய ஒன்றுதான். அதற்கடுத்து, நற்குடிப் பிறந்தாரின் இயல்புகள் என்று திருவள்ளுவர் ஒரு பட்டியல் கொடுத்திருக் கிறார். அஞ்சாமை, அறிவு, ஈகை, ஊக்கம் இவை நற்குடிப் பிறந்தாரின் இயல்புகள் என்கின்றார். இவற்றில் ஈகை அன்பு வழிபட்டது என்கிறார் திருவள்ளுவர். காட்சிக்கு எளியனாக இருத்தல் வேண்டும்.

> "காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
> மீக்கூறும் மன்னன் நிலம்"

அறிவுடையவர்களோ, தம்மை நாடி வருகின்றவர் களின் தரம், தகுதி முதலியவற்றை ஆராய்வார்கள். வந்திருக்கிறவன் பெரிய மனிதனா? சின்ன மனிதனா? படித்தவனா? படிக்காதவனா? வறியவனா? செல்வச் சீமானா? என்பவற்றையெல்லாம் பார்ப்பார்கள்-ஆராய்வார்கள். ஆனால், அன்புடையவர்களாக இருப்பவர்கள் இந்தத் தரம், தகுதி, வேறுபாடுகள் ஆகியவற்றையெல்லாம் ஆராய மாட்டார்கள். காட்சிக்கு எளியனாக இருப்பவன் தன்னை நாடி வந்திருப்பவன் ஒரு குடிமகன்-அவனிடத்து அன்பு காட்ட வேண்டியது தன்னுடைய கடமை என்று கருதி அன்பு காட்டுவான். இந்த உணர்ச்சி அன்பினால் வரக்கூடியதே யன்றி, அறிவினால் வரக்கூடியதன்று.

> 'இன்சொல்லால் ஈத்தளிக்க வல்லாற்கும் தன்சொலாற்
> றான்கண் டனைத்திவ் வுலகு.'

என்கிறார் திருவள்ளுவர். 'இன்சொலால் ஈத்தளிக்கவல் லார்க்கு' என்று சொல்லுகின்றார். இனிய சொல்லாலே கொடுத்துக் காப்பாற்றுகின்றவர்களை இந்த உலகம் புகழ்ந்து

பாராட்டும். அவர்களுக்கு ஒரு பெரு நிலையை உண்டாக்கும் என்கிறார்.

*'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு*
*இறையென்று வைக்கப் படும்'*

என்று பேசுகிறார்.

இப்படி இதுகாறும் நாம் கூறிய செய்திகளிலிருந்து பார்த்தால், அறிவு நெறியைத் திருவள்ளுவர் உடன்படு கின்றார். ஆனாலும், அன்பு நெறியை மிகுதிப்படுத்துகிறார் என்பதை உணரலாம். இப்படி நாம் கூறுவதற்குச் சான்று அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் ஆகிய முப்பால் களிலும் திருவள்ளுவர் அன்புநெறியை வலியுறுத்துவதைக் காட்டலாம். அறிவு நெறியோ மருந்துபோல் பயன்படுத்தப் பெறுகிறது. இன்னும் சொல்லப் போனால், அன்பு நெறிதான் நூல் முழுதும் வலியுறுத்தப் பெறுகிறது. இவற்றிற்கெல்லாம் மேலாக, காமத்துப்பால் முழுவதுமே அன்பு நெறியை வலி யுறுத்துவதற்காகச் செய்யப் பெற்றது போலவே தோன்றுகிறது. இனியவை செய்தல், இன்னா கூறாமை, வெஃகாமை, அழுக்காறாமை முதலிய ஒழுக்கங்களையெல்லாம் தோற்று விக்கின்ற தன்மை அன்பு நெறிக்குத்தான் உண்டே தவிர அறிவு நெறிக்கு அல்ல. அறிவு நெறியை வற்புறுத்துகிற எந்த அதிகாரத்தை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். ஈதல் அன்பால் விளையக்கூடியது-ஒப்புரவறிதல் அன்பால் விளையக்கூடியது-'ஒத்ததறிவான் உயிர் வாழ்வான்' என்றால் அதுவும் அன்பு நெறியை வலியுறுத்துவதுதான்.

*'தாமின் புறுவ துலகின் புறக்கண்டு*
*காமுறுவர் கற்றறிந் தார்'*

என்கிறார் திருவள்ளுவர்.

கற்ற அறிவுடையவர்களாக இருப்பார்களானால், தாம் பெறுகிற இன்ப அனுபவத்தை ஊராரும் உலகத்தாரும் பெறவேண்டும் என்று விரும்ப வேண்டும். அப்போதுதான்

அந்த அறிவுக்குப் பயன் உண்டு என்கின்றார். அறிவு இருந்தாலும் அது அன்பினுடைய அடி நிழலிலே வந்து தழைக்க வேண்டும். அவ்வாறு அன்பின் அடி நிழலிலே வந்து புகாது போனால் அதற்கு மரியாதையும் மதிப்பும் இல்லை என்பது போல,

> 'அறிவினால் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
> தன்நோய்போல் போற்றாக் கடை'

என்று பேசுகின்றார். படித்தவர்கள் - சான்றோர்கள் நிறையப் பேர் இருக்கலாம். ஆனாலும், பிறிதின் நோய் தன் நோய் போல் போற்றாது போனால் 'அறிவினால் ஆகுவதுண்டோ?' என்று கேட்கின்றார். அது மட்டுமன்று. அறிவு நெறிக்குக் குறைகளும் குற்றங்களும் உண்டு என்றும் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். அன்பு நெறிக்கும் அவர் குற்றம் குறை கற்பிக்கவில்லை. 'புல்லறிவாண்மை' என்கின்றார்-அறிவு 'மயங்கும்' என்கின்றார்-வறுமை அறிவைக் கொல்லும் என்று சொல்லுகின்றார். ஆனால், வறுமை அன்பைக் கொல்லும் என்று அவர் குற்றம் குறை கற்பிக்கவில்லை. 'புல்லறி வாண்மை' என்கின்றார்-அறிவு 'மயங்கும்' என்கின்றார்-வறுமை அறிவைக் கொல்லும் என்று சொல்லுகின்றார். ஆனால், வறுமை அன்பைக் கொல்லும் என்று அவர் எங்கும் சொல்லவில்லை இப்படிப் பல்வேறு வகைகளிலும் பார்க்கின்றபொழுது, திருக்குறளில் அன்பு நெறியே மிகுதியும் வற்புறுத்தப் பெற்றிருப்பதை யுணரலாம்.

இனி, அறிவையும் அன்பையும் ஒப்பு நோக்கிப் பேசுகின்ற இடத்தில், திருவள்ளுவர் என்ன சொல்லுகின்றார் என்பதுதான் இதற்கு எடுத்துக்காட்டாக இருக்க முடியும். அறிவு நெறியின் மேன்மையைப் பற்றிக் கூறுகிற குறட்பாக்களில் அறிவை வலியுறுத்திக் கூறுகிறார். அதுபோல 'அன்புடைமை' அதிகாரத்தில் அன்பை வலியுறுத்துகிறார். ஆனாலும் இரண்டையும் ஒப்பு நோக்கிப் பேசுகின்ற

பொழுது, ஒன்றை மிகுதிப்படுத்தியும் இன்னொன்றை அடுத்த படியில் வைத்துப் பேசுகின்றார். அப்படிப்பட்ட குறட்பாக்கள்,

'அறிவினால் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்றாக் கடை'

என்பதும்,

'அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று'

என்பதும் ஆகும். அவிசொரிந்தாயிரம் வேட்டல் என்பது அறிவுநெறி. இப்படிச் செய்தால் என்ன பயன் கிடைக்கும் என்று கணக்கிட்டு எண்ணிப்பார்த்து, சுருதிப்படி சாத்திரப்படி செய்வது அறிவுநெறி. ஆனால், ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை அன்புநெறி-இந்நெறிதான் சிறந்தது; மேலானது என்பது திருவள்ளுவர் கருத்து.

மேலே கூறிய இரு குறட்பாக்களின் செய்திகளும் நமக்கு நிறைவான செய்திகள். இதனை எதிர்க்கட்சியினர் இரண்டொன்றைக் கூறி மறுப்பார்கள். "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்று சொல்லிவிட்டார்.

'இன்மையுள் இன்மை விருந்தோரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை'

என்று சொல்லிவிட்டார்; இவற்றாலெல்லாம் அவர் அறிவு நெறியைத்தானே மிகுதியும் வலியுறுத்தியுள்ளார் என்று கேட்பார்கள்.

'கண்ணுடையர் என்போர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையார் கல்லா தவர்'

என்ற குறட்பாவை எடுத்துக் காட்டுவார்கள். கண்ணோட்ட மில்லையானால், அது கண் அல்ல-புண் என்று உணரப் படும் என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறார். அடுத்து,

அதிகார முறைவைப்பைப் பார்த்தாலும்கூட, அன்பு நெறியை வற்புறுத்துகிற அதிகாரங்கள், அன்பினால் விளைகின்ற உணர்ச்சிகள், பண்பாடுகளை வலியுறுத்துகிற அதிகாரங்கள் நிறைய இருக்கின்றன - இவற்றாலெல்லாம் வள்ளுவர் மிகுதியும் வலியுறுத்திய அன்பு நெறியே என்று அறியலாம்.

இயற்கை உலகியலில் ஏதோ ஓர் ஒழுங்கிருக்கிறது. அந்த ஒழுங்கு ஆண்டாண்டுக்காலமாக மாறவில்லை. அந்த ஒழுங்கை மையமாக வைத்தே மனித உலகம் வாழ்ந்து கொண்டிருக்கிறது. ஓரோரு வழி அந்த ஒழுங்கு தவறும் பொழுதுதான் விபத்துக்கள் தோன்றுகின்றன. விபத்துக்களின் விளைவாக அழுகை தோன்றுகிறது.

இயற்கையில் உள்ள ஒழுங்கைவிட மனித குலத்தில் ஒழுங்கு சற்று அதிகமாகவே இருத்தல் வேண்டும். காரணம் இயற்கை நியதியின்பாற்பட்டது. மனிதன் அதற்கும், மேலாக அறிவு, அன்பு ஆகிய ஒழுங்கின் நிலைக்களன்களாகிய உணர்வுகளைப் பெற்றவன். ஆனால் இன்றோ, ஒழுக்க நடையும் தளர்ந்து வருகிறது அவ்வழி ஒழுங்கும் நிலை பெற வில்லை. ஏன் இந்த நிலை? ஒழுக்கம் ஒழுங்கு ஆகியவை களையும்கூடப் பரந்த நிலையில் இயல்புகளுக்கேற்றவாறு நோக்காமல் சிறிய எல்லைக்குட்பட்ட தன்னல நோக்குட னேயே நிர்ணயிக்கத் தலைப்பட்டுவிட்டார்கள். இன்று ஒருவர் ஒழுக்கமென்று கூறுவது பிறிதொருவருக்குத் துன்ப மாகவும், தொல்லையாகவும் இருப்பதைக் காண்கின்றோம். இந்த அவல நிலைக்குக் காரணம், மனித குலத்திடையே ஒருமைப்பாட்டுணர்வு வளராமையேயாம். அவ்வழிப்பட்ட அன்பும் அரும்பி மலரவில்லை. மனமாற்றத்திற்கு அடிப்படையான கருத்துப் புரட்சியும் ஏற்படவில்லை.

ஒழுக்கத்தினின்று ஒழுங்கு தோன்றுகிறது. இது தொடக்கநிலை; அறிவுநிலை, பின் ஒழுங்கிலிருந்து ஒழுக்கம்

தோன்றுகிறது. இது வழி நிலை பயிற்சிக் கொள்ளும் நிலை. முன்னையது புலன்களின் சார்புடையது. பின்னையது பொறிகளின் சார்புடையது. முன்னையது சுதந்திரமானது. பின்னையது அஞ்சியும் செய்யலாம். ஒழுங்கு நெறி கற்றுக் கொடுக்க முற்றிலும் தகுதிப் பாடுடையவன் இயற்கையென்ற பேராசிரியன். ஆனாலும் மனிதனிடத்தில் கற்றுக் கொள்ளும் உணர்ச்சியைவிட அனுபவிக்கும் உணர்ச்சியே மேலோங் கிற்று. அவன் இயற்கையிலிருந்து பாடம் படித்துக்கொள்ளத் தவறிவிட்டான். ஆனாலும், அடக்கியாண்டு அனுபவித்துக் கொண்டு வருகிறான். எதையும் அனுபவிக்க வேண்டும் என்ற உணர்வு ஆசையை வளர்க்கும். அவ்வழி விரும்பத்தகாத போட்டாப் போட்டிகள் தோன்றும். ஒழுக்கம் உறுதியற்றுப் போய்விடும். ஒழுங்கு நிலை தடுமாறும்.

இயற்கையிலிருந்து ஒழுக்கத்தையும் ஒழுங்கையும் கற்றுக்கொள்ளத் தவறிவிடும் மனிதனுக்கு ஒழுங்கைக் கற்றுக் கொடுப்பது சமுதாயம். அந்த பரந்துபட்ட சமுதாயக் குடும்பம் என்ற நிலைக்களனிலிருந்து ஒழுங்கைக் கற்றுக் கொள்ளுகிறான். பாரம்பரியம் என்பது உணர்ச்சிகளின் சங்கிலி - உணர்ச்சிகளின் பிரதிபலிப்பு. இது எங்கோ ஒரோ வழிதான் மாறும். பெற்றோர் சமுதாயம் பெருமைக்குரியதாக அமையாத போனால் ஒழுங்குகள் மாறும். அவை உறுதிக் கொள்ள முடிவதில்லை. ஒழுங்குகள் கால்கொள்வதில்லை. அஞ்சல் தலையில் ஒட்டுதற்குரிய பசையுண்டு. எனினும் அதுவே ஒட்டுதற்குப் போதாது. அதற்குப் புறச் சேர்க்கை யாகச் சிறிது தண்ணீரும் தேவை. அதுபோலத் தனி மனிதன் தன் சிந்தனையாலும் அறிவினாலும் ஒழுங்கைக் கடைப் பிடிக்க எவ்வளவுதான் முயற்சித்தாலும் அதைக் காப்பாற்றிக் கொள்ளப் பெற்றோர் சமுதாயத்தின் ஒழுக்க முறை துணை செய்யாவிட்டால் பயனில்லை. இன்றையச் சூழ்நிலையில் பள்ளிக்கூடத்திற்கும் வீட்டிற்கும் போர் நடந்து கொண்டிருக் கிறது! ஆசிரியர்களும் பெற்றோர்களும் இரு அணிகளாகப்

பிரிந்து நின்று போர் புரிந்து கொண்டிருக்கிறார்கள். இந்தப் போர் இன்றோ நேற்றோ தொடங்கியதல்ல. ஆயிரமாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு வருகின்றது இந்தப் போராட்டத்தில் ஆசிரியர் உலகம் தொடர்ந்து தோல்வியைக் கண்டு அனுபவித்து வருகிறது. அது ஒரு பொழுதும் வெற்றி பெற்றதில்லை. பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுப்பதற்கு மாறான வாழ்க்கையே வீட்டிலும், நாட்டிலும் நாம் காண்கின்றோம் அதனாலன்றோ, 'பள்ளிக் கணக்குப் புள்ளிக்குதவாது' ஏட்டுச் சுரக்காய் கறிக்குதவாது என்ற பழமொழிகள் தோன்றின. பெற்றோர் சமுதாயம் மனம் வைக்க வேண்டும். நேற்றைய அனுபவத்தின் விளைவாக வரும் அறிவோடியைந்த வாழ்க்கையை விரும்பி ஏற்றுக் கொள்ளவேண்டும். 'தம்முடைய குழந்தைகளும் அதனை ஏற்றுக்கொள்ளும்படி முயற்சி செய்ய வேண்டும். நன்றல்ல வற்றை ஒதுக்க வேண்டும். நன்றுடையராக இருந்தால் மட்டும் போதாது. தீமையைக் கடிந்து விலக்கு மாற்றலுடையராகவும் இருக்க வேண்டும். அப்போதுதான் நன்றியின் பயனை அனுபவிக்க முடியும். நன்றியின் பயன் விளையும். "நன்றுடை யானை...தீயதிலானை" என்பது தமிழ் மறை. இன்றையக் குறை நாளை நிறையாக வேண்டும். இதுவே வாழ்க்கை முறை. குறையே ஒரு பெருங் குற்றமாக முடியாது குறையே ஒரு குற்றமன்று. ஆனால் குறையைக் குறையென்றுணராமல் இருப்பதுதான் குற்றமாகும். இன்று பலரிடம் குறையைக் குறையென்றுணரும் அறிவு இருக்கிறதா என்பதே கேள்வி அந்த அறிவும் ஆற்றலுடன் செயல்படுகிறதா என்று பார்ப்பது அவசியம். எப்படி உலகியல் அரும்பு மலர்ந்து மலராகிறதோ பிஞ்சு காயாகிக் கனியாகிறதோ அதுபோல, மனிதனும் குறைகளைக் கடந்து பூரணத்துவம் பெற்று முழுமனிதனாக வளர்ந்து அதற்குரிய வாழ்க்கை முறைகளைப் பெற்று, வாழ்க்கையில் வெற்றி பெறுவதேயாகும். அந்த வாழ்க்கை முறைக்கு வீடும் நாடும் துணை செய்யவேண்டும்.

ஆசிரியர்கள் புனிதமான தொண்டில் ஈடுபட்டிருப்ப வர்கள். ஆசிரியத் தொழில் யாழை மீட்டுதலைவிட நுணுக்க மான தொழில். யாழை மீட்டுகிற வழி மீட்டாது போனால் இனிய இசை தோன்றாது. யாழும் கெடும். கேட்பவர்களும் அருவறுப்பர். புறப்பொருளாகி, நம்முடைய பூரண இயக்கு தலுக்குக் கட்டுப்பட்ட யாழின் நிலையே இதுவானால், புலப்படாப் பொருளாகவும் நம்முடைய பூரண ஆற்றலுக்குக் கட்டுப்படாததாகவும் உணர்ச்சிகளின் சின்னமாகவும் இருக்கின்ற உயிர்களைத் திருத்தும் வேலை எவ்வளவு சிக்கலானது. சிக்கலானது மட்டுமல்ல, உலகில் எத்தொழி லுக்கும் தேவைப்படுகின்ற ஆற்றலைவிட இதற்கு ஆற்றல் அதிகமாகத் தேவை என்பதையும் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். ஒழுங்கின் பெரும் பகுதி, பிறர் வாழ்க்கையிலிருந்து எடுத்துக் கொள்வதேயாகும். ஆசிரியர்கள் தம்முடைய வாழ்க்கை முறையினாலேயே மாணவர்களுக்கு ஒரு பேராசிரியராகத் திகழ வேண்டும். சொல்லுக்கும் செயலுக்கும் இடையே ஏற்படும் வேற்றுமை அல்லது பிளவு உடலுக்கும் உயிருக்கும் இடையே தோன்றும் பிளவைப் போன்றது. உடலினின்றும் உயிர் பிரிந்தால் பிணமாகும். செயலினின்றும் சொல் பிரிந்தால் சொல் பிணமாகும். அதற்கு ஆற்றல் இல்லை ஆதலால் ஆசிரியர்கள் முன்மாதிரியாக வாழ்ந்து காட்டவேண்டும் அடுத்து, மனம் நுண்ணியது, மெல்லியது. பின்னிக் கிடக்கும் முடிச்சுகளைச் சிக்கல் நீக்கிச் சீர்செய்ய எத்துணைப் பொறுமை தேவையோ அதைவிடப் பன்னூறு மடங்குப் பொறுமை தேவை, மனித குலத்தின் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு, குறை காண்பது எளிது - ஆனாலும், குறைகளுக்குரிய காரணங்களைக் கண்டுபிடிப்பதே அரிய முயற்சி. காரணங்களைக் கண்டு, அக்காரணங்களையே களைந்து குற்றங்கள் தோன்றா வண்ணம் செய்தல் வேண்டும் அதனாலன்றோ திருவள்ளுவர்.

"நோய்நாடி நோய் முதல்நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்கிறார்.

"நோய் முதல் நாடி" என்று குறிப்பிடுகிறார். "மூல நோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்" என்பது தமிழ்மறை. ஆசிரியர்கள் மலர்களில் கையாளும் மென்மையை விட அதிக நுணுக்கமாக மாணவர்களை-மாணவர் மனங்களைக் கையாளவேண்டும் அவர்களின் உணர்ச்சிகளை நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். அதற்கு ஒரு மதிப்பும் கொடுக்க வேண்டும். எனினும் தன் திசையில் செல்ல அனுமதிக்கக் கூடாது. அப்படியானால், தடை செய்வது என்று பொருள் அல்ல. அவர்களை நல்வழிப்படுத்துதல் வேண்டும் இதனைத் திருமூலர் "மடை மாற்றல்" என்று குறிப்பிடுவார். உணர்ச்சி களை அடக்கமுடியாது-ஆனாலும் அந்த உணர்ச்சிகள் பற்றிப் படர்கின்ற கொழுகொம்புகளை மாற்றிவிடுவதின் மூலம் சீர் செய்ய முடியும். போர் செய்யும் உணர்ச்சி இயல்பி லேயே மனிதனுக்கிருக்கிறது இந்த உணர்ச்சியைத் தன்னலத் திற்காக-தன் உற்றார் உறவினர்களோடு போரிடும் வகையில் வளராமல் தடுத்துத் தீமையை எதிர்த்துப் போராடும் போருணர்ச்சியாக வளர்க்கலாம்-வளர்க்க வேண்டும். உழவர்கள் நிலத்தின் இயல்பைத் தெரிந்து கொண்டாலே சிறந்த விவசாயிகளாகிறார்கள். அதுபோல ஆசிரியர்கள் குழந்தைகளின் மன இயல்பைத் தெளிவாகப் புரிந்து கொண்டாலே நல்லாசிரியர்களாகத் திகழமுடியும். நிலத்தின் இயல்புக்கு ஏற்றவாறு உரமிடப்படுதல் போல குழந்தைகளின் மன இயல்புக்கு ஏற்றவாறு நல்ல கருத்துணர்வுகள் வழங்கப் பெறுதல் வேண்டும். உடல் நலத்திற்கு ஏற்ற உணவுகள் கிடைக்காதபோது, உடல் நோய்வாய்ப்படுவது போலவே, மனநலத்திற்கேற்ற கருத்துணவுகளும் கிடைக்காதபோது ஒழுக்க உணர்வுகளும் தளரத்தான் செய்யும். அதனைப் பருவ

மறிந்து தேவையறிந்து ஆசிரியர்கள் வழங்க வேண்டும்– ஆசிரியரால் வழங்கப் பெற்ற கருத்துணவைச் செறித்து செயல்படுத்தப் பெற்றோர்கள் துணை நிற்கவேண்டும். மனித குலத்திற்குள் அன்பு வழிபட்ட துணையும் அமைதி தழுவிய நல்வாழ்க்கையும் வளர–ஒழுங்கு வளர ஆசிரியர்களும் பெற்றோர்களும் முயற்சித்து வெற்றியடைய நம்முடைய பிரார்த்தனை.

## 14. வளம் குன்றியது ஏன்?

செல்வ வளம் கொழித்த நாடு செந்தமிழ் நாடு. சோறு படைத்த நாடு; வறுமையின் வாடையே தெரியாத நாடு, ஒரு காலத்தில். இப்பொழுது எங்கும் பட்டினி–பஞ்சம் தலை காட்டுகிறது. உணவுப் பொருள்கள் உற்பத்தி குறைந்து வருகின்றன. தமிழ் நாட்டில் இயற்கை உணவுகள் பல உண்டு. சிறப்பாகக் கிழங்கு, தேன், பழவகைகள். இவைகள் தமிழகத்திலேயே விளைவிப்பாரின்றி விளைந்து கொண்டிருந்தன.

உழவர் உழாத, நன்கு பயன்படு பொருள்களை நிறையக் கொண்டிருந்தது தமிழகம் என்று சங்க இலக்கியங் களால் பெறப்படுகிறது. பாரியினது பறம்பு நாடு இத்தகைய வளம் நிறைந்தது என்று கபிலர் பாடுகின்றார். மூங்கில், நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் முதலியவை நிலமகள் தாமே அளித்த தகவுடைப் பொருள்கள். உழவர் உழுது பயிரிடும் பொருள்களும் செழுமையுடன் வளர்ந்து வளம் பெருகின நாடு இந்த நாடு. பண்டைத் தமிழகம் களிற்றைக் கொண்டு கதிரடித்தது. ஆனால் இன்றையத் தமிழகம் நேர்மாறான நிலையில் காட்சி தருகிறது. இன்று தாமே விளையும் பொருள்களின் மிகுதி இருப்பதாகத் தெரிய வில்லை. பாரி வள்ளல் இருந்த, பறம்பு மலையாகக் கருதப் படுவது இன்றைய பிரான்மலையேயாம். இப்பிரான்

மலையில் சில ஆண்டுகளுக்கு முன்பு வரையில் படிக் கணக்கில் தேன் கிடைத்துக் கொண்டிருந்தது. இப்பொழுது தேன் கூட்டைத் தேடிப்பிடிக்க வேண்டியிருக்கிறது. எனவே, தமிழகத்தின் வளத்தில் பெரிய வீழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இவ் வீழ்ச்சிக்குக் காரணம் யாதெனச் சிந்தித்தல் வேண்டும்.

குறையிருக்கும் இடத்தைக் கண்டு நிறைவு செய்தல் வேண்டும். அதுதான் இன்றைய பஞ்சத்தைப் போக்க வழி. குற்றத்தைத் தமிழ் நாவலர் திருவள்ளுவர் எடுத்துக் கூறியுள்ளார். குற்றமற்ற நிலையில் நிறைந்த விளைபொருள் களைத் தருகின்ற நிலம்கூடப் புகழ் இல்லாத உடம்பைச் சுமந்தால் பயன் குன்றும் என்று அவர் கூறுகிறார். இங்குப் புகழ் எனப் பேசப் பெறுவது இன்று பெரும்பான்மை யோரால் கருதப்படும் புகழ் அல்ல. வள்ளுவனார் "பொய்யாமை யன்ன புகழில்லை" என்று பேசுகின்றார். பொய் அறியாத வாழ்க்கையே அவர் குறிப்பிடும் புகழ்.

**"பொய்யறியா வாய் மொழியார் புகழ் நிறைந்த நன்மாந்தர்"** என்று மதுரைக் காஞ்சி கழறுகிறது. இத்தகு மாந்தர்கள்தாம் புகழுடைச் செல்வர்கள். அவர்களே நல்லவர்கள். **"எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நிலமகளும் நல்லவள்"** என்றுதானே புறநானூறு கூறுகிறது. இத்தகு நலம் நிறைபுகழ்ச் செல்வர்களைத் தாங்கப் பெறாத நிலத்தின் பயன் குன்றும்.

> "வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
> யாக்கை பொறுத்த நிலம்"

என்பது வள்ளுவர் வாய்மொழி. எனவே, இன்றைய வறுமைக்குக் காரணத்தை வள்ளுவர் காட்டுகின்றார். அறமல்லாதவற்றை மக்கள் விரும்பி ஒழுகுவதனாலே வளம் குன்றும் என்று குறிஞ்சிக் கலியும் கூறுகிறது.

> "சிறு குடியீரே! சிறுகுடி யீரே!!
> வள்ளிகீழ் விழா வரைமிசைத் தேன்தொடா

*கொல்லை குரல்வாங்கி யீனா மலைவாழ்நர்*
*அல்ல புரிந்தொழுக லான்"*

என்பது கருத்துவளம் நிறைந்த கலித்தொகையின் அடிகள். இந்த அடிகளைத் தமிழ் மக்கள் சிந்தனையில் இருத்த வேண்டும். சிந்தையிலிருத்துவதோடன்றி வாழ்க்கையிலும் அமைத்துக்கொள்ள வேண்டும். நல்லனவே எண்ண வேண்டும். அறமே ஆற்றவேண்டும். அச்சத்தாலும் அன்பாலும் நல்லறநெறிக்கு ஆற்றுப்படுத்துகின்ற நெறிநின்று வாழ்ந்து அல்லன செய்யாது நல்லனவே செய்து வாழ்ந்தால் வயலும் விளையும், நிலமும் உயரும்.

## 15. மழை வளம்

மாநிலத்துயிர்கள் வாழ்க்கையின் இன்ப நலம் நீர் வளத்தைச் சார்ந்திருக்கிறது. நீரின்றி வாழ்க்கையே இல்லை. **"நீரின்றமையா உலகம் போல"** என்று நற்றிணையே பேசுகிறது. **"மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை,"** என்று ஒழுக்க நூல் ஓதுகிறது. அதனாலன்றோ நல்லனவே சொல்லும் திறமுடைய திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துக்குப் பின் வான் வளத்தை வாழ்த்துகிறார்.

இறைவனது பேரருளை மக்கள் உணரக் கருவியாக அமைந்து கிடப்பது இயற்கை. இயற்கை உடல்; இறைமை நிலை உயிர். முதல்வனது கங்கு கரையற்ற கருணைப் பெருக்கே வான்மழை. **"இன்னருளே என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்"** என்று மாணிக்கவாசகர் பாடுகின்றார்.

வானம் பொய்ப்பின் வளம் குன்றும். வளம் குன்றினால் வாழ்க்கையில் இன்பம் அருகித் துன்பம் பெருகும். மழைவளம் மாறின் வையகம் கெட்டுவிடும். 'உல்கு புரப்பது மாகி' என்று புறம் பேசுகின்றது. மதலையின் பசிநோய்

அறிந்து பாலூட்டி வளர்க்கும் தாய்போல மழையானது வேண்டின காலத்தே பெய்து, உலகை அளித்துப் பாது காக்கும் முறைமையது என்று மருதக்கலி கூறுகிறது. அருளுணர்ச்சியைப் புலப்படுத்தக் குறிஞ்சிக் கலி ஆசிரியர். **"மழையினும் அருள் சிறந்தாய்"** என்று கூறுகின்றார். **"மா மழை போற்றுதும் மா மழை போற்றுதும்"** என்று இளங்கோவடிகள் இன்புற ஏத்துகின்றார்.

தலைவிக்குத் தண்ணளி செய்யவேண்டிய கடமைப் பாடுடைய தலைமகன் ஒருவன் தலைவியைப் பிரிய எண்ணங்கொண்டான். தனது எண்ணத்தை எடுத்துக் கூற முயன்ற தோழி மழை வளம் மாறுபடுங்காலத்து உலகம் கெடுவதுபோல, நீ பிரியுங் காலத்துத் தலைவியின் அழகு கெடும் என்று கூறுகிறாள்.

> "யாநிற் கூறுவ தெவனுண் டெம்மினு
> நீநற் கறிந்தனை நெடுந்தகை வானந்
> துளிமாறு பொழுதினில் உலகம் போலுநின்
> னளிமாறு பொழுதினில் வாயிழைகவினே"

என்பது கலித்தொகை. பிரிவுத் துயரின் எல்லையில் உழலும் தலைவி தனது வருத்தத்தினுடைய மிகுதிக்கு எல்லையாகவும் மழையின்மையைத்தான் குறிப்பிடுகின்றாள். கோடை உலகத்தைச் சுடும்படியாகப் பெய்யாமற் போன மேகம் வருத்துமாறு போலத் தலைவனது கைவிடுஞ் செயல் வருத்து கிறது என்று நெய்தற்கலி ஆசிரியர் நயம் பெறக் காட்டு கின்றார். மழையின்மை துன்பத்துள் துன்பம்; வான்மழை செல்வத்துள் செல்வம்.

இங்ஙனம் உலகை வாழ்விக்கும் மழை தவறாது பொழிய வேண்டுமானால், அதற்காவனவும் அறிந்து கொள்ளுதல் வேண்டும். இன்று பலர் வான் மழைக்குக் காரணம் கடலும், கதிரவனும், குளிர்ந்த காற்றும் என்றே

கருதுகின்றனர். இவையே காரணமாயிருப்பின் இன்று மழைவளம் வற்றுவானேன்?

செயற்கை முறையில் மழை வரவழைக்கும் முயற்சியில் விஞ்ஞான உலகம் ஈடுபட்டுள்ளது. அவர்கள் வெற்றியும் காணக்கூடும். ஆனால் அவ் வெற்றி வையகம் முழுவதுக்கும் பயன் தருமா என்பதை எல்லோரும் சிந்திக்க வேண்டும். எங்கோ ஒரு பகுதியில் பெரும் பொருட் செலவில் இயற்கை மழை பெய்விக்க இயலும். ஆனால் செலவின்றி மாநிலம் முழுவதற்கும் பயன் தருகின்ற பெருமழையை விரும்புவோமானால், நமது பண்டைத் தமிழ்ப் பெருமக்கள் மழைக்குக் காரணம் என்று கருதிய அறவுணர்வுகளையும் சிந்தித்து வளர்க்க வேண்டும்.

மக்கள் அன்பின்றி – அறவுணர்வின்றி – அருளொழுக்கமின்றி – அல்லாதனவே செய்து வாழ்ந்தால் மழை பொழியாது என்று தமிழ்ச் சான்றோர்கள் கருதி நல்ல வண்ணமே வாழ்ந்தனர். மழை நீங்குதற்குக் காரணமான கொடுமையை உடைய ஊர் என்று பாலைக்கலி பகருகிறது. மங்கை நல்லாரின் கடவுட் கற்பு நிலையும் வான்மழை பொழிதற்குத் துணை செய்யும். "வான்தரு கற்பினுள்" என்று பாலைக் கலி பேசுகிறது. எனவே, மழைத்துளி பெருகி – மாநிலம் செழித்து – செல்வ வளம் கொழித்து – இன்ப நலம் பூத்திட – மகிழ்ச்சியிற் சிறந்து மக்களினம் வாழ விரும்புமானால் அன்பு பெருக வேண்டும். அறம் பல வளரவேண்டும். நல்லனவே எண்ணவும், பேசவும், செய்யவும் மக்கள் முயலவேண்டும். இதனை யாரும் மறுக்க முடியாது. இது சங்கத் தமிழர் அறிந்து போதித்த நீதியுமாகும்.

இன்று தமிழகம் வான் மழையின்றி வாடுகின்றது. பல்லோரை உண்பிக்கும் நெற்பயிர்கள் வாடுகின்றன. மக்கள், குடிக்கும் நீருக்குக் கூடப் பரிதவிக்கின்றனர். பசும் போர்வை போர்த்து அழகு பொலியத் தவழ்ந்த தமிழன்னையின் அழகு அழிந்துபட்டது. பொழிவதற்கே உரிய காலத்திலும் கூடப் பொய்த்துவிட்டது புயல்.

அறத்தின் நெறிதவறி, குற்றம் இல்லாத கோவலனைக் குற்றமுடையானெனக் கருதிக் கொலை செய்தான் பாண்டியன் நெடுஞ்செழியன். அக்கொலையால் அன்றைய தமிழகம் பன்னிரண்டாண்டுகள் கொடிய பஞ்சத்தால் அவதி யுற்றது. அதுபோலவே இன்றைய மனிதன் தகாதனவற்றைச் செய்தால், அறம் பேணாது வாழ்ந்தால், வான் மழை தவறி, வளமெல்லாம் மறைய, அல்லற் படுவது இயல்பாகும். இனியாவது அரசியற் காரணம் பற்றியும், அல்லது வேறு எக்காரணம் பற்றியும் சரி, அறமல்லாதன செய்யோம் என்ற உறுதி மொழியைப் பூண்போமாக! குற்ற மெல்லாம் குணமெனக் கொள்ளும் பேரருட் பெருங் கடவுளும் பெருமழை தந்து நம்மை வாழ்விப்பானாக.

## 16. கம்பன் வேண்டாமா?

தமிழ்நாட்டில் கம்பனுக்குக் கொஞ்சம் எதிர்ப்பு உண்டு. கம்பனை எதிர்க்கிறார்களோ, இல்லையோ, இராமனை எதிர்க்கிறார்கள். இராம காதை ஒரு சர்வ தேசியக் காதை. அது ஒரு நாடோடி வரலாறுபோல. மக்கள் கூடும் இடங்களில் எல்லாம் பேசப்படுகிற ஒரு தேசீய வரலாறு. ஆனால், அந்த இராம காதை நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் பலமாதிரியாக வழங்கப் பெறுகிறது.

காவியத்தில் வருகின்ற ஒரு காவியத் தலைவனை நாம் ஆராயும்போது, அந்தப் பாத்திரத்தின் குண தோஷங்களைக் காணவேண்டுமே தவிர அந்தப் பாத்திரம் எந்த இனத்தவரா யிருந்தால் நமக்கென்ன? கம்பன் தான் எடுத்துக் கொண்ட பாத்திரங்களின் வாயிலாக என்ன சொல்ல நினைக்கிறான் என்பதைத்தான் நாம் காணவேண்டும். அந்தப் பாத்திரம் கங்கைக் கரையில் பிறந்தால் என்ன? காவிரிக் கரையில் பிறந்தால் என்ன? அதைப்பற்றி நமக்கென்ன கவலை?

இன்று சிலருக்கு இராமன்மீது இருக்கிற வெறுப் பெல்லாம் வான்மீகியால் வந்ததேயன்றி இராமன் மீது ஏதும் வெறுப்பில்லை.

எனக்குச் சமுதாயத்தின் நல்வாழ்வில் சற்று அதிகமான பற்றும் அக்கறையும் உண்டு. எனவே சமுதாயம் வாழ வழி வகுக்கும் இலக்கியத்தையே - சமுதாயத்தின் இன்றியமையாத் தேவையைப்பாடும் இலக்கியத்தையே இலக்கியம் என்று நான் கருதுகிறேன். எனவே கம்பனை எனது சமுதாயக் கண்ணோட்டத்துடனேயே நான் பார்க்கிறேன். கம்பன் அயோத்திமாநகரின் சக்கரவர்த்தியை மட்டுமா பாடிப் போனான்?

கம்பனிடத்தில் ஒரு குல உணர்ச்சியைப் பார்க்கிறோம். உலகமே ஒன்று என்று அவன் கருதுகிறான். நிர்வாகத்திற்கும் ஆட்சி நலத்திற்காகவுமே எல்லைக் கோடுகள் பிரிவுகள் கற்பிக்கப் பெற்றுள்ளன. கம்பனுக்கு முன்னும் கூடத் திரு மந்திரம் புறநானூறு போன்ற இலக்கியங்கள் எல்லாம் ஒரு குலநெறியை - ஓர் உலகக் கொள்கையை வற்புறுத்தியுள்ளன. ஆனாலும் மனிதன் அவற்றைப் படித்தான் - ரசித்தான் - சீரணித்துக் கொள்ளவில்லை. “அன்பால் ஆதரவால் மனித குலம் வாழவேண்டும்” என்று போதித்த மாபெரும் தத்துவ மேதை கன்பூசியஸ் தோன்றிய கம்யூனிஸ்டு சீனா இன்று, மனிதனை மனிதன் அடக்கியாள வேண்டும். மனிதன்மீது மனிதன் ஊர்ந்து செல்லவேண்டும் என்ற எண்ணத்தால், ஆணவ வெறி கொண்டு போருக்கும் ஆக்கிரமிப்புக்கும் கிளம்பி யிருக்கிறது. நாம் என்ன நினைக்க முடியும்? கம்யூனி சத்துக்கும் - கம்பூஷியசின் அறநெறிக்கும்தான் தொடர் பில்லையே!

“ஒன்றைக் கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டு; ஒற்றை ஆடையை ஒருவன் கேட்டால் அவனுக்கு இன்னொன்றையும் கொடு” என்று இயேசுநாதர்

கூறினார். ஆனால் இன்றைய நிலை என்ன? புத்தகத்தில் படித்தது வாழ்க்கையில் படியவில்லை.

"உயிர்களிடத்து அன்பாயிரு - ஆசையை விட்டு ஒழி - ஆசையே துன்பங்களுக்கெல்லாம் காரணம்" என்று புத்தர்பிரான் போதித்தார். நாம் இன்று காணும் நடைமுறை? நேருக்குமாறான போர்க்கோலம். மனிதனின் உணர்வும் - பாசமும் உறவை மையமாகக் கொண்டது என்பதறிந்த மாணிக்கவாசகர், இறைவனையே "உறவே" என்று அழைக்கிறார். நமக்கு அறிமுகப்படுத்துகின்றார். அப்பரடிகளும் "அன்புடைய மாமனும் நீ - மாமியும் நீ" என்று சமுதாய உறவின் முறையில் பிணைக்கின்றார்.

இராமன் அயோத்தியை ஆண்ட மாமன்னனின் திருமகன். இடத்தாலும் இனத்தாலும் - குலத்தாலும் வேறுபட்ட அனுமனையும், குகனையும், வீடணனையும் தன் தம்பிகளாக ஏற்றுக் கொண்டமையை - இனிய தமிழில் கம்பன் விளக்குகின்றான்.

இராமன்மீது வான்மீகத்தின் வழியில் இருந்த - சில குறைகள் எனக் கருதக் கூடியவைகளையும். கம்பன் தமிழகத்திற்கேற்ப செப்பம் செய்திருக்கிறான். இன்னும் சொல்லப்போனால், கம்பன் தமிழ் நாகரிகத்தை - தமிழ்ப் பண்பை - தமிழ் மரபைக் காத்த காவலன் என்றுகூடக் கூறலாம். எனவே நமக்குக் கம்பன் வேண்டும் என்று கூறுவதில் எத்தகைய தவறுமில்லை.,

நேற்று நான் செய்த ஒரு பிழை பெரிதல்ல - இன்று அது பிழை எனத் தெரிந்தபின் - பிழை திருத்தி வாழ்வதுதான் சிறப்பு. பிழை மறைந்துபோகும் - பின்னைய வாழ்வு வரலாற்றில் இடம்பெறும்.

இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன் இந்தக் கருத்தை வலியுறுத்திய கம்பன் நமக்கு வேண்டாமா?

கருத்துவழி வள்ளுவன் பெற்றெடுத்த மாபெரும் கவிஞன் கம்பன். அவன் வள்ளுவன் வலியுறுத்திய நாகரிகத்தைப் பின்னணியாகக் கொண்டு பெரிய காவியத்தைப் பாடினான்.

இன்று உலகம் முழுவதுமே சமுதாயத்தின் பொதுச் சிக்கலைப்பற்றிப் பேசும் நிலைக்கு வந்து விட்டது.

இன்றைய உலகின் - சமுதாயத்தின் பொருளியல் கொள்கையில் மூவகைக் கொள்கைகள் நிலவுகின்றன. முதலாவது மனிதன் அவனவன் திறமைக்கு ஏற்றவாறு எவ்வளவு பொருளும் திரட்டலாம்; அனுபவிக்கலாம். அது அவனுடைய பிறப்புரிமை. சட்டமும் அவன் உரிமையைக் காப்பாற்றித் தரும். தனி மனிதனுக்குள்ள முக்கியத்துவத்தை மறக்காதது - இது முதலாளித்துவக் கொள்கை. அமெரிக்காவின் நடைமுறைக் கொள்கை. இன்னொன்று மனிதனுடைய திறமைகள் எவ்வாறிருப்பினும் அவனுடைய செல்வத்துக்கும், அனுபவத்திற்கும் கட்டுப்பாடுகள் உண்டாக்கி இயந்திரம்போல் மனிதனை வாழச் செய்வது. தனிமனிதனைப் பற்றியே கவலைப்படாமல் சமுதாயத்தையே முதன்மைபடுத்துவது. இதுவே கம்யூனிசம். இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாக தனி மனிதனுடைய திறமைகளுக்கும் வாய்ப்பளித்து - எந்த ஒருவருடைய திறமையும் - மற்ற வருடைய திறமையை - வாய்ப்பை அபகரிக்காமல் இருக்கும் படி தடுத்து எல்லோருக்கும் - எல்லா வாய்ப்புக்களும் கிடைக்கும்படி செய்வது, சோஷலிசம். இதுவே நம்முடைய தாயகத்தின் கொள்கை. இத்தகைய சமுதாயத்தைப் பற்றிக் கம்பனும் பேசுகிறான்.

"கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை; யாரும்
கொள்வார் இலாமைக் கொடுப் பார்களும் இல்லை மாதோ"

என்று குறிப்பிடுகிறான். எவ்வளவு அழகான கருத்து கொள்பவர்கள் யாருமில்லையாதலின் கொடுப்பவர்கள் யாருமில்லையாம். அதுமட்டுமல்ல - அங்கு 'வள்ளல்கள்'

என்று யாருமே இல்லையாம்; ஏன்? வறுமை இருந்தால் தானே அதைத் தணிக்க வள்ளல்கள் இருக்க வேண்டும்? 'கொடுப்பதற்கேயுள்ள இயல்பு' என்பது இப்போது மற்றவர்களின் தலையைத் தடவத்தான் பயன்படுகின்றது.

கம்பனோ,

"வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்"

என்று பேசுகிறான். அந்த நாடு இப்படி இருந்ததா என்று சிலர் கேட்கலாம். அப்படி ஒரு நாடு இருந்ததோ, இல்லையோ, அத்தகைய ஒரு நாடு வேண்டும் என்று கம்பன் விரும்பினான். இப்படிப்பட்ட ஒரு சோஷலிசக் கருத்தை யார் சொல்லியிருக்கிறார்கள்? இப்படிப்பட்ட கவிஞன் நமக்கு வேண்டாமா?

அடுத்து,

"எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்த லாலே
இல்லாரும் இல்லை உடை யார்களும் இல்லை மாதோ!"

என்று பேசுகின்றான். எல்லா மனிதர்களுக்கும் வாய்ப்பிருக்க வேண்டும். (Oppurtunity for all) என்பதுதான் சோஷலிசம். இதைத்தான் "எல்லாரும் எல்லாப் .பெருஞ் செல்வமும் எய்தலாலே" என்று குறிப்பிடுகின்றான். இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன் இத்தகையதொரு சோஷலிசக் கருத்தைச் சொன்ன கவிஞன் கம்பன் ஒருவன்தான்.

கம்பன் காணவிரும்பிய சோஷலிச நாட்டிலே - சமுதாயத்திலே சில அடிப்படைப் பண்பாட்டைக் காட்டு கின்றான். அங்கு எல்லோருமே அவரவர்களுக்குரிய நெறியோடு நின்றார்களாம். ஒன்றேயொன்று மட்டும் நெறி கடந்து சென்றதாம். அதுதான் வெள்ளம், ஆம். மனிதன் நெறிகடந்து போகவில்லை. வெள்ளம் அஃறிணைதானே!

மனிதன் என்றால் அவனுக்குக் குறிக்கோள் இருக்க வேண்டும் - வாழ்க்கைக்கு ஓர் இலட்சியம் இருக்க வேண்டும்.

குறிக்கோள் வேறு, தேவை வேறு. குறிக்கோளை அடையத் துணைநிற்பவனே தேவையாக இருக்கவேண்டும். பிறப்பு - இறப்பு – இவைகளின் வழி உண்டாகின்ற துன்பங்களிலிருந்து உயிர் விடுதலை பெறுதல் உயிரின் குறிக்கோள். இந்நிலையினை அடைய உயிருக்குத் தேவை பொன்னும் பொருளும் போகமும் கலந்த வாழ்க்கை. குறிக்கோள் இல்லாத வாழ்க்கை தான் நாம் இன்று வாழ்ந்துகொண்டிருக்கிறோம். கம்பன் காண விரும்பிய நாட்டில் குறிக்கோள் இல்லாதவர்கள் - குறிக்கோளை அழித்தவர்கள் யாருமேயில்லை. ஆம். மனிதன் குறிக்கோளோடு வாழவேண்டும் என்று கம்பன் விரும்பினான்.

> "நெறி கடந்து பரந்தன நீத்தமே
> குறி அழிந்தன குங்குமத் தோள்களே"

என்று பேசுகின்றான் கம்பன். பெண்கள் தமது தோள்களில் எழுதிய குங்குமக் குறிதான் அழிந்தனவாம். கம்பன் இப்படிக் கூறுவதன் மூலம் நெறிகடந்து வாழாதே - குறிக்கோள் இல்லாத வாழ்க்கை வாழாதே என்ற இரண்டு கருத்தையும் வலியுறுத்துகின்றான். இத்தகைய கம்பன் நமக்கு வேண்டாமா?

இன்று பெரும்பாலும் அடுத்தவன் பெறுகின்ற பதவி உயர்வுகளிலும், புகழிலும் கூட நமக்கு மனஅமைதி இருப்பதில்லை. அழுக்காறுதான் மிகுந்திருக்கக் காண்கிறோம். சாதாரணமாகப் பிறர் நன்றாக உடுப்பதையும் உண்பதையுமே கண்டு மனம் பொறாதவர்கள் மிகுந்திருக்கிறார்கள்.

> "உடுப்பதூஉம் உண்பதூஉம் காணிற் பிறர்மேல்
> வடுக்காண வற்றாகுங் கீழ்"

என்கிறார் திருவள்ளுவர். கம்பன் எத்தகைய மனப்பாங்கை விரும்புகிறான் என்று பாருங்கள்.

இராமனுக்கு முடிசூட்டுவதற்குத் தசரதன் முடிவு செய்தான். முடிசூட்டு விழாவிற்குரிய ஏற்பாடுகளும் நடை பெறுகின்றன. அன்னை கைகேயிடம் இராமன் வாழ்த்துப் பெறப் போகிறான். கைகேயி மிகவும் நல்லவள். அவளைக் கெடுத்தது கூனியே. உள்ளத்தால் கூனிக் குறுகியவள் கூனி. நாட்டு வழக்கிலே நாம் பார்க்கிறோம். உள்ளத்தால் கூனிக் குறுகிய கிழங்கள் புறங்கூறுதலையும் பொறாமை கொண்டு பேசித் திரிதலையும் இன்றும் நாம் பார்க்கிறோம். இத்தகைய வர்கள் காலரா, பிளேக் நோய்களைவிடக் கொடியவர்கள். இலையிலே பல காய்கறிகள் இருந்தாலும்கூட எல்லாவற்றையும் நாம் சாப்பிடுவதில்லை. பார்த்துத்தானே சாப்பிடுகிறோம். அப்படித்தான் பக்கத்திலே நம்மைச் சூழ்ந்திருப்பவர் களையும் நாம் பார்த்துப் பழகவேண்டும். இதைத்தான், "சேரிடமறிந்து சேர்" என்றார்கள். கூனியின் போதனையால் கைகேயி மனந்திரிந்தாள். "இராமா! நீ காட்டுக்குப் போக வேண்டுமாம் - உன் தம்பி பரதன் நாடாள வேண்டுமாம். இது உன் தந்தையின் ஆணை" என்றாள். முடிசூடி, ஆட்சிப் பொறுப்பேற்க வேண்டிய எனக்கு ஆரண்ய வாழ்வா? நாடாள வேண்டிய நான் காடாள வேண்டுமா? என்று துளியாவது மனம் வருந்தினானா? இல்லை. வேறு என்ன செய்தான்?

"அன்னையே! தாங்கள் கூறினால் நான் கேட்க மாட்டேனா? மன்னவன் ஆணை என்று ஏன் சொல்ல வேண்டும்? என் தம்பி பெற்ற வாழ்வு நான் பெற்ற வாழ் வன்றோ? என் தம்பி பெற்ற செல்வம் நான்பெற்ற செல்வ மன்றோ? தங்கள் பணியினை நான் தலைபணிந்து ஏற்றுக் கொள்கிறேன். இன்றே இப்போதே கானகம் செல்லுகிறேன். விடை கொடுங்கள்" என்று கூறிப் பணிந்து காடு செல்லு கிறான்.

"மன்னவன் பணியன்று ஆயின்
நும்பணி மறுப்ப னோஎன்

*பின்னவன் பெற்றசெல்வம்*
*அடியனேன் பெற்ற தன்றோ*
*என்இதின் உறுதியப்பால்*
*இப்பணி தலைமேற் கொண்டேன்*
*மின்னொளிர் கானம்இன்றே*
*போகின்றேன் விடையும் கொண்டேன்”*

என்பது கவிதை. இப்படி அவன் - இராமன் கூறியது ஒப்புக்கு உபசாரத்துக்குக்கூட இல்லை. “ஆட்சி உனக்கில்லை - நீ ஆரண்யம் ஏற்கவேண்டும்” என்ற இரண்டு அடி விழுந்த போதும், இராமனின் முகம் அன்றலர்ந்த செந்தாமரையை வென்றதுபோல மகிழ்ச்சியால் பூத்துத் திளைத்திருந்ததாம். இது எவ்வளவு பெரிய - சிறந்த பண்பு. இத்தகு மனப்பண்பு வேண்டும் என்று கூறிய கம்பன் - இத்தகு சமுதாய அமைப்பை விரும்பிய கம்பன் நமக்கு வேண்டாமா?

சமுதாய பொருளாதார வாழ்க்கையில் தான் கம்பன் முற்போக்கான கருத்துப் படைத்தவன் என்பதில்லை. குடும்ப வாழ்க்கையிலும் கம்பன் மிக முற்போக்கான கருத்துக் கொண்டிருந்தான்.

*“தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண்”*

என்று வள்ளுவப் பெருந்தகை பெண்ணுக்கு இலக்கணம் வகுத்தார். அந்த இலக்கணத்திற்குரிய இலட்சியப் பெண்ணாகச் சீதை விளங்குகிறாள்.

இராவணன் சீதையின் உடலைத் தொட்டுத் தூக்கிச் சென்றதாக வான்மீகியின் இராமகாதை பேசும். கம்பனோ சீதையின் கற்புக்கு இழுக்கு வந்துவிடக் கூடாதே என்று கருதி பர்ணகசாலையோடு பெயர்த்துச் சென்றதாக மாற்றியிருக் கிறான்.

"சிறைகாக்கும் காப்பு எவன்செயும் மாதர்தம்
நிறைகாக்கும் காப்பே தலை"

என்ற வள்ளுவனின் வாக்கை மனத்திற் கொண்டு சீதையை நிறையுடையவளாகக் காட்டுகிறான் கம்பன்.

இராவணன் சீதையை அசோகவனத்தில் சிறை வைத்திருக்கிறான். இராவணனின் ஆடம்பர வாழ்க்கை அவனது சீரும் செல்வாக்கும் ஆண்மகனையே மயக்கிவிடும் என்றால் மகளிரைச் சும்மாவிடுமா? சிறிதேனும் மனம் திரிந்தாளா? இல்லை. இராவணனின் எந்தச் சர்வாதிகார ஆட்சியும்கூட அவளைத் தொடமுடியவில்லையே.

இனி சீதையின் நிலை என்ன? தன் கணவனை - தன் சுற்றத்தை - உற்றார் உறவினரை அத்தனை பேரையும் பிரிந்திருக்கிறாள். அப்படிப் பிரிந்து இருக்கும் நேரத்திலும் கூட இராமனைப் பற்றியே சிந்தனை செய்கிறாள். விருந்து வந்தால் அவன் எப்படி விருந்துபசாரம் செய்யப் போகிறான் என்றெல்லாம் என்னென்னவோ சிந்தித்துக் கவலைப்படுகிறாள். அரக்கர் மத்தியில் அவள் இருக்கிறாள். இராமனின் தூதுவனான அனுமன் வருகிறான். அவள் தனது தோள்மீது ஏறிக்கொண்டால், தான் அவளை இராமனிடம் கொண்டு போய்ச் சேர்த்து விடுவதாகக் கூறுகிறான். அவள் சரி என்றால் இராமனை அடைந்துவிடலாம்; சரி என்றாளா? இல்லை. அவ்வாறு இராவணனின் காவலிலிருந்து தான் தப்பி ஓடினால், இராமனின் வில்லுக்கு - வீரத்திற்கு இழுக்கு நேரிடுமே என்று கூறி மறுத்துவிட்டாள். எவ்வளவு அருமையான ஒரு குடும்பத் தலைவியாக விளங்குகிறாள்? இத்தகு கம்பன் வேண்டாமா?

இன்று உலகம் முழுதுமே குடியாட்சிக் கருத்துப் பரவியிருக்கிறது - பரவி வருகிறது. இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு குடியாட்சி மலராத காலத்தில் கம்பன் குடியாட்சிக்குக் கால்கோள் செய்திருக்கிறான். "மன்னன்

உயிர்த்தே மலர்தலை யுலகம்" என்று புறநானூறு பேசுகிறது. அதாவது அரசனுக்காக மக்கள்! ஆட்சிக்காக மக்கள் என்பதேயாம். மன்னன் உயிர் என்றும், மக்கள் உடல் என்றும் கூறினால், உயிர் தங்கியிருப்பதற்காக - உயிர் வாழ்ந்திருப்பதற் காகத்தானே உடம்பு? மன்னனுக்காக மக்கள் என்பதுதானே இதன் கருத்து? கம்பன் இந்தக் கருத்தை மாற்றுகிறான். மக்களுக்காகவே ஆட்சி என்ற கருத்தை வலியுறுத்துகின்றான். "மன்னன் உடம்பு; மக்கள் உயிர்" என்ற குடியரசு சித்தாந்தத்தை அப்போதே பாடியிருக்கிறான். குடியாட்சி என்றால் என்ன என்று தெரியாத காலத்தில் - முடியாட்சிக் காலத்தில் முடியாட்சிக் காவியத்தில் இத்தகையதொரு குடியாட்சிக்குக் கால்கோள் செய்த கம்பன் நமக்கு வேண்டாமா? இப்படிப்பட்ட கம்பனை வேண்டாமென்று சொல்ல நமக்கு என்ன உரிமை இருக்கிறது?

கம்பன் நமக்குக் காட்டும் இராமன் காவியத்தலைவன். ஒரு மாபெருந்தலைவன். அடுத்து, இராமாயணத்தில் நூற்றுக்கு நூறு குறைவில்லாத நிறைவுடைய ஒரு பாத்திரம் கும்பகர்ணன்; அவன் வீரத்தில் சிறந்தவன். உடன் பிறந்தான் பாசத்தில் சிறந்தவன்; நன்றியறிதல் உடையவன்.

எவ்வளவு நல்லவனாக - பக்திமானாக - படித்தவனாக இருந்தாலும் சமுதாய நீதியின் மீது - சமுதாய ஒழுக்கத்தின் மீது மோதினால் அறம் அவனைச் சும்மா விடாது; கடவுள் அவனைச் சும்மா விடமாட்டார். இராவணன் நல்லவன், வல்லவன் - சிறந்த சிவபக்தன் - சாத்திரப் பேரறிஞன். எனினும் அவன் ஒருவனும் ஒருத்தியும் கூடி அமைதியாக வாழும் - இல்வாழ்க்கையின் மீது தன்னல வெறியோடு மோதினான். இராவணின் செய்கை நியதியல்ல; நீதியுமல்ல என்று கும்பகர்ணன் எடுத்துக் காட்ட தவறினான் இல்லை. அதே சமயத்தில் மாற்றானிடமிருந்து தன் உடன்பிறந் தானைக் காக்க - செஞ்சோற்றுக்கடன் கழிக்க - நன்றி யுணர்வைக் காட்ட இராமனோடு போர் புரிகிறான்.

அன்று போர்முனையில் ஓர் ஒழுங்கு - நியதி இருந் திருக்கிறது. போர்க்களத்திலே இராவணன் நிராயுதபாணி யாக நின்றுகொண்டிருக்கிறான். நிராயுதபாணியாக நிற்கும் இராவணனைப் பார்த்து இராமன், "இன்று போய் நாளைவா." என்கிறான். இன்றையப் போரில் ஓர் ஒழுங்கு இருக்கிறதா? நேரம் இருக்கிறதா? இலக்கு இருக்கிறதா? இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு இவ்வளவு அருமையான போர்முறை ஒழுக்க நெறி பேசிய கம்பன் நமக்கு வேண்டாமா?

இலக்கியம் காலத்தின் கண்ணாடி - சமுதாயம் நின்று நிலைபெறுவதற்கான தேவையான கருத்துக்களைத் தருவது. அத்தகு இலக்கியங்கள் எல்லாக் காலத்திற்கும் எல்லாக் கருத்தினருக்கும் ஏற்றனவாகப் பெரும்பாலும் விளங்கும். காலமாறுபாட்டால் கருத்து வளர்ச்சியால் ஒரு சில ஒத்துவரா மலும் இருக்கலாம். இலக்கியத்தை நாம் ஆராயும்போது அந்த இலக்கியம் தோன்றிய காலம், அந்தக் காலச் சமுதாயத்தின் வாழ்க்கை முறை முதலியவற்றை நாம் மனத்திற் கொண்டே ஆராய வேண்டும். இலக்கியத்தில் நாம் கொள்ளத் தக்கனவும் இருக்கும்; ஒதுக்கித் தள்ளத் தக்கனவும் இருக்கும்; எனவே, ஓர் இலக்கியத்தைப் படித்தால், அடிமாறாமல் அப்படியே சென்றுவிடுவோம் என்று கருதுவது நிறைவுடையதாகாது. செருப்பு நமக்காகத்தான் இருக்கிறது. அதற்காகச் செருப்பு இழுத்துச் செல்லும் வழிக்கே நாம் போய்விடுகிறோமா? அதுபோல நமக்காக - நம் வாழ்வுக்காக உள்ள இலக்கியங் களைப் படித்து, கொள்ளத்தக்க கொள்கைகளை நாம் கடைப் பிடிப்பதே சரியானது.

கம்பன் சமுதாய ரீதியிலும், ஆட்சித் துறையிலும், குடும்ப வாழ்க்கையிலும் மட்டுமல்ல. அறிவியல் துறையிலும் கூட மிகச்சிறந்த கருத்துக் கொண்டு விளங்கினான். அத்தகு புரட்சிக் கவிஞனை, புதுமைக் கவிஞனை, புத்துலகச் சிற்பியை வேண்டாம் என்று கூறமுடியுமா? வேண்டாம்

என்றால் இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகளுக்குமுன் நாம் வாழ்ந்த சிறந்த வாழ்க்கைச் சுவட்டை அழிக்க முற்படு கிறோம் என்றுதான் பொருள். கம்பன் வேண்டாமா?

## 17. இயல்வது கரவேல்

ஈதலும் இசைபட வாழ்தலும் தமிழினத்தின் தனிப் பண்பு. "செல்வத்தின் பயனே ஈதல்" என்பது தமிழினத்தின் இதய கீதம். மாரிபோல் வாரி வழங்குதலே தமிழினத்தின் தலையாய செயல். "இயல்வது கரரேல்" எனும் பழமொழி தமிழ் நாட்டில் யாவரும் அறிந்த பொதுமொழி. "இயல்வது" என்ற சொல்லின் பொருளாழத்தை ஏடுகள் காட்ட முடியுமா? முடியாது. தமிழினத்தின் வரலாறுதான் காட்ட முடியும்.

தலைவனைப் பிரிந்த தலைவி ஒருத்தி, "இயல்வது கரவேல்" என்ற பழமொழிக்கு விளக்க உரை தருகின்றாள். பிரிவால் வருந்துகின்றாள் தலைவி. அன்புடைத் தோழி ஆறுதலுரைகள் பல பகர்ந்து தேற்றுகின்றாள். 'தலைவர் பொய்யா நாவினர் - அருளொழுக்கம் பூண்டவர். ஆதலால் நினக்கு அருள் செய விரைவில் திரும்பி வருவார்' என்று சொல்லுகின்றாள். தோழிக்குத் தலைவி எடுத்தோதுகின்றாள். "ஈ என்று இரந்து நிற்கும் இரவலர்க்கு, தம்மால் இயல்வதைச் செய்யாது கரத்தால் மாட்டாத நெஞ்சம் வற்புறுத்தலின் நம்முடைய காதலர் காதலித்தது பொருளேயாம்" என்று கூறுகின்றாள். அதாவது இரக்கப்படுவோரிடத்துப் பொருளில்லா திருக்கலாம். ஆனால் பொருளை முயன்று தேடும் வலிவுடைமையைப் பெற்றிருக்கலாம். அங்ஙனம் வலிவிருந்தும் இரவலர்க்குப் பொருள் இல்லை என்னின் அதுவும் இயைவது கரத்தலேயாம் என்பது தமிழர் கோட்பாடு.

"இல்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிய நம்மிலும்
பொருளே காதலர் காதல்"

என்பது தலைவியின் வாய்மொழி.

ஈத்துவக்கும் இன்பம் இணையற்ற இன்பம். இத்தகு இன்பத்தைத் தமக்கு உரிமையாக்கிக் கொள்ள ஒவ்வொரு வரும் விரும்புவர்.

பிறந்திருப்பவர் அனைவரும் பயனுடையரல்லர். வள்ளுவனாரும்கூட "மக்கட்பதடி" என்று கூறி ஒதுக்கு கின்றார் ஒரு சிலரை. கூற்றுவன் கொள மாளுதல் பயனற்றது. அங்ஙனம் மரிக்கின்றவர்கள் தவப்பேறு உடையவர்களல்லர். பிறருக்கெல்லாம் பெட்புற உதவ, சேட்புலம் படர்ந்து பொருளீட்டுதல் வேண்டும். அதுவே பயனுடையது; புகழுமாம்.

"நோற்றோர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார்பிறர் கொளவிளீந் தோரெனத்
தாள்வளம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்."

என்பன மாமூலனாரின் மணிமொழிகள்.

இங்ஙனம் வாழ்ந்தாரும் மரித்தாரும் தமிழகத்தில் பலருண்டு. இறந்த பிறகும் புதைகுழியினின்றும் வெளிப் போந்து ஈந்தாரும் உண்டு. செத்தும் கொடுத்த சீதக்காதியை அறியாதார் யார்? மாரியைப்போல் வாரி வழங்கிய பாரியை அறியாதார் யார்? பாரிமன்னன் படைமடம் பட்டானில்லை. ஆனால் கொடைமடம் பட்டதுண்டு. அவனுடைய ஆட்சியில் முந்நூறு ஊர்கள் இணைக்கப்பட்டு, குன்றாவளத் தனவாய் உழைப்பின்றே கிடைக்கும். இயற்கை உணவுப் பொருள் மிகுதியும் வாய்ந்த மலைகள் பாரியின் பறம்பு நாட்டில் உண்டு. பாரியின் கைவண்ணம் சொல்லுந் தரமன்று. முல்லைக் கொடியின் துன்பத்தையும் தனது துன்ப

மெனக் கருதியதன்றோ அவனுடைய அருளுண்மை. பற்றிப் படரும் கொம்பின்றிக் குழைந்து வாடிய கொடி முல்லைக்கு நீள்மணித் தேரை நிறுத்தியது அவனுடைய பண்பு ஆம். மறக்க முடியாததொரு மாண்புடைச் செய்தி. இறந்து வந்த பாணர்களுக்கும் புலவர்களுக்கும் முந்நூறு ஊர்களையும் கொடுத்துவிட்டான். தனக்கென ஒன்றேனும் இல்லாத நிலையில் ஈத்து இன்பம் துய்த்தான்.

வாழ்க்கையில் தமிழர்கள் கையாண்ட ஒழுக்க நெறி களும் பண்பு நெறிகளும் பலப்பல. அவற்றுள் தலையாய தொன்றாம் ஈகைப் பண்பையே ஈண்டுச் சந்தித்தோம். தமிழரோடு தமிழ்ப் பண்பாடும் வளரவேண்டும். பண்டைத் தமிழரின் வாழ்வு முறையில் தமிழர்கள் வாழ முயல வேண்டும். தமிழர்கள் சிந்தனையில் - செல்வத்தில் திளைத்து, தமிழ் வளர்த்து, அறம் பல புரிந்து, இன்பம் பொருந்தி வாழத் துணை செய்வதே இலக்கியங்கள். அத்துணையே நாளும் நமக்குக் காட்டிக் கொடுக்கும் தனித் தமிழ்த்தாள்கள் பல தோன்ற வேண்டும். வாழ்க தமிழ்! வளர்க தமிழ்நாடு!! ஓங்குக நல்லறம்!!!

## 18. காந்தியடிகள்

ஐரோப்பிய நாடுகளின் சித்தாந்தங்களையும் மனித இன வரலாற்றையும்விட பாரதத்தின் சித்தாந்தங்களும் மனித இனவரலாறும் மிகப் பழமையுடன் சிக்கல்களுக்கு மேலெழுந்தவாரியாகத் தீர்வு காண்கின்ற சில நாடுகள் உண்டு. நமது நாட்டு மேதைகள் சிக்கல்களை நன்கு ஆழ்ந்து சிந்தித்து அவை தீர்வதற்குரிய வகையில் இறுதி முடிவு கண்டிருக்கிறார்கள். அத்தகு மேதைகளில் சிறந்து விளங்குபவர் அண்ணல் காந்தி அடிகள்.

பிரெஞ்சுப் புரட்சியும் ரஷ்யப் புரட்சியும் கிழக்கு இராமநாதபுரத்தில் - பங்குனி மாதத்தில் - நடுப்பகல்

பனிரெண்டு மணிக்குக் காணும் வெப்பம் போன்றவை. காந்தியடிகளின் புரட்சி இளவெயில் போல; பொதிகை மலைத் தென்றல் போல. என்றாலும் அவருடைய புரட்சி வலிமையும் - உறுதியுமுடையதாக விளங்கியது.

காந்தியடிகள் தலைசிறந்த ஞானி. அறியாமை கலப் பில்லாத தூய அறிவிற்குத்தான் ஞானம் என்று பெயர். அது பேரொளியனையது.

காந்தியடிகள் பழைய பண்புகளுக்கும் நிகழவிருக்கும் புதுமைப் பண்பிற்கும் ஓர் இணைப்புப் பாலத்தை ஏற்படுத்தினார். கங்கையும் யமுனையும் கலப்பதுபோல பழமைக்கும் - புதுமைக்கும் இடையே வேறுபாடு தெரியாத விழுமிய ஒற்றுமையை உருவாக்கினர். புதியதொரு சமுதாயத்தை உண்டாக்கினார்.

நம்மிடையே எப்படியோ ஒரு தனிமை உணர்ச்சி வளர்ந்து இருந்தது. அதன் காரணமாகப் பழக்கவழக்கங்களில் நாம் கூனிக்குறுகி வாழ்ந்தோம். அந்தக் கூனல் அந்நியர்கள் ஏறி உட்கார்ந்து சவாரி செய்வதற்கு வசதியாக இருந்தது. காந்தியடிகள் நமது கூனை நிமிர்த்தினார். கத்தியை எடுத்துக் கொடுக்காமல் - இரத்தம் சிந்தும்படி செய்யாமல் நமது கூனை நிமிர்த்தினார். அதுவரை சுகமாக உட்கார்ந்து சவாரி செய்தவர்கள் சவாரி செய்ய முடியவில்லை - இறங்கி விட்டார்கள். இந்த அதிசயத்தைக் காந்தியடிகள் செய்து முடித்தார்.

எதையும் எப்படியும் செய்யலாம் என்று காந்தியடிகள் கருதியதில்லை. வாழ்க்கையின் இலட்சியம் உயர்ந்ததாக இருக்க வேண்டும். அந்த இலட்சியத்தை அடையும் வழி முறையும் உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்பது காந்தியடி களின் விழுமிய கொள்கை.

புதிய சமுதாய அமைப்புப்பற்றி அவர் கனவு கண்டார் என்று கூறுவதே சாலப் பொருத்தமானது. ஏனெனில் கனவுகள் நிறைவேறாமல் போவதும் உண்டு.

இந்த நாடு சுதந்திரம் பெற்றபோது எப்படியிருந்தது என்பது நாம் அறிந்த உண்மையே. வாழ்ந்த வாழ்நாள் முழுதும் வாழ முடியாமல் இளமையிலேயே மரணமடைந் தோர் எண்ணிக்கை அதிகம். சமுதாயத்தில் ஏழைகளே அதிகமாக இருந்தார்கள். மனிதனை மனிதன் தொட்டால் தீட்டு என்கிற மனோபாவம் இருந்தது. இவ்வளவுக்கும் விடிவு காண விரும்பினார் காந்தியடிகள். மனித குலத்தை ஒரு குலமாக்க வேண்டுமென்று அவர் விரும்பினார். காந்தீயத் தத்துவம் சமரச தத்துவம். பல்லாயிரக்கணக்கான ஆண்டு களாக வழிவழி வந்த தத்துவம். திருவள்ளுவரும், அப்பரடி களும், இராமலிங்கரும் போற்றிப் பாராட்டி வந்த தத்துவங் களை நடைமுறைக்குக் கொண்டுவர முயற்சித்தார். உணவிலும், உடையிலும், போக்குவரத்திலும் மாற்றம் வந்திருக்கிறது - மனிதனுடைய மனத்திலே மட்டும் மாற்றம் வரவில்லை. 'அணைத்து வாழு' என்று ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கூறியிருக்கிறார்களே, அந்தப் பண்பு இன்றுவரை வளர்ந்திருக்கிறதா? மாறாக எப்படி அடித்தால் அவனுக்கு நன்றாக வலிக்கும்? எப்படி அடித்தால் அவனை வீழ்த்தலாம் என்று ஆராய்கின்ற பண்பு வளர்ந்திருக்கிறது.

இன்று நம்மை நாமே ஆத்ம சோதனை நடத்திக் கொள்ளும் நிலைக்கு நாம் வந்திருக்கிறோம். இந்த நாட்டின் சமுதாய வரலாற்றில் காந்தியடிகளின் சித்தாந்தம் முழுக்க முழுக்கப் பொருந்தும். அதுதான் சர்வோதயம். எப்படி உதயம் இயல்பாகவே ஏற்படுகிறதோ அது போல சமுதாயத்தில் எல்லோரும் வாழுகின்ற ஒரு நல்ல அமைப்பு முறை இயல்பாகவே-தானாகவே உருவாக வேண்டும். அப்படித் தன்னியல்பாக வளர்வதுதான் சர்வோதயம்.

'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே' என்ற தாயுமானாரின் சித்தாந்தம் சர்வோதயத்தின் முழுச் சித்தாந்தம் என்று கூறலாம்.

'தனியொருவனுக்கு உணவில்லையெனில் சகத்தினை யழித்திடுவோம்' என்று பாரதி பாடினார். அந்தத் தனி யொருவன் யாராக இருக்க முடியும்? உரிமைகளைக் கேட்க வாயற்று, தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வழியும் வலிமையும் அற்று மூலையிலே ஒதுக்கப்பட்டுக் கிடக்கின்ற ஒருவனைப் பற்றித்தான் பாரதி பேசுகிறார். அத்தகைய ஒருவனை நோக்கிச் சோறும் துணியும் போடும்படி செய்வதுதான் சர்வோதயம்.

தொண்ணூற்றைந்து பேரின் வாழ்க்கை உரிமைகளை – அவர்களிடத்து உரமும் உறுதியும் இல்லையென்ற காரணத்தால் எஞ்சியுள்ள பேர் பறித்துச் சுகவாழ்வு வாழுகிறார்களே இந்நிலை இருக்கலாமா?

நமது பாரதத்தின் தலைமை அமைச்சர் நேரு அவர் களுக்கு நிலப் பிரச்னையில் மிகவும் அக்கறை இருக்கிறது. எனினும், கொசு கடித்தால் கூட 'புலி அறைகிறது – முதலை விழுங்குகிறது என்று கூப்பாடு போடுகிறவர்கள் சிலர் இங்கு இருக்கிறார்கள். நமது இன்றைய அரசாங்கம், தேவைக்கு அதிகமாக நிலத்தைச் சேர்த்து வேலி கட்டி வைத்துக் கொண்டிருப்பவர்களிடம் இழப்புக்குரிய ஈட்டுப்பொருள் கொடுத்து நிலத்தைப் பெறுகிறது. இதிலேயே தனியுரிமை பறிபோகிறது என்று கதறுகிறார்களே!

நிலப் பிரச்னையைப் பொறுத்தவரை நாம் எவ்வளவு விரைவில் முடிவெடுக்கிறோமோ அவ்வளவு நல்லது. இல்லை யானால், கிழக்குக் கோடி வீட்டில் தீப்பற்றி எரியும் போது மேற்குக் கோடி வீட்டில் வாழ்பவர் தன் வீட்டின்மேல் தண்ணீர் அள்ளிக் கொட்டிக் காப்பாற்றிக் கொள்ள முயன்ற

கதை போலவே ஆகும். புத்திசாலியாக இருந்தால், தீப்பிடித்த வீட்டில் தண்ணீரை அள்ளிக் கொட்டி அந்தத் தீயை அணைப்பதின் மூலம் எல்லா வீடுகளையும் காப்பாற்றலாம். அவனுடைய வீடும் காப்பற்றப் பெறும். மனித சமுதாயத்தில் எந்த ஒரு கோடியில் வறுமை இருந்தாலும் அது நம்மை அரித்துத் தின்றுவிடும் என்பதை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும்.

நாம் எதற்கும் கும்பிடுபோட மிக நன்றாகக் கற்றுக் கொண்டிருக்கிறோம். ஆனால், எதைக் குறிப்பிடுகிறோமோ அதனுடைய தத்துவத்தை மட்டும் வாழ்க்கையில் காப்பாற்ற மாட்டோம். புறக் காட்சிகளையும், புறத் தத்துவங்களையும் பார்த்து அவற்றை நம்முடைய வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டும்.

காந்தியடிகளின் நினைவாக நாம் சத்தியம் செய்து உறுதி எடுத்துக்கொள்ள வேண்டும். அவர் வலியுறுத்தி வந்த தத்துவங்களை – சித்தாந்தங்களை நாம் கொஞ்சம் கொஞ்ச மாகவாவது வாழ்க்கையில் மேற்கொள்ளும் முயற்சியில் வெற்றி பெறவேண்டும்.

சமய வாதி என்றால் நல்ல மணமுள்ள மலர்போல இருக்க வேண்டும். மலரின் மணத்தினாலாய இன்ப அனுபவம் மனிதர்களுக்கேயாம் – மலர்களுக்கல்ல. மலர் இருக்கும் செடி அனுபவிப்பது பலருக்கு அருவருப்பூட்டும் உரத்தைத்தான்; ரோஜா மலர் வண்ணத்தால் மணத்தால் பலருக்கு விருந்தளிக்கிறது; அதுபோலவே மனிதனும் காட்சி யாலும் செயலாலும் மற்றவர்களுக்கு இன்பம் அளிக்க வேண்டும். அது மனிதனின் கடமை. இதனை நமக்கு உணர்த்துவதுதான் சர்வோதயம்.

நாம் சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து இந்த நாட்டின் அரசியல் வரலாற்றில் ஒரு தொய்வு ஏற்படவில்லை. இப்போது தொய்வு ஏற்படுமோ என்ற அச்சம் பிறந்திருக்

கிறது. அந்த அச்சத்தைப் போக்கும் முயற்சியில் சர்வோதய ஊழியர்கள் தீவிரமாக ஈடுபட வேண்டும்.

நாம் பூரண சுதந்திரத்தை அனுபவிக்க வேண்டுமென்றால், சர்வோதய தத்துவங்களை நடைமுறைக்குக் கொண்டுவருவது தவிர வேறு வழியில்லை. சமுதாய ரீதியதாக-சமய ரீதியாக-அரசியல் ரீதியாக அற்புதமான ஓர் விளக்கு சர்வோதயம். விளக்கைச் செய்து கொள்ள முடியாதவர்களாக நாம் இருக்கலாம். விளக்கைச் செய்து கொடுத்த பிறகு அந்த விளக்கை ஏற்றி, இருளைப் போக்கி விளக்கொளியில் வாழ முடியாதவர்களாக இருக்கலாமா?

காந்தியடிகளுக்குப் பிறகு, வினோபாஜி சர்வோதய இயக்கத்தின் தலைவராக விளங்குகிறார். இந்த 20-ஆம் நூற்றாண்டிலேயே வினோபாஜி நம்மிடையே வாழுகின்ற காலத்திலேயே காந்தியடிகள் காண விரும்பிய சர்வோதய சமுதாயத்தை - புதிய சமுதாயத்தைக் காணவேண்டும் என்ற முயற்சியில் நாம் ஈடுபட வேண்டும். நாம் அனைவரும் ஓரணியில் சேர்ந்து, அண்ணல் காந்தியடிகளுக்குக் காணிக்கையாக அவரது சித்தாந்தங்களை ஆண்டுக்கு ஒன்று வீதமாகவாவது எடுத்துக்கொண்டு நடைமுறைக்குக் கொணர முயற்சிக்க வேண்டும்.

## 19. அகிம்சை

"அகிம்சையை இன்றைய உலகம் ஏற்காது - ஏற்க முடியாது; ஒருவனை ஒருவன் அடுதலும் தொலுதலும் புதுவது அன்று; 'இவ்வுலகத்து இயற்கை' என்று புறநானூறு பேசுகின்றது. எனவே உலகம் உள்ளவரை பிற உயிர்களைத் துன்புறுத்தல் - இம்சித்தல் இருந்தே தீரும்" என்று சிலர் சொல்லுகிறார்கள்.

உலகம் வளர்ந்து செல்லக்கூடியது. இன்று ஆங்காங்கு பல்வேறிடங்களில் அடி உதை கத்திக்குத்துகள் நிகழ்ந்த

போதிலும் அவை யாவும் முன்னைய அளவிற்கு - பண்டைக் காலத்தில் இருந்த அளவிற்கு இன்று இல்லை.

அன்றைய நிலையில் வாளை - கத்தியை இடையில் சொருகிச் செல்வது, மதிப்பிற்குரியதாகப் போற்றப் பெற்றது; இன்று பழிப்பிற்குரியதாகக் கருதப்பெறுகிறது.

வாளைச் செருகிக் கொண்டு செல்லவும் மனிதன் கூசுகிறான்.

மனைவியை அடித்து உதைத்து அடக்கியாளுவது இடைக்காலத்தில் ஆண்மகனுடைய - கணவனுடைய கவுரவமாக - வீரச் செயலாகக் கருதப்பெற்றது. இன்று வெறுத்து ஒதுக்கத்தக்க இழிநிலையாக எண்ணப் பெறுகிறது.

உழவனை அச்சுறுத்திச் சவுக்கால் அடிப்பது அன்றைய மிட்டா மிராசுகளின் செல்வாக்கைக் காட்டுவதாக இருந்தது. அச்செயல் இன்று யாரும் ஏற்க மறுக்கின்ற இழிசெயலாகக் கருதப்பெறுகிறது. இவையெல்லாம் காலத்தின் வளர்ச்சியால் ஏற்பட்டுள்ள நற்பண்புகள். இம் முன்னேற்றம், ஏதோ திடீரென்று ஏற்பட்ட முன்னேற்றமன்று. அதாவது,

சிறு தம்ளரில் விரைவில் உயரும் நீர்மட்டம்போல் விரைவில் பெற்ற உயர் நிலையன்று. விரிந்து உயர்ந்த ஏரியில் துளித் துளியாக நீர் சேர்ந்து சிறிது சிறிதாக ஏற்றமடையும் நீர்நிலை போன்றது. மெல்ல மெல்ல உயர்ந்துவரும் இக்காலத்தில் அன்று பாடிய புறநானூற்றின் வேறு பல அடிகள் ஒத்துவந்தாலும் "ஒருவனை ஒருவன் அடுதலும் தொலுதலும்.....இயற்கை?" என்ற வரிகள் எக்காலத்துக்கும் ஒத்துவருவன என்று எப்படிக் கொள்ள முடியும்? 'ஒருவனை ஒருவன் அடுதலும் தொலுதலும் புதுவதன்று' என்று கருத்து இன்று ஒத்துவருவதாக இல்லை.

'உலகப் பிரச்னைகள் எல்லாம் இன்று படை பலத்தால் தானே தீர்க்கப் பெற்றன? உலகமே படைபலத்தை நம்பி

வாழும் நேரத்தில் அகிம்சை பேசுவதால் -- அகிம்சையை ஏற்பதால் பயன் என்ன?' என்ற வினா எழுப்பப் பெறுகிறது.

குறிப்பிட்ட ஒரு நல்ல கொள்கை, அது எந்தக் கொள்கையாயினும் நடைமுறைக்கு வருதல் என்பது சற்றுக் கடினமானதுதான். தீயது விளைவது போல நன்மை அத்துணை விரைவில் விளைந்து விடுவதில்லை. எனது வீட்டில் கொசு இருக்கிறது என்பதற்காக அடுத்த வீட்டிலும் கொசு இருக்கிறது என்றோ, எனது வீட்டில் இல்லாததால் அடுத்த வீட்டிலும் கொசு இல்லை என்றோ திடீர் என முடிவு கட்டிவிடுவது கூடாது. அகிம்சையைப் பற்றிச் சிந்திக்கக் கூடிய - நடைமுறையில் கடைப்பிடிக்கக்கூடிய சூழ்நிலை இன்றைய உலகம் முழுமையும் மெல்ல மெல்லப் பரவி வருகின்றது. அணு ஆயுத சோதனைத்தடை, அணு ஆயுத உற்பத்தித் தடை போன்ற தூய நல்லுணர்வுகள் தலையெடுத்து வரும் காலம் இது. இந்த நேரத்தில் அகிம்சையை மேற்கொள்வதால் ஏற்படுகின்ற நன்மை மிகப் பெரியது.

பண்டைய நிலையில் அகிம்சையால் விளையும் பயன் அவ்வளவு பெரிதன்று. ஏனெனில் அன்றைய ஆயுதம் வாளும் ஈட்டியும் அம்பும்தான். அவற்றால் விளையும் பயன் தீமையைவிட மிகமிகக் குறைவு. அன்று ஒரு மனிதன் கையிலிருந்த வாளினால் ஒரு சிலரே இறந்துபட நேரிட்டது. இன்றோ ஒரு சிறு அணுகுண்டால் கோடிக்கணக்கான மக்கள் - ஏன் இந்த உலகமே அழிந்துவிடக்கூடும். எனவே இன்றையச் சூழ்நிலையில்தான் அகிம்சை நெறி அணு ஆயுத சோதனைத் தடை, அணு ஆயுத உற்பத்தியைக் குறைக்க நிகழும் கிளர்ச்சி - படைபலக் குறைப்பு முதலியன அகிம்சை நெறி வெற்றியடையத் தொடங்கியுள்ளமைக்கு அறிகுறி யாகும். இவை யெல்லாம் அன்பு நெறியின் - அருள் நெறியின் - அகிம்சை நெறியின் வெற்றிகள்!

'அகிம்சையால் சாதித்தது என்ன? அகிம்சை பேசிவரும் நாடு சாதித்த சாதனைகள் அனைத்துமே அகிம்சையை அடிப்படையாகக் கொண்டவைதாமோ?' என்று கேட்கின்றனர்.

எந்த ஒரு செயலையும் இடம் பொருள் ஏவல்கட்கு ஏற்பவே, நல்லதா கெட்டதா என்று முடிவு செய்ய வேண்டும். பொதுவாக, நன்மை பயக்கும் ஒரு செயல், இடம் பொருள் ஏவல்கட்கு ஏற்ப தீமை பயப்பது போலத் தோன்றுவதும், தீமை பயப்பது போன்ற ஒரு செயல் இடம் பொருள் ஏவல்கட்கு ஏற்ப நன்மை பயப்பதும் உண்டு.

மனிதன் வாழும் வீட்டிற்குள் பாம்பு நுழைந்து அடுத்த வனைத் தீண்ட முயலும்போது அகிம்சை பேச முடியுமா? அடித்துக் கொல்லுதல்தானே மரபு? வீட்டில் புகுந்த பாம்பை அடித்துக் கொல்வது வழக்கம் என்ற எண்ணத்தில் காட்டிற்குள் புகுந்து புற்றினைப் பெயர்த்துப் பாம்புகளை எல்லாம் தேடிப் பிடித்து அடித்துக் கொல்வது சரியாகுமா? முன்னது கடமை வழிபட்ட அகிம்சை, பின்னது இம்சை.

ஒரு மனிதன் இறந்து விட்டால் அவனது உடலைச் சுடுவது கடமை. அது இம்சையாகாது. சுடுவதை நினைவிற் கொண்டு உயிருடன் இருப்பவனது உடலைச் சுடுவது சரியாகுமா? எதற்கும் இடம் பொருள் ஏவல் காலம் உண்டு!

அகிம்சை வழி நிற்க வேண்டுமானால் படைகளே கூடாது. நம் நாட்டிலோ படைபலம் பெருக்கும் நிலை நிலவு கின்றது. இது ஒன்றே இன்றையச் சூழ்நிலையில் அகிம்சையை நிலைநாட்டமுடியாது என்பதற்கு சான்றாகாதா என்கின்றனர்.

இன்றைய உலகில் சிலர் எடுத்த எடுப்பிலேயே சண்டை போடுபவராக உள்ளனர். ஆயினும் அவர்களும்கூட தம் கை கண்ணில் குத்தும்போதும் தம் பல் நாக்கைக் கடித்துவிடும்போதும் அவற்றை நொந்து கொள்ளு

கிறார்களா? அவற்றின் தவறுகளுக்காக அவற்றை வெட்டி வீசி எறிந்துவிடுவதில்லையே.

ஆனால் அண்டை அயலான் தனக்கு ஏதேனும் சிறு தீங்கு செய்துவிட்டாலும் கத்தியும் கையுமாகப் புறப்பட்டு விடுகின்றனர். இத்தகைய மனிதர்கள் உளவலிமையற்றவர்கள். இவர்கள்தான் கத்தியும் கம்பும் தேடுவர். உள்ள வலிமை யுள்ளவர்கள் தீங்கினையும் பொறுத்திருக்கும் ஆற்றல் பெற்றிருப்பார்கள்.

படைபலத்துக்காக நாம் படையைப் பெருக்குவது உண்மைதான்! எனினும் நமது படைப் பெருக்கம் தற்காப்புக்காகவேயன்றி மற்றவனை அடிப்பதற்கு அன்று.

தவிர்க்க முடியாத சூழ்நிலையில் நாம் நம் நாட்டைக் காப்பதற்காகப் போர் தொடுக்கிறோமே தவிர, அடுத்தவனை வென்றால் பேரரசாகலாம் என்ற போர் வெறி காரணமாக வீம்புக்காக நம் படையைப் பெருக்கவில்லை. வலியச் சென்று பிறர் பொருளைத் தீண்டக்கூடாது - தீண்டுவது தவறு என்ற கொள்கையை உடையது நம் அரசு.

அகிம்சை என்பது பிற உயிர்களைக் கொல்லாமல் இருப்பது மட்டுமன்று. அது மிகமிக நுண்ணியது; ஆழ்ந்த பொருளுடையது. ஒருவன் அகிம்சை நெறியாளன் என்றால் அவன் தன் எண்ணத்தாலும் பேச்சாலும் செயலாலும் பிறர்க்குத் துன்பம் வருவனவற்றை நினைக்காமல் - பேசாமல் - செய்யாமல் வாழவேண்டும். அதுதான் அகிம்சை. தீயன நினையாதே - தீயன பேசாதே - தீயன செய்யாதே என்பதுதான் அகிம்சை.

மனிதன் அண்டை வீட்டுடன் பக்கத்து நாட்டுடன் ஒட்டி வாழும்போது சிற்சில துன்பங்களைப் பெறுகிறான். அவற்றை எல்லாம் பொறுத்துக் கொள்ளத்தக்க உள்ளம் வேண்டும்; உள்ளவலிமை உடையவனே அகிம்சையை நிலைநாட்டுவான். உள்ளவலிமையற்றவன் எதற்கெடுத்தாலும்

சண்டையிடுவான் - போர் தொடுப்பான். உள்ள வலிமை யுடன் அகிம்சையைப் பேணுவதால் அவன் அடையும் பயன் மிகப் பெரியது. அகிம்சை நெறியில் நிற்பவனிடம் அறிவு, பெருமை, ஆற்றல் இவை வளரும்.

அகிம்சை நெறியாளன் மேற்கொள்ளத்தக்க நெறிகளுள் முதலாவது அவன் சாட்சிக்காரன் காலில் விழுவதைவிட சண்டைக்காரன் காலில் விழுவது நல்லது என்பதாகும். அதன் மூலம் அவன் பெரும் பகுதி நன்மையைப் பெறலாம் - சமாதானத்தை நிலைநாட்டலாம்.

அவன் பின்பற்ற வேண்டிய இரண்டாவது நெறி தன் ஆத்திரத்தைக் குறைத்துக் கொள்ளுதல். மற்றவன்மீது தான் கொண்டிருக்கும் ஆத்திரத்தைக் குறைப்பதற்கு ஒரே வழிதான் உண்டு. அது தன் கருத்துக்கு மாறுபட்டவனிடம் - மாற்றுக் கருத்துடையவனிடம் யோசனை கேட்பதாகும். தன் கருத்துடன் ஒத்த கருத்துடையவனிடம் பெறும் யோசனை ஆத்திரத்தைக் கிண்டிக் கிளறிவிடப் பயன்படுமே தவிர அணைக்கப் பயன்படாது. நெருப்பும் பெட்ரோலும், நெருப்பும் எண்ணெயும் ஒத்துப்போகக் கூடியன. நெருப்பை அணைக்க எண்ணெய் அல்லது பெட்ரோலின் துணையை நாடக்கூடாது; மாறாக அத்துடன் மாறுபட்ட மணல் தண்ணீர் இவற்றின் துணையை நாடவேண்டும். அது போலத் தன் ஆத்திரத்தைக் குறைத்துக்கொள்ள மாறுபட்ட கருத்துடையவனையே நெருங்கி ஆலோசனை கேட்க வேண்டும்.

அகிம்சையைப் பின்பற்ற நினைப்பவன் கொள்ளத்தக்க மூன்றாவது நெறி தற்பெருமை கொள்ளாமை ஆகும். தற்பெருமை கொள்பவனிடமும் அகிம்சை குடிகொள்வ தில்லை. மற்றவனுக்கு மதிப்பு கொடுப்பவனிடமே அகிம்சை நின்று நிலைக்கும்.

முடிவாக அணுஆயுதத் தடையும் போர் நிறுத்தச் சூழலும் உருவாகிவரும் இக்காலத்தில் உலகம் அகிம்சையை ஏற்று நடக்க இயலும். இன்றைய உலகத்திற்கு அந்த அகிம்சை நெறிதான் வழிகாட்ட முடியும்.

## 20. கதர்

காந்தியத் தத்துவம் என்ற மையக்கோட்டில் அரசியல் இருந்தது - அருளியல் தழுவிய அரசியல் இருந்தது. ஆன்மார்த்த சிந்தனைகளும் இருந்தன. இப்படி ஒரு தத்துவ கர்த்தாவை நாம் அடிக்கடி காண்பதில்லை. வள்ளுவத்தில் ஒரு குறை இருந்தது. அதுவும் காந்தியிடத்தில் இல்லை. அதுதான் விடுதலையுணர்வு. அதையும் காந்தி வற்புறுத்தினார்.

தமிழகத்திற்குச் சில பண்பியல்கள் உண்டு. எல்லா நாகரிகங்களிலும் சிறப்பியல்புகள் உண்டு. எனினும் வழிவழி நாகரிகம் பாழ்பட்டு நின்ற நமது பாரதத்திற்கு விடுதலை வாங்கித்தர அவர் கையாண்ட முறை புதியது - போற்றத் தக்கது. அன்றும் தமிழகத்தில் அகிற்புகை போன்ற துணிகளை உற்பத்தி செய்தமைக்காகப் பல கைத்தறியாளர்களின் கட்டை விரல் துண்டிக்கப்பட்டன என்று வரலாறு கூறுகிறது.

சுதந்திர நாட்டில் சுதந்திரமாகச் சிந்திக்க என்ன செய்ய முன்வரவேண்டும். விடுதலையுணர்வை உண்டாக்க முதலில் பொருளியல் விடுதலை வேண்டும்.

காந்தியத் தத்துவம் ஒரு செயல் செய்தால், பலவற்றையும் ஒருங்கே திருத்தும் ஒரு சக்தி வாய்ந்தது.

கதர் நூற்றால், ராட்டைச் சுற்றினால் சுதந்திரம் வந்து விடும் என்றார் காந்தி. சேர, சோழ, பாண்டியர் காலத்தில் பொழுது போக்குக்காக, விளையாட்டாக நாடு பிடித்திருக்

கிறார்கள் வெள்ளையர்கள். நாடு பிடித்ததின் நோக்கம் தங்கள் உற்பத்திகளை இங்குக் கொண்டுவந்து விற்பதற்குத் தான். 'என் நாட்டுப் பொருளாதாரத்தை வெள்ளைக்காரன் சுரண்டுவதைத் தடுக்கிறேன்' என்ற உணர்வோடு ஏழை மனிதன் கதர் வேட்டியைக் கட்டும் போது எண்ணுவான்; காந்தியடிகள் மனப்புரட்சியை உண்டாக்கினார். அவரது போராட்டம் ஆதிக்க எதிர்ப்பே அன்றி ஆள் எதிர்ப்பல்ல. அங்கே அரசியல் ஒழுக்கத்தை மனித ஒழுக்கத்தைப் பார்க்கிறோம். காசில்லாமல் போகலாம் - கைகள், கால்கள் இல்லாமல் போகாதே. எனவே நூற்றுக் கட்டிவிடலாம் என்ற பொருளியல் உணர்ச்சியை இந்த கதர் மூலம் காண்கிறோம். நிர்மாண இயக்கங்களாக தீவிர அரசியல் ஊழியர், தீவிர நிர்மாண ஊழியர் என்று இரு பிரிவுகளாகப் பிரிந்து செயல்படலாம். வசதியுடையவர்கள் - வாய்ப்பு உடையவர்கள் - கையுடையவர்கள் எந்த ஆட்சியிலும் வாழ்ந்துவிடுகிறார்கள்; வாழ்ந்துவிடுவார்கள். எதிலும் மிதக்கத் தெரிந்தவர்கள் யார் ஆண்டாலும் மிதக்கக் கற்றுக் கொள்வார்கள். காந்தி சாதாரண மக்கள் வாழ விரும்பினால் நகரம் என்ற கரையான் பல கிராமங்களை அரித்துச் சாப்பிடுகிறது. கிராம மக்கள் கோடானு கோடி பேர் இருக்கிறார்கள். அவர்கள் கிராமிய ரீதியிலே ஒரு பெரு எழுச்சியை உண்டாக்க வேண்டும்.

குறைந்த நேரத்தில் அதிக உற்பத்தி என்பது மட்டுமல்ல நமது பிரச்னை. எவ்வளவு அதிகப்படியானவர்களுக்கு வேலை வாய்ப்புக் கொடுக்க முடியும் என்பது தான் - பலருக்கு வேலை வாய்ப்பில்லை - வேலை செய்ய சக்தி யுள்ளவர்கள் பலர் குறைந்த சம்பளத்திற்கு வேலைக்குப் போகும் நிலையில் உள்ளதை மாற்றியாக வேண்டும். இம்முயற்சியில் பொருளாதார இலாகா நட்டத்தைப் பார்க்க முடியாது. அறம் அருள் என்றும் தீமை செய்தாலும் பொறுத்துக்கொள் என்றும் கூறிய வள்ளுவர்,

"ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு"

என்கிறார். ஆம், கீழ் மக்கள் தமது கன்னத்தை நொறுக்கும் வளைந்த கைகளையுடையவர்க்கல்லாமல் மற்றவர்களுக்குத் தாம் உண்டு கழுவிய ஈரக்கையையும் உதற மாட்டார்கள். எச்சிற்கையால் காக்கைகூட விரட்ட மாட்டார்கள்.

இன்றைய பொருளாதார நிலை நாட்டிற்கு ஆபத்து. வறுமையிற் செம்மை என்று நாம் கூறியிருக்கிறோமே தவிர வளமையில் பங்கு கொடு என்று சொல்லக் கூசியே வாழ்ந்து வந்திருக்கிறோம். சராசரி மனிதர்களுக்கு மேல் வாய்ப்புக் கொடுக்க முற்படவேண்டும்.

அரசாங்கம் வேலை கொடுப்பதற்குரிய சூழ்நிலையை உருவாக்க முடியுமே தவிர, அரசாங்கமே வேலை கொடுக்க முடியாது. உற்பத்தி இங்கு பெருகி இருக்கிறது என்றாலும், அது பரவலாக எல்லோரிடமும் சென்று சேரவில்லை என்ற குறைபாடு இன்று இருக்கிறது. உழைப்பது கடமை - தேவையைப் பெறுவது உரிமை. உரிமை என்ற கடமை உணர்ச்சிதான் சிறந்தது. பசி என்ற கொடுமையை உடனடியாக அழிக்க வேண்டும். அது தான் சிறந்த அறம் - தர்மம். பசிக் கொடுமை, வறுமையைப் போக்க அது கொடுத்து மாளாது. எனவே வாழ்வதற்கான வழிகளைக் கண்டுபிடித்துக் கொடுக்க வேண்டும். அதற்குத்தான் சர்வோதய சமுதாயம் - சமத்துவ சமுதாயம் என்றெல்லாம் பெயர்.

கையால் நூற்கின்றபோதும் நெய்கின்ற போதும் அவர்கள் நல்ல எண்ணம் கொண்டவர்களாக இருந்தால் அந்த உடைகளை நாம் உடுத்தும்போது அந்த எண்ணங் களின் பிரதிபலிப்பு இருக்கும். கதர் வாங்கினால், காசு கொடுத்துக் கருத்தையும் வாங்கினதாகக் கூடக் கூறமுடியும். எண்ண வலிவுக்கு இருக்கும் ஆத்மசக்தி சாதாரணமானதல்ல - நம்முடைய தேசத்தின் சின்னமாக - இந்தியக் குடிமக்களின்

சின்னமாக நினைத்து நாம் கதர் அணிய வேண்டும். வாயில்லாதவனுக்குக் கூட வீடு தேடிக் கொண்டுபோய் சோறு கொடுப்பது நமது கடமை - அதிலே ஒவ்வொரு குடிமகனுக்கும், குடிமகளுக்கும் பொறுப்பு இருக்கிறது.

எல்லோருக்கும் வாழ்வு தருவதுதான் இன்று நமக்கிருக்கும் முதல் வேலை. இங்கு ஆளும் தகுதியுடையவர்களாக ஒரு பிரிவினரையும் ஆளப்படும் தகுதியுடையவர்களாக இன்னொரு பிரிவினரையும் பழக்க வேண்டும்.

குடியரசு நாட்டில் ஆளுவது மட்டுமே பொறுப்புடையது அல்ல - நல்ல குடிமக்களாக - குடியாட்சித் தத்துவத்தில் திளைத்தவர்களாக வாழ்வதும் பொறுப்புடையதுதான். அந்தப் பொறுப்பு வளரும்போது, ஊழியம் பெரிதேயன்றி, ஊதியம் பெரிதல்ல என்ற உயர்நிலை உருவாகிவிடும்.

## 21. நாமும் பூமிதான இயக்கமும்

### முன்னுரை

இந்தியநாடு இன்பத்திருநாடு. கங்கை முதல் காவிரி முதலிய புண்ணிய நதிகளின் புனல்கொடையால் பல்வளம் கொழுமியநாடு. அன்பே நினைந்து அறமே புரிந்து அருள் ஒழுக்கம் மேற்கொள்வோர் வாழும் பெருநாடு. இந்திய நாட்டின் வரலாற்றில் அன்பின் நிகழ்ச்சிகளே மிகுதி. தானத்திலும் உயர் ஞானத்திலும் சிறந்தது இந்தியநாடு. அணுகுண்டு சகாப்தத்தில் அஹிம்சையின் மூலமாக விடுதலை பெற்றதே இந்தியநாட்டின் பண்பாட்டிற்குத் தக்கசான்று. சமுதாயத்தின் நலனுக்குப் பொருளியல் சமத்துவம் மிக மிகத் தேவையானது. சமத்துவம் இல்லையானாலும், தனி மனிதனுடைய அத்தியாவசியமான சுய தேவையாவது நிறைவு செய்யப் பெறுதல் வேண்டும். அங்ஙனம் சுய் தேவை நிறைவு

வராவிடில், வெறுப்பும், வெறியும் சமுதாயத்தில் வளரத்தொடங்கி, கலகங்களை விளைவித்து, கொலையைப் பெருக்க ஏதுவாகும். உலக வரலாற்றில் இத்தகு இரத்தக் கறை படிந்த நிகழ்ச்சிகள் பலவற்றைக் காண்கின்றோம். இன்றைக்கும் உலகம் முழுவதிலும் வாதப்பிரதிவாதத்தில் இருந்துவரும் முக்கியப் பிரச்னையும் இதுவேயாம். பலாத்காரத்தின் மூலம் பொருளாதார சமத்துவத்தைக் கொண்டுவர உலகின் வடதுருவத்தில் உள்ள நாடு திட்டமிட்டு, திட்டத்தைப் பரப்பி சாதனையாக்க உழைத்துக் கொண்டு வருகிறது. உலகின் மேற்கொடியில் உள்ள வளம்படைத்த நாடு அதைத் தடுக்க, போர் முதலிய பல துறைகளையும் மேற்கொண்டு சாதிக்கப்பாடுபடுகிறது. இந்த நிலையில், இந்தியா, நாட்டில் பொருளாதார சமத்துவம் கொண்டுவர மனித தருமத்தின் அடிப்படையில் அன்று நெறிப் புரட்சியாகக் காட்சி அளித்து, மக்கள் மனத்தை மாற்றி, சமத்துவத்தைக் கொண்டுவர முயல்கின்றது; ஓரளவு சாதித்தும் விட்டது என்றுகூடச் சொல்லலாம். காந்தியத்தின் வழி விளக்காம் வினோபாஜி அவர்களுடைய நிலக்கொடை இயக்கம் அருளியலின் விளைவு - உண்மையிலேயே நிரந்தரமான சமத்துவத்தை நிலைநிறுத்துவது. பாரத கண்டத்தின் பண்பின்வழி அரசியல் விடுதலை பெற்றோம். இன்று பொருளியல் விடுதலைக்கு முயன்று கொண்டிருக்கின்றோம்.

## வாழ்க்கையில் இன்பம்

வாழ்க்கை பெரும்பகுதி சுவையற்றதாக துன்பச் சுழலில் சுழல்கிறது. "உண்டி முதற்றே உலகு" என்பது பழமொழி. மனித வாழ்வுக்கு முதல் தேவை உணவும் உடையும். இவற்றிற்குப் பின்பு தான் மற்றவற்றைப் பற்றி மக்கள் சமுதாயத்திற்குக் கவலை. உயிர் வாழ வயிற்றுக்கு உணவும், குளிருக்கு உடலைக் காத்துக் கொள்ள ஓர் ஆடையும் கிடைத்துவிட்டால் அதுவே இன்பமென நினைப்

போர் பெரும்பகுதியினர். "பசித்தவனுக்கு ரொட்டிதான் கடவுள்" என்றொரு முதுமொழி உண்டு.. ஆழ்வார் பெரு மகனும் "தின்கின்ற சோறும் பருகுகின்ற நீரும் வெற்றிலையும் பாக்கும் நீ" எனக் கடவுளைக் கண்டு காட்டுகின்றார். எனவே மக்கள் சமுதாயத்திற்கு இன்பம் அன்றாடத் தேவையின் நிறைவில்தான் இருக்கிறது.

## இன்றைய நிலை

வளம்பல படைத்த நாட்டில் வறுமை தலைவிரித் தாடுகின்றது. இன்பம் பூத்துக்குலுங்கிய நாட்டில் துன்பச் சூறாவளி சுழன்றடிக்கின்றது. தாராளம் வாழ்ந்த நாட்டில் தரித்திரம் தாண்டவமாடுகிறது. வாழ்வில் வறுமையோடு போராடும் கொடிய பாதகமான சூழ்நிலை - பசி பசி என்ற ஈனக்குரல் எங்கும் கேட்கப்படுகிறது. உயர்ந்த அடுக்கு மாளிகையில் சிலர் வாழ்வு, அம்மாளிகையின் முகப்பில் சாக்கடை அருகில் நாயொடு பொருதும் பலர் வாழ்வு. இதனால் எங்கும் பொறாமைக் கனலும் மனப் புழுக்கமும் வளர்கின்றன. இதனின்றும் களவும் கொலையும் பெருகு கின்றன. நல்லது தீயது என்பது பற்றிய சிந்தனையே மக்களிடம் குறைந்து வருகிறது. போலீஸ் கூடங்களும், நீதி மன்றங்களும் பெருகிவருகின்றன.

## வாழ்க்கையில் சமயம்

ஒழுக்கம் சமய வாழ்வின் அடிப்படை, நீதியும், நேர்மையும், வாய்மையும் சமய வாழ்வின் அணிகலன்கள் இவற்றை வளர்ப்பதற்கும், உறுதிப்படுத்துவதற்கும், இறவாத இன்பம் பெறுவதற்கும், வழிபாடு வழிகோலுகிறது. ஆனால் இன்றைய சமுதாயம் வாழ்க்கையின் தேவைக்கே போராடிக்கொண்டிருக்கும் பொழுது நல்லறப் பண்புகளைப் பற்றிச் சிந்திக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. இம்மையை மறந்து மறுமையைப் பற்றிச் சிந்திக்கும் பேருள்ளம்

ஆயிரத்தில் ஒருவருக்குத்தான் அமைதல் கூடும். அத்தகை யோரே ஞானிகள் மகாத்மாக்கள். மகாத்மாக்கள் நிலையில் பொதுமக்களையும் கருதுதல் கூடாது. எனவே பொது மக்களைப் பொறுத்தவரையில் இம்மை வாழ்வின் நிறைவான நிம்மதியான வாழ்வுக்குப் பின்தான் சமயம், கடவுள் நம்பிக்கை முதலியன பற்றிய சிந்தனை. ஆதலால்தான் இன்றைய மக்களிடை உலகியல் தேவையைப் பற்றிய சிந்தனை பரவியிருக்கிற அளவுக்கு சமயத்தைப்பற்றிய சிந்தனை இடம்பெறவில்லை.

## எதிரான போக்கு

இந்திய நாடு மத நம்பிக்கையில் சிறந்த நாடு. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக மத நம்பிக்கை அடிப்படையிலேயே வளர்ந்த நாடு. இந்து மதம் உலக மதங்கள் பலவற்றுள்ளும் கொள்கையால் சிறந்து தலைமை வகிக்கிறது. ஆனால் அதை அனுஷ்டிப்பவர்கள் எண்ணிக்கையில் சிலராயினர். இந்திய நாட்டிலும் இடையில் இந்து மதம், மக்கள் சமுதாயத்தோடு தொடர்புகொள்ளாமையினாலும், அன்றாட வாழ்வில் பங்குகொள்ளாமையின் காரணமாகவும் இந்துக்கள் பலர், தம்முடன் நெருங்கிய தொடர்பைக் கொண்ட பிற மதம் புகலாயினர். பிற மதம் புகுந்தபின் இந்து மதத்தை இழிவானதெனவும், குறுகிய நோக்கங்கள் கொண்டது எனவும் கருதலாயினர். இக் கருத்து வளர்ந்து காலப்போக்கில் இந்து மதத்திற்கு எதிர்ப்பு மனோபாவத்தை மக்களிடையே தூண்டிவிட்டது. வறுமையை ஒழித்துக்கட்டி, எல்லோருக்கும் இன்ப வாழ்வைத் தருவதே தங்களது இலட்சியம் எனச் சொல்லிக் கொள்ளும் அரசியல் கட்சிகளும், சமூகத்தைச் சீர்திருத்துகின்றோம் என்று சொல்லிக்கொள்ளும் இயக்கங் களும் கடவுள் நம்பிக்கையை மறுக்கின்றன. மக்களினத்தின் நிரந்தரமான இன்பத்திற்குத் தடை விதிப்பது மத நம்பிக்கை தான் எனத் தீவிரமாகப் பரப்பி, மக்கள் சமுதாயத்தைச் சமயத் துறை வாழ்விற்கு எதிரிடையான பாதையிலே

*அழைத்துச் செல்கின்றன. மக்களும், தாங்கள் வறுமையின் கொடுமையினின்றும் விடுபெறப் போகின்றோம் - நல்லதொரு இன்பவாழ்வை நடத்தப்போகின்றோம் என்ற நினைப்புகள் கடவுளை மறந்து, அவர்கள் வழிச்செல்லத் தலைப்படுகின்றனர்.*

## முதல் சிகிச்சை

இங்ஙனம் வறுமையின் காரணமாக நேர்மைக் கோட்டினின்றும் விலகி நீதி என்ற நித்யத்துவத்தைக் கடந்து ஒழுங்கு என்ற உத்தம நெறியை இகழ்ந்து, கடவுள், மறுபிறப்பு, இருவினை என்ற நினைப்புக்களைக் கனவிலும் கருதாது, தவறான வழிகளில் தேவையை நோக்கிப் போகும் சமுதாயத்தை, அன்பு வழியில் - அறத்தாற்றில் - அருள் நெறியில் - கடவுள் நம்பிக்கையில் சிறந்த பக்திப் பெரு வாழ்வில் அழைத்துச் செல்ல விரும்பினால், அவர்களுடைய வறுமை நோய்க்கு மருந்து தேவை. அன்றாட வாழ்வில் துன்பச்சாயல் இல்லாதிருந்தால்தான் நல்லறப் பண்புகளும், நல்லொழுக்கமும், பக்தியும் வளர முடியும். துன்பத்தின் காரணமாகத் தீமை புரையோடியிருக்கும் சமுதாயத்திற்கு முதல் சிகிச்சை வாழ்க்கையின் இன்றியமையாத் தேவையை நிறைவு செய்வதேயாம். இம் முதல் சிகிச்சை சீர்பெற நடந்து, வாழ்க்கையில் இன்பம் மலர்ந்துவிடின் தானே கடவுள் நம்பிக்கையும், மறுமை நோக்கும், சமய வாழ்வும் குடி கொண்டுவிடும்.

*இதனைத்தான் ஆந்த்ரேமோர்வா என்னும் பிரெஞ்சு நாட்டுப் பேராசிரியர் "டாக்டர் ஓ' கிரேடி மீண்டும் வருகிறார்"* (The Return Dr. O' Grady) *என்ற தம் நூலில் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகின்றார்.*

"நல்லுணர்ச்சிகளை மனிதனிடத்தில் தூண்ட வேண்டும். தூய ஒழுக்கம், வேதாந்த ஆராய்ச்சி, மதக் கொள்கைகள் இவை பரவி மனிதனை முன்பு செம்மைப்படுத்தின.

அத்தகைய சூழ்நிலையை மீண்டும் அமைத்தல் நலமாகும். தாழ்மையுற்றவர்கள் அவமானமுற்றவர்கள் இவர்களின் மனப் புண்களை ஆற்றவேண்டும். இப்படிப்பட்டவர்கள்தான் போர் உணர்ச்சியை வளர்ப்பார்கள். இவர்களிடத்தில் இன்பம் இல்லாத காரணத்தால், வெஞ்சினந்தான் இவர்கள் உள்ளத்தில் அரசு செலுத்தும். அதைத் தவிர்க்க நாம் எழ வேண்டும்"

*திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும், திருவீழி மிழலையில் ஆற்றிய தொண்டும் இதுதானே? ஒன்றுமில்லாத வறுமைநிலை வரையில் இளையான்மாரர் செய்த திருத் தொண்டும் இதுதானே? மணிமேகலை மனித சமுதாயத் திற்குச் செய்த சேவையும் அதுவேயன்றோ?*

## சமுதாயமும் நாமும்

*நாம், சற்றேறக்குறைய 500 ஆண்டுகளுக்கு முன் தோன்றி அருள் வளம் பழுத்து வளர்ந்ததொரு சமய நிலையத்தின் தலைமைப் பொறுப்பைத் தாங்கி நிற்கும் தொண்டர். நமது ஸ்தானத்துக்குரிய கடமை மக்கள் மன உணர்ச்சியைக் காத்து நல்லற வாழ்வுத் துறையில் அழைத்துச் சென்று, பக்தியுடன் கலந்த சமயப்பெரு வாழ்வு வாழச்செய்தலாகும். இத் திருப்பணியை நமது முன்னவர்கள் அவ்வக்காலத்திற்கு உகந்த முறையில் திறம்படச் செயலாற்றி வந்துள்ளனர். இன்றோ சமய நிலையமும் கூட மக்களொடு வழக்காடுவதற்கு நீதிமன்றத்தை நாடவேண்டிய நிலையில் மக்கள் மனம் அமைந்துள்ளது. அறநிலையங்களிடத்தில் மக்கள் காட்டிவந்த மதிப்பும் அனுதாபமும் அந்த அளவுக்கு மாறி நிற்கின்றது. தனி மனிதன் வாழ்விலேயே காவலை பாரதியார் வெறுக்கின்றார். எனினும் சமுதாயத்தைத் தலைமை வகித்து அழைத்துச் செல்லக்கூடிய சமயத் தலைவர்களும்கூட காவலோடு உலவ வேண்டிய அளவுக்கு அற உணர்ச்சியும் சமயப் பண்பாடும் கெட்டுள்ளது. எனவே* இன்று நம்முடைய முதலாய தொண்டு சமுதாயத் துன்பத்தைத்

துடைத்து, இன்பத்தை மலரச் செய்து, அதன் மூலம் சமய வாழ்வை மக்கள் மனதில் இடம்பெறச் செய்வதாகும்.

## வினோபாஜியின் வேள்வி

*சமுதாயத்தின் துன்பத்தைப் பரிபூரணமாகத் துடைக்கின்ற திருத்தொண்டிலே காந்தீயத்தின் வழி வினோபாஜி ஈடுபட்டார். மக்கள் மனத்தில் அன்புவித்திட்டு மன மாற்றத்தை உற்பத்திசெய்து நிலத்தானம் பெற்று, வாடுகின்ற ஏழைகளுக்கு நிலத்தை அளிக்க முன்வந்தார். இச் செய்தியைக் கேட்ட ஏழை மக்களின் முகத்திலே மகிழ்ச்சி மலர்ந்தது. கொடிய கொலைக்களத்தில் படைக்கலம் தாங்கி நின்றவர்களும் அன்பு வழியில் மாறியதை ஹைதராபாத்தில் கண்டோம். அரசியல் கலப்பில்லாது, சமுதாயத்தை உயர்த்தும் ஒப்பற்ற அருள்நெறி இயக்கம் இது என்று நாம் மனப்பூர்வமாக நம்புகின்றோம். பூமி தானத்தின் மூலம் வறுமையின் வாட்டம் தவிர்க்கப்படுகிறது. துன்பம் துடைக்கப்படுகின்றது. வெறுப்புணர்ச்சி விடைபெறுகிறது. கொலை, புலைத் தன்மைகள் புறம்போகத் தலைப்படுகின்றன. இவற்றின் பயனாக மக்களிடையே சமய நம்பிக்கையும் வாழ்வும் இடம்பெறுகிறது. இந்த இயக்கத்தை ஆண்டவனின் தூண்டுதலின் பேரில்தான் தொடங்கினேன் என்று வினோபாஜி சொல்லியுள்ளதே இதற்குச் சான்றாகும். வினோபாஜியின் வேள்வி அருள் ஒழுக்கத்தின் எதிரொலி. யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பண்பின் வழி நின்று ஈகைத் தன்மையைப் பெருக்கி இன்பத்தை விளைவிக்கிறது.*

## நம்முடைய ஆதரவு

மக்களிடையே சமய உணர்ச்சியை வளர்த்து, நல்லறச் செல்வர்களாக வாழ்விக்கும் பொறுப்பு நாம் வகிக்கும் ஸ்தானத்திற்கு உரிய தலையாய கடமையாகும். மக்களின்

வேதனைக் குரலில் எப்படிச் சமயத்தை வளர்க்க முடியும்? தந்தையும் தாயுமாக விளங்கும் ஆண்டவன் திருக் கோயில் களுக்கு முன்பே ஏழைகளின் பட்டாளத்தைப் பார்க்கும் பரிதாபகரமான காட்சியை என்னென்பது? இந்த நிலையில், சமய வளர்ச்சிப் பணியில் இறங்கிய நாம், முதலில் பசிப் பிணிக்கு மருத்துவம் தேவை என்பதை உணர்ந்தோம். இதே நிலையில் வினோபாஜியால் பூமிதான இயக்கம் தொடங்கப் பெற்றது. இந்தப் பண்பாட்டின் அடிப்படையில் ஏழ்மையை நீக்க இந்த இயக்கம் பெரிதும் உதவுமென்று நாம் நம்பினோம். இந்த இயக்கம் வெற்றி பெறும்போது மக்களிடையே நிலவியுள்ள தீய உணர்ச்சிகள் அருகி, நல்லற உணர்ச்சிகள் பெருகும். அதன் காரணமாக, சமய வாழ்வும் நாட்டில் மலர்ந்து விடுமென்ற அளவுகடந்த நம்பிக்கையுடன் பூமிதான இயக்கத்திற்கு நம்முடைய ஆதரவையும் வாழ்த்தையும் உரியதாக்குகின்றோம்.

## தொகுப்புரை

*அருளறம் பேணும் பேரன்பர்களே! வையம் வாழ்ந்தால் நாமும் வாழ்வோம். நமது உடன் பிறந்த சகோதரர்களின் துன்பம் துடைக்க மனமுவந்த பலவகையானும் தானம் செய்யுங்கள். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண் டொழுகுங்கள். ஈத்துவக்கும் இன்பம் இணையில் இன்பம்.* ஈத்தலின் மூலம் இந்திய நாட்டைச் சிறைக்கூடம் இல்லாத நாடாக சிவமணம் கமழும் திருநாடாக ஆக்குங்கள். அதுவே அருள் நெறி.

வளர்க அருள் நெறி!

வாழ்க காந்தீயம்

**இன்பம் பொலிக!**

## 22. புதிய சமுதாயம்

கால வளர்ச்சியில் மனித குலம் வளர்ந்திருக்கிறது. அப்படி வளர்வதென்பது இயற்கை. வள்ளுவரும் அப்பரடிகளும் சேக்கிழாரும் வாழ்ந்த காலத்திற்குப் பிறகு மனிதகுலம் வளரவில்லை என்ற கூற்றினை ஒப்புக்கொண்டு விடுவதற்கில்லை. இன்று பல்வேறு நாட்டுப் பேரறிஞர்களின் சிந்தனைகளும், கருத்துச் செல்வங்களும் இங்கு வந்து குவிந்திருக்கின்றன. இப்படி வளர்கின்ற - வளர்ந்து வருகின்ற - புதிய சமுதாயத்தோடு நாமும் நமது வாழ்க்கையை இணைத்துக் கொள்ளாவிட்டால் காலப் போக்கில் நாம் ஒதுங்குவோம் - ஒதுக்கப்படுவோம்.

> "முன்னைப் பழம் பொருட்கும்
> முன்னைப் பழம்பொருளே
> பின்னைப் புதுமைக்கும்
> பேர்த்துமப் பெற்றியனே"

என்று இறைவனை ஏற்றிப் போற்றுகிறது திருவாசகம். அந்தத் திருவாசகத்தைப் பாடிப்பரவி வருகிற பல அன்பர்கள் கூடப் பின்னைப் புதுமையை ஏற்றுக்கொள்ளத் தயங்குகிறார்கள் - மறுக்கிறார்கள். எனவேதான் நமது சமயம் உலகப் பெருஞ் சமயமாக ஆகவில்லை. வளர்ந்து வாழவேண்டிய - சமுதாயத்திற்குக் கருத்துப் புரட்சி இன்றியமையாததாகும்.

வாழ்க்கை ஒரு பெரும் போராட்டம். மனிதன் காலை எட்டு மணிக்குக் கொள்ளுகின்ற கோலமும் கருத்தும் மாலை எட்டு மணிக்கு அப்படியே இருப்பதில்லையே. எனவேதான் வாழ்க்கையில் சிக்கல் ஏற்படுகிறது. நூல் சுருளில் ஏற்படுகிற சிக்கலை எடுப்பதில் கூட மனிதர்கள் அக்கறையும் ஆர்வமும் காட்டுகிறார்கள்; வாழ்க்கையில் ஏற்படுகிற சிக்கலை நீக்குவதில் பெரும்பாலானவர்கள் அக்கறையோ, ஆர்வமோ காட்டுவதில்லை.

இயேசு, முகம்மதுநபி, காந்தியடிகள் ஒவ்வொரு காலத்தில் தோன்றி வெற்றி பெற்றார்கள் என்று பேசுகிறோம்; ஆனால், அன்றாட வாழ்க்கையில் மனிதர்கள் வெற்றி பெற்றார்களா என்ற கேள்விக்கு நாம் என்ன பதில் சொல்ல முடியும்? புத்தரை வாதில் வென்ற வரலாற்றை நமது சைவ இலக்கியத்தில் படித்துப் பரவசமுற்றுப் பாராட்டுகிறோமே தவிர, இன்றைய நடைமுறையில் - நாட்டில் "பௌத்தம்" - மக்கட் சமுதாயத்தை வென்றிருக்கிறது. மேதினியில் பல் வேறிடங்களுக்கும் சென்று பரவியிருக்கிறது என்ற உண்மை யினைச் சைவ அன்பர்கள் அறிந்துகொள்ள மறுக்கிறார்கள்!

இலக்கியம் வேறு, சமயம் வேறு என்ற கொள்கையை நாம் ஒத்துக்கொள்ள முடியாது. தொல்காப்பியர் காலத்தி லிருந்து, பாரதியார் காலம் வரையிலே குணரீதியான தத்துவ வழிபட்ட சமயம் ஒத்துக் கொள்ளப் பட்டுத்தான் வந்திருக் கிறது.

எண்ணத்தையும் சிந்தனையையும் ஒழுங்குபடுத்தி, அவற்றைச் சுவையூட்டத்தக்க வகையில் சொல்லுவது தான் இலக்கிய மரபு. சமுதாயத்தில் கருத்துப் புரட்சியை ஏற்படுத்திச் சிந்தனையைத் தூண்டிவிடுவதுதான் இலக்கியத்தின் விழுமிய பயன்.

நாம் இன்று "சமயம்" என்று கருதிக் கொண்டிருக்கிற பலவற்றில் (Form) உருவ அமைப்பு இருக்கிறதே தவிர உயிரோட்டம் இல்லை. எனவேதான் இன்றையச் சமயம், நீரில்லாத ஆறுபோல மணமில்லாத மலர் போலத் தோற்றம் அளிக்கிறது.

வாழ்க்கையின் தேவை வேறு; இலட்சியம் வேறு. இந்த வாழ்க்கையில் இன்பம் பெறப் பொருள் தேவை. அதற்காக பொருளே வாழ்க்கையின் இலட்சியம் என்று கருதிவிடலாமா? அதுபோல, சமய அனுபவம் நமது வாழ்க்கையின் இலட்சிய மாக வேண்டும்; அந்த இலட்சியத்தைப் பெறப் பூவும்,

புனலும் சூடனும் பிறவும் தேவை. எனவே, தேவையைக் கடந்து இலட்சியத்தை அடைய நாம் முயற்சிக்க வேண்டும். சமய அனுபவத்தை விட்டு விலகிய ஒதுங்கிய இலக்கியம் தமிழில் உண்டா என்பது ஐயப்பாட்டிற்குறியது. அப்பரடிகள் "நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்" என்று பேசுகின்றார். ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, இந்தச் செய்தியை உலகுக்கு அறிவித்திருந்தால், ஏழாம் நூற்றாண்டிலேயே சுதந்திர உணர்வைத் தட்டி எழுப்பிய அப்பரடிகளின் புரட்சியை அகில உலகமும் அறிந்து கொண்டிருக்குமே! பாராட்டியிருக்குமே! வாழ்க்கையைச் சுவையாகக் கருதும் பிற்போக்குச் சமய உணர்வு மிகப் பிற்காலத்தில் எழுந்ததேயாகும்.

தொல்காப்பியர் இயற்கைச் சூழலுக்கு ஏற்ப நிலத்தைப் பிரித்தார்; அந்த நிலத்தில் வளர்கின்ற மரம், செடி, கொடிகள், மனித வாழ்க்கைப் பண்புகள், விலங்கினங்கள் இவற்றை வைத்து மட்டும் அவர் நிலங்களைப் பிரிக்கவில்லை. மக்கள் வழிபடும் தெய்வமும் அந்தப் பிரிவிற்குச் சூழலாக அமைகிறது "நீலமணி மிடற்று ஒருவன்போல மன்னுக பெரும நீயே" என்று வாழ்த்துகிறார் ஔவையார்.

சிலர் ஆரோக்கியத்திற்கான மருந்துகள் சாப்பிட்டும் செத்துப் போவார்கள்; வேறு சிலர் மருந்து சாப்பிடாமலும் கூட உயிரோடிருப்பார்கள். தேவர்களுக்கு மனிதர்களைப் பற்றியே அக்கறையில்லை. அவர்கள் தாம் விரும்புவன வற்றையே செய்வார்கள்.

> "தேவர் அனையர் கயவர்; அவரும்
> மேவன செய்தொழுக லான்"

என்று நகைச்சுவை ததும்பப் பேசுகிறார் திருவள்ளுவர். எண்ணிச் சிந்தித்துச் செயல்படுபவர்களே மனிதர்கள்! அப்படி எண்ணிச் சிந்தித்துப் பார்க்காமல் விரும்பிய வண்ணமே செயல்படுகின்ற 'தேவர்கள்' மீது அப்பரடிகளும்

கோபப்படுகிறார் - 'வாழ்வதும் வானவர்கள் தாம் வாழ' என்ற வரி மூலம் மணிவாசகரும் தேவர்கள் மீது ஆத்திரப்படு கிறார். சாவதற்குரிய துன்பங்களை ஏற்று வாழ்பவர்கள் என்றும் வாழ்வர். **"விண்ணோர்கள் அமுதுண்டும் சாவர், சிவபெருமான் நஞ்சுண்டும் சாகார்"** என்கிறார் இளங்கோ அடிகள்.

நமது பன்னிரு திருமுறைகள் வேதம் என்ற அளவோடு மட்டும் இல்லை; மனித சமுதாயத்தின் வாழ்க்கை நெறி பற்றியும், பேசுகின்றன. புறச்சமயச் சடங்குகளை அப்பரடிகள் சாடிய அளவிற்கு வேறு யாரும் சாடியதில்லை. இருபதாம் நூற்றாண்டின் சமுதாய அமைப்பை - தேவையை ஏழாம் நூற்றாண்டிலேயே அப்பரடிகள் பேசினார்.

இறைவன் சந்நிதியில் பாடப்பெற்ற பாடல்கள் திரு முறைப் பாடல்கள்; திருமுறை பாடிய பெரியார்கள், இறைவன் சந்நிதியில் உலக விளையாட்டைப் பார்த்தார்கள். உலக மக்களின் இன்ப துன்பங்களைப் பார்த்தார்கள். 'எல்லா உலகமும் ஆனாய் நீயே' என்று இறைவனிடத்திலேயே சொன்னார் அப்பரடிகள். நாட்டிலும், வீட்டிலும் மக்களிடத் திலும் சொல்லவேண்டிய செய்திகளை யெல்லாம் இறைவ னிடத்துச் சென்று இறைவனையே சாட்சியாக வைத்துச் சொல்லுவது போலச் சொல்லியிருக்கிறார்கள்.

அப்பரடிகள் தோன்றிய காலம் சங்க காலத்தை விட மிகச் சிக்கலான காலம்; சமயப் பயன் மிகுந்திருந்த சங்க காலத்தில் சமயத்தைப் பற்றி அதிகம் பேசவேண்டி நிலை இல்லாமல் இருந்தது. சங்க காலத்திற்குப்பின் போரும் போர் உணர்வும் இருந்தன. போர் உணர்வில் வளர்ந்தவர்கள், போர் இல்லாதபோது தமக்குள்ளேயே ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டார்கள். ஒரு சமயம் சுந்தரமூர்த்தி சுவாமிகள் முன்னிலையில் மூவேந்தர்களும் கூடிப் பேசியிருக் கிறார்கள். ஒருவன் ஒருத்தி என்ற ஒழுக்க நெறிக்கு ஊறு

நேர்ந்த காலத்தில் 'ஒருவன் ஒருத்தி' என்ற சித்தாந்தத்தை உணர்ந்த அம்மையப்பனைப் பாடிப் பரவினார் அப்பரடிகள்.

அப்பரடிகள் காலத்தில் கடவுள் நம்பிக்கை அருகியிருந்தமையால் அவர் முழுக்க முழுக்கச் சமயத்தையும். கடவுள் நம்பிக்கையையும் வளர்க்க வேண்டியதாயிற்று. எனவே அவர் கடவுள் நம்பிக்கையை அதிகம் வலியுறுத்தினார்.

முழுமையுடைய வாழ்வே சமய வாழ்வு. சமயச் சூழலில் முழுமையுடைய வாழ்க்கையை உருவாக்குவதற் கென்றே அமைந்தன. தொல்காப்பியர் காலத்துச் சமயத்தை விட அப்பரடிகள் காலத்துச் சமயம் உயர்ந்தது. நமது சமயம் காலத்தில் மூத்தது, கருத்தாலும் மூத்தது. உடலை வலுப் படுத்துவதற்கு உடற்பயிற்சியும் அறிவைப் பெருக்கிக் கொள்வதற்கு அறிவுப் பயிற்சியும் உள்ளன. அதுபோல உணர்வை சிந்தனை வழிப்படுத்துவதற்குரியது சமயப் பயிற்சி. இலக்கியமும், இலக்கியங்கண்ட சமயமும் நமது வாழ்க்கையில் அமையுமானால் வாழ்க்கையில் சிக்கலே இருக்காது. வாழ்க்கையில் அத்தகு இலக்கியம் மலர்ந்தால் சமுதாயத்தை வாழ்விக்கும் சமய மணம் வீசும்.

## 23. தனிமனிதனும் சமுதாயமும்

தனிமனிதனுக்கு உரிமை உண்டா இல்லையா? தனி மனிதனுக்கு உரிமையில்லாத நாட்டில் சுதந்திரம் எப்படி யிருக்க முடியும்? சமுதாய உரிமை என்று பேசும் போதுகூட தனி மனித உரிமை ஒத்துக்கொள்ளப்பட்ட ஒன்றுதான். மழை மலையிலே பெய்து வாய்க்கால் வழியாக ஓடிக் கழனிகளுக்கு வந்து, மீண்டும் தனித்தனியாகப் பயிர்களுக்குத்தானே போகிறது. அது போல சமுதாய உரிமை – சோஷலிச உரிமை – பொது உரிமை என்று சொல்லுகிற

போதும்கூட அது தனி மனிதனை வந்து சாரத்தான் செய்கிறது. சமுதாய உரிமை முதன்மைப்படுத்தப்படும்போது, தனிமனித உரிமையை மறுப்பதாகக் கொள்ளக்கூடாது. சமுதாயப் பிரிவிலே தனி மனித உரிமை நசுக்கப்பட வேண்டும் - பொசுக்கப்பட வேண்டும் - ஒடுக்கப்பட வேண்டுமென்று சொல்கிறார்கள். அப்படித் தனிமனித உரிமை நசுக்கப்பட்டு பொசுக்கப்பட்டு ஒடுக்கப்பட்டு விட்டால் அவர்களெல்லாம் மிருகக்காட்சிக் கூண்டிலே போய் வாழ்வதா? தனிமனித உரிமை நசுக்கப் படுவதோ - பொசுக்கப்படுவதோ - ஒடுக்கப்படுவதோ நமது இலட்சியமல்ல. தனிமனித உரிமை சமுதாயத்திற்குக் கேடு தரும் என்ற ஓர் எண்ணம் வருகிறபோது, தனிமனித உரிமையை ஓர் எல்லைக்குள் கட்டுப்படுத்துவதுதானே தவிர தனிமனித உரிமையை நசுக்குவதும் பொசுக்குவதும் ஒடுக்கு வதும் அல்ல சமுதாயத்தின் இயல்பு. எனவே சுதந்திர நாட்டில் முதன்மைபடுத்தக் கூடியது தனி மனித உரிமையா, சமுதாய உரிமையா? இந்தக் கேள்வியே எப்பொழுது எழும் என்று கருதுகிறீர்கள்? ஓர் எடுத்துக் காட்டுக் கூறினால் நன்றாகப் புரியும்.

ஒரு மிராசுதார் இருக்கிறார். அவருக்கு உள்ளூரிலே இருபத்தைந்து ஏக்கர் நிலம் இருக்கிறது. மற்ற ஊர்களிலும் அவருக்கு நிலபுலன்கள் உண்டு. உள்ளூரிலே அவர் மாடு கன்றுகள் வைத்திருக்கிறார். தமது 25 ஏக்கர் நிலத்தில் சொந்தப்பண்ணை வைத்தால் அவருக்கு நிறைய வைக்கோல் கிடைக்கும் எனவே அவர் அந்த 25 ஏக்கர் நிலத்தில் சொந்தப் பண்ணை வைக்க விரும்புகிறார். அவரைச் சார்ந்தோரும் அதையேதான் சொல்லுகிறார்கள். அதே நேரத்தில் நிலமில்லாத விவசாயிகள் பலர் ஊரிலே இருக்கிறார்கள்.

மிராசுதாருக்குத் தேவை வைக்கோல். அவருக்கு வேண்டிய நெல் மற்ற இடங்களிலிருந்து வந்துவிடுகிறது. மிராசுதாருக்கு மாடு கன்றுகளுக்கு வேண்டிய வைக்கோல்

தேவை. அந்த ஊரில் இருக்கிற இருபது முப்பது விவசாயி களுக்கு, ஆம் நிலமில்லாத அந்த விவசாயிகளுக்கு உழ நிலம் தேவை. உணவுக்கு நெல் தேவை இப்பொழுது எது முக்கியம் என்று பாருங்கள். இங்கு இவருக்குத்" தேவை வைக்கோல்; அவர்களுக்குத் தேவை நெல் - இந்த நிலையில் தனிமனிதரான மிராசுதாரின் சொந்தப் பண்ணையை அனுமதிப்பதா? நிலமில்லாத அந்த விவசாயிகள் நிலத்தை உழ அனுமதிப்பதா? தனிமனிதருடைய மாடு கன்றுகளுக்கு வைக்கோல் தேவையிருக்கிறதே, அதைவிட இருபது முப்பது நிலமில்லாத விவசாயிகளுக்கு விவசாயம் செய்வதற்கு உழுவதற்கு நிலத்தைக் கொடுப்பதுதான் சரியானது. நியாயமானது. இம் மாதிரி ஒரு குறிப்பிட்ட கட்டம் வரும்போது தனிமனித உரிமை முதன்மையானதா சமுதாய உரிமை முதன்மை யானதா என்பதுதான் பிரச்னை.

இனி, தனி மனித உரிமை முக்கியமா? முக்கிய மில்லையா என்பதுகூடப் பேச்சல்ல. தனிமனித உரிமையைக் காப்பாற்றுவதற்குத்தான் சமுதாயமே தோன்றியது. எனினும் தனிமனித உரிமை எந்த அளவோடு இருக்கவேண்டும் என்பதற்கு ஒரு வரையறை தேவை.

தனிமனித உரிமை, தனிமனித வளர்ச்சி என்றெல்லாம் கூறுகிறார்கள். தனிமனித உரிமை வேறு - தனிமனித வளர்ச்சி வேறு. தனிமனித வளர்ச்சி பாராட்டற்குரியதுதான். ஆனால் ஒருவர் ஓராயிரம் வேலி நிலத்திற்கு மிராசுதாராக இருக்க அவரே ஏகபோகமாக அந்தப் பெருநிலத்தை வைத்து அனுபவித்துக்கொள்ள அந்தத் தனிமனித வளர்ச்சி பயன் படக்கூடாது.

தனிமனிதனுடைய வளர்ச்சி பரிணாம வளர்ச்சி இல்லாமல் சமுதாயம் நலம்பெற முடியாது. ஆனாலும் தனிமனித வளர்ச்சியால் சமுதாயத்திற்கு ஒரு தீங்கு வருகிற பொழுது நிச்சயமாக அதனை ஓர் அளவிற்குள், எல்லைக்குள் உட்படுத்தியாக வேண்டும் என்பதை மறுப்பதற்கில்லை.

தனிமனித வளர்ச்சி மிகவும் முக்கியமானது. தனிமனித உரிமை நசுக்கப்பட்டால் ஒரு சமுதாயம் வாழமுடியாது. எனவே தனிமனித உரிமை என்றும் நசுக்கப்படாது- நசுக்கப்பட விடக் கூடாது. சோஷலிச பாணி சமுதாயத்தில் தனிமனித உரிமை சாவதாகக் கருதக்கூடாது. மாறாகத் தனிமனித உரிமை காப்பாற்றப்படும்.

தனிமனித உரிமை நசுக்கப்பட வேண்டும் - பொசுக்கப்பட வேண்டும் - பறிக்கப்பட வேண்டும் என்பது நமது சோஷலிச சமுதாயத்தின் இலட்சியமன்று. தனிமனித உரிமை நசுக்கப்பட்டு விட்டால் - ஒடுக்கப்பட்டு விட்டால் - பிடுங்கப்பட்டு விட்டால் சமுதாயத்தில் ஒரு தேக்கம் - சூனியம் ஏற்பட்டுவிடும். தனிமனித ஆசைகள் - உணர்வுகள் தூண்டிவிடப்பட வேண்டும். இரண்டு சட்டைகள் போடுகிற இடத்தில் நான்கு சட்டைப் போட வேண்டும் என்ற ஆசை வருகிறது; அது தேசத்தின் மறுமலர்ச்சிக்கு அடையாளம்.

"ஏதோ சினிமா பார்த்து தகர டப்பாப் பாட்டுக் கேட்பதற்குப் பதிலாக வானொலி கேட்க வேண்டும் என்ற ஆசை தோன்றியிருக்கிறது. அது வளர்ச்சியின் அடையாளம்" நம்முடைய நாட்டில் எல்லோரும் எல்லா நலன்களும் பெற்று வாழ வேண்டும் என்பதுதான் நமது இலட்சியம். இதனால் சமுதாய உரிமை வளர்கின்ற போது தனிமனித உரிமை அழிந்து போகாது. ஆனாலும் நாட்டுக்குப் பயன்படும் பணத்தைத் தனியொருவன் தன் பெட்டிக்குள் வைத்துப் பூட்டிவைப்பதைச் சமுதாயம் அனுமதிக்காது.

தனிமனிதனுடைய சிந்தனையுரிமையை - அறிவுரிமையை அரசு பிடுங்க முடியுமா? தனிமனிதனுடைய பேச்சுரிமைக்கு மரியாதை கொடுப்பது நமது சுதந்திர நாடுதானே! இங்கு சமுதாய உரிமைக்குக் கேடுதரும் தனி மனித உரிமை கட்டுப்படுத்தப்படும். சமுதாய உரிமைக்குக் கேடு தராத தனிமனித உரிமைகள் உயிரினும் இனிதாகப்

போற்றப்படும். ஆம், சமுதாயத்திற்குக் கேடு பயக்காத - சமுதாயத்தை அரித்துத் தின்னாத தனிமனித உரிமைகள் தெய்வச் சிலைகளைப் போல தூய்மையாகப் போற்றிக் காப்பாற்றப்படும். இதுதான் இந்த நாட்டின் பொதுவிதி. இதற்காகத்தான் இந்த நாடு சுதந்திரம் பெற்றது.

"இந்த நாட்டில் இருக்கிற எல்லா மக்களும் சாதி, இன, மொழி, மத, கட்சி வேறுபாடுகளின்றி எல்லாவிதமான உரிமைகளையும் இந்த நாட்டில் பெறுவார்கள்" என்பதுதான் நமது அரசியல் சாசனம் - அரசியல் வேதம். அரசியல் சாசனம் வழங்கிய இந்த தனிமனித உரிமையை இனி இந்த உலகத்தில் யாராலும் பறிக்க முடியாது என்றாகி விட்டது. இனி தனி மனித உரிமைக்கு ஆபத்து வரப்போவதேயில்லை. ஆனால், தனிமனிதன் திறமையினால் - போட்டியினால் - வலிமையினால் - வாய்ப்பினால் சமுதாயத்ினுடைய பெரு வாரியான உரிமைகளை வாரிச்சுருட்டி முடக்கிக் கொள்ளுவதை அனுமதிக்க முடியாது.

நம்முடைய சுதந்திர நாட்டில் தனிமனித உரிமை போற்றிப் பாதுகாக்கக் கூடியது. ஆனாலும், சமுதாய உரிமைக்குக் கேடுவரும்போது தனிமனித உரிமையைப் புறக் கணித்துச் சமுதாய உரிமைக்குத்தான் முதன்மை தருவோம் - தரவேண்டும் - அதுதான் நியதி - அதுதான் நியாயம் - அதுதான் ஒழுக்கம் - அதுதான் தருமம் - அதுதான் கடவுளின் நெறி!

## 24. எழுத்தாளர் கடமை

மனிதர்கள் உணர்ச்சிகளின் நிலைக்களன்; உணர்ச்சி உயர்வையும் தரும்; தாழ்வையும் தரும். உயர்வும் தாழ்வும் வருவதற்கு உணர்ச்சியே பொறுப்பல்ல. உணர்ச்சியைப் பற்றி நிற்கின்ற அறிவுச்சார்பே காரணம். அறிவே முழுக்க முழுக்கக் காரணம் என்று கூறிவிட முடியுமா? அறிவையும் ஆட்சி

செய்யக்கூடிய ஆசைக் களன்களே காரணமாகும். வாழ்க்கை என்பது பல்வேறு முரண்பட்ட உணர்வுகளாலும், அனுபவங்களும் ஆகிய ஒன்றேயாகும். இத்தகு வாழ்க்கை யனுபவங்களைப் பலருக்குத் தெரிவிக்கத் தோன்றிய சாதனமே எழுத்து.

வாழ்க்கை என்பது ஒரு நுண்மாண்கலை. உடல் தங்கி உலவுவோரெல்லாம் வாழ்ந்தவர்களாகி விடமாட்டார்கள். அதனாலன்றோ தமிழ்மறை "வாழ்வாங்கு வாழ்தல்" என்று பேசுகிறது.

தனிமனிதர்களுக்கும் சமுதாயத்திற்கும், தண்ணீர்க்கும் தாமரைக்கும், மண்ணுக்கும் மரத்திற்கும் இருக்கும் தொடர்பு போல இணைந்த தொடர்பு உண்டு. தனிமனித அனுபவங்களிலிருந்தே சமுதாயம் வளர்கிறது; வளம் பெறுகிறது. சமுதாயச் சூழலே தனி மனிதர்களின் அனுபவத்திற்குத் தூண்டு கோலாக இருக்கிறது. சமுதாய அரங்கில், எழுத்தாளன் மற்ற எல்லோரையும் விட பெரும் பொறுப்பைத் தாங்குகிறவனாவான். அவனுடைய அனுபவம் எவ்வளவுக் கெவ்வளவு தரமானதாகவும் தகுதியுடையதாகவும் இருக்கிறதோ, அந்த அளவுக்கு நாடும் உயரும். அதனாலன்றோ, சங்க காலத்துச் சான்றோனாகிய கபிலனை "புலனழுக்கற்ற அந்தணாளன்" என்று ஒரு புலவர் பாராட்டினார்.

புலமை, புலவர் என்ற சொல்வழக்குகள் புலன்களை உழுது பண்படுத்திய சான்றோர் என்பதைக் குறிப்பனவே. புலவர் என்பதை அறிவுத் தொடர்புடைய சொல்லாக மட்டுமே கருதுவதற்கிடமில்லை. அறிவோடு, அநுபவமும் நிறைந்தது என்ற விளக்கமே பொருந்தும்.

மொழியறிவும் எழுத்துத் திறனும் மட்டும் எழுத்தாளனுக்கு இருந்தால் போதா. உள்ளார்ந்த சால்பு தழுவிய அனுபவமும் தேவை. நெடுஞ்சாலையின் இரு மருங்கிலும் நிழல்தரும் மரங்கள் வைத்து வளர்ப்பது மரபு. அம்மரத்தின் நிழல் அனுபவிப்பதற்கும், படுத்து உறங்குவதற்கும்

இனிமையாக இருக்கும். எனினும், அந்த மரம் அனுபவித்து உறங்குவதற்காக வைத்து வளர்க்கப் பெற்றதல்ல; வழிப் பயணத்தில் களைப்பு ஏற்படாமல், இனிமை தழுவிய சூழலில் நடைபயிலவேயாகும். அதுபோலவே, வாழ்க்கை இலட்சியத்தை நோக்கி, நடைபோடும் மனித சமுதாயத்திற்குச் சிறந்த உணர்வுகளைத் தந்து, அவற்றின் வழி அனுபவப்படுத்த எழுத்தாளர் படைக்கும் இலக்கியங்களில் எழுத்துத் திறனும், திறனைச் சார்ந்த சுவைகளும் வாழ்க்கையில் களைப்பு ஏற்படாமல் இருப்பதற்கேயாகும். ஆனால் காலப் போக்கில் எழுத்தாளரின் அனுபவத்தைவிட எழுத்துத் திறனே மேலோங்கி நிற்கத் தலைப்பட்டு விட்டது. அது மட்டுமல்ல. யாருக்காக எழுத்துப் படைக்கப்பட்டதோ அவர்கள் படித்து அனுபவிப்பதற்கு ஏற்ற முறையில்லாமல் திறமையைக் காட்டுகின்ற முறையில் கடுந்தமிழ் நடையில் சில, இலக்கியங்கள் தோன்றின.

எழுத்தாளன் சமுதாய அரங்கில் ஒரு மிக முக்கியமான பொறுப்புள்ள இடத்தைப் பெறுகிறான். மனிதர்கள் எல்லோரும் பிறப்பால் சம நிலையுடையவர்களேயாம். எனினும், அறிவும், அனுபவமும் எல்லோருக்கும் அமைந்து விடுவதில்லை.

சமுதாயப் பெரு வெள்ளத்தில் சிலர் அறிவிலும் அனுபவத்திலும் சிறந்து தலைமைக்கும் வழிபாட்டிற்கும் உரியராக விளங்குவது தவிர்க்க முடியாதது. உலகியற்கையும் கூட. இந்த வரிசையில் சிறந்த எழுத்தாளர்கள் வரக்கூடும். கோடானு கோடி மக்களைத் தமது அனுபவத்தால் எழுந்த இலக்கியப் படைப்புக்களின் மூலம் நல்வழி நடத்திச் செல்லுபன் எழுத்தாளன். பள்ளத்திலிருந்து மேட்டுக்கு அழைத்துவந்து வழி நடத்திச் செல்லுபவன் எழுத்தாளன். அவன் தொழிலாளியுமல்ல - தொழில் பண்ணுபவனுமல்ல. எழுத்தாளன் பணம் சேர்க்கக்கூடாது. அவன் சமுதாயத்தின் முன்னோடித் தியாகி. அவன் காசை எதிர்பார்ப்பானாகில்,

கருத்தைக் காசு கொடுப்பவனுக்கேற்ப மாற்றிக் கொள்வான். பொருள் படைத்தவர்களைப் புகழ்ந்து இச்சை பேசும் இலக்கியங்களைப் படைக்கத் தொடங்கி விடுவான். அவனால் ஏற்றம் பெறத்தக்க நிலையில் உள்ள கோடானு கோடி மக்களை வஞ்சித்து விடுவான். சங்க காலப் புலவர்கள் பலர் வறியவர்களாக இருந்தார்கள் என்று வரலாறும் இலக்கியங்களும் பேசுகின்றன. புலவர்களுக்கு வறுமை தொடர்புடையது என்று சிலர் ஏளனமாகவும் பலம் வருந்துதற்குரிய முறையிலும் சொல்லிக் காட்டுவார்கள். சங்ககாலப் புலவர்கள் வறியவர்கள் அல்லர். அவர்கள் விரும்பியிருந்தால் வளங்கொழிக்க வாழ்ந்திருக்க முடியும். அவர்கள் வறுமையை வலிய ஏற்றுக் கொண்டார்கள். அதனாலேயே அவர்கள் நடுநிலை பிறழாமல் அறத்தை எடுத்துக்கூற முடிந்தது. ஆதலால் எழுத்தாளர்கள் விருப்பும் வெறுப்பும், காய்தலும் உவத்தலுமின்றி இந்த நாட்டு மக்களின் அனுபவத்திற்கும் முன்னேற்றத்திற்கும் உரிய எழுத்துக்களைத் தோற்றுவிக்க வேண்டும்.

ஒரு சமுதாயத்தினுடைய எழுச்சிக்கும் வீழ்ச்சிக்கும் சமுதாயத்தில் பரவும் கருத்துக்களே காரணமாகும். ஆதலால் எழுத்தாளர்கள் இருந்த இடத்திலேயே இருந்துவிடாமல், உலகத்தின் போக்கு, காலத்தின் தேவை இவற்றைக் கருதி எழுத்தாளர்களைப் படைக்க வேண்டும். சென்ற நூற்றாண்டுத் தமிழ் எழுத்துலகில், 'முன்னோர் சொல்லைப் பொன்னேபோல் போற்றுவதும்' என்ற மனப்பான்மையில் பழைய இலக்கியங்களையே திருப்பித் திருப்பி வேறு வேறு பாவினங்களிலும் உரைநடையிலும் சொல்லிவரும் வழக்கே பெரு வழக்காக இருந்தது. "இறந்தது விலக்கல் எதிரது போற்றல்" என்பது இலக்கண விதியாக இருந்தும், மரபியல் மயக்கத்திலே எதிரது போற்றும் முயற்சியைச் செயற்படுத்த வில்லை. மரபுவழிப் போற்றுதல் இன்றியமையாத ஒன்றேயாம். ஆனாலும், வாழ்க்கையில் அடிப்படைக் கூறுகளுக்கே

மரபியல் பொருந்தும். செயல் முறைகளிலும், வாழ்க்கை முறையிலும் மாறுபாடுகள் தோன்றுவது தவிர்க்க முடியாதது. தேவையானதும் கூட..

மாறுதலும் முன்னேறுதலும் சமுதாயத்தின் உயிர்ப் பண்பு. இவ்வுயிர்ப்பண்பை இழந்த சமுதாயம் வளராது வாழாது ஓட்டம் தடைப்பட்டு நின்ற குட்டை போல் தேங்கிக் கெட்டுவிடும். எழுத்தாளனின் மிக முக்கியப் பொறுப்பு இந்த மாறுதல் உணர்வையும் முன்னேற்ற உணர்ச்சியையும் மக்கட்குத் தருவது.

மனித சமுதாயத்தில் குறுகிய இனமொழி நிலப் பற்றுக்கள் ஆட்சி செய்வதைப் பார்க்கிறோம். மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கு இந்தக் குறுகிய உணர்வுகள் பெரும் முட்டுக்கட்டை. மேலும், அன்புக்குப் பதில் பகையை வளர்த்து உறவைக் கெடுத்து மனித சமுதாயத்தை அழித்து விடக் கூடியனவுமாகும். இந்த உணர்வுகளினின்றும் மனித சமுதாயத்தை விடுதலை செய்வது எழுத்தாளரின் தலையாய கடமை. தமிழ் எழுத்துலகில் சங்ககாலம் தொட்டு, இந்த உணர்வுகளை எதிர்த்துக் கருத்துக்கள் வற்புறுத்தப் பெற்று வந்திருந்தும்கூட அந்த ஒருமைப்பாட்டுணர்வு மனித சமுதாயத்தில் பூரணமாக இடம் பெறவில்லை. “யாதும் ஊரே யாவரும் கேளிர்” “ஒன்றே குலம்; ஒருவனே தேவன்” “உலகத்தோடு ஒட்ட ஒழுகல்” ஆகிய கருத்துக்களடங்கிய எழுத்துக்களுக்கு விரிவுரைகளும், விளக்க உரைகளும் நாட்டிலே நடமாடினவே தவிர வாழ்க்கை முறைக்கு வரவில்லை. நாகரிகத்தின் சிறப்பு தூய்மை என்றெல்லாம் காரணம் காட்டப்பெற்றாலும் கூட அதன் பின்னணி ஆதிக்க உணர்ச்சியேயாகும். மனித சமுதாயத்தின் வரலாற்றில் பெரும் பகுதியை ஒரு சில மனிதர்களின் ஆதிக்க உணர்ச்சியே போர் மயமாக்கி விட்டதைப் பார்க்கிறோம். இருபதாம் நூற்றாண்டு விஞ்ஞான நூற்றாண்டு. இல்லை. அப்படிச் சொல்லுவது கூட சரியில்லை. விஞ்ஞானம்

என்பது வாழ்க்கையை வளர்த்து மனித சமுதாயத்தை மேனிலைக்கு அழைத்துச் செல்லப் பயன்படுத்துவதேயாகும். ஆனால் இன்று அது திசை தவறி மக்களைக் கொன்று குவிக்கும் குண்டுகளைக் குவிக்கும் நிலைக்கு வந்திருக்கிறது. ஆதலால், மனித சமுதாயத்தின் ஒருமைப்பாட்டு வளர்ச்சி சென்ற நூற்றாண்டைவிட இந்த நூற்றாண்டுக்கு இன்றியமையாத் தேவையாகும். குறிப்பாக பாரத நாடு பல்வேறு மொழி பேசும் மக்களும், மதச்சார்புடைய மக்களும் வாழும் நாடு. இங்கு முளைத்த குறுகிய பிரிவினை யுணர்வுகளினாலேயே இந்த நாடு அடிமைப்பட்டது. நமது நாட்டின் சுதந்திரம் நமக்கு உயிரினும் இனியது. சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு உணர்வினாற் சிறந்த ஒருமைப்பாடு இந்த நாட்டு மக்கட்குத் தேவை. குறுகிய பற்றுக்கள் மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கிப் பாயும் தண்ணீர்போல குறுகிய பற்றுக்களைக் கடந்து, வாழ்வது பள்ளத்திலிருந்து மேட்டிற்குத் தண்ணீரை ஏற்றுவதுபோல. மேட்டிலிருந்து பள்ளத்திற்கு யாரும் தண்ணீரை இறைப்பதில்லை. பள்ளத்திலிருந்து மேட்டிற்கு இறைப்பதே மரபு. இதற்கே முயற்சி என்று பெயர். இன்றும் சிலர் ஒருமைப்பாட்டுணர்வுக்கு விரோதமாக குறிகியபற்றின் வழி மனிதர்களை அழைத்துச் செல்ல எழுதுகிறார்கள். அது இலட்சியம் தவறிய எழுத்து. இன்றைய இந்தியத் தமிழ் எழுத்தாளர் கடமை இந்த நாட்டு மக்களிடையே உளங்கலந்த உணர்வினாலாய ஒருமைப்பாட்டுணர்வை வளர்க்க உதவும்படி எழுதுவதேயாகும்.

மனிதர்கள் எல்லோரும் இன்புற்று வாழவே இவ் வையகம். சிலர் வாழ்வதும் பலர் வாழ்விழந்து அல்லற் படுவதும் நீதியுமாகாது; நியாயமுமாகாது; ஒழுக்கமுமாகாது. நீதி என்ற சொல் சமய இயலோடு தொடர்புடையது. நியாயம் என்ற சொல் அரசியலோடு தொடர்புடையது. ஒழுக்கம் என்ற சொல் சமுதாய இயலோடு தொடர் புடையது. இவ்வாறு முத்துறையிலும் ஏற்றுக் கொள்ளப்

படாத ஒரு வாழ்க்கை முறை சமுதாயத்தில் நிலவுவதைப் பார்க்கிறோம்.

தமிழகத்தில் சென்ற தலைமுறையின் எழுத்தாளர்கள் கூட இந்தத் தரங்கெட்ட சமுதாய அமைப்பை நியாயப் படுத்த முயற்சித்த வெட்கக் கேட்டை என்னென்று சொல்வது! ஐயகோ! பாவம் எழுத்தாளன் மட்டுமா? சமய வழிப் பயின்றவர்கள்கூட அநீதியையும், அநியாயத்தையும் கட்டிக் காக்க முயற்சித்தனர் என்பதை எண்ணிப் பார்க்கும் போது வேதனையே பெருகுகிறது. இன்றைய பாரத சமுதாயத்தில் உடனடியாகத் தேவை எல்லோரும் இன்புற்று வாழுகிற சமநிலை சம வாய்ப்புச் சமுதாயத்தை உருவாக்கு வதுதான். இதையே இன்றைய நமது ஆட்சித் தலைவர்கள் "சோஷலிச சமுதாய அமைப்பு" என்று கூறுகிறார்கள். இத்தகையதொரு சமுதாய அமைப்பை 300 ஆண்டுகட்கு முன்பே கம்பன் பேசியிருக்கிறான். இத்துறையில் வள்ளுவனைவிடக் கம்பன் மிஞ்சிவிட்டான். திருவள்ளுவர் "இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம் மரப்பாவை சென்றுவந் தற்று" என்றார். ஆனால், கம்பனோ, "கொள்வார் இலாமையால் கொடுப்பார்களும் இல்லை மாதோ" என்று பேசுகிறான். இன்றைய இந்திய எழுத்துலகில் செல்வாக்குப் பெற்றிருப்பவர்கள் பெரும்பாலும் இக்கொள்கைக்கு முரண் பட்டவர்களாகவே இருக்கிறார்கள் என்பதைப் பார்க் கிறோம். இன்றையப் பத்திரிகை உலகில் ஆதிக்கம் செலுத்தும் பல பத்திரிகைகள் வகுப்புவாதத்திற்கும் சுரண்டி வாழும் முதலாளித்துவத்திற்கும் துதிபாடும் வகையிலேயே இருப்பதை நீங்களும் மறுக்க மாட்டீர்கள் என்றே கருது கிறேன். அதுமட்டுமா? தருமத்தையும் மதத்தையும் சாட்சிக்கு இழுத்துக் கொள்ளும் அலங்கோலப் போக்கையும் பார்க்கிறோம். எல்லோரும் இன்புற்று வாழும் வாழ்க்கைக்கு மக்களைத் தயார் செய்யும் முயற்சியில் ஈடுபடுங்கள். இக் கருத்துக்கு முரணான பிற்போக்குச் சக்திகளின் மூதேவித்

தன்மையை மக்களின் முன்னே அம்பலப்படுத்தத் தவறாதீர்கள். “தனியொருவனுக்கு உணவிலையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்” என்று முழங்கிய கவிஞன் உங்கள் முன்னோடி என்பதை மறந்துவிடாதீர்கள்.

நம்முடைய தமிழ் இலக்கிய வரலாறு காலங்கடந்தது. தமிழ் இலக்கிய வரலாறு மூவாயிரம் ஆண்டு பழமை யுடையது. தமிழ், வாழ்வில் கலந்த இலக்கிய வளம்பெற்ற மொழி என்னும்,' பழந்தமிழ்ப் புலவர்கள் காலத்தின் தேவையறிந்து இலக்கியம் செய்ததைப் பல இன்றைய தமிழ் எழுத்தாளர்களும், இன்றையத் தேவையறிந்து எழுத்தை வளர்க்க வேண்டும். நாம் வாழ்வது அறிவியல் நூற்றாண்டு. எனினும் இன்னும் தமிழில் போதிய அறிவியல் நூல்கள் வரவில்லை. அறிவியலைத் தமிழில் கொண்டுவர முடியுமா முடியாதா என்ற கேள்வியும் தயக்கமும் நம்மிடமிருக்கிறது. இது ஒரு பெரும் குறை. தமிழில் அறிவியல், தொழிலியல், பொருளியல், உளவியல் நூல்கள் நிறைய வெளிவர வேண்டும். அப்பொழுதே தமிழ் வளரும், தமிழர்களும் வளர முடியும். இத்துறையில் எழுதிக் குவிக்கும் எழுத்தாளர்கள் எண்ணற்ற பேர்கள் தமிழன்னைக்குத் தேவை. இத்துறை எழுத்தாளர்கள் தமிழில் தயாராவதற்குத் தமிழ் பயிற்சி மொழியாக வேண்டும். அரசாங்கம் எவ்விதமான தயக்கமுமின்றித் தமிழைப் பயிற்சி மொழியாக்க வேண்டும். தமிழ் எழுத்தாளர்கள் இத்துறையில் உழைப்பதன் மூலமே தமிழைச் சாகாமல் காப்பாற்ற முடியும்.

மனித வாழ்வின் இறுதி இலட்சியம் எல்லாவிதமான உணர்வுகளினின்றும் விடுதலைபெற்று அமைதி நிறைந்த இன்ப அன்பிலே திளைப்பதுதான். இந்த, விடுதலையைத் தருவதுதான் சமயநெறி. இத்தகு சமயச் சார்பு நிரம்பிய வாழ்க்கையில் மனித சமுதாயம் வளராது போனால் சுட்டதோசையைத் திரும்பத் திரும்பச் சுடுவது போல அவல உணர்வுகளிலே அழுந்தி வாழ்க்கையே துன்பச் சுமையாகி

விடும். ஆத்திக நாத்திகச் சண்டைகள் செய் முறைகள் சடங்குகளைப் பற்றியனவாக இருந்து, மாறுதலையும் வளர்ச்சியையும் தரும் வகையில் இருக்கலாமே தவிர அடிப்படைச் சமய உணர்வையே பாதிப்பதாக இருக்கக் கூடாது. சமய வாழ்வு தூய்மையான ஓர் இலட்சியக் கோடு. அந்த இலட்சியக் கோட்டை நாம் அழித்து விடுவதினால் மனித சமுதாயத்தையே இலட்சிய நோக்கில்லாததாக்கி விடுகிறோம் என்பதை. நாம் மறந்துவிடக்கூடாது. அப்பரடிகள் இத்தகு தூய இலட்சியக் கோட்டையே சமய நெறியெனக் காட்டினார். அந்நெறியே காந்தியடிகள் நின்று வாழ்ந்த வாழ்க்கை. தமிழ்த் தந்தை திரு.வி.க. போற்றிய நெறியும் அதுவே. ஆதலால், பண்பட்ட வாழ்க்கை யோடியைந்த சமயப் பண்பை வளர்க்கும் வகையில் எழுத்துக்கள் வளர வேண்டும்.

## 25. ஒருமைப்பாடு

பாரத இந்தியாவின் பண்டைய வரலாறு மற்ற எதனையும்விட இந்திய ஒற்றுமைதான் இன்றியமையாத ஒன்று என்பதைத் தெளிவாகப் போதிக்கிறது. இந்தியத் தேசிய ஒற்றுமையில்தான் இந்தியாவின் அரசியல் பொருளா தாரத்தின் பிரகாசமான எதிர்காலம் திகழவிருக்கிறது.

எந்தச் சாதியாக இருந்தாலும் சரி; எப்படிப்பட்ட இனத்தினராக இருந்தாலும் சரி அல்லது சமயத்தவராக இருந்தாலும் சரி இந்தியாவைப் பிளவுபடுத்தும் எந்த நோக்கத்தையும் நாம் அனுமதிக்க முடியாது. இந்திய ஒற்றுமையே இந்தியர் மதிக்க ஒவ்வொருவரின் முதன்மை யான குறிக்கோளாக இருக்கவேண்டும் என்பதை மக்கள் மன்றத்தில் கற்பித்தாக வேண்டும்.

மொழி இன அடிப்படையில் இந்தியாவிலிருந்து தனித்துப் பிரிந்து போகவேண்டும் என்கிற கொள்கை மக்கள்

மன்றத்தில் குறிப்பிடத்தக்க வளர்ச்சி பெற்றுள்ளது என்பது உண்மைதான்; இதில் ஐயத்திற்கு இடமில்லை என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறோம்.

ஆனால், பிரிவினை சக்தி பிரமாதமாக வளர்ந்து விட்டதே என்று நாம் மனத்தளர்ச்சி கொள்ளும் நிலை எதுவும் இல்லை. காரணம், இந்திய ஒற்றுமை உணர்வும் ஆற்றல் பெற்று வலிவுடையதாகத்தான் இருக்கிறது. ஆனால், நல்லது நிகழவேண்டும் என்பதற்காக இதில் அதிக அளவிற்கு நம்பிக்கை வைக்காமல் இருக்கலாம். பயனளிக்கும் விதத்தில் பாரத ஒற்றுமை சக்தியைப் பலப்படுத்த நமது எல்லா ஆற்றலையும் ஒருங்கு திரட்ட வேண்டும்.

மொழிப் பிரச்னை இந்திய ஒற்றுமையைச் சிதைக்கும் முக்கியமான பிரச்னை என்பதை யாராலும் மறுத்துக் கூற முடியாது. தங்களின் நாகரிகப் பண்பாட்டில் தாய்மொழியில் மோகித்து இருப்பதும் நம்பிக்கை வைப்பதும் மனித இயல்பே யாகும்.

ஆகவே, இந்திய ஒருமைப்பாட்டை விரும்பும் நாம் துரபிமானம் இன்றி எவருக்கும் கேடு இல்லாத வகையில் மொழிப் பிரச்னையை அணுகியாகவேண்டும். இயற்கையை எதிர்க்கும் எந்த நடவடிக்கையும் பயனளிக்காது. மாறாகத் தோல்வியைத்தான் அணைக்கும். அதுவே, மாநில அரசும் மத்திய அரசும் பிரதேச மொழிகளை எல்லா வகைகளிலேயும் முன்னேறச் செய்ய தீவிரமான நடவடிக்கைகள் மேற் கொண்டாக வேண்டும்.

குறிப்பாக உங்களின் கருணை வாய்ந்த கவனத்திற்கு ஒன்றைக்கூற விரும்புகிறோம். இந்தி மொழி தங்கள் மீது திணிக்கப்படுமோ என்ற அச்ச உணர்ச்சி தமிழ் மக்கள் மத்தியில் பரந்து பரவி இருக்கிறது. அதிக அளவுக்கு இந்தி மொழியைப் பயன்படுத்தியாக வேண்டிய நிலை ஏற்படுமோ என்ற அச்சமும், அதன் விளைவாக மற்ற மாநில மொழி

களைக் காட்டிலும் அதிக ஆற்றலையும் வளப்பத்தையும் பெற்று பிரதேச மொழிகளை இந்தி மொழி ஆதிக்கம் செலுத்துமோ என்ற பீதியும் தமிழ் மக்களிடை நிலவிக் கொண்டிருக்கிறது. மொழி ஆதிக்கத்தின் காரணமாக அரசியல் நிலையிலும் பொருளாதார நிலையிலும் இழப்பு களை ஏற்க வேண்டிய நிலை நேருமோ என்ற அச்ச உணர்வு தமிழரிடத்தில் பரவிக் கிடக்கிறது.

ஆனால், மேற்கண்ட அச்சத்திற்கும் பீதிக்கும் எந்தவித இடமும் இல்லை; வாய்ப்பும் கிடையாது. காரணம், நமது இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் தனிப்பட்டவர் வளர்ச்சிக்கும் எல்லா இனத்திற்கும் நல்ல முழுமையான பாதுகாப்பளித்திருக்கிறது.

மாநில அளவில் பிரதேச மொழியான தமிழ் மொழியை ஆட்சி மொழியாக்கவும் கல்வித்துறையில் தமிழைப் பயிற்சி மொழியாக்கவும் அரசினர் கொள்கை வகுத்து நடைமுறைப்படுத்துவதாக இருந்தபோதிலும் இந்த வகையில் பலபடப் பாராட்டும் விதத்தில் முன்னேற்றமோ தேர்ச்சியோ இல்லை என்றே கூறலாம். இந்தியாவில் பேசப்படும் இந்தி தவிர்த்த மற்ற பிரதேச மொழிகள் வளர்ந்துகொண்டுதான் இருக்கின்றன; நல்ல முறையில் வளர்ந்து செழித்தோங்கி இருக்கின்றன என்ற கருத்தை வேறுபட்ட மொழி பேசும் இனத்தவரின் உள்ளத்தில் பதியவைத்து, நம்பிக்கை ஊட்ட வேண்டியது நமது முதல் கடமையாக இருத்தல் வேண்டும். இதில் நாம் வெற்றி காண்போமானால், மொழியின் பெயரால் இந்திய தேசிய ஒருமைப்பாட்டை எதிர்க்கும் தீய சக்தியை முறியடித்துவிட முடியும்.

இந்திய ஒற்றுமையைக் குலைக்கும் சக்தியைத் தடுத்து முறியடிக்க கீழ்க்கண்ட நடைமுறை வேலைகளில் ஈடுபடலாம் என சில ஆலோசனைகளைத் தெரிவிக்கிறோம்.

அலுவலக வேலைகள் அனைத்திற்கும் பிரதேச மொழிகளைப் பயன்படுத்துவதற்கும் கல்வித் துறையில் பிரதேச மொழிகளைப் பயிற்று மொழிகளாக்குவதற்கும் எல்லா மாநில அரசுகளும் மத்திய அரசின் உதவியோடு தீவிர நடவடிக்கைகள் எடுத்தாக வேண்டும். குறிப்பிட்ட காலத்திற்குள் இந்த வேலை நிறைவெய்த வேண்டும்.

அறிவியலில் அன்றைய நாள்வரை அடைந்துள்ள விஞ்ஞான அறிவையும் பொருளியல் மேம்பாட்டையும் தொழில் வளர்ச்சியையும் ஒவ்வொரு பிரதேச மொழியிலும் களஞ்சியமாக்க வேண்டும்.

மத்திய அரசாங்க வேலைக்காகத் தேர்வு எழுதும் பல்வேறுபட்ட பிரதேச மொழி மக்களை, இந்தி மொழியில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்ற கேடு பயக்கும் துரபிமான எண்ணம் இல்லாமல் அவர்கள் தாய்மொழியிலேயே தேர்வு எழுத மத்திய அரசு அனுமதிக்கலாம்.

இந்திய ஒருமைப்பாட்டை நிலைநிறுத்த ஒரு மொழி இன்றியமையாதது என்பதில் துளியும் சந்தேகம் இருக்க வேண்டாம். அந்த ஒரு மொழியும் மத்திய ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பதிலும், அதுதான் இந்திமொழி என்பதிலும் சிறிதும் ஐயத்திற்கு இடமளிக்க வேண்டாம்.

ஆனால், அதே நேரத்தில், அந்தந்த மாநிலங்களில் உள்ள மத்திய அரசு அலுவலகங்கள் தங்கள் தங்கள் பிரதேச மொழியிலே அலுவலக நிர்வாகத்தை மேற்கொள்ள மத்திய அரசாங்கம் கவனித்துக்கொள்ள வேண்டும். பல்வேறு மொழி களைப் பேசும் மக்களுக்கு இவ்வேற்பாடு மனநிறைவளிக்கக் கூடியதாகும். நல்ல தேச ஒற்றுமையை உண்டாக்கவும்கூட இது உதவியாக அமையும்.

மாநிலப் பிரதேசங்களில் ஒற்றுமையைக் குலைக்கும் சக்தி அப்படி ஒன்றும் பிரமாதமாக இல்லை. பிரிவினைக்காக வாதாடியவர்கள் கூட பிரிவினைக் கொள்கையை இப்போது

கைவிட்டுவிட்டார்கள். இந்த நேரத்தில், அரசாங்க வேலை களுக்கு ஆள் அமர்த்துதல், உதவியளித்தல், நிவாரண மளித்தல், ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழான அபிவிருத்தி வேலைகள் அனைத்திலும் தப்பான அபிப்பிராயத்திற்கு இடமளிக்காத – எந்த வகையிலும் வேற்றுமை காட்டாத ஒரே விதமான கொள்கையை அரசாங்கம் மேற்கொண்டால் இனவழிப்பகுதி இடத்தைக் காட்டி தேச ஒற்றுமையை எதிர்க்கும் சக்தியைத் தகர்க்க முடியும்.

பொருளாதார ஏற்றத்தாழ்வும் தேசிய ஒற்றுமையைக் குலைக்கும் பெரிய காரணமாக அமையும் என நாங்கள் கருதுகிறோம். நமது இறுதிக் குறிக்கோளான ஜனநாயக சோஷலிச சமுதாயத்தைக் காண உடனடியாக நாட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் நடவடிக்கை எடுத்தாக வேண்டும்.

தற்போது இருப்பதைப்போல எந்தவித சாதி வேறுபாடும் இல்லாது ஒருவருக்குக் கொடுக்கப்படுவதுபோல் அனைவருக்கும் வாய்ப்புக்கள் கொடுக்கப்பட்டால்தான் நல்ல தேச ஒற்றுமையை உண்டாக்க முடியும். ஆகவே எல்லா வகையிலும் பொருளாதார ஏற்றத்தாழ்வை நீக்க கூட்டுறவு முறையை எல்லா வழிகளிலும் மேற்கொள்ள வேண்டும்.

வகுப்பு வாதமும் சாதீயமும் வேகமாக வளர்ந்து கொண்டிருக்கின்றன என்பதில் திடமான நம்பிக்கை கொண்டிருக்கிறோம். தேர்தல் காலத்தில் அரசியல் லாப வேட்டைக்காக அரசியல் கட்சிகள் சாதீய உணர்வைத் தூண்டிவிடுகின்றன. இச்செயல் இரங்குதற்குரியது மட்டுமல்ல; வருந்துத்தற்குரியதுமாகும். இதுபோன்ற காரியங் களைத் தடுக்கவும் ஆக்கம் கொடுப்பதைத் தளர்த்தவும் நமது எல்லாச் சக்திகளையும் பயன்படுத்தியாக வேண்டும்.

சாதீய உணர்ச்சியையும் வகுப்புவாத உணர்ச்சியையும் எழாமல் செய்யக் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை மேற் கொள்ளலாம்.

விண்ணப்ப பாரங்களிலும் தஸ்தாவேஜிகளிலும் எந்த சாதியைச் சேர்ந்தவர், எந்த வகுப்பைச் சேர்ந்தவர் என்று கேட்கப்படும் முறை நீக்கப்பட வேண்டும். 'எந்த சாதி? எந்த வகுப்பு?' என்று கேட்கும் இடத்தில் மேற்கண்ட கேள்விகளுக்குப் பதிலாகப் பொருளாதார நிலை, கல்வித் தகுதி, சமூக நிலையில் மனுதாரர் தாழ்ந்தவரா? – என்று கேட்கும் வண்ணம் முறையை மாற்றியமைக்க வேண்டும்.

எல்லாத் தேர்தல்களிலும் இந்தியாவில் உள்ள எல்லா அரசியல் கட்சிகளிலும் சாதி சமயக் கோட்பாடு, சமயத் தத்துவம், நிறம் ஆகியவற்றிற்கு முதன்மையளிக்காமல் தங்களின் வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

சாதியின் அடிப்படையிலோ அல்லது வகுப்பின் அடிப்படையிலோ சங்கம் அல்லது அமைப்பு எதுவும் இருக்கக்கூடாது என்று சட்டமியற்ற வேண்டும்.

சாதியைப் பற்றியோ வகுப்பைப் பற்றியோ எழுதுதற்கும் பேசுதற்கும் மற்ற சாதி அல்லது வகுப்பை எதிர்த்துப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் யாருக்கும் எந்த அமைப்பிற்கும் – பத்திரிகைகளுக்கும் அனுமதி வழங்கக்கூடாது.

கல்வி வல்லுநர்களும் சமயவாதிகளும் ஒன்று கூடிக் கலந்தாலோசிக்க வேண்டும். சாதி வேற்றுமைகளையும் வகுப்பு உணர்வுகளையும் மறக்கும் நோக்கத்தில் பொது மக்களை ஓர் இடத்தில் கூட்டி, அங்கே தீவிரமான பிரச்சாரத்தாலோ அல்லது தொகுதி தொகுதிகளாகப் பிரித்து நடைமுறை வேலைகளில் ஈடுபட்டோ வகுப்பு வாதத்தையும் சாதீயத்தையும் தடுத்த நிறுத்த மத வாதிகளும் கல்வி வல்லுநர்களும் தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும்.

மக்கள் மத்தியில் ஒருமை உணர்வை உண்டாக்குவதே தத்துவ ரீதியாக மதத்தின் முதன்மையான குறிக்கோளாகும். ஆனால், துரதிர்ஷ்டவசமாக சில காலங்களில் கண்மூடித்

தனமான பிடிவாத குணத்தால் சமய ஆக்கிரமிப்பைப் பொது மக்கள் சந்திக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தது.

வெற்றிகரமாக விடுதலை வாங்கித்தந்த நமது பக்திக்கும் விசுவாசத்திற்கும் பாத்தியமான 'இந்தியாவின் தந்தை' அண்ணல் காந்தியடிகளுக்குப் பிறகு மத சிந்தனையுடைய மக்கள் ஒற்றுமையை நோக்கித்தான் முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள்.

சமயப் பிடிவாதத்தின் காரணமாகத் தற்கால இந்தியாவில் தேசிய ஒருமைப்பாட்டில் குலைவு ஏற்படுமோ என்று பயப்படத் தேவையில்லை. ஆனால், அதே நேரத்தில், சமயத்தின் மூலமாகத் தேசிய ஒருமைப்பாட்டை உண்டாக்கு வதில் கண்ணும் கருத்துமாகக் கவனம் செலுத்த வேண்டும்; தேசிய ஒருமைப்பாட்டிற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்தாக வேண்டும்.

அதற்கு, கீழ்க்கண்ட வழிமுறைகள் ஆலோசிக்கப் படலாம்.

எல்லா மதத் தலைவர்களையும் சமய உணர்வு கொண்டவர்களையும் கொண்ட மன்றம் ஒன்று ஏற்படுத்தி, பொது மேடையில் அவர்கள் ஒருங்குகூடி மதவிளக்கம் செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும். அண்ணல் காந்தியடிகள் நடத்திக் காட்டியதைப்போல எல்லா மதத்தினரும் கலந்துகொள்ளக்கூடிய பொது வழிபாடு நடத்தவேண்டும்.

இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் அளித்துள்ள தனி மனிதரின் அடிப்படை உரிமைகளுக்குக் கேடு விளை விக்காத வகையில் ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதத்திற்கு மதம் மாறிச் செல்வதை, சட்ட ரீதியாகத் தடுத்தாக வேண்டும்.

மற்ற மதத்தை எதிர்த்தோ அல்லது குற்றம் குறை கண்டுபிடித்து அபிப்பிராயம் கூறும் விதத்திலோ போதனை

புரிவதும் எழுதுவதும் சட்டப்படி குற்றமாகும் என்று பிரகடனப்படுத்த வேண்டும்.

குறிக்கோளுடைய வாழ்க்கையை நோக்கும் எதிர்கால சமுதாயத்தைக் கல்வி ஒன்றால்தான் முன்னேற்றுவிக்க முடியுமாதலால் தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்கு வதிலும் கல்வி முதன்மை இடத்தைப் பெறுதல் வேண்டும்.

ஒருமைப்பாட்டை உருவாக்குவதில் சில காலம் கல்வி கூட தோல்வியடைந்தது. காரணம், நடைமுறையில் அது மிகவும் தாழ்ந்து இருந்ததேயாகும். தற்போது இருப்பதைவிட இந்தியக் கல்வித் திட்டத்தில் இந்திய ஒருமைப்பாட்டை உருவாக்கும் வகையில் செயல் முறையில் அதிக அளவு மாற்றம் ஏற்படுத்தலாம்.

அதற்குரிய ஆலோசனைகள்.

ஒவ்வொரு கல்வி நிறுவனமும் குறித்த காலத்தில் கொடியேற்று விழா நடத்தல் - தேசிய கீதம் இசைத்தல் தேசிய உறுதி மொழிச் சத்தியம் எடுத்துக்கொள்ளுதல் ஆகிய முறைகளை நடைமுறையில் கொள்ள வேண்டும். தேசிய உறுதி மொழி கீழ்க்கண்ட விதத்தில் எடுத்துக் கொள்ளலாம்:-

மொழியால் நாம் தமிழர்கள் - தேசத்தால் நாம் இந்தியர்கள். நாமெல்லாம் இந்தியக் குடிமக்கள் என்று இதயபூர்வமாக உறுதி மொழி எடுத்துக் கொள்கிறோம். எந்த நிலையிலேயும் மொழியாலோ மதத்தாலோ அல்லது சாதியாலோ எந்தவிதமான வேற்றுமையும் எழுதற்கு நாங்கள் இடமளிக்க மாட்டோம். பாரதத் தாய்க்கும் பாரத மக்களுக்கும் பணி செய்து வாழ ஆயத்தம் எடுத்துக் கொள்வோமாக!

(மாநிலப் பகுதிக்குத் தக்கவாறு உறுதி மொழியின் முதற் சொற்றடரை மாற்றிக் கொள்ளலாம்.)

ஒருமைப்பாட்டைக் குலைத்துப் பிரிவினை, உணர்ச்சியைத் தூண்டக்கூடிய இலக்கிய வரலாற்றுப்

பாடங்களைப் பாடப் புத்தகங்களிலிருந்து நீக்கப்பட வேண்டும். ஒற்றுமையை உருவாக்கக்கூடிய பாடங்களை வலியுறுத்த வேண்டும்.

இந்தியா முழுமையும் சுற்றிப் பார்த்து வர நீண்ட சுற்றுப்பயண நிகழ்ச்சிகளில் உயர்நிலைப் பள்ளி மாணவர் களும் கல்லூரி மாணவர்களும் பங்கு கொள்ள இயன்ற உதவிகளையும் வசதிகளையும் அரசினர் அளிக்க வேண்டும். குறைந்தது மற்ற மாநிலங்களையாவது சுற்றிப் பார்வையிட்டு வர ஏற்பாடு செய்ய வேண்டும். இதனால் வேறுபட்ட மாநிலத்தைச் சேர்ந்தவர்கள், எண்ணக் கருத்தைச் சுதந்திரமாகப் பரிமாறிக் கொள்ள இயலும். ஆகவே இதன் மூலம் மற்ற மாநில மக்களோடு நெருங்கிய உறவுகொள்ளவும் முடியும். இந்திய ஒருமைப்பாடு ஆற்றல் பெற்று வலிமை யடையக் கூடும்.

உள்ளத்துணர்ச்சியோடு ஒன்றியதாகத் தேசிய ஒருமைப்பாடு அமைய வேண்டுமே அல்லாது புறப்பகட்டாக அமைந்துவிடக் கூடாது. இந்த வகையான இந்திய ஒருமைப் பாட்டைப் பெறுதற்கு சக்தி வாய்ந்த ஒரு தேசிய இலக்கியத்தைக் கண்டாக வேண்டும். அந்த இலக்கியம் அனைத்திந்தியாவும் ஆதரித்து ஏற்றுக் கொள்ளக் கூடியதாக அமைதல் வேண்டும். சொந்த இலக்கியத்தைப் பெற்ற ஒரு நாடு நல்ல மாட்சிமை பெறும் என்பது கார்லைனின் கருத்து.

சாதியாலோ சித்தாந்த நம்பிக்கையாலோ அல்லது மதத்தாலோ ஏற்படுகின்ற துரபிமானம் இல்லாத நல்ல பண் பாடு உடைய வாழ்க்கையைப் பற்றிப் போதிப்பது திருவள்ளுவரின் திருக்குறளாகும்.

மனித வாழ்க்கைக்கு இலக்கணமாகத் திகழும் திருக்குறளை இந்திய மாநில மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்த்தாக வேண்டும். மத்திய அரசாங்கம் திருக்குறளைத் தேசிய இலக்கியமாக ஏற்றுக்கொள்ள வேண்டும்.

அனைத்திந்தியாவின் எல்லாக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் முக்கிய பாடமாகத் திருக்குறளைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். ஒருமைப்படுத்தக் கூடிய கருத்தையும் நல்ல குணாதிசயங்களையும் எதிர்கால இளஞ் சந்ததியினரின் சிந்தனையில் ஏற்பட இந்த ஏற்பாடு வழிவகுக்கக் கூடும்.

## 26. வாணிபமும் ஆன்மீகமும்

நான் கருத்து வியாபாம் செய்யும் ஒரு வாணிகன்; எனது வணிகத்திற்கு மேடைகளே சந்தைகள்.

இன்று, நிலப்பிரபுத்துவத்திற்குச் சாவுமணி அடித்தாகி விட்டது; பத்து ஏக்கர் நிலம் வைத்திருப்பவனை விடச் சில வெண் பொற்காசுகளை வைத்து வாணிபம் செய்கிறவர் களுக்குத்தான் இன்று சிறப்பு இருக்கிறது. எந்த ஒரு துறையிலும் மனிதன் தன்னைத் தகுதிபடுத்திக் கொள்ளும் அளவிற்குச் செழிப்பும், செழுமையும் பெறுதல் வேண்டும்.

ஆன்மீகம், எங்கோ ஓர் உலகத்திற்குப் போக டிக்கட் வாங்குகிற "புக்கிங் ஆபிஸ்" அல்ல; மத உலகம் இன்று வாணிகமாகிவிட்டது. அந்த வாணிகத்திற்கு விற்பனை வரி இல்லை; வருமான வரியுமில்லை.

ஆன்மீகத்தின் அடிப்படை எண்ணம் தன்னை அறிதலாகும். ஆன்மாவைப்பற்றி அறிதல் ஆன்மீகம். அதாவது உயிரியலைப் பற்றிய அறிவு.

நான் யார்? என் உள்ளம் யார்? என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். நாம் மனிதனாக வாழ்கிறோமா, மாடாக வாழ்கிறோமா? சிங்கம் புலி கரடியாக வாழ்கிறோமா என்பதை அறிதல் வேண்டும். மனிதன் தன் குறைகளை அறிதல் இன்றியமையாததாகும்; குறைகளை அறிந்து கொள்ளுதல் திருந்துவதற்கு உதவியாக இருக்கும்.

உடலை மூளையைப் பழக்கப்படுத்திக் கொள்வது போல நமது மனத்தையும் நாம் நல்ல முறையில் பழக்கப் படுத்திக் கொள்ள வேண்டும். புரியாத புதிராக இருக்கின்ற மனிதனைப் பக்குவப்படுத்தி அவனை நிறைவுடைய னாக்குவன மதம், கடவுள் நம்பிக்கை முதலியன. நாம் பல்வேறு வகையான உணவுகளையும் சாப்பிட்ட பிறகு, கொஞ்சம் ஊறுகாயைச் சாப்பிட்டால், நாம் சாப்பிட்ட எல்லாம் சீரணித்து, அந்த ஊறுகாயின் மணம் மட்டும் மேலெழுந்து நிற்பதுபோல, மதமும் கடவுள் நம்பிக்கையும் நம்மிடமுள்ள வஞ்சம், பொய், களவு, சூது, சினம் முதலியனவற்றையெல்லாம் சீரணிக்கச் செய்து அன்பையும், சகோதரத்துவத்தையும் மேலோங்கி நிற்கச் செய்யும்.

ஒரு நாடு ஒழுக்கத்தில் சிறந்து விளங்குவது அந்நாட்டின் ஆன்மீகத்துறை வளர்ச்சியைப் பொறுத்து தான். ஒரு நாடு ஒழுக்கக் கேடடைந்துள்ளது என்பதற்கான அறிகுறி சட்டப் புத்தகங்களின் குவியல்தான்!

'சட்டம் ஒரு வலை;' பெரிய வண்டுகள் அதில் மாட்டிக் கொள்வதில்லை; துளைத்துக்கொண்டு வெளி வந்துவிடுகின்றன. அப்படி வலையைப் பிய்த்துக் கொண்டு வெளியேறுகிறவர்கள் தாங்கள் வெளியேறுவது மற்றவர் களுக்குத் தெரியக்கூடாது என்பதற்காகப் பத்து சிறியவர்கள் மாட்டிக் கொள்ள வேண்டும் என்றும் எண்ணுவதுண்டு.

பொதுவாகக் கலப்படம் செய்வது என்பது குற்றம். அதற்கு உடந்தையாக இருப்பதும் குற்றம். ஆனால், இவற்றிற்கெல்லாம் அடிப்படையாக கலப்படம் பண்ண எண்ணுவதைக் குற்றமாகக் கருதுவதில்லை. சட்டங்கள் முழு நிறைவுடையனவாகத் தோன்றிவிடுவதில்லை. முழங்காலில் ஒரு புண் ஏற்பட்டால் அதன் மீது கட்டுப் போடுகிறோமே, அதுபோல்தான் சட்டத்தில் திருத்தங்கள் சேர்த்துக் கொள்வதும்.

சமயம் ஒன்றுதான் மனிதனைத் திருத்துவதற்குரிய சரியான சாதனம்; ஔவையார் தனது 'ஆத்தி சூடி'யில் 'அறம் செய்' என்று கூட வலியுறுத்தவில்லை. 'அறஞ்செய விரும்பு' என்றுதான் வற்புறுத்துகிறார். செயற்பாட்டைக்கூட அல்ல செயற்பாட்டிற்குரிய விருப்பத்தைச் சீர்படுத்திச் செழுமைப் படுத்துவது சமயம். இதனைத்தான்,

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியர்
திண்ணியர் ஆகப் பெறின்"

என்று பேசினார் திருவள்ளுவர்.

விண்ணோக்கிச் செல்லும் பொருளை மண்ணோக்கி இழுக்கும் ஈர்ப்புச் சக்தி மண்ணுக்கு இருப்பது போல வானோக்கிப் பறக்கிற மனிதனையும் கீழ்நோக்கி இழுத்து வருகிற ஆற்றல் வஞ்சனை, பொய், புனைசுருட்டு முதலிய வற்றிற்கு இருக்கின்றன. இத்தகு ஆற்றல் படைத்த வஞ்சனை, பொய், புனைசுருட்டு ஆகியவற்றின் ஆற்றலை அடக்கி மனிதனாக, மாமனிதனாக ஆக்கும் சக்தி மதத்திற்கும், கடவுள் நம்பிக்கைக்கும் உண்டு.

தன்னலமே இல்லாமல் இருக்க வேண்டும் என்று கூட நான் கூற விரும்பவில்லை; தன்னலத்திற்கு ஓர் எல்லைக் கோடு இருக்க வேண்டும் என்பதுதான் என் கருத்து. அத்தகைய எல்லைக்கோட்டை வகுப்பதுதான் ஒழுக்கம். தனி மனிதர்களுக்கு மட்டுமல்ல - வணிகர்களுக்கும் இந்த ஒழுக்கம் இன்றியமையாதது.

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்' என்றார் திருவள்ளுவர். உழவுத் தொழில் உற்பத்தித் தொழில். களங்கம் ஏற்படுத்தவும் வாய்ப்பில்லாத தொழில், வாணிபத் தொழில் அப்படியல்ல. எளிதாகக் களங்கம் ஏற்படுத்திவிடக் கூடிய தொழில். வாணிபத் துறையை யொட்டித் தமிழகத்தில் இலக்கியங்களே தோன்றியுள்ளன. சிலப்பதிகாரத்தில் கோவலனின் குடிச்

சிறப்பு கூறப்பெறும் போது, வணிகச் சிறப்புப் பேசப்பெறு கிறது. பொருள் ஒரு கையிலிருந்து இன்னொரு கைக்கு மாற்றப்படும் போது ஓரிடத்தில் அதிகமாகச் சுரண்டப்படக் கூடாது.

காய்தலும் உவத்தலும் இன்றிப் பேசும் பண்பியல்பு அன்றிருந்தது. இன்று, யார் எதைப் பேசுவது என்ற வரை யறை கூட இல்லாமல் யாரும் எதையும் பேசுகின்ற நிலை ஏற்பட்டிருக்கிறது.

வணிகர்கள் பெரும் பொறுப்புடையவர்களாக இருத்தல் வேண்டும். கலப்பில்லாத நல்ல பண்டங்களையே வழங்குவதன் மூலம் மக்களின் உடலையும் உயிரையும் பாதுகாக்கும் பாதுகாவலர்களாக வணிகர்கள் விளங்கமுடியும். ஒழுக்கம் அன்பு இவற்றைக்கூட வணிகக் கடைகளில் கற்றுக் கொள்ளலாம். முகத்தால் அமர்ந்தினிது நோக்கும் பண்பு இன்று கடைகளில் தானிருக்கிறது ஆத்மார்த்தீக உலகத்திற்கும் வணிக உலகத்திற்கும் உறவு ஏற்பட்டால் அன்பும் பண்பும் ஒழுக்கமும், நாணயமும் செழித்தோங்கி வளரும்.

நாடு சுதந்திரம் பெற்ற பிறகு, உற்பத்தித் துறையில் ஈடுபட்டிருப்பவர்களின் எண்ணிக்கையைவிட வணிகத் துறையில் ஈடுபட்டிருப்பவர்களின் எண்ணிக்கையே அதிக மாகி இருக்கிறது. அது நல்லதல்ல - வணிகர்களின் எண்ணிக்கை குறைய வேண்டும். இது சம்பந்தமாக வணிக சங்கங்களே திட்டமிட்டு ஒரு நல்ல ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும்.

நாட்டில் ஒழுக்கத்தைப்பற்றிப் பெரிதாகப் பேசுவார்கள். ஆனால் சிறிதளவுகூட வாழ்க்கையில் கடைப் பிடிக்கமாட்டார்கள். தனிமனித ஒழுக்கத்தைப் பெரிது படுத்திச் சமுதாய ஒழுக்கத்தை அலட்சியப்படுத்துவதால் "சமுதாய ஒழுக்கம்" சீர்குலைகிறது. சமுதாய நெறி தழுவிய வாழ்க்கை மலர வேண்டும்.

விலைவாசி ஏற்றம் பற்றிப் பேசப்படுகிறது. இம்மாதிரி நேரங்களில் விலையேற்றம் வரவேற்கத்தக்கது தான். எனினும் விலைவாசி ஏற்றம் உற்பத்தி செய்கிறவனுக்குக் கிடைக்க வேண்டும்.

"வரி உயர்வினால் விலைவாசி உயர்ந்திருக்கிறது; இதற்கு வணிகர்கள் பொறுப்பில்லை" என்று வணிகர்கள் கூறுகிறார்கள். இன்று, 60 சதவிகித மக்களுக்கு, விலைவாசி உயர்வுக்கு ஏற்பச் சாமான்கள் வாங்கி வாழ்க்கை நடத்த வருமானம் இல்லை. தனிமனித வாழ்க்கையில் சோஷலிசப் பண்பு இல்லையானால் சமுதாயதத்தில் சோஷலிச ஒழுக்கம் நிலைக்காது. அடிமைக் காலத்தில் நாம் பலவாறாகப் பிரிக்கப் பட்டோம். இன்று சுதந்திர நாட்டில் - சுதந்திர மக்களாக வாழ்கிறோம். நம்மிடையே, நாமெல்லாம் "ஒரே குடும்பம்" என்ற பாச உணர்வு வளரவேண்டும். வளர்ந்துவரும் புதிய சமுதாயத்திற்கு இந்தக் குடும்ப உணர்வு இன்றியமையாதது. வணிகர்களும் இந்த "ஒரு குடும்ப" உணர்வோடு சராசரி மக்களின் வாங்கும் சக்தியை வளர்க்கப் பாடுபட வேண்டும்.

வணிகத் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள் தினமும் சிட்டைப் புத்தகத்தைப் பார்த்துக் கணக்கு முடிப்பது போல ஒவ்வொரு நாளிலும், நாம் ஒழுக்கம், பண்பு ஆகியவற்றால் வளர்ந்திருக்கிறோமா என்று அன்றாடச் செயல்களைக் கொண்டு ஆராய்ந்து பார்த்து முடிவு செய்யவேண்டும்.

ஆன்மீகமும் வாணிகமும் தாமரையும் தண்ணீரும் போல. நமது வாழ்க்கை, பொருள், முயற்சி, ஒழுக்கம் அனைத்திலும் ஆன்மீக வாழ்க்கை கலந்திருக்க வேண்டும்.

சாப்பிடுகிற மனிதனுக்குப் பசி நீங்கவேண்டும்; குளிக்கிற மனிதனுக்கு அழுக்கு நீங்கி, உடல் வெப்பம் தணிய வேண்டும். வழிபாடு செய்கிற மனிதனுக்கு உள்ளத்தில் உள்ள வெப்பக்காடு குறைய வேண்டும். இதற்குத் தாய்மொழியில் வழிபாடு செய்வது இன்றியமையாதது. உள்ளத்தின்

அழுக்கைப் போக்கி, வெப்பத்தைத் தணித்துத் தூய்மைப் படுத்தும் கோயில்களை வணிகத் துறையாக்கிவிட்டால் நாம் எங்கே போய் நமது உள்ளத்தைத் தூய்மையாக்கிக் கொள்ள முடியும்? எங்கே போய், வெப்பத்தைத் தணித்துக் கொள்ள முடியும்? ஒரு மனிதனின் அன்பும், கருணையும் உலக மக்களை அணைக்கும்போதுதான் அவன் ஆத்மார்த்திக மனிதனாகிறான்.

வணிகத்துறையில் ஈடுபட்டிருப்பவர்கள் மக்கட்குத் தேவையான பொருள்களை வாங்கிக் கொடுப்பது போல - அவர்களின் வாழ்க்கைக்குத் தேவையான அன்பையும் பண்பையும் கற்றுக் கொடுக்க முடியுமா? அரிசி விற்கும் 'கை அருளியலையும் விற்க முடியும் என்பதை வணிகப் பெருமக்கள் உணர்ந்து தொண்டுபுரிய முன்வரவேண்டும்.

## 27. சமாதானம் வாழ்க்கையின் ஒரு பகுதி

"சமாதானம் செய்து வைப்பவர்கள் பாக்கியவான்கள்" - என்பது ஏசுவின் இனிய செய்தி. வாழ்க்கையின் பேறுகளை உண்மை, அறிவு, ஆனந்தம் என்று முறைப்படுத்துவார்கள் அருளாளர்கள். இன்றைய மானுடம் ஆனந்தம் - மகிழ்ச்சி, இன்பம், உடலுக்குரிய சுகம், களிப்புக்களை நிறைய பெற்று வளர்ந்துள்ளது. ஆயினும் ஆன்மாவில் அமைதி இல்லை; ஆனந்தம் இல்லை; ஏன்? நாம் முற்றிலும் ஆவேசமானதும் விரைவுணர்வு பொருந்தியதும் அற்புதமானதுமாகிய சூழலில் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம். நமது வாழ்க்கையில் ஏராளமான அடிப்படைப் பிரச்சினைகள் உள்ளன. இந்தப் பிரச்சினைகளைப் பற்றிய நமது கருத்து, இன்றுள்ள கருத்துடன் முற்றிலும் மாறுபட்டது. அதுமட்டுமல்ல, அன்றைய கருத்து அறியாமையின் காரணமாக அப்படி இருந்தது என்று இன்று

உணர்கின்றோம். அன்று பிரச்சினைகளை அணுகும் முறை நம்பிக்கை அடிப்படையிலான முறை; இன்று அப்படியல்ல. இன்று அறிவறிந்த நிலையில் சிந்திக்கின்றோம். நமது யுகம், அறிவியல் யுகம்! நமது பூமியில் உயிரினங்கள் தோன்றி 400 கோடி ஆண்டுகள் ஆகின்றன. மனித இனம் தோன்றி 40 இலட்சம் ஆண்டுகள் ஆகின்றன. நீண்ட இந்தக் காலக் கட்டத்தில் மானுடம் மெள்ள மெள்ள பரிணாம வளர்ச்சியில் மானுடமாயிற்று. மானுடம் தோன்றிய உடனேயே அறிவியல் விழிப்பும் மெள்ள மெள்ளவே வளர்ந்து வந்தது. இந்தத் தலைமுறையுகம், அறிவியலை முழுமையாக உணர்ந்த யுகம்! அறிவியலின் பலன்களை முழுமையாக அனுபவிக்கும் பேறு இந்தத் தலைமுறைக்குத்தான் கிடைத்துள்ளது. இந்தப் பேறு நீடிக்குமா? நீடித்து வளருமா? இருபத்தோராம் நூற்றாண்டின் நுழைவாயிலில் நிற்கும் நாம் நம்மையே அழித்துக் கொள்ளாவிட்டால் இந்தப் பேறு நிலைக்கும். ஆனால், நம்முடைய எதிர்பார்ப்பு, பிழையெனத் தெரிகிறது! வளைகுடாவில் போர் தொடங்கி விட்டது! இந்த மானுடத்தின் தலைவிதியை யார் நிர்ணயிப்பது. நல்லவண்ணம் அமைய வேண்டும் என்று பிரார்த்திப்போமாக!

சமாதானம் என்றால் என்ன? போர் இல்லாத நிலைமட்டுமல்ல. சமாதானம் என்பது போர் இல்லாத நிலை என்றால் "மயான அமைதி' என்று பொருள் கொள்ளல் கூடாது! சுரண்டும் அதிகார வர்க்கத்திற்குப் பணிந்து வாழ்தலுமல்ல. நாம் ஏதாவது நல்லது செய்தால் அதனால், மற்றவர்களுக்கு நோதல் ஏற்படும் என்று எண்ணி, யாதொன்றும் செய்யாதிருத்தலும் அல்ல. சமுதாயம் உயிர்ப் புடையது வாழ்வது, மானுடத்தின் வாழ்வுக்குத் தேவைகள் பலப்பல உள்ளன. வாழ்க்கைத் தேவைகள் பூர்த்தி செய்யப் பெறும் நிலையில்தான் அமைதி தோன்றும்; சமாதானம் தோன்றும்! மக்கள் தங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் சுதந்திரம் தேவை. எந்தக் காரணத்தை

முன்னிட்டும் மக்களிடத்தில் பயம் இருத்தல் கூடாது. பயமில்லாமல் சுதந்திரமாக உழைப்பைப் பயன்படுத்திப் பணியாற்ற வேண்டும். உழைப்பின் பயனை மக்கள் அடைய வேண்டும்; "வாழ்க்கையின் தேவைகளை அடையத்தக்க சுதந்திரமான உழைப்போர் தேவையே" என்றார் போப் பால்.

மானுடத்தின் சென்ற கால வரலாறுகள் ஊக்கமளிப்பனவாயில்லை. போர்கள் நிறைந்த ஆண்டுகளே மிகுதி. மானுடத்தின் நீண்டகால வரலாற்றில் போர் இல்லாத காலம் 292 ஆண்டுகள் தான் என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். கடந்த காலத்தில் இந்த உலகம் பதினையாயிரத் துக்கும் அதிகமான போர்களைச் சந்தித்துள்ளது. 140 இலட்சம் உயிர்கள் கொல்லப்பட்டுள்ளன.

இன்றைய நிலை என்ன? இன்று வாழும் பலர் இன்றைய எதார்த்தத்தைப் புரிந்து கொள்ளாதவர்களாக, சென்று போன காலங்களின் கருத்துக்களிலேயே, பழைமையின் பிடிப்புக்களிலேயே வாழ்கின்றனர். இவர்கள் பானையில் தலையை விட்டுக் கொண்டு தலையை எடுக்க முடியாமல் தவிப்பதைப் போல வாழ்கின்றனர். பைத்தியக் காரர்களே போரினை, விரும்புகிறவர்கள்! எந்த வகையான தருக்கவியலும் போரினை வரவேற்கவில்லை. மாறாக, போரை மறுதலித்தே வந்துள்ளன.

இந்த உலகில் பல மொழிகள் பேசும் மக்கள் வாழ் கின்றனர்; பல மதங்கள் நிலவுகின்றன! இந்த பரந்துபட்ட மக்களிடையே நட்புறவும் நல்லிணக்கமும் தேவை. மதங்கள் தனிப்பட்ட வாழ்க்கைக்கே உரியன. மதங்கள் அரசியல், பொருளாதார வாழ்க்கையில் ஊடுருவ அனுமதிப்பது விரும்பத்தக்கதுமல்ல: அனுமதிப்பதற்கும் இல்ல. மானுடத்தின் வரலாற்றில் நடந்த பல போர்கள் மதங்கள் அரசியலில் ஊடுருவியதனாலேயே ஏற்பட்டவை என்பதைக் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும்.

மதம் மக்களின் நல்வாழ்க்கை அமைப்புக்கே! என்று, 'இவர் தேவர் - அவர் தேவர்' என்ற விவாதங்கள் தலையெடுக்ககின்றனவோ அன்று மதச்சண்டைகள் தோன்றுவது இயல்பாகி விடும். ஆதலால், "கடவுள் ஒருவரே! அந்த ஒருவரையன்றிப் பிறிதொருவர் இல்லை! மானுட சாதி ஒன்றே! சமுதாய நீதியில் ஒரே நீதி!" என்ற கோட்பாட்டினை முன் வைத்து, சமாதான சகவாழ்வுக்குப் போராட வேண்டும்.

சமாதான வழியில் வாழும் சமுதாயம் அமைந்தாலே எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கக் கூடிய புதிய சமூக அமைப்பைக் காணமுடியும். நாடுகள் இராணுவச் செலவுகளைத் தவிர்த்து மூலவளங்களை மக்களின் மேம்பாட்டுக்குப் பயன்படுத்தினால் அற்புதமான சமுதாயம் தோன்றும். மானுட சாதியின் போர்க்குணம், ஆக்க வழிகளில் மடைமாற்றம் செய்யப்பெற வேண்டும். மானுடத்தை அறியாமை, வறுமை, பிணி ஆகியவற்றிலிருந்து மீட்கும் ஆக்க வழியிலான போர் உடனடியாகத் தொடங்கப்படுதல் வேண்டும்.

எல்லா விதத்திலும் சமாதானச் சூழ்நிலையில் வாழும் சமுதாயமே வளரும்; வாழும்; உத்தமமானதும் கூட! சமாதானம் வாழ்க்கையின் ஒரு பகுதி என்பதை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

இன்றுள்ள தேவை சமாதானம்! சமாதானம்! வேறொன்றும் இல்லை! சமாதானம் இன்றைய மானுட வாழ்வில் நிபந்தனையாகி விட்டது. சமாதானத்தைப் பேணுவோம்! பாதுகாப்போம்!

## 28. அமைதி! அமைதி!

விஞ்ஞானம் வளர்கிறது! இல்லை, வளர்க்கப்படுகிறது! காலம் எல்லைகளைக் கடந்து மனிதகுலம், உறவு கொண்டு இந்தப் பூமியில் ஒரு சேர உண்டு, களித்து மகிழ்வதற்காகத் தானே வாழ்கிறது! ஆனால் என்ன நடக்கிறது? அருள்

நெறியா வளர்கிறது? சன்மார்க்கமா ஆட்சி செய்கிறது? சைத்தான் மருள் நெறியில் அழைத்துச் செல்கின்றானே! போர்க் கருவிகள் செய்தல் தொழிலாக அல்லவா அமைந்து விட்டது! இரும்பைப் பிடித்த துருவும் சும்மா இருக்காது. ஆயுதம் தொட்டவனும் சும்மா இருக்க மாட்டான். நாளுக்கு நாள் கொலைக் கருவிகள் உற்பத்தி - அதுவும் அணு, இரசாயன ஆயுதங்கள் செய்யப்படுகின்றன. இந்த ஆயுதங் களைப் பயன்படுத்துவதன் மூலம் இந்தப் பூமியின் காற்று மண்டலம், தண்ணீர் மாசுபடுகிறது. இந்த மாசு பல தலைமுறைகளுக்குப் பாதிப்புச் செய்யும் என்று அறிவியல் உலகம் எச்சரித்திருக்கிறது; எச்சரித்துக் கொண்டிருக்கிறது! பணப்பேயும் அதிகாரப் பிசாசும் பிடித்தாட்டுபவர்களுடைய காதில் இந்த அபயக்குரல் விழவில்லையா? அல்லது விழுந்தும் விழாதது போல நடிக்கிறார்களா?

இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க உலக மெங்கிலு முள்ள அனைத்துச் சமய நெறிகளைச் சார்ந்தவர்களும் ஒருமித்த குரல் கொடுக்க வேண்டும். போர் வெறியை, போர் ஆயுதங்கள் தயாரிப்பை எதிர்த்துப் போராட வேண்டும். உலக நாடுகள் பேரவை - ஐக்கிய நாடுகள் சபை ஆற்றல் மிக்குடையதாக அமைய் வேண்டும். அது போலவே உலக சமயங்களின் மையம் - சபை ஒன்று தொடங்கப் பெறுதல் வேண்டும். இந்த உலக சமய சபை உலகத்தில் சகோதரத் துவத்தையும் சமத்துவத்தையும் சமாதானத்தையும் வளர்க்கப் பாடுபட வேண்டும்; உழைக்க வேண்டும். மானுடம் வென்று விளங்க வேண்டும். கணியன் பூங்குன்றன், அருளிய "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்ற வாக்கு மெய்யாகவே உருப் பெறுதல் வேண்டும். இதுவே அமைதிக்கு வழி!

யாதொரு நிபந்தனையும் இன்றி மானுடம் வளர, வாழ உத்தரவாதம் அளிப்பதே அறிவியலின் நோக்கம்! அறிவியலின் கடமை! இந்த நோக்கம் நிறைவேற இப்புவியி லுள்ளோர் அனைவரும் ஒத்துழைக்க வேண்டும். வியாபார

லாப நோக்கமின்றி நுகர்வுப் பொருள்கள் மட்டுமே உற்பத்தி செய்ய வேண்டும். உலகத்தின் எந்த ஒரு மூலையிலும் தனி ஒருவன் கூடப் பட்டினியால் சாக அனுமதித்தல் கூடாது. அறியாமை, முற்றாக அகற்றப்படுதல் வேண்டும். விரைவில் உலகம் தனக்கு ஒரு மொழியை உருவாக்கிக் கொள்ள வேண்டும். இந்த உலக மொழியை உலக மாந்தர் அனைவரும் கற்றுப் பேச வேண்டும். விரைவில் கடவுள் - மானுடம் தழுவிய உலகப் பொதுச் சமயமும் ஒன்று கண்டாக வேண்டும். இதற்கு வழி வகுப்பதற்கு வாய்ப்பாகப் போற்று தலுக்குரிய போப்பாண்டவர், திருச்சபைகளுக்குப் பல சமயங்களுடன் விவாதித்தல், கலந்துரையாடல், தெளிவு காணல் நெறியை அறிமுகப்படுத்தியுள்ளார். இது வரலாற்றின் திருப்புமையம்! போதும், போதும் பிரசாரங்கள்! மாந்தர் களிடையே அடிக்கடி கூடுதல், கலந்துரையாடல் முதலியன நிகழட்டும்! அமைதிகாண வழி இதுவே! அமைதியை வளர்ப்போம்! காப்போம்!

## 29. அணிதிரள்க

இன்றைய மானுட உலகம் வேண்டி நிற்பது அமைதியை சமாதானத்தை! அமைதி சமாதானம் என்பவை இன்றைய பாரதத்தில் அருமையாகிவிட்டன! எங்கும் வெறுப்பு! பகை! கலகம்! வன்முறைக் கொடுமை! 1990-ல் மட்டும் 36500 கொலைகள் நடந்துள்ளன. இவை தவிர கலகங் களால் செத்தவர்களும் உண்டு. இந்த பூமியின் பல்வேறு பாகங்களில் ஏற்பட்ட திடீர் யுத்தங்கள், சண்டைகள், தீவிரவாத இயக்கங்கள் இவற்றால் உலகமும் அமைதியை இழந்திருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில் திருவருள் பேரவையின் பணிகள் கடினமாகியுள்ளன; கட்டாயமாகியுள்ளன. சுதந்திர இந்தி யாவில் வாழும் மக்கள் அனைவரும் ஒரு குலம்; ஓர் இனம் எல்லாம் இந்தியர் என்ற மரபைப் போற்றுவோம். இந்திய

மக்களாகிய நாம் பாஸ்பரம் நல்லெண்ணம், நம்பிக்கையுடன் ஒன்றுபட்டு வாழ்வோம் வேற்றுமையில் ஒற்றுமை காண்பது என்பது விழுமிய கொள்கை; நாகரிகம். நமது அரசு, சமயச் சார்பற்ற அரசு; சமயச் சார்பற்ற தன்மை நமக்கு கிடைத்த நாகரிகமாகும்; கபீர்தாஸ், விவேகானந்தர், நாராயணகுரு, வள்ளலார், அண்ணல் காந்தியடிகள் ஆகியோர் தங்கள் இன்னுயிரையும் கொடுத்துக் காப்பாற்றிய கொள்கை சமயச்சார்பற்ற தன்மை; இந்திய ஒருமைப்பாடு!

இந்தியா சுதந்திரமடைந்து அரைநூற்றாண்டு கூட முடியவில்லை. அதற்குள் நாட்டின் பல பகுதிகளில் "மண்ணின் மைந்தர்" கொள்கை இயக்கம்! பிரிவினை வாதம்! சாதிச் சண்டைகள்! மதச் சண்டைகள்! காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரையில் இன்று பதற்றநிலை! இந்தச் சூழ்நிலையை அறை கூவலாக ஏற்றுக்கொண்டு அன்பையும் நல்லிணக்கத்தையும் ஒருமை நிலையையும் மக்களிடத்தில் வளர்த்து அமைதியையும் சமாதானத்தையும் வழங்கும் கடப் பாடே திருவருள் பேரவையின் கடப்பாடு! தமிழ் நாட்டை அமைதிப் பூங்காவாகப் பாதுகாக்க திருவருட் பேரவை இயற்றிய பணிகள் செய்த தியாகங்கள் அளப்பில. தமிழக மக்கள் திருவருட் பேரவைக்கு அங்கீகாரம் அளித்துள்ளனர்; அமைதிப் பணிக்கு அழைக்கின்றனர்; ஆயினும் நமது பணி மேலும் சிறப்பாக நடக்க முடியும்; நடக்க வேண்டும்.

இன்னும் தமிழ் நாட்டிலும் இந்தியாவிலும் அமைதியை, சமாதானத்தைக் காண உழைக்கும் நாம் தஞ்சையில் கூடுகிறோம். சமாதானத்தை வளர்க்க அணிதிரள்வோம். இந்த பூமியை அமைதியான, சமாதானச் சூழ்நிலையில் வைத்துக்கொள்ள உழைப்போம்! திருவருட் பேரவை வாழ்க! வளர்க அதன் அமைதிப்பணி!

கடவுள் பெயரால் சபதமேற்போம். கடவுள் திருநாமத்தின் பெயரால் மாந்தர் ஒரு குலம் என்பதை உறுதிப்படுத்து

வோம்! இந்த வையகத்தில் அமைதியான வாழ்க்கையை உறுதிப்படுத்துவோம்!

# 30. அமெரிக்கா தமிழ்நாடு அறக்கட்டளைப் பொழிவு

**(TNF inc, USA)**

பதினாறாம் ஆண்டு நிறைவு விழா
**25-5-61**

இனிய அன்புடையீர்,

*நாட்டிடைக் கடந்தும், கடலிடைக் கடந்தும் அமெரிக்காவில் வாழ்கின்ற தமிழ் மக்கள் தங்களுடைய தாய்த் தமிழகத்தின் வளர்ச்சி பற்றிக் கவலையுணர்வுடன் எண்ணிச் செயற்பட முனைந்த உள்ளங்களுக்கு ஆயிரம் ஆயிரம் பாராட்டுக்கள்! நன்றி!*

*தமிழகம் காலத்தால் முந்தியது. தமிழினம் காலத்தால் முன் தோன்றி மூத்த இனம். செப்பமான மொழியும் சிறப்புடைய வாழ்வியலும் கண்டவர்கள் நமது முன்னோர். உலகப் பொதுமறையாக விளங்கும் தகுதி மிகுதியுமுடைய திருக்குறளைத் தந்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிறந்து விளங்கியது தமிழரின் சிந்தனை உலகம். சிந்தனை யிலும் நாகரிகத்திலும் சிறந்து விளங்கியவர்கள் தமிழர்கள். அதுபோலவே, வாணிகம் முதலிய துறைகளிலும் சிறந்து விளங்கிய பெருமையை வரலாறும் தமிழிலக்கியங்களும் எடுத்துரைக்கின்றன. ஆயினும் என்? இத்தகு புகழ் பூத்த வாழ்க்கை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய வாழ்க்கை. காலப்போக்கில் தமிழர் தம் வாழ்க்கையில் அயல்வழக்குகள் ஊடுருவியதன் பயனால் காதல் மறைந்தது; காமம்*

தலையெடுத்தது; வீரம் விலை போனது; கோழைத்தனம் குடி புகுந்தது; சமயநெறிகள் மறைந்து மதங்கள் தலையெடுத்தன; பல கடவுள் வழிபாடு அறிமுகப் படுத்தப்பட்டுத் தமிழர் வாழ்வு நலியத் தொடங்கியது.

தமிழினம், குலமரபு கண்டு தழைத்து வளர்ந்தது. அயல் வழக்கால் சாதிகள், தீண்டாமை போன்ற சமூகத்தை உருக்குலைத் தழிக்கும் புற்றுநோயனைய சமூகத் தீமைகள் ஊடுருவின. இனவழிப்பட்ட கட்டுமானம் - ஒருமைப்பாடு சீர்குலைந்தது. அறிவறிந்த ஆள்வினையைத் தமிழர்கள் இழந்தனர். அதிர்ஷ்டத்தை - விதியை நம்பத் தலைப் பட்டனர்; வீழ்ச்சி தலைப்பட்டது; ஆட்சிகள் கவிழ்ந்தன. வீழ்ச்சியின் வரலாறு தொடர் கதையாகி வருகிறது. இனிய அன்புடையீர், மிகக்கடுமையான தடுப்பு முறையின் மூலம்தான் தமிழ் நாட்டைத், தமிழ் இனத்தைக் காப்பாற்ற முடியும். அத்தகைய உயர் முயற்சிக்குரிய விவேகமும் ஆற்றலும் உடைய தங்களைக் காண்பதில் மிக்க மகிழ்ச்சி யடைகின்றோம்.

இன்றைய தமிழகம் எங்கோ போய்க் கொண்டிருக் கிறது. இந்தியாவில் விற்பனையாகும் பரிசுச் சீட்டுக்களில் 70% விற்பனை தமிழ்நாட்டில்தான். திரைப்பட அரங்குகள் 2500க்கு மேல் உள்ள நாடும் தமிழ்நாடுதான். உலக நாடு களிலேயே பகலும் இரவும் திரைப்படம் பார்க்கும் வாய்ப்பு தமிழ்நாட்டில் தான் உள்ளது! எங்கும் ஒருவிதமான சோம்பல்! அதே போழ்து சுகவாழ்வு வேட்கையும் மிகுதி. முரண்பட்ட வாழ்நிலை! இவ்விதமான இரண்டு எதிர்த்திசை வளர்ச்சிப் போக்கை நாம் ஆழ்ந்த கவனத்துடன் எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் மக்கள் தொகை வளர்ச்சி கூடிக்கொண்டு வருகிறது. 1981இல் தமிழ்நாட்டின் மொத்த மக்கள் தொகை 4.8 கோடியாகும். 1991இல் 5.7 கோடியாக

உயர்ந்திருக்கிறது. இந்தச் சூழ்நிலையில் தமிழ்நாட்டின் மேம்பாட்டுக்காகத் திட்டமிடும் தங்கள் பணிகளை வரவேற்பதில், தங்களோடு ஒத்துழைப்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகின்றோம்.

பழங்காலத்தில் தமிழ்நாடு இன்றைய கேரளம், தமிழகம், கர்நாடகம், ஆந்திரம் ஆகியன அடங்கிய நிலப் பகுதியாகும். ஆதலால் தண்ணீர்ப் பிரச்சினை இல்லை. இன்றோ மொழிக் கலப்பால் மொழி பிரிந்து, இனம் பிரிந்து, நிலம் பிரிந்து ஒரு சிறிய பகுதிக்குத் தமிழ்நாடு என்று பெயர் சூட்டி மகிழ்ந்து வருகின்றோம். அதனால் - நிலப்பிரச்சினையால் நீர்வளம் குறைந்து விட்டது. கேரளநாடு, மேற்குநோக்கி ஓடிக் கடலில் கலக்கும் நீரைத் தமிழ்நாட்டுக்குத் தரமறுக்கிறது. கர்நாடகம் காவிரியில் நீர்விட மறுக்கிறது. இந்த நிலையில் கடந்த பல ஆண்டுகளாகத் தமிழ்நாடு வறட்சியால் தொடர்ந்து பாதித்து வருகிறது. பல ஆயிரம் விவசாயத் தொழிலாளர்கள் வேலையிழந்து வருகின்றனர். தமிழ்நாடு வளம் பெற முதல்நிலையில் தென்மாநில ஆறுகள் இணைக்கப்பட வேண்டும். வடபுலப் பேராறாகிய கங்கையைக் காவிரியுடன் இணைக்கும் பெரிய திட்டத்தைப் பற்றி எண்ண வேண்டும். உலக வங்கியின் உதவியை நாடவேண்டும். இந்திய - அமெரிக்க அரசுகளைத் தூண்ட வேண்டும். இந்த முயற்சியில் வெற்றி பெற்று விட்டால் தமிழ்நாட்டின் வளம் நிலையாகக் காப்பாற்றப் பெறும். இஃது ஒருதலையான திட்டம். நவீன இயந்திரங்களும், தொழில் நுட்பங்களும் நிலங்களை ஒருங்கிணைத்து அமெரிக்கா போலவே நமது தமிழ்நாட்டிலும் கடலை, சோளம் முதலியன விளைவிக்கும் பண்ணைகள் அமைக்கலாம். எண்ணெய்த் தேவை நிறைவுபெறும். ஒரு கோடி ரூபாய்க்கு மேல் அந்நியச் செலாவணியும் கிடைக்கும். இந்த தரிசு நிலப்பரப்பைச் சாகுபடிக்குக் கொண்டுவர திட்டங்களுடன் முன்வருபவர் களுக்குத் தமிழ்நாடு அறக்கட்டளை உதவி செய்யலாம்.

இந்தத் தரிசு நிலத்தில் பெரும்பான்மை போதிய தண்ணீர் வசதியில்லாதவை. ஆதலால் தண்ணீர் நிறையத் தேவைப் படாத ஆமணக்கு பயிரிடலாம். ஆமணக்கு எண்ணெய், ஆமணக்கு எண்ணெய் அடிப்படையிலான தொழில்கள் தொடங்க வாய்ப்புண்டு.

இத்தகையதொரு தொழில் இதுவரையில் தமிழ் நாட்டில் இல்லை என்பதையும் கவனத்திற்குக் கொண்டு வருகின்றோம். இந்தமாதிரித் தொழில் ஒன்றை பசும் பொன் தேவர் திருமகன் மாவட்டத்தில் தொடங்கும் திட்டம் கருவில் இருக்கிறது,

## திட்டம்

## Castor Oil Based Industries

Hydrogenated Castor Oil (3000 TPA)

Total Capital Investment Rs. 189.30 lakhs

Dehydrated castor oil Fatty acids (1000 TPA)

By product Glycerol (125 TPA)

Total Capital Investment Rs. 207.00 lakhs

Hard Fat: (9000 TPA)

By product : Spent Catalyst

Total capital Investment Rs. 287.25 lakhs

Castor Stear in/ Stearic acid & Castor olein/oleic acid (9000/ 7650 TPA)

Total Capital Investment Rs. 718.00 lakhs

திட்ட மதிப்பீடு உத்தேசம் ரூபாய் 13 கோடி. இத்தொழி லுக்குத் தமிழ்நாடு அறக்கட்டளை முதலில் இவ்வளவு முதலீடு செய்ய வாய்ப்பில்லையானால் படிப்படியாக

முதலீடு செய்து தொடங்கலாம். இந்த 13 கோடி ரூபாயையும் ஒரே காலத்தில் முதலீடு செய்ய வேண்டிய அவசியமும் வராது. பத்தாண்டுத் திட்டம் இதற்குத் தீட்டிப் படிப்படியாக நடைமுறைப்படுத்தி முழுமை நிலைக்குக் கொண்டு வரலாம். தொடக்க நிலையிலேயே 13 கோடியில் முழுநிலையில் தொடங்குவதற்கும் தடையில்லை. ஆனால் முதலிரண்டு ஆண்டுகளில் ஆமணக்குச் சாகுபடிசெய்து ஆமணக்கு மூலப்பொருள் கிடைக்க வேண்டுமென்பதால் மூன்றாண்டுத் திட்டமாகவும் வகுக்கலாம். இந்தத் திட்டத்தின் மூலம் ஏராளமான விவசாயிகள் பயன்படுவர். நூற்றுக்கணக்கான இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பு ஏற்படும். இந்தத் தொழிலில் முதலீடுசெய்யும் முதலீட்டுக்கு 34% இலாபம் கிடைக்கும். இத்திட்டத்தை ஒத்துக் கொண்டால் இத் திட்டத்தைச் செயற்படுத்துவதற்குரிய முயற்சிகளுக்கு நாமும், காரைக்குடி மத்திய மின்வேதியியல் ஆய்வக இயக்குநர் விஞ்ஞானி பேராசிரியர் எஸ்.கே. ரங்கராஜன் அவர்களும் பூரண ஒத்துழைப்புத் தரக்கடமைப்பட்டிருக்கிறோம். இத் தொழிலைத் தமிழ்நாட்டில் அமைப்பதென்றால் பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம், இராமநாதபுர மாவட்டம் இரண்டும் தான் ஏற்புடையவை. இந்த மாவட்டங்களில் முன்பே ஆமணக்கு 1000 ஏக்கரில் சாகுபடியாகிக் கொண்டிருக்கிறது. மேலும் சாகுபடி செய்ய வாய்ப்புண்டு. ஆதலால் இராமநாதபுரம் மாவட்டம், பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் இரண்டையும் இணைக்கும் இளையான்குடிப் பகுதியில் இத்தொழில் அமைவது சாலப்பொருத்தம் என்பதையும் தமிழ்நாடு வளர்ச்சி அறக்கட்டளையின் கவனத்திற்கு கொண்டுவருகின்றோம்.

அடுத்துத் தமிழ்நாட்டின் வளர்ச்சியில் முக்கியமான இடம் வகிப்பது கால்நடை வளர்ப்பேயாம். கால்நடை

வளர்ப்பு ஒரு தனித்தொழில் அல்ல; பன்முனையில் பயன்தரும் தொழிலாகும். கால்நடை வளர்ப்பு சிறப்புடன் நடைபெற்றால் விளைபுலன்களுக்கும் இயற்கை உரம் கிடைக்கும்; வேளாண்மை மகசூலும் நன்றாக இருக்கும். கால்நடை வளர்ப்பின் மூலம் நல்ல தரமான பால் - பாலுணவு முதலியன கிடைக்கும். இன்று தமிழ்நாட்டில் 17% பேருக்குத்தான் கொழுப்புச் சத்துள்ள உணவு கிடைக்கிறது என்பது கவலையுடன் கவனிக்கத்தக்கது. கால்நடை வளர்ப்புக்காக பால்மாடு, ஆடுகள் வளர்ப்புக்காக வறுமை கோட்டுக்குக் கீழ் இருப்பவர்களுக்கு இந்திய அரசும் மாநில அரசும் ஊரக ஒருங்கிணைந்த வளர்ச்சி திட்டத்தின் கீழ் பலகோடி ரூபாய்களை வழங்குகின்றன. ஆனால், இந்தத் திட்டத்தால் போதிய பயன் விளையவில்லை. இந்தக் குறையை நிறைவுசெய்ய தமிழ்நாட்டில் தனியார் துறை யிலோ, கூட்டுத் துறையிலோ பங்களிப்பு முறையில் தரமான கால்நடைப் பண்ணைகள் அமைத்து நல்ல தரமான பால் மாடுகளை வளர்த்து வழங்கலாம். அமெரிக்கா போன்ற நாடுகளில் 20 முதல் 50 லிட்டர் வரை ஒரு மாடு பால் தருகிறது. ஆனால் தமிழ்நாட்டிலோ பெரும்பாலான மாடுகள் 2 முதல் 5 லிட்டர் தான் தருகின்றன. 8 முதல் 18 லிட்டர் வரை கறக்கும் மாடுகளும் உண்டு. ஆனால், எண்ணிக்கையில் மிகக் குறைந்தவை. ஆனால், தமிழ்நாட்டிற்குத் தரமான கால்நடைப் பண்ணைகள் அமைக்கும் திட்டத்திற்கு ஆதர வளிக்க வேண்டும் என்பது நமது கருத்து. கருத்து மட்டுமல்ல வேண்டுகோளும் கூட.

தமிழ்நாட்டில் இன்று இளைஞர்கள் திசைதெரியாமல் திகைத்து நிற்கின்றனர். இதற்குப் பெரிதும் காரணம் வேலையில்லாதத் திண்டாட்டமே. தமிழ்நாட்டின் வேலைவாய்ப்பு நிலவரம் இதோ:

## வேலையின்மை

### (31 டிசம்பர் 1984 முடிய பதிவில் உள்ள வேலையற்றோர் எண்ணிக்கை)

| | | |
|---|---|---|
| 1. | மாவட்ட வேலை வாய்ப்பு பதிவு அலுவலகங்கள் | 1.361,980 |
| 2. | துணை வேலை வாய்ப்பு அலுவலகங்கள் | 2,42,868 |
| 3. | உயர்கல்வி (professional) வேலை வாய்ப்பு அலுவலகம் (Employment office) | 37,031 |
| 4. | மாவட்ட வேலை வாய்ப்பு அலுவலகங்கள் (தொழில் நுட்ப பிரிவினர்) (மதுரை, சென்னை, திருச்சி) | 59,402 |
| 5. | உடல் ஊனமுற்றோர்க்கான சிறப்பு வேலைவாய்ப்பு பதிவு அலுவலகங்கள் | 6,659 |
| | மொத்தம் | 1,707,940 |

*மொத்த வேலைவாய்ப்பு அலுவலகங்கள் 39*

### வேலையின்மை குறியீடு விவரம் (1970=109)

| | பொருள் | 1980 | 1981 | 1982 | 1983 | 1984 |
|---|---|---|---|---|---|---|
| 1. | பதிவு செய்த வர்கள் | 126.4 | 127.4 | 142.9 | 136.9 | 138.1 |
| 2. | வேலை வாய்ப்பு பெற்றவர்கள் | 126.7 | 159.2 | 174.2 | 179.2 | 142.8 |
| 3. | பதிவு செய்து காத்திருப்பவர்கள் | 275.8 | 314.0 | 352.6 | 382.6 | 425.4 |

ஆதலால், தமிழ்நாடு முழுவதும் சிறு தொழில்களைத் தொடங்க முன்வரும் படித்த இளைஞர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும்தர தமிழ்நாடு அறக்கட்டளை ஆலோசிக்கலாம். அல்லது கிராமப்புறங்களில் சிறு தொழில்களைத் தொடங்கி வேலைவாய்ப்பை உருவாக்கும் தொழில் நிறுவனத்திற்கு முதலீடாக இட்டுவைப்பாக நபர் ஒருவருக்கு ரூ. 3500 வீதம் வழங்கலாம்.

இன்று தமிழ்நாட்டிலும் சரி, இந்திய நாட்டளவிலும் சரி மிகவும் பிற்படுத்தப்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர் மேம்பாடு குறித்து நாடு தழுவிய விவாதம் நடக்கிறது. இஃதொரு நல்ல சகுனம். பிற்படுத்தப்பட்டோருக்கு, மிகவும் பிற்படுத்தப்பட்டோருக்கு இட ஒதுக்கீடுகள் பற்றிய சட்டங்கள் உள்ளன. இவையெல்லாம் மகிழ்ச்சிக்குரிய நடவடிக்கைகளே! ஆயினும் மிகவும் பிற்படுத்தப்பட்டோர். பிற்படுத்தப்பட்டோர் பெரும்பாலும் கிராமங்களில் தான் வசிக்கின்றனர். கிராமப்புறங்களில் தரமான கல்வி இல்லை. பொதுவாக ஆரம்பக் கல்வியில் அதிலும் குறிப்பாக மூன்றாவது வகுப்பு வரை போதிய கவனம் செலுத்தினால் நல்ல தரமான படிப்பாளிகளை எதிர்கால அறிஞர்களை உருவாக்கமுடியும். இத்துறையில் தமிழகம் மிகவும் பின்தங்கி உள்ளது. தமிழ்நாடு அறக்கட்டளை, தமிழ்நாட்டின் சிற்றூர்களில் உள்ள ஆரம்பப்பாட்சாலைகள் சிலவற்றைத் தரமான கல்விகொடுக்க முயற்சி செய்வது தமிழ்நாட்டின் எதிர்காலத்திற்கு மிகவும் துணை செய்யும்.

இஃது ஓர் அறிவியல் உலகம். இன்றைய உலகத்தை அறிவியல் இயக்குகிறது. இயந்திரமூளை வந்துவிட்டது. இயந்திர மனிதன் உருவாகிவிட்டான். இத்துறையில் மற்ற நாட்டு மக்களைப்போல் தமிழ்மக்கள் வளரவேண்டும். அப்போதுதான் உலகத்தோடு நமது நாடும் ஒருசேர வளர முடியும். ஓர் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுத்துக்களைப் பெற்ற ஜப்பான் அறிவியல் துறையில் குறிப்பாக

மின்னணுவியல் துறையில் வளர்ந்து உலகத்தில் வலிவும் வளமும் பெற்றுள்ள நாடுகளின் வரிசையில் முன்னிலையில் இருக்கிறது. இதற்கு என்ன காரணம்? உலகின் எல்லா நாடுகளிலும் பயிற்றுமொழி தாய்மொழியாகவே இருக்கிறது. தாய்மொழிவழிக்கல்வி சிந்தனையை வளர்ப்பது. அயல் மொழிவழிக் கல்வி மனப்பாடம் மட்டுமே. அறிவை விரிவு செய்யவும் அகண்டமாக்கவும் தாய்மொழிவழிக்கல்வியே துணைசெய்யும். நமது தமிழ்நாட்டு அரசியல் தலைவர்கள் பயிற்று மொழியையும் இந்திய அரசின் ஆட்சி மொழியையும் ஒன்றாக எண்ணிக் குழப்புகின்றனர். ஆட்சி மொழியில் நன்றாக எழுதப் படிக்கத் தெரிந்தால் போதும். இதற்கு ஆங்கிலத்தை ஒரு மொழியாக கற்றால் போதும். அறிஞர்கள், விஞ்ஞானிகள், தொழில் மேதைகள் உருவாகத் தாய்மொழி தமிழே பயிற்சி மொழியாக இருத்தல் வேண்டும். தமிழ்மொழி காலந்தொறும் அவ்வக்காலத்திற்கேற்ப வளர்ந்து வந்தமொழி. ஆனால் ஆங்கிலேயர் ஆட்சிக்குப் பிறகு இன்றுவரை இந்த நூற்றாண்டின் செல்வமாகிய அறிவியல் செல்வத்தைத் தமிழ் பெறவில்லை; நூல்கள் இல்லை என்கின்றனர். தேவை தோன்றினால் தானே படைப்புகள் தொடரும். ஆதலால், தமிழ்நாடு அறக்கட்டளை தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்துடன் தொடர்பு கொண்டு அப்பல்கலைக்கழகத்தின் அறிவியற்புலத்தினை முழுமையாக இயக்கவேண்டும். தமிழில் அறிவியல் ஆய்வுகள் நிகழவும் நூல்கள் எழுதவும் வெளியிடவும் தமிழ்நாடு வளர்ச்சி அறக்கட்டளை உதவி செய்யவேண்டும். இது காலத்தால் செய்யவேண்டிய கட்டாயக் கடமை. இன்று இத்துறையை நாம் கவனிக்கத் தவறினால் தமிழர்கள் உலக இனமக்களுடன் நிற்க முடி யாமல் பின்தங்கி விடுவர். அதுமட்டுமல்ல. தமிழ்நாட்டிலும் இருண்ட நிலை உருவாகிவிடும். ஏன்? ஒளிவு மறைவு இல்லாமல் இந்தி மொழியைவிடத் தமிழ்மொழியில் பின் தங்கி விடும். அவ்வழி தமிழ்மக்களும் தாழ்வர். தமிழ்நாட்டில்

மீண்டும் மேட்டுக்குடி ஆட்சி முறை உருவாகும். இதை விரும்புகிறீர்களா? உங்களில் யாரும் விரும்பமாட்டீர்கள் என்று நம்புகின்றோம்.

அதுபோலவே அறிவியலைத் துறைதோறும் தாய் மொழியில் கற்பிக்க முன்வரும் மேல்நிலைப் பள்ளிகளுக்கு, கல்லூரிகளுக்கு அறிவியல் ஆய்வுக் கூடங்கள் அமைக்க உதவி செய்யலாம். நடமாடும் அறிவியல் ஊர்திகள் அமைத்து மாவட்ட அளவில் பள்ளிகளுக்கு வழங்கி மாணவர்களுக்கு அறிவியல் கல்வியையும் பொதுமக்களுக்கு அறிவியல் விழிப்புணர்வையும் உண்டாக்கலாம். இது தொடர்பாக நம்முடைய சொந்த வேண்டுகோளையும் தமிழ்நாடு அறக் கட்டளை முன் வைக்க விரும்புகின்றோம். பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டத்தில் அறிவியல் பணிசெய்யும் சுதேசி விஞ்ஞான இயக்கத்திற்கும் மாவட்ட அறிவியல் மன்றத்திற்கும் ஒரு நடமாடும் அறிவியல் ஊர்தி அவசிய அவசரத் தேவையாக இருக்கிறது. இத்துறையில் நாம் இப்பொழுது செய்துவரும் பணியை அங்கீகரித்துத்தான் இந்தியப்பேரரசு, நமக்கு தேசிய விருது வழங்கிப் பாராட்டி யிருக்கிறது. இந்தப் பணி மேலும் சிறப்பாக அமைய ஒரு நடமாடும் அறிவியல் ஊர்தி வாங்கி வழங்கினால் மிகவும் உதவியாக இருக்கும். இந்த வகையில் தமிழ்நாட்டு அரசு உதவி போதிய அளவு கிடைப்பதில்லை. அதுபோலவே தமிழ்வழிக் கற்கும் தரமான மாணவர்களைத் தேர்ந்தெடுத்து உதவி செய்தால் இந்தியப் பணித் துறையில் சரிந்துவரும் நமது தகுதியை உயர்த்திக் கொள்ள இயலும்.

இன்று தமிழ்நாட்டில் கிராமப்புறங்களில் வறுமை வளர்ந்து வருகிறது. பணவீக்கத்தினால் ஏற்பட்ட பணப் புழக்கம் கூட கிராமங்களில் இல்லை. கிராமங்கள் வளர்ந் தாலே நாடு வளரும். கிராமப்புற வளர்ச்சிக்கு முன்சொன்ன திட்டங்கள் அனைத்தும் உரியனவே. தமிழ்நாட்டில் சில சிற்றூர்களைத் தத்து எடுத்து முழுமையான வளர்ச்சிக்குக்

"குன்றக்குடி மாதிரி" (Kundrakudipattern) திட்டமிட்டுச் செய்ய முன்வரும் தொண்டு நிறுவனங்களுக்குத் தமிழ்நாடு அறக்கட்டளை உதவலாம். குன்றக்குடியிலும் ஒரு மருத்துவ மனை, திருமண மண்டபம் கட்டவேண்டும். கிராமத்திட்டக் குழுவிற்குக் கூட்டச்செலவு, நிர்வாகச்செலவு ஆண்டுதோறும் ஒரு லட்சரூபாய் வருகிறது. இந்தச் செலவைத் தற்போது குன்றக்குடி ஆதீனம் ஏற்றுள்ளது. குன்றக்குடியில் திருமண மண்டபம் தமிழ்நாடு அறக்கட்டளை கட்டித்தந்து அதன் வருவாயிலிருந்து தொடர்ந்து திட்டமிடலும் வளர்ச்சிப்பணி களும் நிகழும். குன்றக்குடியில் மட்டுமல்லாமல் மற்ற இடங்களிலும் இந்தப்பணியைச் செய்ய உதவியாக இருக்கும்.

தமிழ்நாடு அறக்கட்டளை நிறுவனத்தாரின் நல் லெண்ணத்திற்குப் பாராட்டு! தமிழ்நாட்டின் வளர்ச்சியை உணர்ச்சி வசப்பட்ட நிலையில் அணுக மாட்டீர்கள் என்று நம்புகின்றோம். அதோடு நெடிய பயன் தராத திட்டமில்லாத தர்மங்களையும் இலவசங்களையும் விரும்பமாட்டீர்கள் என்று நம்புகின்றோம். இந்தியாவிலேயே ஐந்தாவது திட்டத்திற்குப்பிறகு திட்டமிடுதலிலேயே தாமதம். திட்டச் சார்பில்லாத செலவினங்களே நம்முடைய அரசில் அதிகம். கிட்டத் தட்ட அரசையும் தேர்தல் சாதனமாக மாற்றிக் கொண்டு வருகின்றனர். இத்தகைய தவறுகளைத் தமிழ்நாடு அறக்கட்டளையினர் செய்யவேண்டிய நெருக்கடி இல்லை என்றே நம்புகின்றோம். தமிழ்நாட்டின் நிலையான வளர்ச்சிக்கு நெடுந்தொலைவு நோக்குடன் திட்டமிடுங்கள்! இத்துறையில் தமிழ்நாட்டில் ஓர் ஆலோசனைக் குழுவை அமையுங்கள்! இந்த ஆலோசனை குழுவில் தமிழ்நாட்டின் தலைசிறந்த பொருளாதார நிபுணர்களை, அறிவியல் மேதை களை இடம்பெறும்படி செய்யுங்கள்! இந்திய தேசிய விஞ்ஞான மையங்களை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். காரைக்குடியில் அமைந்துள்ள மத்திய மின் வேதியியல் ஆய்வக இயக்குநரும் மற்ற விஞ்ஞானிகளும்

இந்தவகையில் உங்களுக்குப் பூரண ஒத்துழைப்புக் கொடுப்பார்கள் என்று அவர்கள் சார்பில் உறுதி கூறுகின்றோம். தமிழ்நாடு வளர, இலக்குகளை வடிவமைப்போம்! ஒருங்கிணைந்த உணர்வுடன் உழைப்போம்! நன்றி!

## 31. அழகப்பா பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாப் பொழிவு

**4–4–1994**

அழகப்பா பல்கலைக் கழக வேந்தர் அவர்களே! துணைவேந்தர் அவர்களே! பேராசிரியப் பெருந்தகையர் களே! மாணவர்களே! திருவருள் துணையால் வாழிய நலத்துடன்; வளத்துடன்!

அழகப்பா பல்கலைக் கழகம் தோன்றுதற்குக் காரணமாக அமைந்த வள்ளல் அழகப்பர் அவர்கள் அறிவைத் தேடுவதில், அறிவைத் தருவதில் ஆர்வம் மிக்கவர். பொதுவாக நகரத்தார் வட்டித் தொழில் செய்யும் இயல்பினர். தனி வட்டி என்ற வழக்கில், கூட்டு வட்டியே நடைமுறை. ஆனால் அழகப்பர் கொழுத்த வட்டி ஈட்டித்தரும் முதலீடு என்று கூறப்பெறும் “கல்வியில் முதலீடு” செய்தார். அருகில் உள்ள மத்திய மின்வேதியியல் ஆராய்ச்சி நிறுவனம் வள்ளல் டாக்டர் அழகப்பர் முயற்சியினாலும் முதலீட்டினாலுமே காரைக்குடிக்கு வந்தது. இன்று இந்த ஆராய்ச்சி நிறுவனம் நமது பகுதிக்கும் நாட்டிற்கும் செய்து வரும் தொண்டு அளப்பரியது. வள்ளல் டாக்டர் அழகப்பர் கொடையில், மழலையர் பள்ளி முதல் பல்கலைக் கழகம் வரையில் தோன்றி வளர்ந்தன; வளர்ந்து வருகின்றன. பல ஆயிரக் கணக்கான அறிஞர்களை நாட்டுக்குத் தந்துள்ள பெருமை, அழகப்பா கல்வி நிறுவனங்களுக்கு உண்டு.

*"மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்*
*பெருந்தகை யாக்கப் படின்"*

என்ற திருக்குறளுக்கும்,

*"இம்மைச் செய்தது மறுமைக்காம் எனும்*
*அறநிலை வாணிகன் ஆய்அலன்"*

என்ற புறநானூற்று வரிகளுக்கும் வள்ளல் டாக்டர் அழகப்பர் இலக்கியமானவர்.

வள்ளல் அழகப்பர் புகழ் வளர்க! வாழ்க!

கம்பன் இலக்கிய உலகில் புதிய தடத்தைக் கண்டான்; அந்தத் தடத்தை நமக்கும் காட்டுகிறான். கம்பனுக்கு முன் அனைவரும் கடவுள் வெற்றி பெற்றார் என்றனர். சிலர் மன்னன் வெற்றி பெற்றனன் என்றனர். இலக்கிய உலகில் முதன்முதலில் "மானுடம் வென்றதம்மா!" என்று பாடு கிறான் கம்பன்! ஆம்! மானுடம் வெற்றி பெறவேண்டும் என்பது கம்பனின் விருப்பம்; விழைவு.

*"எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே!"*

என்று புறநானூறு கூறும்! மானுடம் வெற்றிபெறுதல் வேண்டு மெனில் மானுடத்தின் பொறிகளும் புலன்களும் நனி சிறந்து விளங்குதல் வேண்டும். மானிடர் அறிவுடையராதல் வேண்டும்.

*"அறிவுடையார் எல்லாம் உடையார்"*

என்பது திருக்குறள். சென்ற காலத்தில் மானுடம் வெற்றி பொருந்திய வரலாற்றை இயக்கி வந்தமையை வரலாற்றில் காண்கிறோம். இலக்கியங்களில் படிக்கிறோம். ஆயினும் மானுடத்தின் வரலாற்றில் ஏற்பட்டுள்ள பின்னடைவுகளை அலட்சியப்படுத்திவிட முடியாது. மானுடத்தின் வரலாற்றில் ஏற்பட்டுள்ள பின்னடைவுகளைக் கணக்கில் எடுத்துக்

கொண்டு இன்றைய தலைமுறை அந்த பின்னடைவுகளைத் தவிர்க்க வேண்டும். இஃது இன்றைய இளைய பாரதத்தின் முன்னுள்ள கடமை.

இன்று நம்முடைய சமுதாயத்தை நாம் வழிநடத்திச் செல்லவில்லை; செல்ல இயலவில்லை. ஏன்? இன்று நம்முடைய வாழ்க்கைப் போக்கின் அமைப்பினால், சமுதாயம் என்ற ஒன்றே இன்னமும் உருக்கொள்ளவில்லை. நாம் ஒரு கூட்டமாக வாழ்கிறோம். ஆனால் கூடித் தொழில் செய்து வாழவில்லை நம்முடைய நாட்டில் கூட்டுறவு போதிய வெற்றியைப் பெறவில்லை. நாம் ஒரு சமுதாயமாக வாழ முயன்றோம். இல்லை! காடுபோல வாழ்கிறோம்! தோட்டம்போல, தோப்புப்போல வாழ முயன்றோம் இல்லை. பன்னூறு ஆண்டுகளாக எப்படியோ விளைந்த வேற்றுமைகள் மேலும் மேலும் வளர்கின்றன.

இந்தியா, நிலப்பரப்பால் ஒரு நாடுதான! ஆனால், நாம் அனைவரும் இந்தியராகவில்லை. சாதிகள், மொழிகள், மதங்கள் ஆகியன நம்மை வேற்றுமைப் படுத்துவதில் - ஒருவருக்கொருவரை அந்நிய படுத்துவதில் போதிய வெற்றி களைப் பெற்றே வருகின்றன. இது மறுக்கமுடியாத - வருந்தத் தக்க உண்மை. நம்மை இந்தப் புவியில் - புவிக்கோளத்தில் நடக்கும் சம்பவங்கள் - நிகழ்ச்சிகள் நடத்துகின்றன. சம்பவங்களும் நிகழ்ச்சிகளும் நம்முடைய ஆளுமைக்குக் கட்டுப்பட்டனவாக இல்லை. புவி ஈர்ப்பு ஆற்றலால் பொருள்கள் கீழே விழுதல்போல, புவியின் நிகழ்வுகள் நம்மை இழுத்துச் செல்கின்றன; அல்லது ஆட்டிப் படைக்கின்றன. நாம் உணர்ச்சி வசப்படுகிறோம். நம்மை சுற்றிலும் நடக்கும் சம்பவங்கள் - நிகழ்வுகள் நம்மைக் கடுமையாகப் பாதிக் கின்றன. இந்த பாதிப்புக்களே நம்மை வழி நடத்துகின்றன; வாழ்தலுக்கும் காரணமாகின்றன. நாம் இந்தப் புவியை இந்தப் புவியின் வரலாற்றைத் திட்டமிட்டு நடத்தவேண்டும். புவியை நடத்துக! நடத்துக புவியை!

மானுடம் இந்தப் புவியை நடத்த அறிவு என்ற கருவியைப் பெற்றாக வேண்டும். அறிவை "கருவி" (Instrument) என்று திருக்குறள் கூறுகிறது. தகவல்களின் தொகுப்பு அறிவு அல்ல. அறிவு ஒரு கருவி. வாழ்க்கையைத் துன்பத்திலிருந்து பாதுகாக்கும் கருவி அறிவு.

"அறிவு அற்றம் காக்கும் கருவி"

என்பது திருக்குறள். இந்த அறிவைத் தேடவேண்டும். நல்லறிவு எந்த மூலையில் இருந்தாலும் எவ்வளவு தூரத்தில இருந்தாலும் தேடிச்சென்று அடைதல் வேண்டும். நபிகள் பெருமான் "சீனத்திலாயினும் அறிவை அடையத் தவறாதே" என்றார். அறிவு மனிதனை, மனித குலத்தைத் துன்பத்தி லிருந்து துயரங்களிலிருந்து பாதுகாக்கும் கருவி என்பது திருக்குறள் கருத்து.

அறிவைப் பெறுதலுக்குரிய சாதனங்கள் பலப்பல. அவற்றுள் தலையாயது கல்வி. "கற்க" என்று திருக்குறள் கூறுகிறது. 'கற்க' என்பது எக்காலத்துக்கும் இயைந்து நிற்கும் ஆணைச்சொல். "கற்க" "கற்றுக்கொண்டே இருப்பாயாக" என்கிறது. கற்றல் என்பது ஒரு தொடர் பணி! இன்று பட்டம் பெறும் மாணவர்கள் தொடர்ந்து கற்க வேண்டும், வாழ்நாள் முழுதும் கற்க வேண்டும். ஆம்! ஒவ்வொருவரும் படைப் பாற்றல் மிக்க மனிதனாகும் வரையில் கற்க வேண்டும். கற்றல் என்பது நாள்தோறும் செய்யக்கூடிய இயல்பான பணி என்று கலித்தொகை கூறும். கற்க என்று அறிவுறுத்திய திருவள்ளுவர் "கசடறக் கற்பவை கற்க" என்று தொடர்ந்து கூறுகிறார். சிலர் கூறுவது போலப் பிழையின்றிக் கற்றலை "கசடறக் கற்க" என்று திருவள்ளுவர் கூறியிருக்க மாட்டார். முன்னோடியான, வெற்றி பொருந்திய வாழ்க்கையை நடத்தவேண்டும். இதற்குத் தடையாகப் பல குற்றங்கள் ஆன்மாவில் பொருந்தி யிருக்கின்றன. நமது முன்னேற்றத்திற்குத் தடையாக ஆன்மா விடத்தில் அமைந்துள்ள குற்றங்கள் எவை எவை என்று

கண்டறிதல் வேண்டும்: தற்சலுகையின்றி கண்டறிதல் வேண்டும். உடற்பிணி, உணவாலும் மருந்தாலும் போகும். ஆன்மாவைச் சார்ந்த பிணி நல்ல நூல்களின் கருத்துக்களி னாலேயே நீங்கும் நூலகத்தை "உயிர் மருந்தகம்" என்றழைப்பதும் உண்டு.

மாணவ நண்பர்களே! உங்கள் முன்னேற்றத்திற்குத் தடை வெளியே இல்லை. உங்களிடத்திலேயே தடையிருக் கிறது! தடைகளாக இருக்கும் குற்றங்களைக் கண்டுணர்க! அந்தக் குற்றங்கள் நீங்குதலுக்குரிய நூல்களைத் தெரிந் தெடுத்துக் கற்பீர்களாக! தொடர்ந்து கற்பீர்களாக! இங்ஙனம் தொடர்ந்து கற்கும் கல்வியே நமக்குத் துணை. நமக்கு பலம்! இலக்கியங்களில் படிக்கத் தக்கன பழைய இலக்கியங்கள்! அறிவியல் நூல்களில் படிக்கத்தக்கன புதிய நூல்களாகும்.

உண்ணும் உணவு உடலுக்கு வலிமையாதல் போல், கற்கும் கல்வி அறிவாகி, உணர்வாகி, ஒழுக்கமாகி, செயலாகிப் பயன் தரவேண்டும். கற்கும் கல்வி, மனிதத்தை உருவாக்குதல் வேண்டும். ஒரு காலத்தில் கல்வியே கூடப் பிரிவினைக்குக் கருவியாக அமைந்தது. பிற்காலத்தில்தான் பிரிவினைகளை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். ஆனால், இன்னமும் பூரண வெற்றி கிடைத்தபாடில்லை. கல்வி, அன்பையும் இன்பத்தையும் மானுடத்திற்குத் தரவேண்டும். அதுவே கல்வி. கற்றலும் கேட்டலும் அறிவு பெறுதலுக்குரிய வாயில்கள்! நாள்தோறும் கற்றலும் கேட்டலும் உடையவர்களைப் பெரியோர் என்று திருஞானசம்பந்தர் போற்றினார்.

"கற்றல் கேட்டலுடையார் பெரியார்"

என்பது திருஞானசம்பந்தர் வாக்கு.

இன்றைய உலகம் சுருங்கிவிட்டது. ஆதலால் நமது கல்வியும் உலகந்தழுவியதாக அமைதல் வேண்டும். உலகந்தழீ இய ஒட்பம் நமக்குத் தேவை. நிறைய சாளரங்கள் உள்ள

மாளிகை, நல்வாழ்க்கைக்கு ஏற்றது. உலகந்தழுவிய ஒட்பம் பெற, மொழிகள் என்ற சாளரங்களைத் திறந்து விடுங்கள்! பல மொழிகளைக் கற்பது நல்லது. குறைந்தது நான்கு மொழி களை கற்றவர்கள் பலவான்களாக விளங்குவர். மொழிச் சாளரங்களைச் சாத்திவிடாதீர்கள். ஒரு மொழியின் ஆதிக்கத்தை எதிர்ப்பதையும் அம்மொழியைக் கற்பதையும் ஒன்றாகக் கருதக்கூடாது. நமது தலைவர்கள் ஆங்கிலேயர் களுடைய ஆதிபத்தியத்தை எதிர்த்தார்கள்; ஆனால் ஆங்கிலத்தைத் துறைபோகக் கற்றிருந்தனர், ஆங்கிலேயர்கள் மெச்சும் அளவுக்கு ஆங்கிலம் பேசினார்கள். இது இன்றைய இளைஞர்களுக்கு முன்னுதாரணமாக அமையும் என்று நம்புகிறோம்.

பல மொழிகளைக் கற்க வேண்டும் என்று சொல்வதால் தாய் மொழியின் நிலை என்ன?

> "வேறு வேறு பாஷைகள் கற்பாய் நீ
> வீட்டு வார்த்தை கற்கிலாய் போ போ"

என்று பாரதி கூறியதை நினைவு கூர்க.

தாய்மொழிக் கல்வி மரத்திற்கு மண்போல இன்றி யமையாதது. மாணவர்கள் தமிழ் வழியாகக் கற்கும் வாய்ப்பை இன்னமும் பெறவில்லை. அறிவியல் துறைகள் பலவற்றையும் தாய்மொழியின் வாயிலாகக் கற்க வேண்டும். கல்விக்குச் சிந்தனை அவசியம். இன்று பொதுவாகக் கல்வித் துறையில் சிந்தனைத் திறனும் படைப்புத் திறனும் குறைந்து வருகின்றன. அதற்குக் காரணம் தாய்மொழிவழிக் கல்வி இல்லாமல் போனதேயாம். அதனால் தமிழரிடத்தில் அறிவியல் சார்ந்த வளர்ச்சி போதுமானதாக அல்லது வளர்ந்துவரும் காலத்தின் தேவையை ஈடு செய்யக்கூடியதாக இல்லை. தமிழர் வாழ்வு சிறக்க, தமிழ் வளர தாய்மொழி வழி அனைத்துத் துறைகளும் கற்பிக்கப் பெறுதல் வேண்டும். ஆய்வு நோக்கில் ஆங்கில மொழியை ஒரு மொழியாகப்

படித்துத் தேர்ச்சி பெறவேண்டும். கல்வியில் இந்த செயல்முறை அவசியமானது.

இன்றைய இந்தியா நெருக்கடியான, ஆனாலும் நிலையான முன்னேற்றத் திசையில் சென்றுகொண்டிருக் கிறது. நாட்டின் முன்னேற்றத்திற்குப் பணி செய்யக்கூடிய் கடமை ஆர்வலர்களை, அறிவறிந்த ஆள்வினையுடையோரை நாடு அவாவிக் கொண்டிருக்கிறது. சுயநலமின்றி, முற்றாகக் கையூட்டு முதலிய பலவீனங்களில் சிக்காமல் நாட்டிற்கு ஊழியம் புரியும் சக்தியை இன்றைய இளையபாரதம் பெற வேண்டும். இது நமது வேண்டுகோள்! பிரார்த்தனை!

மண்புழுவைப் பாருங்கள்! மௌனமாக அந்த மண்புழு உழைப்பு இயற்றுகிறது. ஆனால், மானுடத்தின் வாழ்க்கையில் ஆரவாரம் மேம்படுகிறது. விளம்பர நெடியே அடிக்கிறது. விளம்பரம் வேறு, புகழ் வேறு. இன்றைய இளைஞர்களே புகழ் புரிந்து வாழுங்கள்! வேண்டாம் விளம்பரம்! இளையபாரதம் இன்புறு நலன்கள் அனைத்தும் பெற்று வாழ்க! இது நமது விருப்பம்; விழைவு; பிரார்த்தனை. ஆயினும், "இளைய நண்பர்களே! இன்பங்களைப் பெருக்கிக் கொள்வதிலிருந்து விடுதலை பெறுவீர்! வாழ்க்கைக்கு இலக்குகளை நிர்ணயிப்பீர்களாக! குறிக்கோள் இதுவெனக் கூறிக்கொள்வீராக! நமது குறிக்கோள் எதிர்காலமாக அமை யட்டும்! நமது குறிக்கோள் சொர்க்கம் அடைவதாகவோ, முக்தி அடைவதாகவோ அமைவதை விரும்பாதீர்கள்! நாம் வணங்க வேண்டிய முதல் தெய்வம், நமது நாட்டில் வாழும் மக்களே!" என்று விவேகானந்தர் அறிவுறுத்திய அறிவறிந்த ஆள்வினையை மேற்கொண்டு நாட்டை மேலும் மேலும் தற்சார்புடையதாக்குக!

"நாடென்ப நாடா வளத்தன"!

என்ற திருக்குறளுக்கு இசைந்த நாடாக நமது நாட்டை அமைத்திடுக. இந்தியாவை வருத்தும் அறியாமை, வறுமை,

ஏழ்மை ஆகியவற்றை எதிர்த்துப் போராடுக! ஒருமைப்பாடு காண்பீராக! புதிய பாரதம் உருவாகட்டும்!

இந்தியா தனக்கெனப் பண்பாடும் நாகரிகமும் பெற்று விளங்கும் புகழ் பூத்த நாடு.

*"ஒன்று பரம்பொருள் நாமதன் மக்கள்*
*உலகின்பக் கேணி"*

*"எல்லாரும் அமரநிலை எய்தும் நன் முறையை*
*இந்தியா உலகிற்கும் அளிக்கும்! - ஆம்!*
*இந்தியா உலகிற்கு அளிக்கும்."*

என்று பாரதி கூறிய வாசகங்களை உணர்க! பாரதியின் வாக்கை வரலாறு ஆக்கும் சாதனையைச் செய்வீர்களாக!

இந்தியா ஒரு நாடு. அரசியல் ரீதியாக இந்தியா ஒரு நாடானது என்பதற்கு வரலாற்றுச் சான்றுகளை ஆட்சி யாளர்கள். வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடலாம். ஆனால், பண்பாடு, கலாச்சார ரீதியில் இந்தியா ஒரு நாடாக வரலாற்றிற்கு எட்டாத காலத்திலேயே விளங்கியது. பழைய இந்தியாவில் பல மொழிகள் பேசப்பெற்றன. பல மதங்களும் அனுஷ்டிக்கப் பெற்றன. ஆயினும் கலாசாரம் ஒன்றாகவே விளங்கியது. இது இந்த உலகத்திலேயே ஒரு புதுமை. "வட பெருங்கல் - தென்குமரி" என்று தமிழ் இலக்கியங்கள் கூறும். யாத்திரை பற்றி "காசி - இராமேசுவரம்" என்று சொல்லப் படும் வழக்கு பலரும் அறிந்ததே. பாவேந்தன் பாரதிதாசன்.

*"இமயச் சாரலில் ஒருவன் இருமினால்*
*குமரியிலிருந்து மருந்து கொண்டு ஓடினான்!"*

என்று கூறியபடி ஒருமைப்பாட்டினை - உணர்வு பூர்வமான ஒருமைப்பாட்டினை வளர்த்துக் காப்போம்!

*ஒன்று சேர்ந்து நம்மைக் காத்துக் கொள்வோம்!*
*ஒன்று சேர்ந்து உண்போம்!*

*ஒன்று சேர்ந்து வீரியம் பெறுவோம்!*
*ஒன்று சேர்ந்து அறிவொளி பெறுவோம்!*
*எவரையும் வெறுக்காமல் இருப்போம்!*
*ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!"*

என்னும் பழைய உபநிஷத் வாசகத்தை நினைவு கூர்வோம்!

இந்தியாவின் ஒருமைப்பாடு இந்தியாவின் பலம். இந்தியாவை ஒரு வலிமையான நாடாக உருவாக்க முதல் தேவை இந்திய ஒருமைப்பாடு. இதனை வளர்த்துக் காத்துக் கொள்ள உறுதி கொள்வோம்.

இன்று இந்தியாவில் பொருளாதார நெருக்கடி இருக்கிறது. வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கிறது. இந்த சூழ்நிலையிலிருந்து தப்பப் புதிய பொருளாதாரக் கொள்கை மூச்சுவிட அனுமதிக்கிறது. ஆயினும் போதிய பயன் - இளையபாரதம் பயனுறத்தக்க வகையில் அமையுமா? "டங்கல்" எங்கு அழைத்துக் கொண்டு செல்லும் என்ற வினாக்குறிகள் இளையோரிடம் எழுவதை நம்மால் கேட்க முடிகிறது. அவர்களின் பெருமூச்சும் தெரிகிறது. ஆயினும் தளராதீர்! இந்தியாவைத் தற்சார்பான பொருளாதார நாடாக்கச் சபதம் ஏற்பீர்! சுரண்டும் பொருளாதாரக் கொள்கைக்கு முற்றுப்புள்ளி வைப்பீர்! உண்மையான சுதந்தரம், சமத்துவம் ஆகிய கொள்கைகளுக்கும் சுயநலத்திற்கும் தொடர்பே இல்லை! ஆனால், இன்றுள்ள நிலை வேறு. சுதந்தரத்தின் பொருள் உணர்வீர்! சமத்துவ சாத்திரம் ஏற்பீர். கடின உழைப்பினை மேற்கொள்வீர்! புதியதோர் உலகம் அமைப்பீர்களாக. புறநானூற்று நெறியில் "பிறர்க்கென முயலும் நோன்பினை" நோற்பீராக!

இன்று நம்மை வருத்தும் பண மதிப்பீட்டுச் சமுதாயம், பண வீக்கம் முதலிய துன்பங்களிலிருந்து விடுதலை பெறவேண்டும். நாட்டை நலிவுறச் செய்யும் கருப்புப் பணப் பொருளாதாரம் என்ற புற்று நோயிலிருந்து நாட்டைப்

பாதுகாக்கவேண்டும். நம்முடைய நாட்டுப் பொது வாழ்வின் தரம் வரவரக் குறைந்து வருகிறது; வன்முறைகள் வளர்வது வருந்தத்தக்கது. இந்தியா வளரும் நாடாக விளங்கி, நமது இளையபாரதம் வறுமைக்கோட்டினை அகற்றுதல் வேண்டும். இது நமது எதிர்பார்ப்பு.

நமது நாட்டினை வளப்படுத்துவதற்குரிய வாயில்கள் நமக்கு நிறைய உள்ளன. இன்னும் நமது நாட்டில் கோடிக் கணக்கான ஹெக்டர் நிலம் தரிசாகக் கிடக்கிறது. இந் நிலத்தையெல்லாம் பயன்பாட்டுக்குக் கொண்டுவர வேண்டும். கால்நடை வளர்ப்பு, இன்றுவரை நமது நாட்டில் கட்டுபடியாகக்கூடிய ஒரு தொழிலாக வளரவில்லை; இடம் பெறவில்லை. வேளாண்மை அறிவியலும் கால்நடை வளர்ப்பும் இணைந்து, முறையான "அறிவியல் சார்ந்த தொழில் நுட்ப"த்துடன் இயற்றப்படின் நமது நாட்டில் நிலையான பொருளாதாரம் உருவாகும். இன்றைய தொழிலை. அறிவியல் சார்ந்த தொழில் நுட்பத்துடன் இன்றையக் கருவிகள் கொண்டு செய்தால்தான் வெற்றி பெற இயலும். ஆய்வகங்களின் அறிவியல் சார்ந்த முடிவுகளுக்கும் மக்களின் செயற்பாட்டுக்கும் இடையே உள்ள இடைவெளி குறைக்கப்படுதல் வேண்டும். விஞ்ஞானத்தை விளை புலன்களுக்கு எடுத்துச் செல்லும் முயற்சி வெற்றி பெறுதல் வேண்டும். அன்றுதான் பாரதம் வளரும்!

இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு வெகு வேகமாக முன்னேறி வந்தது. உணவில் தன்னிறைவு அடைந்தது; அணு ஆராய்ச்சி, விண்வெளி ஆராய்ச்சி முதலியவற்றில் முதலிடம் பெற்றது. ஆயினும் அண்மைக் காலமாக ஒரு பின்னடைவு ஏன்? காரண காரியங்களை ஆய்வுசெய்து காலத்தை வீணாக்குவதில் பயன் இல்லை. நம்முடைய முன்னோர், தலைமுறை தலைமுறையாகப் பல்வேறு சிறந்த இலக்கியங் களையும், விண்ணளந்து காட்டி வினைமறைக்கும் கோயில்களையும் தந்து சென்றனர். எங்களுக்கு நேர் மூத்த

தலைமுறை நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கித் தந்தது. நாங்கள் இளைய பாரதத்தினராகிய உங்களுக்கு எதையும் புதிதாகத் தரக்கூடிய நிலையில் இல்லை! எங்களை மன்னித்து விடுங்கள்! நாடு உங்களைத் தாங்க வேண்டும் என்று எதிர் பார்க்காதீர்கள்! நாட்டை நீங்கள் தாங்க வேண்டிய திருக்கிறது என்பதை மறந்துவிடாதீர்கள். இந்தியத் தேர், இடைவழியில் சகதியில் - சேற்றில் சிக்கிக் கொண்டு நிற்கிறது. இந்தியத் தேரின் சக்கரங்கள் அந்நிய மூலதனம், சாதிச் சழக்குகள், மதப்பிணக்குகள் ஆகிய சகதிகளில் சிக்கிக் கொண்டு புதைந்து நிற்கிறது. சுயநலம், கையூட்டு ஆகியன மோதி தேரின் அச்சு முறியும் நிலையில் இருக்கிறது. இளைய பாரதத்தினரே! உடன் தோள் உயர்த்தி வாருங்கள்! தேரைத் தூக்கி நிறுத்துவோம்! அதன்பின் வடம் பிடித்துத் தேரை எல்லாருக்கும் எல்லாம் கிடைப்பதான இடம் நோக்கி இழுத்து, தேரினை நிலை சேர்ப்போம். இருபத்தோராம் நூற்றாண்டுக்குள் இந்தியத் தேரினை தேர் நிலைக்குக் கொண்டு சேர்க்கும் வலிமையை இளையபாரதம் பெறுக.

*வளர்க அழகப்பா பல்கலைக் கழகம்!*
*வளர்க வள்ளல் அழகப்பர் புகழ்!*

## ‘பொன்’னுரை

### தவத்திரு பொன்னம்பல அடிகளார்

நேரு பெருமகனாரின் பொது வாழ்க்கையில் மகாத்மாவின் தாக்கம் இருந்தது. ஒரு படைப்பாளியின் படைப்புகளில் தாம் ஏற்றுக்கொண்ட இலட்சிய புருஷரின் தாக்கம் இருப்பது இயல்பு! வெகுசிலருக்கே தாம் ஏற்றுக்கொண்ட இலட்சியத் தலைவர் வாழ்வில் தாக்கத்தை ஏற்படுத்துவது உண்டு. பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு விண்பழித்து மண்ணில் கால்பதித்து இறைவன் திருவடி தீட்சை தருவது உண்டு. இறைவனின் உய்விக்கும் பணியில் சில நேரங்களில் பக்குவப்படாத ஆன்மாக்களுக்கும் அவன் அருட்பார்வை அமைந்து விடுவதுண்டு.

**‘தெளிவு குருவின் திருமேனி காண்டல்**
**தெளிவு குருவின் திருநாமம் செப்பல்**
**தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்**
**தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே!’**

என்று குருவருள் வழியே திருவருளும் துணை நிற்க, சில ஆன்மாக்களுக்கு இன்ப அன்புப்பேறு வாய்ப்பதுண்டு. மணிவாசகப் பெருமானுக்குக் குருந்தமரத்தடியில் இறைவனின் திருவடி தீட்சை வாய்க்கப் பெற்றது. கடைக்கோடி ஆன்மாவாகிய நம்மை எப்படி இறைவன் இறைபணிக்குக் குருவருளின் வழியே ஆட்படுத்தினான்? என்னே, அவன் எளிவந்த கருணைப் பெருவெள்ளம்!

போகங்களைத் துய்த்து மகிழவேண்டிய சித்தார்த்தர் எப்படி போதிமரத்தடிப் புத்தராக மாறினார்? கண்ணியம் மிக்க ஆங்கிலக் கனவானாக லண்டன் மாநகரில் உலா வந்த மோகனதாஸ் கரம்சந்த், ஆசைகள் துறந்ததன் அடையாளமாய் ஆடைகள் துறந்து அரைநிர்வாணப் பக்கிரியாய், மகாத்மாவாய் உலா வந்தாரே! இப்படி மகத்தான மனிதப் புனிதர்களைப் போல் அல்லாமல் கனவுகளையும் கற்பனைகளையும் சுமந்து திரியும் ஒரு சராசரி இளைஞனைத் துறவுப் பாதைக்கு மாற்றியது எது? காந்தம் கண்ட இரும்புபோல் நம்மைக் கவர்ந்து இழுத்தது எது? குருமகாசன்னிதானத்திடம் பிறைநிலாவாகத் தொடங்கிய உறவு நிறைநிலாவாக வளர்ந்தது. பின்னோக்கிய நிகழ்வுகள் நம்மைக் கரைத்து இழுத்துச் செல்கின்றன.

பூர்வாசிரம நாள்கள்!

நம் அருள்நெறித் தந்தை குருமகாசந்நிதானம் மதுரைக் கிளைத் திருமடத்திற்கு எழுந்தருளும்போது சிறிய வயதில் வணங்கி அருட்பிரசாதம் பெற்றதுண்டு. நகர வளர்ச்சி நெருக்கடியால் மகாசன்னிதானம் பயணியர் விடுதியில் தங்கும் நிலை ஏற்பட்டது. நாமும் கல்வி பயின்ற காலத்தில் மகாசன்னிதானத் தைத் தரிசிக்கின்ற வாய்ப்பு நமக்குக் குறைந்து போனது.

**'புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
**நட்பாம் கிழமை தரும்'**

என்ற குறளுக்கு ஏற்ப, சேய்மையிலிருந்து மகாசன்னிதானத்தின் செயல்களைச் செய்தித் தாள்கள், வானொலி வழியே உற்றுநோக்கி உள்ளக்கிழியில் உரு எழுதி வந்தோம். கல்லூரியில் பயிலத் தொடங்குகின்ற காலத்தில் மதுரையில் நடைபெறும் மகாசன்னிதானத்தின் ஆன்மீக, இலக்கிய சொற்பொழிவுகளைத் தொலைவிலிருந்து கேட்கும் தொண்டர் ஆனோம்.

வயிற்றுக்கும் மூளைக்கும் போராட்டம்! எப்பொழுதும் வயிறுதானே வெற்றிபெறும். நம் வாழ்விலும் அதுவே வெற்றி பெற்றது. வாழ்க்கைக்கு வழிகாட்டவேண்டிய கல்வியைத் தேர்ந்தெடுக்கும்பொழுது வயிற்று ஊருக்குப் போகின்ற பாதைதானே என்று பலமுறை சரிபார்த்துவிட்டுப் பலரும் வழிதவறிப் போகின்றார்கள். அறிவியல், பொறியியல், மருத்துவஇயல் பயின்றால் தங்கத்தட்டில் வேலை கிடைக்கும் என்றும் தமிழ் இலக்கியம் பயின்றால் வாழ்வில் எதிர்காலமே இல்லை என்றும் கருதும் வழக்கமான மாயையில் நாம் சிக்கிக் கொண்டோம். எந்தத் துறையினைத் தேர்ந்தெடுத்தாலும் தேர்ந்தெடுத்த துறையில் கடுமையான உழைப்பு, விடாமுயற்சி, தன்னார்வம், அர்ப்பணிப்பு உணர்வு இருந்தால் முன்னேறலாம் என்பதை இளைய தலைமுறைக்குச் சுட்டிக் காட்டும் வழி காட்டுதல்கள் எப்பொழுதும் குறைவு. அறிவியல் அமிலத்திற்குள் நம் தமிழ் இலக்கியத்தாகம் அவிந்து போனது. இலக்கிய மேடைகளில் உலாவந்த சுதந்திரச் சிறகுகள் வெட்டப்பட்டன. ஆய்வுக்கூடமே தவச்சாலை ஆனது. அமிலத்தில் வெந்து போன இலக்கிய இதயத்தின் இலக்கியத் தாகத்தைத் தீர்க்கும் அமுத ஊற்றாய் அருள்நெறித் தந்தையின் மேடைகள் நம்மை ஈர்த்தன. அருள்நெறித் தந்தையின் இரவு நேரப் பல்கலைக்கழகங்களில் தூர இருந்து அகரம் வாசிக்கும் ஏகலைவனாய் நாம்.

குருநாதருக்குக் கட்டை விரலைக் காணிக்கையாய்த் தந்த ஏகலைவன்போல் அன்றி நம்மையே காணிக்கையாய் ஒப்படைக்கப் போகின்றோம் என்பதை அந்நாளில் நாமும் எவரும் அறிந்திடவில்லை. கல்லூரியில் பட்ட வகுப்பு இரண்டாம் ஆண்டு பயின்று கொண்டிருந்த நேரம். மதங்களின் வலிமையை மண்டை ஓடுகளின் எண்ணிக்கையால் மதவெறியர்கள் எண்ணிக் கொண்டிருந்த நேரம். மீண்டும் ஒரு நவகாளி! குமரிமுனையில் கருங்கடலுக்கு அருகே செங்கடல்! மனிதக் குருதியால் மண்டைக் காடுப் பகுதி முழுவதும் செங்கடல்!

உயிர்ச்சேதம்! பொருட்சேதம்! மதவெறித் தீயை அணைக்க முடியாது அரசு நிர்வாக இயந்திரம் கூட ஸ்தம்பித்தது! குமரிமுனையில் தோன்றிய 'நவகாளி'யை அடக்க எந்த மகாத்மாவைத் தேடுவது? என்று பரிதவித்துக் கொண்டிருந்த வேளையில் குன்றக்குடியில் இருந்து அமைதியின் தூதுவர் குமரிமுனைக் கலவரத்தை அடக்கப் புறப்பட்டார். உயிரைப் பணயம் வைத்த பயணம்.

மகாத்மா நவகாளியில் மதக் கலவரத்தை ஒடுக்கியதைப் போல, மனித நேய மகாத்மா மண்டைக்காட்டுக் கலவரத்தை அடக்கியதை மனித நேயம் விரும்பும் எவரும் எண்ணி எண்ணி வியக்காமல் இருக்க முடியாது. நமது உள்ளத்து உணர்வுகள் ஒருங்கே திரள மகாசன்னிதானத்தை எண்ணி அழுத உணர்வுகள் வரிகளாயின. கவிதை இலக்கண வரம்புக்குள் வராத அந்த வரிகளை என்ன பெயரிட்டு அழைப்பது? தெரியவில்லை! நமது உள்ளத்து உணர்வுகளை ஏட்டில் பதிவு செய்து அன்றாடம் அடைகாத்து வந்தோம். பின்னாளில் அந்தக் கவிதை நாம் ஆசிரியர் பொறுப்பில் இருந்த 'மணமலர்' இதழில் வெளிவந்தது. அனுமன் இராமநாமம் செபித்ததைப் போல 'மணமலர்' ஆசிரியர் பொறுப்பில் இருந்து நாம் எழுதிய முதலும் கடைசியுமான எழுத்து மகாசன்னிதானத்தைப் பற்றிய கவிதை மட்டும்தான்! 'மனித நேய மகாத்மாவே!' என்று தலைப்பிட்டுத் தொடங்கிய வரிகள் இவைதான்!

**"மண்டைக் காட்டில்**
**மதங்களின் வலிமையை**
**மண்டை ஓடுகளின் எண்ணிக்கையால்**
**மதவெறியர்கள் எண்ணிக்கொண்டிருக்கையில்**

உம்மால்தான்
பல மனிதப் படுகொலைகள்
தடுத்து நிறுத்தப்பட்டன!
கபால ஓடுகளையும் மனிதக் குருதியையும்
அடையாளச் சின்னமாய் அணிந்த
ஆயுதம் ஏந்திய வன்முறையாளர்களை
அமைதி வழிக்குத் திருப்பிய
புதிய அகிம்சாமூர்த்தி நீர்தான்!
அனல் பறக்கும் கந்தகக்காட்டின்
வெப்பத்தைத் தணிக்க
கற்பக விருட்சமே!
மனிதப் புனிதரே!
மனித நேய மிகுதியால்
நீர்விட்ட கண்ணீர்த்துளிகளே
மதவெறித் தீயை அணைத்த
'புனித நீர்'!
இரும்புப் பெட்டிகளில் சிறையிருந்த
இலக்கியத்தை எடுத்து
ஏழைகளுக்குப் பரிமாறியவரே!
பாமரனையும்
பைந்தமிழ் இலக்கியத்தேன் பருகச்
செய்த பாரிவள்ளலே!
வெறும்கையில் விபூதிகுங்குமம்
வரவழைக்கும்
மாயத்துறவியல்ல நீர்!
ஆனாலும்
ஏமாற்றங்களிலே வாழ்கின்ற
மக்களின் வாழ்க்கையில்
மாற்றங்களை நிகழ்த்துகின்ற
மந்திரவாதி நீரே!
உம்பார்வை பட்ட பின்தான்
பாலைகள் எல்லாம் பசுஞ்சோலைகளாயின!

நடக்க இயலாத நெருஞ்சிக் காடுகளும்
நந்தவனங்களாயின!
சஹாராக்களைக் கூடச் சமவெளிகள்
ஆக்கிய சாதனையாளரே!
ஆட்டுப்பாலும் நிலக்கடலையும்
தின்றவாறே
ஏகாதிபத்தியத்தை எஃகு குரலில்
அதட்டினாரே காந்தியடிகள்!
அவர்,
மறைந்து விட்டார் என்றிருந்தோம்!
இல்லை! இல்லை!
சிந்தனைச் சிற்பி சாக்ரடீஸின் பகுத்தறிவு,
பேரறிஞரின் பேச்சாற்றல்,
விவேகானந்தரின் ஆன்மீகப் பணி,
நேருவின் சோசலிஸம்
மகாத்மாவின் மனிதநேயம்
ஆகிய அனைத்தின் ஓர் உருவாய்
தவக்கோலத்தில்
தமிழ்மாமுனிவராய் அவதரித்தவரே!
காந்தியின் காலம் ஏசுவின் காலம்
என்பதுபோல்
அடிகளாரின் காலம் என்பதை
வருங்கால வரலாற்று ஏடுகள்
எழுதி வைக்கும்.
அவர் காலத்தில் நாமும் வாழ்கிறோம்
என்ற பெருமையுடன்
அவரின் தூய மனிதநேயப்
பணியினைப்
பலப்படுத்தும் அரணாய் அமைவோம்!”

தொலைவிலிருந்து ஆன்ம நாயகராக மகாசன்னிதானத்தின்பால் கொண்ட பக்தி வளர்பிறை என வளர்ந்த வண்ணம் இருந்தது. நவீனத்தை ரசிக்கின்ற இளைஞனின் ஆன்மத் துடிப்பினை மகாசன்னிதானம் உசுப்பிவிட்டார்கள்.

முதன்முறையாகப் பட்டம் பெற்ற கையோடு மகா சன்னிதானத்தை, குன்றக்குடியில் தரிசித்தோம். குன்றக்குடி மேல்மாடிக் கொட்டகையில் மகாசன்னிதானத்தின் தரிசனம்! மகாசன்னிதானத்தின் நம் முதற் சந்திப்பு! நமது விண்ணப்பப் படிவத்தைச் சமர்ப்பித்துவிட்டு நெடுஞ்சாண் கிடையாக வீழ்ந்து வணங்கினோம். மகாசன்னிதானம் பார்த்த முதற்பார்வை ஆழமான அர்த்தம் நிறைந்ததைப் போல் இருந்தது. நமக்குப் புரியவில்லை. நம்மிடம் சில நிமிடம் பேசினார்கள். விடைபெற்ற நாம் கீழே இறங்கும்பொழுது அருகிலிருக்கும் ஊழியரிடம் "இவரைத் தெரியுமா?" என்று கேட்டார்கள். "மதுரை மணிமகன் என்பது மட்டும் தெரியும்; நமக்குப் பழக்கம் இல்லை" என்று அவர்கள் கூறியது படியில் இறங்கும் நம் செவிகளில் விழுந்தது. பார்த்த முதற்பார்வையின் பொருள் பின்னர்தான் நமக்குப் புரிந்தது.

மகாசன்னிதானத்தின் மதுரைப் பயணங்களின் பொழுது நாம் உடனிருந்து தொண்டு செய்வது பழக்கம். மகாசன்னிதானம் புறப்பட்டுச் செல்லும்வரை உடனிருந்து இட்டபணி நிறை வேற்றுவோம். மகாசன்னிதானம் நிறைய விஷயங்களை நம்மோடு விவாதமுறையில் கேட்பார்கள். மதுரையில் ஒரு கூட்டம் முடிந்ததும் சின்னாளப்பட்டியில் பட்டிமன்றம். மகாசன்னிதானம் மகிழ்வுந்தில் ஏறச் சொல்லி உத்தரவு. மகிழ்வுந்தில் ஏறிவிட்டோம். பயணத்தின்போது பல வினாக்கள் கேட்கப்பட்டன. பட்டிமன்றம் முடிந்து திரும்பி வரும்பொழுது பட்டிமன்றத்தின் தீர்ப்பைப் பற்றிக் கருத்துக் கேட்டார்கள். கூறினோம். மகிழ்ந்து பாராட்டினார்கள். மதுரையில் நடந்த திருக்குறள் பேரவை மாநில மாநாட்டில் "திருக்குறள் காலம் கடந்த நூலா? காலத்தை வென்று விளங்கும் நூலா?" என்ற பட்டிமன்றத்தில் அவர்கள் வழங்கிய அருமையான தீர்ப்பு! "திருக்குறள் காலம் கடந்து விளங்குகின்றது. ஆனால் காலத்தை வென்று விளங்கவில்லை" என்று கூறிய தீர்ப்பில் நாம் உறைந்து போனோம்.

பாபர் மசூதி இடிக்கப்பட்ட கறுப்புதினம்! சரித்திரம் தன் மதவெறித் தீயை மீண்டும் பதிவு செய்து கொண்ட துக்க நாள். எந்தச் சமய பீடமும் அதைப்பற்றி அக்கறை காட்டவில்லை. மதுரை வீதியில் மதவெறியை எதிர்த்து மகாசன்னிதானம் குரல் கொடுத்தார்கள். மதுரையில் மிகப் பிரமாண்டமான சமய நல்லிணக்கப் பேரணி! மகாசன்னிதானம் ஒரு வாரம் முகாமிட்டு

நல்லிணக்கப் பேரணிப் பணி ஆற்றினார்கள். மகாசன்னிதானம் இட்ட கட்டளையை நாம் நிறைவேற்றிக் கொண்டிருந்தோம். பேரணிக்கு இருதினங்களுக்கு முன்பு நாம் மகாசன்னிதானத்திடம் நமது கருத்தை விண்ணப்பித்தோம். "சமய நல்லிணக்கம் ஒருதரப்பாய் இருந்துவிடக் கூடாது" என்றும், "சிறுபான்மை மக்கள் பெறும் சலுகைகள், உரிமைகள்" பற்றியும் பேசினோம். மகாசன்னிதானம் நம்மோடு மிக நீண்ட நேரம் பேசினார்கள். நிறைவில் நல்லிணக்கத்திற்கு நாம் இணங்கினோம். பேரணிப் பணிகள் மிக விரைவாகவும் நிறைவாகவும் சிறப்பாகவும் நிகழ்ந்தன. பிரமாண்டமான பேரணி மிகச் சிறப்பாக நடந்தேறியது. பலரும் பாராட்டினார்கள்.

குன்றக்குடியின் உற்பத்திப் பொருள்களின் சந்தை வாய்ப்பிற்கான விற்பனை மையம் ஒன்று மதுரையில் தொடங்க வேண்டும் என்று ஆணை இட்டார்கள். நாமே விற்பனை மையத்தைத் தொடங்குவதாக ஒப்புக் கொண்டு, "குன்றக்குடிச் சிறப்பங்காடி" என்ற பெயரில் பல்பொருள் அங்காடி தொடங்கப் பெற்றது. சிவகங்கை 'பிரியதர்சினி' தொலைக்காட்சிப் பெட்டி முதல் குன்றக்குடியில் தயாரான ஊறுகாய், ஜாம் வரை அனைத்தும் விற்பனை செய்யும் விற்பனை நிலையம் தொடக்க விழா! மகாசன்னிதானம் தலைமை ஏற்று அங்காடியைத் திறந்து வைத்தார்கள். மண்டல இணைப்பதிவாளர், காவல்துறைக் கண்காணிப்பாளர், தொழில் வணிகக்கழகத் தலைவர் சோலன்கி முதலியோர் பங்கேற்றனர். விழாவில் நாம் வரவேற்றுப் பேசினோம். மகாசன்னிதானம் நம் வரவேற்புரையைக் கூர்ந்து கேட்டார்கள். நமது வரவேற்புரைக்கு அரங்கில் மிகுந்த வரவேற்பு! எல்லாப் பெரியவர்களும் நம் பேச்சைக் குறிப்பிட்டுப் பாராட்டிப் பேசினார்கள். தொழில் வணிகத் தலைவர் ஜெட்டலால் சோலன்கி "புதிய நிறுவனத்தின் விற்பனைப் பிரதிநிதி * கணேசனை எங்களுக்குத் தாருங்கள்," என்றும் மேடையில் பேசினார். விழா நிறைவாக அமைந்திருந்தது. விழா முடிந்த பின்பும் நாமே பேசப்பட்டோம். ஆண்டுகள் இரண்டு ஓடுகின்றன. ஒருநாள் மதுரை தமிழ்நாடு தங்கும் விடுதியில் இருந்து - மகாசன்னிதானத்திடமிருந்து தொலைபேசி அழைப்பு! எப்பொழுதும் பயணத்திட்டம் பற்றிய அஞ்சலட்டை மதுரைப் பயணமாய் இருந்தால் மதுரை அலுவலகத்திற்கு வந்து விடும்.

---

* நம் பூர்வாசிரமப் பெயர்

அப்படி அஞ்சலட்டை எதுவும் வரவில்லை. நெல்லையில் இருந்து திரும்பி வரும்பொழுது மகாசன்னிதானத்தின் இடைத்தங்கல். அப்படித் தங்குவதாகப் பயணத்திட்டத்தில் இல்லை. உடன் பயணம் செய்தவர்களுக்கும் புரியவில்லை. காலையில் 10 மணிக்கு மகாசன்னிதானத்தின் அறைக்குள் நமக்கு அழைப்பு! அறைக்குள் சென்று வணங்கி ஆசி பெற்றோம். மகாசன்னிதானத்தின் உரையாடல் தொடர்ந்து மாலை 6 மணி வரை நீண்டது. நம்மிடம் பல வினாக்கள்! தொண்டு வாழ்க்கைக்கு, துறவு வாழ்க்கைக்கு நமக்கு அழைப்பு! உலகியல் வாழ்க்கையில் சராசரி நிலையில் உள்ள நாம் பக்குவ வாழ்வுக்குப் பழக்கப்பட இயலுமா? என்று நமது மறுப்பு. மகாசன்னிதானம் நவீனத்தை நேசிக்கின்ற, நம்முள் மறைந்திருந்த ஆன்மத் தேடலை அடையாளம் காட்டினார்கள். நீண்ட மௌனம் சம்மதமாய் ஏற்கப்பட்டது. ஆசி வழங்கினார்கள்.

மகாசன்னிதானம் ஞானபீடம் ஏறிய நாற்பதாம் ஆண்டு விழா திருமடத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதன் மறுநாள்தான் நம் ஆதீனப்புலவர் மரு. பரமகுரு அவர்களின் இல்லத் திருமண விழா. அந்தத் திருமணவிழாவில் கலந்து கொள்வதே நமது திட்டம். ஆனால் மதுரையில் புதிதாக வணிகம் தொடங்கும் நண்பர் ஒருவர், தான் புதிய கட்டிடத்தை வாடகைக்குப் பெறுவதற்காக நம்மையும் வற்புறுத்தி அழைத்தார். நாம் “மறுநாள் திருமணத்தில் கலந்து கொள்கின்றோம். இணைந்து அந்தப் பணியையும் முடிக்கலாம்” என்று சொன்னோம். அந்த நண்பர் மறுத்து விட்டார். “இந்த நாள்தான் நல்லநாள். அவசியம் வரவேண்டும்” என்று வற்புறுத்தி அழைத்து வந்தார். நாம் வந்தது தெரிந்ததும் மகாசன்னிதானத்திடமிருந்து அழைப்பு! “இன்று நல்ல நாள். இன்றைக்கு இங்கே இருக்கலாம்” என்று மகா சன்னிதானத்தின் உத்தரவு. “வீட்டில் சொல்லி வரவில்லை. சொல்லி வருகின்றேன்.” என்று நம்முடைய பதில். “பிறகு சொல்லிக் கொள்ளலாம்” - இது மகாசன்னிதானம். நிகழ்வது யாதும் நமக்குப் புரியவில்லை. எல்லாம் அவன் அருள்! அவன் செயல்!

**“முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்;**
**மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்;**
**பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்;**
**பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்;**

**அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்;**
**அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை;**
**தன்னை மறந் தாள்தன் நாமம் கெட்டாள்;**
**தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"**

என்ற அப்பர் பெருமானின் திருவாக்கு நம் வாழ்வைப் பொருத்தவரையில் முழுமையும் உண்மையாயிற்று! உறவுகளைத் தவிர்த்துத் துறவு என்னும் விரிந்த உலகில் உலக உறவுகளை நம் உறவுகளாய்ப் பேணும் பயணம் தொடர்கின்றது.

'மண்ணும் மனிதர்களும்' நம்மைப் பக்குவப் படுத்தியது. இமயத்தின் சுமை இந்தச் சிறிய குருவியின் தலையில் ஏற்றப்பட்டுள்ளது. இருந்த பொழுதும் நம்பிக்கைச் சிறகை நீங்கள் நல்குவீர்கள் என்ற நம்பிக்கையோடு உயரப் பறந்து உலகை வலம் வருவோம்! மனித நேய மகாமேரு காட்டிய திசையில் தடம் மாறாத பயணம் என்றும் தொடரும்! நம் அருள்நெறித் தந்தை அறியாமை இருள் அகற்ற உதிர்த்த ஞான மொழிகள் பேச்சிலும், எழுத்திலும் வந்தவை, இங்கு நூலாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. ஏறத்தாழ அரை நூற்றாண்டு கால மேடைத் தவமும், எழுத்துத் தவமும் நூல்வரிசையாக நம் கையில்! நூலைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்ட மகாசன்னிதானத்துடன் உடன் உறைந்து, உடன் வாழ்ந்து இன்று நமக்கு மகாசன்னிதானத்தின் தடத்தை அடையாளம் காட்டிவரும் ஆதீனப்புலவர் மரு. பரமகுரு, காரைக்குடி இராமசாமி. தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வர் தமிழாகரர் தெ. முருகசாமி, காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் நா. சுப்பிரமணியன், 'எழுத்துச் செம்மல்' குன்றக்குடி பெரிய பெருமாள், ஆதீனப்புலவர் க. கதிரேசன் ஆகியோருக்கும் இந்நூல்வரிசையைச் சிறப்பாகப் பதிப்பித்து முத்திரை பதித்த வித்தகர் பதிப்புச்செம்மல் மெய்யப்பனார் அவர்களுக்கும் நெஞ்சுநிறை நன்றி! வாழ்த்து! பாராட்டுக்கள்!

தமிழகம் மேம்பாடுற இந்நூல்வரிசை பயன்தரும்!

என்றும் வேண்டும்
இன்ப அன்பு.

*(பொன்னம்பல அடிகளார்)*

# பதிப்புக் குழுவின் செய்தி

1989 ஆம் ஆண்டு சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அதன் பொன்விழாவைக் கொண்டாடியது. அவ் விழாவில் பல்வேறு துறைகளைச் சேர்ந்த அறிஞர்கள் பன்னிருவருக்குக் கௌரவ டாக்டர் (D.Litt) பட்டம் வழங்கியது. பட்டம் பெற்றவர்களுள் வணக்கத்துக்குரிய குருமகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களும் ஒருவர். பட்டமளிப்பு விழாவில் அடிகள் பிரான் கலந்துகொண்ட பின் ஓய்வுக்காகச் சிதம்பரத்தில் உள்ள பயணிகள் மாளிகையில் தங்கியிருந்தார்கள். அப்போது அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தவரும் அடிகள் பிரான்பால் பேரன்புடையவருமான டாக்டர் ச. மெய்யப்பன் அவர்கள் அடிகள் பிரானைக் கண்டுகொண்டார். அப்போது "அடிகளார் எழுதி வெளிவந்துள்ள எல்லாப் புத்தகங்களையும் பொருள் வாரியாகப் பிரித்துத் தொகுத்துத் தந்தால் மணிவாசகர் நூலகம் மூலம் வெளியிடலாம் என்று விரும்புகிறேன்" என்று அடிகள் பிரானிடம் தெரிவித்தார். அப்போது அடிகள் பிரான் ஆவன செய்வோம் என்றார்கள். சில திங்கள் கழிந்தபின் தொகுப்புப் பணி தொடங்காத நிலையையறிந்த டாக்டர் ச. மெய்யப்பனார் காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் நா. சுப்பிரமணியன் அவர்கள் மூலமாகத் தொகுப்புப் பணியைச் செய்யத் தூண்டினார்கள். ஆயினும் அடிகள் பிரான் காலத்தில் இப்பணி தொடங்கி நிறைவேறத் திருவருள் கூட்டிவைக்கவில்லை.

1995 ஏப்ரல் 15இல் அடிகள் பிரான் பரிபூரணம் எய்தினார்கள். அதன்பின் 1999 இல் ஒரு நாள் குன்றக்குடி வந்த டாக்டர் ச. மெய்யப்பன் அவர்கள் இப்போதைய குருமகா சந்நிதானம் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களைக் கண்டுகொண்டு இந்நூல் தொகுப்புப் பணி பற்றிக் கூறினார்கள். குருமகாசந்நிதானமும் இசைவளித்தார்கள். டாக்டர் ச. மெய்யப்பன் அவர்களின் ஆலோசனையையும் பெற்று பதிப்பாசிரியர் குழு அமைக்கப்பெற்றது.

| | |
|---|---|
| முதன்மைப் பதிப்பாசிரியர் | தவத்திரு பொன்னம்பல அடிகளார் |
| செயலர் | பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பன் |
| பதிப்பாசிரியர் குழு | தமிழாகரர் தெ. முருகசாமி |
| | நா. சுப்பிரமணியன் |
| | குன்றக்குடி பெரியபெருமாள் |
| | க. கதிரேசன் |
| | மரு. பரமகுரு |

என அக்குழு அமைக்கப்பெற்றது. இக்குழு கூடி அடிகள்பிரான் எழுதிய புத்தகங்கள் அனைத்தையும் தொகுத்து,

*திருக்குறள்*
*இலக்கியம்*
*சமய இலக்கியம்*
*சமயம்*
*பொது*

என்று ஐந்து பெரும் பிரிவுகளாக வெளியிடலாம் என முடிவு செய்தது. திருக்குறள் பற்றிய முதலிரண்டு தொகுதிகள் டிசம்பர் 1999 இல் வெளிவந்தன.

பின் இப்பணியில் ஒரு தேக்கம். அடிகள்பிரான் எழுதிய புத்தகங்களில் சில கிடைக்கவில்லை. எல்லாப் புத்தகங்களையும் முழுதாகச் சேகரித்துக் கொண்டால்தான் பொருள் வாரியாகத் திருத்தமுறத் தொகுக்க இயலும் என்று பதிப்பாசிரியர் குழு கருதியது. கைவசம் இல்லாத புத்தகங்களைத் தேடியது. இது பெருமளவு காலதாமதத்தை ஏற்படுத்தியது. டாக்டர் ச. மெய்யப்பன் அவர்கள் தூண்டுதல் வேகமாக இருந்தமையால் சில புத்தகங்கள் கிடைக்காத நிலையிலும் தொகுப்புப் பணி தொடர்ந்து நடைபெற்றது. பதின்மூன்றாம் தொகுதி தொகுத்து அச்சுக்கு அனுப்பிய நிலையில் பலவகையால் தேடியும் கிடைக்காத 'சொல்லமுதம்', 'சமய மறுமலர்ச்சி' எனும் இரண்டு புத்தகங்களும் டாக்டர் ச. மெய்யப்பன் அவர்களின் முயற்சியால் கிடைத்தன. இதனை இப்பதிப்புப் பணியை அங்கீகரித்த திருவருள் குறிப்பாகவே நினைக்கின்றோம். இவையிரண்டு புத்தகங்களிலும் இருந்து கட்டுரைகள் பல, முன் தொகுதிகளில் இடம் பெறத்தக்கவையாக இருந்தன. அவற்றில் சேர்க்க இயலாத நிலையில் புதிய தலைப்புகள் தந்து உரியவாறு

பிரிக்கப்பட்டுப் பதினைந்தாம் தொகுதியில் அமைக்கப் பெற்றுள்ளன என்பது வாசகர்கள் அறிந்து கொள்ளவேண்டிய செய்தி.

இத்தொகுதிகளில் உள்ள கட்டுரைகள், கவிதைகள் ஏற்கெனவே வெளிவந்த புத்தகங்களில் பதிப்பிக்கப்பெற்றவை மட்டுமல்ல, கையெழுத்துப் படிகளாகவும் தட்டச்சுப் படிகளாகவும் இதழ்களில் வெளிவந்து புத்தக உருவம் பெறாதவைகளாகவும் இருந்த அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், கட்டுரைகள் தொடர் கட்டுரைகள், கவிதைகள், சிறு கதைகள் என ஏறத்தாழ 2500 பக்கங்கள் சேகரித்துப் புதிதாகச் சேர்க்கப்பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இங்ஙனம் தொகுக்கப் பெற்ற இத் தொகுதிகள் அனைத்தும் அடிகள்பிரான் எழுத்துக்கள் முழுவதும் அடங்கினவை அல்ல. இதழ்களுக்கு எழுதிய கட்டுரைகள், நூல்களுக்கு எழுதிய வாழ்த்துரைகள், அணிந்துரைகள், மலர்களுக்கு எழுதிய வாழ்த்துச் செய்திகள், அறிஞர்களுக்கு எழுதிய கொள்கைக் கடிதங்கள், 'தமிழகம்', 'மக்கள் சிந்தனை' இதழ்களில் எழுதிவந்த திருமுகம், தலையங்கம், இதழ்கள் பலவற்றுக்கு அளித்த பேட்டிகள், வினா விடைகள், பொன்மொழிகள், அமுத மொழிகள் எனப் பலவும் தொகுக்கப் பெறத் தக்கவையாக எஞ்சி உள்ளன. இவையெல்லாம் அடங்கிய முழுமையான தொகுதிகள் விரைவில் வெளிவர இறைவன் அருள்புரிவானாக.

இத்தொகுப்புப் பணியில் எங்களுக்கு ஆர்வமூட்டி வழிகாட்டிய தவத்திரு பொன்னம்பல அடிகள்பிரானுக்கு நன்றி தெரிவித்து வணங்கி மகிழ்கின்றோம்.

அடுத்து, இந்த அரிய பணியில் எங்களை வழிநடத்திய மணிவாசகர் பதிப்பக நிறுவனர் தமிழவேள், டாக்டர் ச. மெய்யப்பனார்க்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம். பதிப்புக் குழுவுக்கு அவ்வப்போது உடனிருந்து உதவிய ஆதீன அலுவலகத்தைச் சார்ந்த புலவர் சு. வீரமுத்து, செல்வி ம. கஸ்தூரி இருவருக்கும் நன்றி.

எல்லாவற்றிற்கும் மேலாக தோன்றாத் துணையாய் நின்று இயக்குவித்த அருள்நெறித் தந்தையின் குருவருளையும் இறைவன் திருவருளையும் பதிப்பாசிரியர் குழு நினைந்து போற்றி வணங்குகிறது.

*பதிப்புக்குழு*

